# THE EPIC ETERNAL

## இராமர் கதை

(PART - II)




INSTITUTE OF ASIAN STUDIES

Chemmancherry, Madras-600 119.

# THE EPIC ETERNAL

## இராமர் கதை

**PART - II**

*General Editors*

**Dr. SHU HIKOSAKA, Dr. G. JOHN SAMUEL**

*Editor*

**Dr. K. JAYA KUMAR**

*Rendered into English*

*by*

**Prof. K.G. SESHADRI**




**Institute of Asian Studies,**
Chemmancherry,
Madras - 600 119, India.
**1996**

THE EPIC ETERNAL
(PART - II)

Editorial Assistance
**Dr. V. Ganesan**


First Edition - March 1996
Price: Rs. **450** US **$ 65**.

Publication No. 43

**Copies can be had from**

Publications Division,
Institute of Asian Studies,
Chemmancherry,
Madras - 600 119,
India.

| | | |
|---|---|---|
| Phone | (Office) | 4928628, 4928662 |
| | (Residence) | 4925085 |
| Fax | | 91-44-4928959 |

Printed by PAVAI. PRINTERS Pvt. Ltd., 142, J.J.K. Road.
Madras-600 014. Phone : 83 24 41

# CONTENTS

# A SYSTEM OF TRANSLITERATION OF TAMIL

## Vowels

| Short | | Long | |
|---|---|---|---|
| அ | a | ஆ | ā |
| இ | i | ஈ | ī |
| உ | u | ஊ | ū |
| எ | e | ஏ | ē |
| ஒ | o | ஓ | ō |

| | |
|---|---|
| ஐ | ai |
| ஔ | au |

## Consonants

| Hard | | Soft | | Medial | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க் | k | ங் | ṅ | ய் | y | ஜ் | j |
| ச் | c | ஞ் | ñ | ர் | r | ஷ் | ṣ |
| ட் | ṭ | ண் | ṇ | ல் | l | ஸ் | s |
| த் | t | ந் | n | வ் | v | ஹ் | h |
| ப் | p | ம் | m | ழ் | ḻ | க்ஷ் | kṣ |
| ற் | ṟ | ன் | ṉ | ள் | ḷ | | |

# பதிப்புரை

ஆசியவியல் நிறுவனத்தில் பதிவு எண்-40இல் பதிவு செய்யப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வரும் இராமர் கதை என்னும் சுவடியின் இரண்டாம் பகுதி தற்பொழுது வெளிவருகிறது.

10,000 அடிகளுக்குமேல் நீட்சியுடைய இக்கதைப் பாடல் கி.பி.19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் திருவானந்தம் என்பவரால் இயற்றப்பெற்றது. இக்கதைப் பாடல் இந்நூலின் பெருமை கருதிப் பலரால் பிரதி செய்யப்பட்டது. அவ்வகையில் கி.பி. 1962இல் கு.ஆறுமுகப்பெருமாள் நாடார் இக்கதைப் .பாடலைப் பிரதி செய்தார். மிக நீண்ட க்தைப் பாடலாக இது திகழ்வதால் பக்க வரையறை கருதி இரு பாகங்களாகப் பிரிக்கப்பட்டது. முதற்பாகம் இக்கதைப் பாடலின் முதல் 119 பாடல்களையும் இரண்டாம் பாகம் இறுதி 134 பாடல்களையும் கொண்டதாக அமைக்கப்பட்டது.

நூல் முதற்பகுதி, இரண்டாம் பகுதி எனப் பிரிக்கப்பட்ட பொழுதும் பக்க வரையறையில் பெரிதும் வேறுபடாத நிலையில் கருத்தமைவுடன் பிரித்துள்ளமையும் சுட்டுவதற்குரியது. அவ்வகையில் முதற் பாகம் இறைவாழ்த்து, அவையடக்கம் முடிந்து எவ்விதம் அயோத்தி நகர் சிறப்பு உரைக்கப்படுகிறதோ அதைப் போலவே இரண்டாம் பாகம் இலங்கை நகர் சிறப்பு உரைக்கப்படும் பகுதியில் ஆரம்பம் ஆகிறது. அவ்வகையில் இராமர் கதையின் முதற் பகுதி கம்பராமாயணத்தின் பால, அயோத்தியா, ஆரணிய, கிஷ்கிந்தா காண்டங்களின் கதையை உள்ளடக்கியதாகவும் இரண்டாம் பகுதி சுந்தர, யுத்த காண்டங்களின் கதையை உள்ளடக்கியதாகவும் திகழ்கிறது.

தயார் செய்யப்பட்ட துணைநூற்பட்டியல் இரு தொகுதிகளுக்கும் சேர்த்து இப்பகுதியிலேயே தரப்பட்டுள்ளது. இச்சுவடியோடு இந்நிறுவன 166ஆம் எண்ணுள்ள சுவடி ஒப்பு செய்யப்பட்டுக் காட்டப்பட்ட பாடவேறுபாடுகளும், சொல்லடைவு, வழக்குச் சொல்லடைவு ஆகியனவும் இரண்டாம் பகுதியான இந்நூலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

நூலின் அமைப்புமுறை, அச்சுமுறை முதலியனவும் முதற் பாகத்தில் செய்யப்பட்டமை போன்றே இரண்டாம் பாகத்திலும் செய்யப்பட்டுள்ளன. அவற்றின்படி தமிழ்ப் பகுதி நூலின் இடப்பக்கத்தில் வேண்டிய துணைத் தலைப்புகளோடு பாடல்கள் சந்தி பிரிக்கப்பட்டு அருஞ்சொல் பதவுரையோடு தரப்பட்டுள்ளது. அதற்கு இணையான ஆங்கிலப் பகுதி நூலின் வலப்பக்கத்தில் துணைத் தலைப்புகளோடும் அருஞ்சொல் விளக்கத்தோடும் தரப்பட்டுள்ளது.

இராமர் கதையின் முதற் பாகத்தைப் போலவே இப்பகுதியும் வெளிவரத் தூண்டுதல் செய்து துணை நின்றவர்கள் நிறுவன இயக்குநர்கள் வணக்கத்திற்குரிய முனைவர் ஜி.ஜான் சாமுவேல் அவர்களும் முனைவர் ஷு ஹிகோசகா அவர்களும் ஆவர். அவர்களுக்குப் பெரிதும் நன்றியுடையேன். நூலின் முதற் பாகத்தில் குறிப்பிடப்பட்ட அனைத்து அன்பர்களும் நூல் முழுமைக்கும் துணை செய்தவர்கள் ஆவர். அனைத்து பெருமக்களுக்கும் பாவை அச்சகத்தாருக்கும் நன்றியுடையேன்.

**டாக்டர் கி.ஜெயகுமார்**

# EDITOR'S NOTE

**The Epic Eternal** Part II (Irāmar Katai) preserved as a Palm-leaf Manuscript at the Institute of Asian Studies, Registered No.40, is now being published.

This folk-ballad which consists of more than 10,000 lines was composed by Tiruvāṉantam in the early 19th century. Recognizing the significance of this ballad, many copyists copied it, one of whom was K. Āṟumukapperumāḷ Nāṭār who copied it in 1962. Since this folk-ballad is too long to be published as a single piece, it has been divided into two parts, the first part consisting of 119 verses, and the second, of 134 verses.

It is strikingly noteworthy that these two parts have a singularly identical design. There is a similarity in correspondence even in the pagination of the two parts. Even as the first part begins with the glory of Ayōtti city, after invocatory songs, the second part begins with the glory of Lanka city. The first part comprises the first four cantos of **Kamparāmā yaṉam**, viz., Pāla, Ayōttiyā, Araṇiya, Kiskintā and second part, Cuntara, and Yuttam. Bibliography for both the parts. variations of text which have been done, after a careful collation with another palm-leaf Manuscript, registered No.166 of this Institute, word Index, dialectal words have all been supplied at the end of this Part II.

The same format and method of printing has been followed for Parts I and II. The Tamil version which falls on the left side of the book contains subtitles and meanings of difficult words. Scansion of the Tamil version is also undertaken. The corresponding English version with sub-titles and meaning is given on the right side.

I am grateful to Dr.G.John Samuel, Dr.Shu Hikosaka, the Directors of Institute of Asian Studies, for assigning me the task of bringing out, this Part II also. I have acknowledged the help I received for Part I. I thank them again and a special word of thanks to Pavai Printers for their meticulous care in the execution of the work

**Dr. K. Jayakumar**

# இராமர் கதை

## பகுதி - II

### இலங்கை நகர் சிறப்பு

*விருத்தம்*

*120. கொண்டல்வர்ணன் விடுதூத னுமான் றானும்*
*கோட்டைகண்டு தாட்டிமையாய்க் குறித்துப் பார்த்து*
*அண்டருல கத்தவரு மேவல் செய்து*
*அழுவதுவுந் தொழுவதுவு மதுவல் லாமல்*
*மண்டலத்தி லிடியிடித்தே வானம் முட்டி*
*வளர்ந்திருக்கும் மாடமா ளிகையும் பாரர்த்துச்*
*சண்டாள னிச்சிறப்பை யழிக்க வென்றோ*
*சானகியைச் சிறையெடுக்கச் சமைந்தா னென்றார்.*

*நடை*

*121. சமைந்திலங்கா புரியில்அமைந் தெழுகோட் டையிலே*
*சட்ட நலதிட்ட மாகவே*
*சகல தேசத்தர சர்நிறை வாளுறை*
*யிடுவார் தத்தித் தத்தி யாகவே*
*நிகர்ந்தெழு மாளிகை நிகரற்றக் குளிகை*
*ரெத்னமணி மேடை கோடி*
*நீசை பொன்மாடங்கள் ஆண்டபொன் கூடங்கள்*
*நீலமணி மேடை கோடி*

120.1. கொண்டல் வர்ணன் - மழைமுகில் போன்ற நிறமுடையவன்; இராமன். தாட்டிமையாய் - சாமர்த்தியத்துடன். 120.2. அண்டருலகத்தவர் - தேவர் மற்றும் பூமியிலுள்ளவர். தொழுவதும் - அரக்கரைக் கண்டு வணங்குவதும். 120.3. மண்டலம் - பூமி. 120.4. சண்டாளன் - நீச எண்ணமுடையவன்; இராவணன். சானகியை அசோக வனத்தில் சிறைவைத்ததால் அழகிய இலங்கை நகரம் அழியும் என்ற பொருளில் விருத்தப் பாடல் 120-இன் இறுதி வரியில் பொருளமைத்தார். 121.1. சமைந்திலங்கா புரியில் - அழகுற கட்டப்பட்ட இலங்கை நகரில். வாளுறையிடுவார் - இராவணனுக்குப் பணிந்து கூரிய வாள்களை உறைகளில் இட்டு வைப்பார். தத்தித்தத்தியாகவே - கூட்டம் கூட்டமாகவே. 121.2. குளிகை ரெத்தினம் - மாத்திரை போலும் உருண்ட வடிவிலமைந்த ரெத்னக்கற்கள். நீசை - நீட்சை; நீண்ட. நீலமணி - நீல நிறமுடைய மணி.

# IRĀMAR KATAI

## (Part II)

### THE GREATNESS OF LAṄKA CITY

120. The envoy of the cloud-complexioned Lord
Looked carefully all around him
And seeing how the celestials
Of heaven and the people of the world
Were doing service to base Rāvaṇa
With prayerful humbleness and bated breath;
And seeing how the lofty mansions
Pierced the very roof of heaven,
Aṉumaṉ grew sad and thought thus:
"Oh! Is it to destroy all this
Glory and opulence,
That the base wretch Rāvaṇa
Has incarcerated Sita
In his Acōkavaṉam?"

121. In the well-constructed Laṅka city,
Band after band of kings of all lands,
Would offer homage to the Demon Emperor
Sheathing their swords in the scabbards.
Splendorous was the opulent city of Laṅka
With its lofty mansions rising tall,
Wrought with rubies, and gems round
As capsules, innumerable and bright;

நீலமணி யால்செய்து கோலமெழு துப்பரிகை
நிலத்தோர் சதுர் கோடி
நேசமட வார்கூடி வாசமல ரெடுக்கும்
நீடுமல ரோடை கோடி
வாலமதன் ஆடவலை லீலை செய்யும்
வேசையர் மருவுதெருக்கள் கோடி
வர்த்தகர் வணிகர் மக்கள் மெத்தநிதி
குவித்திடும்மா பணத்தெருக்கள் கோடி
ஆவண வீதியில் காமணத் தோரணம்
அழகுயர் மேடை கோடி
அம்மானைப் பந்துகளுங் காடிக் கும்மியடிக்கும்
அரிவையர் மேடை கோடி 5
ராவணன் கொலுவுகண் டடிதொழும் முடிமன்னர்
ராக்ஷ சர்வெகு கோடி
நால்வகைத் தானைகள் சேனையனந்தங் கோடி
நருள்க் கொண்டதெரு கோடி
தெருக்க ளனந்த லக்ஷம் கோபுரம்
தாபுரம்சித் ரமணிமேடை கோடி
சிறப்பான விஸ்வகர்மன் பொற்பணியை விவரித்துச்
செப்பு தற்கெளி தாமோ
மருள்கொண்ட பத்துமுடி ராவணன் மாளிகை
வழுத்து தற்கெளி தாமோ
மகனிந் திரசெயித்த திகாய னிலக்கணன்
வசம க்ஷய குமாரன்

121.3. கோலமெழுது - அழகுபட செய்யும். உப்பரிகை - மேல்மாடம். சதுர் கோடி - நான்கு கோடி. நேச மடவார் - அன்புடைய பெண்கள். நீடு மலர் ஓடை - மலர்கள் பூக்கும் நீண்ட மலரோடை. 121.4. வாலமதன் - அழகிய, இளமையான மன்மதன். மாபணத்தெருக்கள் - மிகப்பெரிய பணக்காரத் தெருக்கள். 121.5. ஆவண வீதி - கடைவீதி. காமணத் தோரணம்- பந்தலில் கட்டப்படும் அலங்காரம். அம்மானை - பெண்கள் விளையாடும் விளையாட்டு. கும்மியடிக்கும் - மகளிர் கையால் கொட்டி கும்மியடிக்கும். அரிவை - மகளிரின் எழுவகை பருவத்துள் ஐந்தாம் பருவநிலையில் உள்ள பெண்; பிறர் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, தெரிவை, பேரிளம்பெண். 121.6. கொலுவு - அரசிருக்கும் காட்சி. அனந்தங் கோடி - எண்ணில்லா கோடி. நருள் - மக்கள். 121.7. தாபுரம் - தாழ்வாரம். சித்ரமணிமேடை - அழகிய மணிகளாலான மேடை. விஸ்வகர்மன் - தேவதச்சன். பொற்பணியை - மேன்மையான பணியை. செப்புதல் - கூறுதல். 121.8. மருள் கொண்ட - மயக்கம் கொண்ட. வழுத்துதற் கெளிதாமோ - கூறுவதற்கு எளிதாகுமோ. இந்திரசெயித்து, அதிகாயன், இலக்கணன், அக்ஷயகுமாரன் - இராவணன் புதல்வர்களின் பெயர்கள்.

Myriads of pavilions long, and halls of gold
And sapphire blue, there were besides;
And lovely terraces inlaid with gems;
Four crores of chariots the city had!
Myriads too, the long streams wherefrom
Loving women culled fragrant blooms!
Countless the streets where the courtesans
Lay in wait to tempt the youth
With their amorous dalliance!
Myriads again the streets where dwelt,
Traders and merchants with piles of wealth!
The bazaars were decked with *pantals*,
With lovely, canopies, and platforms,
Where matrons played *Ammāṉai*,
Tossing swiftly, the balls in the air!
Numberless were the crowned heads
Who bowed in submission in Rāvaṇa's Court!.
Crores upon crores, the armed forces
Of four kinds, the Emperor possessed;
Countless the streets, thick with people;
Towers in hundreds of thousands;
Corridors and beautiful platforms -numberless;
Oh, is it easy to describe the noble handiwork
Of Visvakarma, the great architect
Or to give praise adequate to the palace
Of ten-headed Rāvaṇa, crazed with lust?
Gemmed mansions with bedecked pavilions,
Where the dwelling of his sons,
Beautiful like Manmath himself,
Intirajit, Atikāyaṉ, Lakkanaṉ, and Akṣyakumaraṉ

*மாரனழகு மக்கள் தோரணம ருகினில்*
*வளர்ம ணிமாளி கையாம்*
*வம்பர்கள் வணங்குகின்ற கும்பகர்ன னுறைகின்ற*
*மகாமேரு மாளிகையாம்*
*பூரணமாய் மனநேர் விசுவாச விபீஷணன்*
*மாளிகை யிழைக்கத் தாம்*
*பொருப்பென ராவண னிருக்குங் கொலுமேடை*
*பொன்மணி மாளி கையாம்*
*பொன்மணி மன்னவர் தெருக்கோடி வேதியர்*
*புரோகிதர் தெருக் கோடி*
*பூமி தனில்மகனே ருழுங்கா ராளர்*
*புண்ணிய தெருக் கோடி*
*தென்வடல் கிழமேல் எழுநூற்றுக் காதவழி*
*சிறந்தெ ழுமிலங் கையிலே*
*திசைக்கனந் தங்கோடி தெருவுங் கண்ணாளர்கள்*
*தெருக்க ளும்பல கோடி*
*பலபல குடிகளும் பதினெட்டு சாதியும்*
*படர்ந்தி டுமிலங் கையிலே*
*படகர் குடகர் சீனர்வட கரிரட்டியர்*
*படைமன் னர்தெருக் கோடி*
*வலதுகை யிடதுகை வகுத்தணி மிகுத்திடும்*
*மறவர் குறவ ரீழர்*
*வங்களர் சிங்களர் கொங்கர் கலிங்கர்கள்*
*மருத மராடர் குகுதர்*

121.9. மாரவழகு - மன்மதன் அழகு. தோரணமருகில் - அலங்கார பந்தலருகில். வம்பர்கள்- தீயவர்கள். கும்பகர்ணன் - இராவணனின் தம்பி. மகமேரு மாளிகை - பொன்னாலாகிய மகாமேரு மலை போன்ற பெரிய மாளிகை. 121.10. மனநேர் விசுவாச விபீஷணன் - மனசாட்சிக்கு நேர்மையான, விசுவாசமான விபீஷணன். மாளிகை யிழைக்கத் தாம் - மாளிகையைச் சிறப்பாகச் செய்யவே. பொருப்பென - மலையென. 121.11. வேதியர் - அந்தணர். 121.11. வேதியர், புரோகிதர் - அந்தணர் மற்றும் வேதம் பயிற்றுவிக்கும் தொழிலைச் செய்வோர். ஏர் உழுங் காராளர் - கலப்பை கொண்டு வயலை உழும் வெள்ளாளர். 121.12. அனந்தங் கோடி - பல கோடி. கண்ணாளர்கள் - ஒரு வகை சாதியர். 121.13. குடிகள் - குடிமக்கள். படகர், குடகர், சீனர், வரகரிரட்டியர் - சில பிறநாட்டு மன்னர்களின் படைகள் தங்கு மிடத்தைக் குறித்தது. 121.14. மறவர், ஈழர், வங்களர், சிங்களர், கொங்கர், கலிங்கர், மராடர், குகுதர் - சில மன்னர்களின் பெயர்கள்.

Then there was the palace hugeous,
Lofty as Mēru Mount where Kumpakarṇaṉ lived!
Well-wrought was the palace of one
Ever true to his own conscience, Vipīṣaṇa,
And last but by no means the least,
The golden palace bedecked with gems
Where like a lofty hill Rāvaṇa sat in state!
Countless were the streets of crowned kings
And too, the streets of Brahmins and purohits;
Besides the streets where the farmers dwelt
Who tilled the fields with their ploughs.
In Laṅka stretching seven hundred *Kātams*
North to South and East to West,
Innumerable were the streets
Where people of Kaṉṉāḷa[113] and other castes lived,
Totalling eighteen kinds; besides
Encampments for Paṭakas[114] Kuṭakas[115] and Chinese·
All marching with hands swinging in alternation,
Maṛavas[116], Kuṛavas[117], Īḻas[118],
Bengalis, Sinhalese, Koṅkars[119],
Kaliṅkas[120], Makutas[121], Mahrattas[122],
Kukutas[123] and other nations.

113. Kaṉṉāḷa - Name of a caste

114. Paṭakas
115. Kuṭakas } Names of tribes from other lands

116. Maṛavas - Warrior caste, 117. Kuṛavaj - Hunter caste, 118 Īḻas - A tribe
119. Koṅkars - Name of a tribe 120. Kaliṅkas - People belonging to Kalinga
121. Makutas - Name of a tribe 122. Mahrattas - People of Marata country
123. Kukutas - Name of a tribe

மகத்துவ மாமிது தெருக்களைந் தங்கோடி
வளங்கள் சிறப்புப் பார்த்து
மண்டபமு விண்டிடமும் மாளிகை யுகண்டனுமான் 15
மாதரசைத் தேடி னானே

**அனுமன் சீதையைத் தேடுதல்**

பகுத்துட னரக்கியர் மிகுத்திடு கிரகத்திலும்
பட்டறிலை கொட்ட கையிலும்
பத்திபத்தி தத்திதத்தி சுத்திசுத்தி எத்திஎத்தி
பத்தினியைத் தேடி னானே
பத்தினியைத் தேடுகின்ற சுத்தவீர னனுமானைப்
பலகை கொண்டடிக் கையிலே
பல்லுக்காட்டி பல்லுக்காட்டி தெல்லுத் தெறிப்பதுவென
படர்ந்தவன் தேடி னானே
அத்திசை யரக்கிகளைச் சுற்றிவந்து றுமிக்கொண்டு
அறியா யோவெனை யரக்கி
அரிராமன் றூதனென்ற றியாயோ வென்றனுமன்
[67]ஆயிழையைத் தேடி னானே
எத்திசையில் தாயை ஒளித்திருக் கிறானென்று
இருத யத்தில் நினைந்து
எங்கெங்கு மிருக்கிற தங்கமணி மேடைசுற்றி
ஏந்திழையைத் தேடி னானே
முத்துமோகனச் சீதையைச் சத்துரு வரக்கனெந்த
மூலையிலல் வைத்தா னெனவே
முப்பொழு தீரவபக லற்பமாய் சமைந்துசுற்றி
மொய்குழலைத் தேடி னானே. 20

121.15. மகத்துவம் - பெருமை. மண்டபம் மாடம். விண்டிடம் - வானளவு உயர்ந்த மாளிகை. மாதரசு - சீதை. 121.16. பகுத்துடன் - பிரித்துடன். கிரகத்திலும் - பல்வேறு பூமியிலும். கொட்டகை - பந்தல். பத்தினி - சீதை. 121.17. பலகை கொண்டடிக் கையிலே- அனுமனை அரக்கர்கள் மரப்பலகையால் அடிக்கின்ற பொழுது. தெல்லு தெறிப்பதுவென்- ஒரு பொருள் விரைந்து தெறித்தாற் போல. ஆயிழை - சிறந்த ஆபரணங்களை அணிந்தவள்; சீதை. 121.20. முத்துமோகனச் சீதை - வெண்முத்து போல் ஒளிவிடும் பற்களைக் கொண்ட, இனிமையான சீதை. சத்துரு - பகைவன். அற்பமாய் - சிறிது நேரமாய். சமைந்துசுற்றி - இலங்கையைப் பொருந்தி சுற்றி. மொய்குழல் - சீதை.

Through all these streets endless
And various, admiring the halls
And heaven-kissing mansions.
Tirelessly Aṉumaṉ searched for the queen among women!

### AṈUMAṈ'S QUEST FOR SITA

In all the houses of the demonesses,
In the pavilions and *pantals*, sedulously
Did Aṉumaṉ search for the princess.
Part by part, round and round he sought;
Leaping about and about, he searched;
For Sita, the chastest of women noble!
When he was beaten with a plank,
He grinned and grinned and moved away,
Swift like a flying splinter, from the spot;
Growling at the demon-women he cried,
"Don't you know me, demoness vile!
I am the envoy of Lord Harirāma!"
As he went about in search of the princess
(Sita adorned with choicest jewels!)
Wondering in his heart where Rāvaṇa
Might have hidden his mother,
Aṉumaṉ sought for her everywhere
(Sita adorned with lovely ornaments!)
Wondering in which nook, the hostile demon
Had placed her, radiant as pearl:
Day and night and at all hours,
Did Aṉumaṉ search for her,
(Sita, with lovely tresses dews and dark!)

### அனுமன் சீதையைத் தேடிய இடங்கள்

பதம்

122. தேடினா னனுமான் - இலங்கை சுற்றித்
தேடினா னனுமான்
தேடினான் சூளிகையும் சிங்கார மாளிகையும்
சித்திரவர்னச் சாவடியும் பத்திபத்தியாகச் சுற்றி (தேடி)
ஆழியுடுத்த யிலங்கா புரிப்பட் டணத்தில்
அறங்களும் நந்தவனப் புறங்களும் இறங்கியே
காளிகோட்டந் தனிலும் ஆற்றிலும் குளத்திலும்
கடந்தெழு பங்கயப் பூந்தடங் களிலுமே (தேடி)
நீழுங்கன்னல் கமுகுவாழைச் செந்நெல் தலமும்
நிலங்களும் பலங்கொ ளெத்தலங்களும்
வலஞ்செய்து
ஊழிவூழிக்கு நிற்கும் சோலையுஞ் சாலையும்
உத்தரத் திசைதொடுத்துத் தக்ஷணதிசை யுஞ்சுற்றி (தேடி)
வன்னவன்ன பூச்சொரியும் மலர்க்காவும் நாலுகோட்டை
வாசலும் பெருவழி மடத்திலும் தடத்திலும்
தென்னிலங்கைப் பட்டணத்தி லெழுநூற்றுக் காதவழி
தெருவிலு மவரவ ரிடத்திலும் இடம்வலம் (தேடி)
மன்னர மைச்சாதெரு மறையோர் வணிகர்தெரு
வங்களர்கள் சிங்களர்கள் மராடர் கலிங்கர்தெரு
சொன்னபதி னெட்டுசாதி தொட்டிடுஞ் தொடாதசாதி
துட்டரக்கர் நெட்டரக்கர் வட்டமிட்ட மேடைசுற்றி (தேடி)
செல்லாத யிடங்களில் தெண்டுபல்லி வண்டுதும்பி
சிறுத்த வடிவெடுத்து நுழைந்து நுழைந்துசுற்றி

122.2. சூளிகை - அரண்மனை. சிங்கார - அழகிய. சித்திரவர்ன - அழகிய வர்ணமான. சாவடி - சத்திரம். 122.3. ஆழியுடுத்த - கடலை ஆடையாயலுய் உடுதலுத்த. அறங்கள் - அறச்சாலை. நந்தவனப் புறம் - நந்தவனச் சோலை. இறங்கியே - சுற்றித் திரிந்தே 122.4. கோட்டம் - கோயில். பங்கயப்பூந்தடம் - தாமரை மலர்கின்ற பொய்கை. 122.5. நீழுங்கன்னல் - நீண்ட கரும்பு. பலங்கொள் - வலிமை மிகுந்த. 122.6. ஊழி - நீண்ட காலம். உத்தரத் திசை - வட திசை. தக்ஷண திசை - தெற்குத் திசை. 122.7. வன்ன வன்ன - வர்ண,வர்ண. மலர்க்கா - மலர்ச் சோலை. நாலு - நான்கு. 122.9. வங்களர், சிங்களர், மராடர், கலிங்கர் தெரு - மேறற்படி நாட்டு மன்னர்கள் வாழும் தெருக்கள். 122.10. தொட்டிடுஞ் தொடாத சாதி - உயார்நந்த தாழ்ந்த சாதி. துட் டரக்கர் - துஷ்ட அரக்கர்; மோசமான அரககர். நெட்டரக்கர் - நெடிய அரக்கர். 122.11. தெண்டுபல்லி - உத்திரத்தில் தொங்கிய பல்லி. தும்பி - கருவண்டு. சிறுத்த - சிறிய.

## THE PLACES WHERE AṈUMAṈ SEARCHED FOR SITA

122. Aṉumaṉ did search all over Laṅka–
And Aṉumaṉ he did search for Sita!
In all the castles and palaces, area by area,
Among rest houses beautifully coloured,
Aṉumaṉ he did search for Sita!
Getting inside charity-houses and groves in the Kāḷi temple
In river and pond, in lotus pools–
Aṉumaṉ he did search!
Going round fields of sugarcane long
Areca-palms, plantain trees and paddy fields;
With in groves standing for ages long
And along roads from the North to South–
Aṉumaṉ he did search for Sita!
In flowery groves, showering blooms
Many-hued, near the portals of the fort,
In all the buildings and tracks in the streets;
In dwellings, in the city of Laṅka
Seven hundred *Kātams* wide–
Aṉumaṉ he did search for Sita!
In the streets of kings and captains and counsellors,
Of Vedic Brahmins, of traders in the streets,
Of Bengalis, Sinhalese, Maratis and Kaliṅkas:
Among all the eighteen castes high and low,
Near platforms where the demons cruel and tall, haunted–
Aṉumaṉ he did search for Sita!
Transforming himself
Like a lizard upon the beam,
Or a chafer or a beetle,
Aṉumaṉ went into the deepest recesses

அல்லாமல் புகைபோலும் அடிக்கின்ற காற்றுப்போலும்
அனுப்போலுந் தனித்தனி யழைந்து புனத்திலும் (தேடி)
மல்லாருந் திண்புயத்தன் மந்திரசித்து யிந்திரசித்து
மன்னன்கும்ப கர்னன்மேடை தென்னன்விபீ
ஷணன்மேடை
எல்லாவல் லரக்கிக ளிருக்கின்ற தெருக்களும்
எட்டிஎட்டி முட்டிமுட்டி தட்டியே மருட்டுசுற்றி (தேடி)
பத்துமுடி ராவணனும் சிற்றிடைவண் டோதரியும்
பள்ளி கொளள்ளும் மாளிகையில் புகுந்துமே
குத்துமுலைக் கண்பீளை கொடுவாய் படியக்கண்டு
கோதை சீதையல்ல வென்று நெகிழ்ந்ததுமே (தேடி)
சத்துரு வாமிவளைத் தலையறுப்போ மறுக்கில்
தாமோதர ராமபாணந் திகைத்திடும் என்னவெண்ணி
உத்தரவில்லை என்றவன் முகத்திலும் காறித்துப்பி
உன்னிநிமிர்ந் தேயழகு பொன்னழுத்தும் மேடைசுற்றிப் (தேடி)
பஞ்சவர்னச் சாவடியும் பைந்தொடிமார் சந்தடியும்
படுக்கைப் புரையும் பள்ளியறை யிலும்துறையிலும்
அஞ்சுலக்ஷங் கோடிவீதி குலமாதர் விலைமாதர்
அவர்கள் மஞ்சள்க் குளிக்கும் துறையிலும் (தேடி)
குஞ்சரங் குதிரைபந்தி கெட்டுகிற லாயத்திலும்
கோடிலக்ஷங் கோடித்தெரு பட்டண விலாசத்திலும்

122.12. அணு - சிறிய அணு. 122.13. மல்லாரும் - மற்போர் செய்யும். மந்திரசித்து இந்திரசித்து - மந்திரத்தில் வலிமையான இந்திரசித்து. மேடை - இருப்பிடம். 122.14. வல்லரக்கி - கொடிய அரக்கி. எட்டி எட்டி - எட்டிப்பார்த்து. முட்டிமுட்டி - மோதி. மருட்டு சுற்றி - உடல் மயக்கம் அடையும்படி சுற்றி. 122.15. சிற்றிடை - சிறிய இடை. வண்டோதரி - இராவணன் மனைவி. பள்ளிகொள்ளும் மாளிகை - அந்தப்புரத்திலுள்ள துயில் கொளள்ளும் மாளிகை. 122.16. கண்பீளை - கண் அழுக்கு. கொடுவாய் - தூக்கத்தின் பொழுது வாயிலிருந்து வடியும் உமிழ்நீர். 122.17. சத்துரு - பகைவர்; இராவணன் மனைவியானதினால். அறுக்கில் - கழுத்தை அறுக்கில். தாமோதர ராமபாணம் - திருமாலாகிய இராமரது அம்பு. திகைத்திடும் - பிரமித்திடும். 122.18. உதத்தரவிலல்லை - வண்டோதரியைக் கொல்ல உத்தரவில்லை. 122.19. சாவடி - சத்திரமம். சந்தடி - கூட்டம். படுக்கைப்புரை - படுக்கையறை. பள்ளியறை - துயிலுமிடம். துறை - நீராடும் இடங்கள். 122.20. குலமாதர் - குடும்பப் பாங்கான பெண்கள். விலைமாதர் - வேசியர். மஞ்சள்க் குளிக்கும் துறை - தோரை மஞ்சள் எனும் மஞ்சளைத் தேய்த்துக் குளித்து நீராடுகின்ற இடங்கள். 122.21. குஞ்சரம் - யானை லாயம் - குதிரைகளைக் கட்டி வைக்குமிடம். விலாசம் - அழகு

Everywhere and sometimes like smoke
Or like the blowing breeze,
Or again like a mote miniscule-
Aṉumaṉ he did search for Sita!
In the mansion of Intirajit, well-versed in magic
With arms mighty in wrestling; in the residence
Of Kumpakarnaṉ; of Vipisana, besides the dwellings
Of all the demonesses cruel; peeping into them all
And crazed with fatigue, with all this whirling about–
Aṉumaṉ he did search for Sita!
Entering the palace of ten-headed Rāvəna
And Mantōtari slender-waisted and looking on
At her sleeping form, realising, that such a woman
With rheumy eyes, saliva-dripping mouth,
And jutting breasts could not be Sita–
Aṉumaṉ he did search for Sita!
Realising that he had no orders to kill her,
Though if he were to cut off her head
As an enemy, Rama's arrow would be baffled,
Spitting in contempt he left the place–
And Aṉumaṉ he did search for Sita!
In the many-coloured choultries and rest-houses
Among the crowd of thronging women,
In bed-rooms and ante-rooms,
As well as in the bathing ghats and fords,
Where countless numbers of women, chaste and loyal,
And courtesans too bathed (using turmeric paste on their bodies)–
Aṉumaṉ he did search for Sita!
In the stables for horses and elephants,
At the myriads of houses in the city,

தஞ்சமில்லா மற்றறிந்து தனித்தனிபோய்ப் புகுந்து
　　தத்திதத்தி பத்திபத்தி சக்கரவளை யஞ்சுற்றிப் (தேடி)
பட்டணதத்தி லாடவர்கள் பந்தடிக்கும் சந்தியிலும்
　　பட்டக சாலையிலும் கொட்டகையும் சோதித்தான்
துட்டரக்கி மார்கள் முளைகொட்டுகிற தலத்திலும்
　　தோழிப் பெண்கள்போல நின்று சாதித்தான் (தேடி)
இட்டவிதிப் பயன்கொண்டு யிறந்தால வரைச்சுடும்
　　இடுகாடுஞ் சுடுகாடு மடிபிடியாகச் சுற்றிக்
சுட்டழகன் தட்டழிந்து கைதட்டித் துடைதட்டிக்
　　கர்த்தன் பத்தினியைச் சிறைவைத்தயிடந் தெரியாமல் (தேடி)
மேகத்திலிருந்து தவஞ்செய் திடுமிந்திர சித்து
　　வீட்டிலுமவன் விளையாட்டிலும் நின்று நின்று
மாகம்முட்டி வீதிலக்ஷம் தேரலங்கரித்து நிற்கும்
　　மாப்பிலுஞ் சிங்காரத் தோப்பிலும் நின்று (தேடி)
காகங்கழுகு போலும் கருக்குருவி யைப்போலும்
　　கட்டுப்பட்டுக் கொட்டுப்பட்டு எட்டுத்திக்குங் கிட்டிக்கிட்டி
ஆகயிப்படித் தேடியனுமான் தளர்ந்து வாடி
　　அப்படியே பத்மநாபன் சொற்படி யிப்படிச்சுற்றி (தேடி)

**தண்ணீர் எடுக்க வந்த பெண்ணிடம் சீதை குறித்து அனுமன் வினவுதல்**

விருத்தம்

123. இப்படியே இலங்கைஎல்லாந் தேடித் தேடி
　　எங்கொளித்தான் சானகியை எனவே வாடித்

122.22. தஞ்சமில்லாமல் - யாரிடமும் அடைக்கலம் சேராது சுதந்திரமாகத் திரிந்து. தத்தி ததத்தி - பாய்ந்து பாய்ந்து. பத்தி பத்தி - பற்றி பற்றி; பிடித்து பிடித்து. சக்கரவளையம் சுற்றி - வட்டமாய்ச் சுற்றி; இலங்கை நகரை வட்டமாய்ச் சுற்றி. 122.23. சந்தி - சந்திப்பு. பட்டகசாலை - கடைத்தெரு. கொட்டகை - கூடாரம். 122.24. முளை கொட்டுகிற தலமம் - தறி வழியாகத் துணி நெய்கிற இடம். தோழிப் பெண்கள் போல - பெண் வடிவம் எடுத்த அரக்கியர்களின் தோழிப் பெண்களைப் போல. 122.25. அவரைச் சுடும் - அரக்கரை எரிக்கும். அடிபிடியாக - ஒன்றுவிடாமல். 122.26. கட்டழகன் - அழகிய மேனி கொண்டவன்; அனுமன். தட்டழிந்து - செய்வதறியாது திகைத்து. கர்த்தன் பத்தினி - பெருந்தலைவனாம் இறைவன் மனைவி; சீதை. 122.28. மாகம்முட்டி - ஆகாயம் வரை முட்டி. வீதி - தெருவீதி. மாப்பிலும் - மீன்கள் மிகுந்த குளத்திலும். 122.29. கட்டுப்பட்டு - பொறுத்து. கொட்டுப்பட்டு - அடிப்பட்டு. திக்கு - திசை. கிட்டிக்கிட்டி - பொருந்தி. 122.30. பத்மநாபன் - திருமால்; இராமன். 123.1. ஒளித்தான் ஒளித்து வைத்தான்.

Freely roaming about without fear.
In house after individual house,
Wheeling about round and round,
And leaping and jumping everywhere,–
Aṉumaṉ he did search for Sita!
In the playground where the men did sport,
Beating balls up in the air;
In bazaars and sheds he examined close,
Where the evil demonesses were weaving cloth,
Standing in the guise of a maid-companion,–
Aṉumaṉ did search for Sita!
Even in the burial-grounds and crematories,
Where the dead were disposed of,
Handsome Aṉumaṉ stood bewildered,
Beating his hands and thighs,
Still unable to discover where,
The great Lord's chaste wife was hidden,–
And Aṉumaṉ did search for Sita,
In the mansion of Intirajit,
(Who had performed tapas from the clouds on high),
In all places where he sported,
Among the numberless chariots bedecked,
That pierced the vault of heaven;
In the fish-ponds and in his lovely pleasances–
Aṉumaṉ he did search for Sita!
Even like a crow or a kite, or a sparrow black,
Buffeted about, but still patient,
He searched in all the directions eight,
Till he grew fatigued and weary;
But still moving around in obedience
To the command of Patmanāpa Lord **Rama**,–
And Aṉumaṉ did search for Sita!

தப்பரவு செயுமரக்கன் பாதா ளதத்தில்
தாழ்த்தானோ விண்ணுலகிற் றான்வைத் தானோ
செப்புவதே திருக்குதென்று மடந்தை மார்கள்
செலமெடுக்கும் படித்துறைப்பொய் கையிலே வந்து
தப்பிநிற்க [68]வொருத்திதண்ணீர் றெடுக்க வந்தாள்
தார்க்குழலைப் பார்த்தனுமான் சாற்று வானே.

சிந்து

124. சாற்றரிய பெண்ணரசே எனது டைய
தங்கையரே நங்கையரே
தாரணியில் ராவணனும் வேறொரு மாதைத்திருடித்
தாபரித்து வைத்ததுமுண்டோ

### பெண்ணின் மறுமொழி

பூதான மாது சொலல்வாள் ராவணனொரு
பொன்மகளைச் சிறையெடுத்துப்
பூங்காவில் கொண்டுவந்து பாங்காக வைத்ததுண்டு
நாங்களந்த செய்தியறிவோம்
செய்தி சொன்ன மாதரசே சிறையில்வைத்த
சித்திரப்பூங்கா வனமெங்கே
செப்புவா யென்றுரைக்க அப்போது கூறிடுவாள்
கற்பினிய மாதரசுதான்

### அசோகவனத்தில் அனுமன் புகுதல்

மைதிகழ சோக வனதத்தில் அவளைச்சிறை
வைத்திருக்குதே சிறையென்றாள்
வார்த்தை சொல்லமாருதியும் சீற்றமுட னோடிச்சாடி
வார்க்கஅவ் வனத்தில்ப்புகுந்தான்

123.2. தப்பரவு - தவறு. பாதாளத்தில் - பாதாள லோகத்தில் விண்ணுலகு - தேவர் உலகு. 123.3. செப்புவது - கூறுவது. ஏது இருக்குது - என்ன இருக்கிறது. செலம் - ஜலம்; நீர். படித்துறைப் பொய்கை - நீர் உள்ள குளத்தில் நீரெடுப்பதற்கென்று அமைந்த துறை. 123.4. தப்பி - ஒதுங்கி. சாற்றுவானே - கூறுவானே. 124.1. எனதுடைய - என்னுடைய. தாரணி உலகம். மாதை - பெண்ணை; சீதையை என்பது குறிப்பு. தாபரித்து - நிலைபெறும்படிச் செய்து. 124.2 பூதான மாது - பூப்போன்ற மெல்லியலான பெண்; நீரெடுக்க வந்தவள். 124.3. என்றுரைக்க - என்று அனுமனன் கூற. 124.4. மைதிகழ் அசோகவனம் - மரங்கள் நெருங்கியமையால் ஏற்பட்ட அடர்ந்த அசோகவனம் என்னும் பெயருடைய வனம். மாருதி - அனுமன். வார்க்க - புயலென.

### AṈUMAṈ ENQUIRING ABOUT SITA FROM A WOMAN

123. Thus searching for Sita everywnere
And sad at his failure so far
To find out where she had been hidden
By Rāvana, Aṉumaṉ wondered within himself
"The sinning demon, Oh, where has he
Steeped her low down in the nether world?
Or has he placed her somewhere in the world above?
Oh, what can I say?"
And nearing a ford where women came
To fetch water from the pool,
He espied a certain woman
(Her tresses adorned with wreaths)
And spoke to her thus.

124. "O woman indescribably rare, my own sister!
Can you tell me if Rāvaṇa has stolen any woman
On this earth and kept her in confinement close?"

### THE WOMAN'S REPLY

The flower-soft damsel did reply: "We are aware
Of the fact that Rāvaṇa has taken prisoner
A golden lady, and kept her in a flowery grove."
"Where is this grove flowery? Tell me true."
And the chaste woman replied; "In the dark-dense wood,
Called Acōkavaṉam, she is kept confined."

### AṈUMAṈ ENTERING ACŌKAVAṈAM AND SEEING SITA

Upon this, like a fierce tempest
Aṉumaṉ entered Acōkavaṉam and saw there

### சீதையை அனுமன் காணுதல்

புகுந்தான சோக வனத்தில் நல்ல
பொற்கொடியாள் திரிசடையும்
பொறிகொண்ட ராக்ஷச [69]ஸ்திரிகளும் பிரியாமல்
குறியுடனிருக்கக் கண்டார்
மகிழ்ந்த வளேசீதை ஆதி ரெகுராமன்
பங்காளி சீதை
வாவா முகுந்தா ஸ்ரீராமா ஜெயமென்று
மரமதிலேறி யிருந்தான்

### திரிசடை தன் கனவைச் சீதைக்குரைத்தல்

இருக்குந் தருண மதிலே அந்த
எந்திழையாள் திரிசடையும்
இரவொரு கனவுகண் டரவுதப் பாமலே
பரவியம்மனுக் குரைத்தாள்
மருமலர் குழல்மா தேஉனைக் கொண்ட
வல்லாளன் தூதுவரவும்
மாதாவே உனைக்கொண்ட காதலன் தரிக்கின்ற
மோதிரந்தர வுங்கண்டேன்
கண்டே னிலங்கை நகரில் நாய்நரி
காட்டேரி கூட்டமிடவும்
காகங்கழு கடைந்து போகவும் பெரியப்பன்
சாகவுங் கனவுகண்டேன்

124.5. பொற்கொடியாள் - பொன் போன்ற மெல்லிய கொடியாள்; திரிசடை; விபீஷணன் மகள். பொறிகொண்ட - கண்ணில் தீப்பொறி கொண்ட. குறியுடன் - சீதையைப் பாதுகாக்கும் குறிக்கோளுடன். 124.6. பங்காளி - இராமனின் உடம்பில் அங்கமாக இருப்பவள். முகுந்தா - திருமாலே; இராமனே. ஜெயம் - வெற்றி. 124.7. கண்டரவு தப்பாமலே - கண்ட கனவைக் குறைவுபடாமலேயே. பரவி - புகழ்ந்து. அம்மனுக்கு - சீதைக்கு. 124.8. மருமலர் குழல் மாதே - வாசமுள்ள மலரைக் கூந்தலுக்கு அணிந்த மாதே; சீதையே. வல்லாளன் - திண்ணியன்; இராமன். காதலன் - சீதையின் கணவன்; இராமன். மோதிரம் - கையணி வகைகளுள் ஒன்று; இதை அனுமனிடம் இராமன் சீதைக்கு அடையாளமாகக் கொடுத்திருந்தான். 124.9. காட்டேரி - துர்தேவதை. பெரியப்பன் - திரிசடையின் பெரிய தந்தை; இராவணன்.

Tiricaṭai lovely like a golden Liana!
And demonesses with fiery looks surrounding Sita
Ever intent to guard her,
Rejoicing in his heart, that it must be
The spouse of Rakurāma concorporate with him,
Aṉumaṉ chanted, the name of his Lord.
'Mukunta! Srirāma! Victory! Victory!'
And hid himself among the branches
Of the tree under which Sita was seated.

## TIRICAṬAI NARRATING HER DREAM TO SITA

While the envoy was up in the tree
The bejewelled Tricaṭai narrated to the God'less
A dream she had the night before!
"O Damsel (adorned with fragrant flowers)!
I dreamt that the messenger
Of your mighty Lord **Rama** came to you
And gave you the ring worn by your Lord."
"I saw too in Laṅka's city, dogs and jackals
And fierce minor deities like *Kāṭṭēri*
Roaming in groups; and crows and carrion-kites
Hovering above; and my uncle (Rāvaṇa) dying,

*வண்டோ தரிதாலி சோர என்தகப்பன்*
*மாளிகையில் லட்சுமிசேர*
*வகையாய்க் கனவுகண்டேன் ரகசிய மொருவர்க்கும்*
*பகரவொண் ணாதுதாயே* 10

**வண்டோதரி தான் கண்ட கனவை இராவணனுக்கு உரைத்தல**

*தாயென அவளு ரைக்க அந்த*
*தார்குழலாள் வண்டோதரியும்*
*தானதிலே பொல்லாத கனவுகண்ட வளுமோ*
*தன்மணவா ளர்க்குரைப்பாள்*
*நீயென்ன புத்தி படித்தாய் என்மக்களை*
*நிர்மூலமாக்கத் துணிந்தாய்*
*நீலவர்னன் தேவிதன்னைக் கோலமாய் சிறையில்வைத்தாய்*
*காலமுடி வானதுனக்கு*
*முடிப்பத்தும் பூண்டா யேசெக தலத்தில்*
*மூவுலகு மாண்டாயே*
*முகக்கோடி யரைக்கேட்டு மிக்கவரமம் பெற்றாயே*
*ஒக்கவழி வானாயே*
*குடிகெட்டும் போனோமே சீதை யென்ற*
*கோதையைச் சிறையிட்டாயே*
*குப்பென விபீஷணன் நற்பாக வெகுபுத்தி*
*செப்பினதுங் கேளாயோ*

**இராவணன் திரிசடையைக் காண வருதல்**

*கேளென அவளுரைத்த புத்தி சற்றும்*
*கேளாமல் வாளரக்கன்*
*கெம்பீரமாய் நடந்து தம்பிமகள் திரிசடை*
*முன்பிலே வந்துசேர்ந்தான்* 15

124.10. சோர - இழந்து போக. என் தகப்பன் - திரிசடையாகிய என் தகப்பன்; விபீஷணன். ரகசியம் - கனவின் ரகசியம். 124.11. வண்டோதரி - இராவணன் மனைவி. பொல்லாத கனவு - வண்டோதரி கண்ட தீயக்கனவு. மணவாளர் - தன் கணவன்; இராவணன். 124.12. புத்தி படித்தாய் - அறிவைக் கொண்டாய்; சீதையைச் சிறை வைத்ததால் அறிவை நீ இழந்துவிட்டாய் என்ற பொருளில். என் மக்களை - என் குழந்தைகளை. நீலவார்னன் தேவி - நீலவர்ண மேகம் பொருந்தியவன் மனைவி; சீதை. காலமுடிவானது - வாழ்வின் முடிவு உனக்கு ஏற்பட்டு விட்டது என்ற பொருளில். 124.13. முடிப்பத்தும் - கிரீடங்களைப் பத்து தலையிலும். பூண்டாய் - தரித்தாய். முககோடியர் - சிவன். ஒக்க அழிவானாயே - அனைத்தையும் இழக்கத் துணிந்தாயே. 124.14. குடி - குலம். குப்பென - விரைவாக. நற்பாக - நற்பண்புடனே. செப்பினதும் - கூறினதும்.

My aunt Mantōtari losing her *Tāli*,
While the Goddess of wealth Lakshmi entered our house.
This I dreamt mother, a secret I cannot tell others."

## MANṬŌTARI TELLING RĀVANA ABOUT HER DREAM

As Tiricaṭai informed her of her dream,
Manṭōtari (her tresses adorned with wreaths of flowers),
Spoke to her husband about her own bad dream.
In these words, chastising him roundly thus:
"What sense do you have, if any?
You have determined to wipe off my children:
You placed the spouse of the blue-complexioned Lord,
In durance vile! Surely your time is up.
Oh! with ten-crowned heads you did rule over the triple worlds!
From Lord Siva you obtained many a boon!
And now you are about to lose everything,
Oh! you have ruined our entire race,
Because you have imprisoned Sita.
Didn't you hear the sane advice, which swiftly
Vipīṣaṇa gave you, out of the goodness of his heart?"

## RĀVANA COMES TO SEE TIRICATAI

Regardless of the passionate plea of his wife,
And mindless of her advice, Rāvana
Majestically walked upto his brother's daughter, Tiricatai:

**இராவணன் உரை**

வாள்விழி திருச்ச டையே விபீஷணன்
மகளேஎன் கண்மணியே
மங்கையை மனந்திருப்பி லங்கைநகர் மாளிகைக்கு
அங்குவரத் தாமசமேன்

**திரிசடை இராவணனுக்கு உரைத்தல்**

தாமச மொன்றுமில் லையையா உன்மனதுக்குச்
சரிபோன படியெனவே
தள்ளுமோ கிணற்றுநீரை வெள்ளங் கொண்டுஏகிடுமோ
கள்ளமனம் வெள்ளையாகுமோ
ஆமதுக் கென்ன துரிசம் பையப்பைய
அதறாது சிதறாது
ஐயா .கருத்தின்படி செய்யலாமென் றுரைத்தவள்
தையலும் கைவசமோ
வசமுடன் மகளு ரைக்க ராவணன்
மகிழ்ந்துமாளி கைபுகுந்தான்
மாருதியித் தனையுஞ் சீருடன் கேட்டுக்கொண்டு
தோரணம திலிருந்தான்

**அனுமன் கணையாழியைச் சீதையருகில் போடுதல்**

தசர தரெகு ராமா ராமஸ்ரீ
ராமாஜெய மெனவே
செவியிலடித்துக் கொண்டு புவிமகள் சீதைமுன்
கவிதிருவா ழியைவிட்டான் 20

124.16. வாள்விழி - கூரிய வாள் போன்ற விழி. மங்கையை - சீதையை. மனந்திருப்பி - சீதையின் மனம் என்பால் திரும்பும்படி செய்து. லங்கைநகர் மாளிகை - இராவணாகிய நான் இருக்கும் இலங்கைநகரின் மாளிகை. தாமசமேன் - தாமதமேன். 124.17. தள்ளுமோ - ஆகுமோ; ஏகிடுமோ - சென்றிடுமோ, கள்ளமனம் வெள்ளையாகுமோ - திருட்டு எண்ணம் கொண்ட மனது வெள்ளை ஆகிடுமோ. சீதையை வெறுப்பவள் போல் குறிப்பால் திரிசடை பேசினாள் என்ற குறிப்பை இது தருகிறது. 124.18. துரிசம் - வேகம். பையப்பைய - மெதுவாக. அதறாது சிதறாது - 'சீதையின் அன்பு உன்னை விட்டு எங்கும் போகாது' என்ற பொருளில். ஐயா கருத்தின்படி - இராவணராகிய என் தந்தையே உன் கருத்தின்படி. செய்யலாம் - உன் எண்ணத்தை முடிக்கலாம். தையல் - சீதை. கைவசமோ - 'திரிசடையே! சீதை உன் கை வசமோ' என இராவணன் வினவ. 124.19. மாருதி - அனுமன். சீருடன் - பொறுமையுடன். தோரணம் - மதில் கூரையில் போடப்பட்ட அழகு விரிப்பு. 124.20. புவி மகள் சீதை - பூமியில் பிறந்த மகளாம் சீதை. கவி - குரங்கு; அனுமன். திருவாழியை - இராமன் தன் கையிலணிந்த மோதிரம் தன்னை.

"O, Tiricaṭai with your ensate eyes sword-sharp!
Daughter of Vipīṣaṇa, dear to me as my eye!
Why does it take so long to persuade Sita,
And bring her willingly to my palace!"

### TIRICAṬAI'S REPLY TO RĀVAṆA

And she replied, (as if approving his evil-passion!):
"No delay, my Lord, no delay at all!
Everything will turn out as you desire soon!
Where will it go, the water in the well?
No flood can carry it away!
Why this hurry? It will take time
For her heart to change;
By and by she will be yours, as you wish;
And her love will ever be with you!"
As she spoke these words pleasing to his ear,
He cried to her "Oh! is she in your power so much?"
And rejoicing he went back to his mansion.

### AṈUMAṈ DROPPING THE SIGNET RING IN FRONT OF SITA

**Māruti** who had been hiding beside the ornamental hanging
Near the rampart, now chanting "Victory! Victory!
To Tacarata Rakurāma! Victory to Rama!"
So that it could be heard by Sita,
Dropped the sacred ring before the daughter of the Earth!

திருவாழி சீதை முன்வர ராக்ஷசர்
செய்கின்றது தோவெனவே
சித்திரங்கள் போலவே உத்தரங்கள் பேசாமல்
பத்திநிலம் பார்த்திருந்தாள்

**அநுமன் சீதையிடம் தன்னை ராமதூதனே எனக் கூறல்**

மருமலர் சூழல்மா னேஸ்ரீ ராமன்
வரவிட்ட தூதன்நானே
மாதையே தினகரன் சீதையே சரணமென்று
கோதையை யடிபணிந்தான்

பணிந்தான் மலர்சொ ரிந்தான் திருவுளம்
பார்த்துஅடை யாளமுரைப்பான்
பல்லூழி மிதிலையிலே வில்முறித்து மாலையிட்டார்
செல்வியுனக் கடையாளம்

துணிந்த பர்சு ராமன்சிலை பறிக்கத்
தொடுத்ததோ ரடையாளம்
சுசுமுடன் கைகேசி தண்டக்கண்டு வனவாசம்
புகுவதோ ரடையாளம்

பகர்குக னோட மிடவே முனிவர்கள
படைதந்த அடையாளம்
பார்க்கு மகனையிழந்த சூர்ப்பனகை ராக்ஷசத்தி
மூக்கரிந்த அடையாளம் 25

124.21. சூதோ - சூழ்ச்சியோ. சித்திரங்கள் - ஓவியங்கள். உத்திரம் - பதில். பத்திநிலம்- நிலத்தைப் பற்றி; நிலத்தைப் பொருந்தி. 124.22. மருமலர் - நறுவாசனையுடைய மலர். மானே - மான் போன்ற விழியாளே; சீதையே! மாதையே - பெண்ணே. தினகரன் சீதை - ஜனகன் மகளாம் சீதை. கோதை - பெண்; சீதை. 124.23. அடையாளம் உரைப்பான் - சீதையைக் குறித்து இராமன் கூறிய அடையாளங்களைக் கூறுவான். பல்லூழி மிதிலை - பலவூழி காலமாய் நிலைபெற்ற மிதிலை நகரம். வில்முறித்து - 'சிவதனுசு' என்கிற வில்லை முறித்து. 124.24. துணிந்த - எதிர்த்த. சிலை - வில். தண்டக்கண்டு வனவாசம் - இராமர், இலட்சுமணர், சீதை மூவரையும் தண்டகாரண்ய வனத்திற்கு வாழும்படி விட்டது. 124.25 குகன் - வேடர்த் தலைவன்; கங்கைக்கரையில் நாவாய் ஓட்டுபவன். மகனை யிழந்த சூர்ப்பனகை - இலட்சுமணனால் மகனை இழந்த சூர்ப்பனகை. ராக்ஷசத்து - அரக்கி

But wondering whether this was also the work of demons,
Sita continued to look down upon the ground,
Silent as a painting, without any response.

### AṈUMAṈ INTRODUCING HIMSELF TO SITA AS RAMA'S ENVOY

"O, doe-like Princess Sita!
(With tresses adorned with fragrant blooms)
I am the messenger sent by Lord Rama!
O, Jaṉaka's daughter, Refuge! I bow before you!"
Thus he made his obeisances pious, to her.
And placing flowery offerings before her,
He began to report all that was instructed
By the Lord, to convince her of his identity
"In the city of Mitilai existing for aeons,
My Lord broke the mighty bow
And wedded you, O opulent princess!
This is a proof that I am his messenger.
The valiant Paracurāma's bow, he did seize!
This again, a proof! To please Kaikēci,
The three of you came to the forest exile:
Yet another proof! The hunter Kukaṉ
Ferried you across the Ganges;
And the holy sages gave you weapons divine:
Yet another proof that I am Rama's envoy!
The nose of Cūrppaṉakai, the demoness,
Was sliced by Lakshmana,
(Cūrppaṉakai who had lost her son earlier):
This is again a proof.

மகராசி உனைத்திருட சூது செய்து
வல்லரக்கன் மானாக
மானைப் பிடியுமென்றே தேனைத் தனியேவைத்துப்
போனதோ ரடையாளம்.

**சீதை மகிழ்ச்சி**

விருத்தம்

125. அடையாள முரைத்ததென்பேர் அனுமா னென்றான்
அரிராமன் வரவிடுத்த தூத னென்றான்
உடையமன்னன் வரவிடுத்த தூதன் நானே
உள்ளதென்றே திருவாழி யுடன்கைப் பற்றிச்
சடையாமல் சிரசில்வைத்துக் கண்ணி லொற்றித்
தனைத்தணைத்து மனத்துயரத் தளர்ச்சை தீர்ந்து
கிடையாத பொருள்கரத்தில் கிடைத்த வாறாய்
கெர்ச்சித்தாள் ராகவன்பே ரிச்சித் தாளே.

**சீதை தன் மனநிலையை அனுமனிடம் கூறுதல்**

சிந்து

126. இச்சித்து மானைப்பிடிக்கச் சொன்னேன் கொஞ்ச மதியே
இந்த வனத்திலி ருப்பது மெந்தலை விதியோ
ரெக்ஷிக்க சீக்கிரம் வந்தா லவருடன் வாழுவேன்
நீலவர் னரவர் தாமதித் தாலுயிர் மாளுவேன்
மாளும் படிக்கவர் தார மிழக்கச் சம்மதியோ
மாமியார் கிட்டஎனைக் கொண்டுசேர்க்கச் சம்மதியோ
ஆளும் படியவர் வார தெப்போ வறியேனே
ஆசை எல்லாந் திருமாலுக்குச் சொல்ல னுமானே.

124.26. சூது - சூழ்ச்சி. வல்லரக்கன் - கொடிய அரக்கன்; மாரீசன். தேன் - தேன்போன்ற இனிய மொழி பேசும் சீதை. 125.1. உள்ளதென்றே - என் கையில் உள்ளது என்றே. திருவாழி- இராமன் கையிலணியும் மோதிரம். 125.3. சடையாமல் - சோர்வில்லாமல். தனைத்தணைத்து - மோதிரத்தை நெஞ்சிலணைத்து. தளர்ச்சை - தளர்வு. தீர்ந்து - நீங்கி. 125.4. கெர்ச்சித்தாள் - மகிழ்ச்சியில் ஒலி எழுப்பினாள். இச்சித்தாளே - ஆசை கொண்டாளே. 126.1. இச்சித்து - விரும்பி. கொஞ்சமதியே - சீதையாகிய எனக்குச் சிறிதளவே அறிவு. வனம் - அசோகவனம். 126.2. ரெக்ஷிக்க - பாதுகாக்க. அவருடன் - இராமருடன். மாளுவேன் - இறப்பேன். 126.3. தாரமிழக்கச் சம்மதியோ - இராமர் மனைவியாகிய என்னை இழக்க சம்மதமோ. மாமியார் - மாமியார்களான கௌசலை, கைகேசி, சுமித்திரை. 126.4. ஆளும்படி - என்னை மனைவியாக ஆளும்படி. வாரதெப்போ- வருகிறது எப்பொழுது.

The powerful fiend bade his uncle tempt you,
Treacherously in the form of a golden deer;
And you did ask for the same to play with,
And Rama left you alone, (You with honeyed speech):
This is again a proof that I am **Rama's** envoy.

## SITA REJOICES

125. As he introduced himself as Aṉumaṉ,
With proofs positive of his identity
As the messenger of Harirāma, Princess Sita
Took up the signet ring of her Lord
And placed it on her head,
Touched her eyes with it and held it close to her bosom;
Relieved of fatigue, pain and affliction
She uttered cries of joy, love welling
Within her at the thought of Rākava!

## SITA TELLING AṈUMAṈ ABOUT HER RESOLVE

126. "Is it fate that I should be in this wood, a prisoner?
Oh, weak-minded that I was,
That I longed for the deer and asked for my Lord
To catch it for me! Tell my Lord that
If he comes quickly to save me, I shall survive!
If he were to delay, I will take my life,
Is it agreeable to him to lose his spouse,
Or to restore me to my mothers-in-law?
Oh, I do not know when he will come
To take me back! O Aṉumaṉ!
Tell all this that I have said to my Lord Tirumāl"

### அனுமன் பதிலுரை

மானே யென்மாதாவே யொன்றுக்கு மஞ்சா திருவே
வந்துவிட்டா ராழிதந்து விட்டா ரெந்தன் குருவே
தேனே வுன்சிந்தைத் துயர்நீக்க சீக்கிரம் வருவார்
சீறி யரக்கரை நீறாக்கு வாரென் குருவே

### அனுமனிடம் இலங்கை வந்தவிதம் குறித்துச் சீதை வினவுதல்

குருசுவாமி யான வசிட்டர் கிருபை யினாலே
கூடி யெனைச்சிறை மீள வேணுந் திருமாலே
திருமா லெனக்காக வுன்னுடன் கற்பித்த சொற்படி
தேசத்திலே யனுமான் வந்து சேர்ந்தது மெப்படி

### அனுமன் நடந்ததைக் கூறுதல்

படியளந் தார்சொல்லு மாழியுஞ் சிரசினில் சூடினேன்
பத்தினி யுன்னைத் துதித்துக் கடல்தாண்டிச் சாடினேன்
முடிவா ளிலங்கணியைக் கொன்று குடல்மாலை சூடினேன்
மூண்டிடும் பூதப் படைகளை வாரியில் மூடினேன்
மூடியி லங்கையில் பட்டண மெங்கெங்குந் தேடினேன்
முன்னூறு கோடி யரக்கர் தெருத்தலை தேடினேன்
தேடியே மாபாவி ராவணன் மாளிகை புக்கினேன்
திண்டாடி வண்டோ தரியையு மவனையுந் துப்பினேன்

அவனுட பத்துத்தலை யறுப்போ மென்று நேமித்தேன்
அரிநமர் பாணந்திகைக் குமென்றேசிந் தைநேமித்தேன்
சிவனுட கிருபையி னாலொரு மாதுசெப் புரைகண்டேன்
சீதா லட்சுமியென் மாதாவையுங் கண்டு கொண்டேனான்

126.5. அஞ்சாதிருவே - அச்சம் கொள்ளாமல் இருப்பாய். ஆழி - கை மோதிரம். எந்தன் குரு - என் தலைவர்; இராமர். 126.6. சிந்தை - அறிவு. துயர்நீக்க - துயரம் நீக்க. நீறாக்குவார் - சாம்பலாகும்படி செய்குவார். 126.7. சிறை மீள வேணும் - சிறை மீட்க வேண்டும். 126.8. கற்பித்த - ஏவிய. 126.9. படியளந்தார் - உலகத்தை அளந்தவர்; திருமால். ஆழி - கை மோதிரம். 126.10. முடிவாள் இலங்கணி - கூர்மையான வாளாயுதத்தைக் கொண்ட இலங்கையைப் பாதுகாக்கும் அரக்கி. வாரி - கடல். 126.11. மூடியிலங்கை - கடலால் சூழப்பட்ட இலங்கை. தெருத்தலை - தெருக்களின் இடம். 126.12. துப்பினேன் - காறி எச்சிலால் உமிழ்ந்தேன். 126.13. அவனுட - அவனுடைய. நேமித்தேன்- உறுதி எடுத்தேன். 126.14. சிவனுட - சிவனுடைய. மாது செப்புரை கண்டேன் - தண்ணீர் எடுக்கும் இடத்தில் சீதை சிறை வைக்கப்பட்டதை அவள் வாய்வழி அறிந்தேன்.

### AṈUMAṈ'S REPLY

And Aṉumaṉ replied "Oh mother mine,
Lovely like a gazelle! Do not be afraid;
Stay fearlessly, and with patience!
My master has given his ring to you:
And straight he will come, be sure,
To relieve your distress,
Oh my Lord will incinerate the demons,
And make them ashes"

### SITA ENQUIRING HOW AṈUMAṈ CAME TO LANKA

"By the grace of our precepter Vacittar
My Lord must save me from this prison.
Now tell me, how as ordered by the Lord,
You came to this country?" asked Sita, of Aṉumaṉ.

### AṈUMAṈ NARRATING HIS EXPERIENCES

"Wearing on my head the signet ring of my Lord
And his command, (the Lord who measured the Universe),
And praying to you, O chaste Goddess,
I leaped across the sea into Laṅka;
Slaying Laṅkaṇi (armed with a sharp sword)
I wore her entrails like a garland!
Into the sea I cast, the thronging goblin bands!
I searched throughout the city:
I searched myriads of streets where demons dwelt!
Searching for you thus, I entered the palace
Of the evil-sinner Rāvaṇa and spat upon
Him and his wife Mantōtari, asleep:
I thought of cutting off his ten-heads
But decided against it, as it would not
Redound to the credit of Rama's arrow!
By the grace of Siva, from a good woman's words
I came to know about your being kept here;
And I am now blessed on seeing my mother, Sita Lakshmi!"

### சீதை அனுமனை ஆசீர்வதித்தல்

கண்டுகொண் டேனென்ற மாருதி சிரஞ்சீவி நீயேஎக்
காலமுமே யுயிர்சா காமல் நீயிருப் பாயே.

### அனுமன் வேண்டுகோளும் சீதையின் மறுப்பும்

வண்டோதரி பாகன் தலைகொய் திதைகொண்டு பாராய்
மாதரசே யுனைச் சிரசில் கொடுபோரேன் வாராய்
வாராயென்றே சொன்ன மகனே செல்லாதுனக் கென்றார்
மாகம் முட்டி விசுவரூப மெட்டியவன் நின்றான்
பேராயனு மான்மகா மேருபோல் நிறங் கொண்டான்
பெலவா னிந்தக்கோலம் அமையுமென மகிழ்ந்து கொண்டான்
அமையு மமையுமென்று அழகுதாய் கற்பனை வந்ததால்
ஆக அனுமான் சின்ன வானரம்போலே சமைந்தான்
சமைந்து வந்துநின்று அனுமன் கைகெட்டிக் கூத்தாடினான்
தாயே யெனக்குப் பசியாற விடைதாவென்று பாடினான்

### அனுமனுக்குச் சீதை விடை தரல்

அமர்ந்துரை கேட்டதோர் அனுமந் தராயனே கேட்டுக்கோ
அரிராம தூதனாய் வந்ததி னாலிதை நாட்டிக்கோ
சுமந்த வனத்தில் சென்றுகனிந்த பழங்கனி பார்த்துக்கோ
தோணும்படி புசித்துக் காணும் படியேபசி தீர்த்துக்கோ

126.15. சிரஞ்சீவி - என்றும் நிலைபெற்றவன். 126.16. வண்டோதரி பாகன் - வண்டோதரியின் கணவன்; இராவணன். இதை கொண்டு பாராய் - என் வலிமையைக் கொண்டு பார்ப்பாய். சிரசு - தலை. கொடு போரேன் - கொண்டு போகிறேன். 126.17. செல்லாது உனக்கு என்றார் - நீ கூறிய வண்ணம் உன்னால் செய்ய இயலாது என்றாள் சீதை. மாகம் முட்டி -(சீதையின் கூற்றை மறுக்க) வானம் முட்டும்படி. 126.18. பேராயனுமான் - மிக பெரிய அனுமான். மகாமேரு - மகாமேருமலை; பொன்னிறமுடையது. பெலவான் - பலசாலியான அனுமான். அமையுமென - சீதையைச் சுமந்து செல்வதற்குத் தகுமென. 126.19. அழகு தாய் - அழகிய தாய்; சீதை. கற்பனை வந்ததால் - 'என்னைச் சுமக்க உன்னால் முடியாது' என்கிற சீதையின் கட்டளை வந்ததால். சின்ன வானரம் - சிறு குரங்கு. 126.20. சமைந்து வந்து நின்று - சிறிய குரங்காய் மாறி நின்று. கூத்தாடினான் - மகிழ்ந்து ஆடினான். 126.21. உரை - எனது வாய்ச்சொல்; ஏவதென்றது சீதையை. அனுமந்தராயனே - அனுமனே. நாட்டிக்கோ - பொருந்திக்கோ. 126.22. சுமந்த வனம் - பழம், காய்களைச் சுமந்த காடு. புசித்து - பசியாற உண்டு.

### SITA BLESSING ANUMAN

"Eternal you will live, deathless ever.
O Māruti. you who have succeeded
In tracing me thus, (where others have failed)
For ever, for ever, for ever may you live!"

### ANUMAN'S REQUEST AND SITA'S REFUSAL

Now Anuman to Sita, this request made;
"O queen among women! See, my princess,
I will cut off the heads
Of Mantōtari's husband, Rāvana!
Come, I shall carry you on my head
Back to our Lord!" And she said;
"My son, who wants me to come with you!
You cannot do as you have said!"
And Anuman took a *visvarūpa*[124] form,
That hit the very vault of the sky!
Golden, like Mēru Mount stood Anuman
Pleased that this huge stature
Would suit his purpose; but his lovely mother's
Command prohibiting the same,
Back he reduced his form again
And stood before her, a monkey small,
Seeking her permission to sate his hunger!

### SITA BIDDING FAREWELL TO ANUMAN

"Listen well, to what I say, O, Anumantarāya!
Who has come to me as Harirāma's envoy:
Go you to the grove laden with ripe fruit
Eat your fill and sate your appetite!"

124. [illegible] - The huge form of God Vishnu, comprising the entire universe.

தீர்த்துக் கொள்ளுமென்று சீதை விடைகொடுத்த செய்தியால்
தேன்வருக்கை வாழை மாவிருக்குஞ் சோலை யெய்தினான்
பார்த்துக் கோடைக் காலம் காற்றுச்சூறா வளியொக்குமே
பாங்காயனு மான்சென்ற சோகவன மெல்லாங்கை வைக்குமே.

**உணவு உண்ட அனுமன் வனத்தை அழித்தல்**

விருத்தம்

127. வைக்கும்வய றதுநிறைய வனத்தில் பாய்ந்து
வற்கவகை யொடுசீனிக் கிழங்கு தேங்காய்
மெய்க்கவகை மாங்கனிதேன் வருக்கை வாழை
விரவியுண்டு பசியாறி விழித்துப் பார்த்தான்
தைக்கமுகு கோங்கிலுப்பை புன்னை தெங்கு
சகலமரந் தனைமுறித்துத் தவிட தாக்கி
மைக்கண்சா னகியிருக்கும் மரமல் லாதே
மற்றவன மத்தனையு மழித்திட் டானே.

குற்றடி சிந்து

128. திட்டா கும்படி வட்டா ரங்களில் சிறந்தசோலை வனத்திலே
தேடிச்சாடி யாடிப்பாடிச் சினத்து மரத்தைப் பிடுங்கியே
கட்டா யத்தொடு நெட்டா யத்தொடு கால்முறிந்தது சிலமரம்
கைகொண் டடித்து மெய்கொண் டடித்து கடிந்தொ டித்தது சிலமரம்
தட்டாத தேக்கை நாங்கை கோங்கை தயில மரத்தை மயிலையைத்
தாத கத்தியைத் தோத கத்தியைத் தவிடுபொடிய தாக்கினான்
எட்டா முகிலை வானந் தடவி யிருக்கும் மரத்தைக் குறுக்கினான்
ஏவ அனுமன் காவை யழித்த தெல்லாம் மாயன் கிருபையே

126.23. தேன்வருக்கை - தேன் வடியும் 'வருக்கைப் பலா' என்னும் பலாப்பழம். மா - மாங்கனி. 126.24.கை வைக்குமே-பழங்கள் மீது கை வைப்பானே. 127.1. வற்கவகையொடு-கனிகள் கொண்ட மரவகையோடு. சீனிக்கிழங்கு - இனிப்பு வகையுடைய சீன தேசத்து கிழங்கு வகை. 127.2. விரவியுண்டு - கலந்து உண்டு. 127.3. தைக்கமுகு - இளங்கமுகு. கோங்கு, இலுப்பை, புன்னை, தெங்கு - சிலவகை மரங்களின் பெயர்கள். தவிடதாக்கி - பொடியதாக்கி. 127.4. மைக்கண் - அஞ்சனம் தீட்டிய கண். 128.1. திட்டாகும் படி - மேடாகும் படி. வட்டாரங்களில் - அந்தந்தப் பகுதிகளில். 128.2. கட்டாயத்தொடு - அதிக வளர்ச்சியற்ற சிறு மரக் கூட்டத்தோடு. நெட்டாயத்தோடு - மிக வளர்ந்த பெரு மரக் கூட்டத்தோடு. கால் முறிந்தது - அடிமரமாக முறிந்தது. 128.3. தட்டாத - அடித்து வீழ்த்த முடியாத. தேக்கு, நாங்கை, கோங்கை - சில மரங்களின் பெயர்கள். தயிலம், மயிலை, நாதகத்தி, தோதகத்தி - சில மரங்களின் பெயர்கள்; அனுமன் அழித்த மரங்கள். 128.4. முகில் - மழை மேகம். குறுக்கினான்-சிறியதாக்கினான். கா - சோலை. மாயன் கிருபையே திருமாலின் அருளே.

With this permission from Sita, he reached
Acōkavaṉam full of jack trees, plantain,
And mango trees; even like a tempest
In mid-summer season, he went
Through the fruit-grove, plucking the fruits.

### AṈUMAṈ DESTROYING ACŌKAVANAM

127. Plucking the ripe fruits of various trees
Coconut, sweet-potato tubers,
Mangoes, honey-dripping jack,
And ripe plantain and mixing them
Together, he ate them to his heart's content;
His great hunger satisfied,
He saw before him the goodly trees
Tender areca-palms, *Kōṅku*, and *Puṉṉai*,
Coconut and Mahua trees;
And on an impulse, destroyed them;
Uprooting and breaking all of them
Excepting the one under which Sita was,
(Sita of collyrium-fed eyes)

128. Leaping, singing and dancing
Aṉumaṉ wrought havoc in the grove,
The best of them all in the region,
Laying about him till it became a waste land·
Angrily he would pluck them by the roots,
Clumps of stunted trees small,
As well as tall, lofty ones;
Breaking some with his hands
And some with his other limbs,

கிருபைக் கடலை யடுத்த மாருதி கிட்டி யேவனம் முட்டியே
கீழக் கோட்டை வாசற் சோலை கிளர்ந்த வனத்தை
யழித்திட்டான்
சிறுகக் குரங்கு ரூபமாறிச் சிகர முட்டி வளருவான்
தெக்குக் கோட்டை வாயிற் பகுதிசிலசில வனமழித் திட்டான்
மறுகப் புகுந்தே மேலக் கோட்டை வாசலிற் சிலவ னத்தையும்
வடக்குக் கோட்டை வாச லில்சில வனத்தையும்புகுந்
தழித்திட்டான்
குறுகிச் சாடி மரத்தி லேறிகொட்டி யேதுடை தட்டியே
குரவை யிட்டதும் சரவை தீர்த்ததும் கோவிந் தசெய மனுமனே
விந்தை யான மரத்தைப் பிடுங்கி வேறு மரத்தி லடிப்பானாம்
வேழ மரத்தை நீள மரத்தை வேரைப் பிடுங்கி முறிப்பானாம்
பந்தம் மானைப் போட்டுப் பிடிக்கப் பாலை வேலைப் பிடுங்கினான்
பக்ஷிமிருகம் பறவை பறக்கப் பாக்கு மரத்தைப் போக்கினான்
சித்தரங் களைநிம் பமரத்தைத் திருக்கி முறித்துத் தேக்கினான்
சீலத்தரசை யாலைப் புரசைச் சிதறத் திட்டில தாக்கினான்
இந்த வனத்தில் காவல்க்கார னிருண்டு மருங்கு திரண்டுதான்
எதுத்தபோது குதித்து வாலிட் டிறுக்கி வதைக்கு மனுமனே

### எதிர்த்த அரக்கர்களை அனுமன் அழித்தல்

வதைக்குங் குரங்கு வனத்தை யழிக்கு மாறு கேட்டு ராக்ஷசர்
வந்து கூடிப் பஞ்சைக் குரங்கை மடியப் பாரும் பாரடா
பதைக்க வீரக்க ஈட்டி குந்தம் பரிசை யுஞ்சமு தாடுமாய்
பத்து நூறுபேர் கூடிப் பிடிக்கச் சுற்றி னாரந்த வனுமனை

128.5. முட்டியே - சேர்ந்தே. கீழக்கோட்டை - கிழக்குக் கோட்டை. 128.6. சிகரமுட்டி - மலைச்சிகரம் முட்ட தெக்குக் கோட்டை - தெற்குக் கோட்டை. 128.7. மறுக - மீண்டும். மேலக் கோட்டை - மேற்குக் கோட்டை. 128.8. குறுகி - சிறு குரங்காகக் குறுகி. குரவையிட்டதும் - வெற்றி ஒலியாகக் குரவை ஒலி இட்டதும். சரவை - துன்பம்; இங்குத் தேவர் துன்பம். கோவிந்த செயம் அனுமானே - கோவிந்தனாம் இராமனின் அருள் பெற்ற அனுமானே. 128.9. விந்தையான - வியப்பான. வேழமரம் - ஒரு வகை மரம். 128.10. பந்தம் - அழகு. போட்டுப் பிடிக்க - மேலே போட்டுப் பிடிக்க. பாலை, வேல் - பாலை மரம் மற்றும் வேல மரம். 128.11. சிந்துரம் - புளியமரம். நிம்பமரம் - வேம்பு மரம். தேக்கினான் - அடுக்கினான். 128.12. இருண்டு - சினத்து. மருங்கு திரண்டுதான் - பக்கங்களில் பொருந்தினான். எதுத்த போது - எதிர்த்த போது. வாலிட்டிறுக்கி - வாலால் எதிரிகளைக் கட்டி இறுக்கி. 128.13. வதைக்கும் - கொல்லும். பஞ்சைக் குரங்கு - சிறு குரங்கு. மடியப்பாரும் பாரடா - இறந்து போவதைப் பாருங்கடா. 128.14. பதைக்க - பதைத்து. ஈட்டி குந்தம் - சில படைக்கருவிகள். பரிசை - கேடயம். சமுதாடு - ஒரு வகை ஆயுதம்.

Stout trees like teak, *Kōṅku, Nāṅku*[125],
*Tailam*[126], *Maiyilai*[127], *Tātakatti*[128],
And *Tōtakatti*[129], he smashed to pieces;
He cut down and shortened
Lofty trees that touched the clouds in the sky!
It was by the grace of Tirumāl,
That Aṉumaṉ could do all this:
Maruti, steeped in the sea of grace,
Battered the wood beside the Eastern Gate;
Sometimes he became small in size,
And again, would grow big,
As he wiped out some groves
Near the Southern Gate of the fort!
Again he would leap to the West,
And destroy the copses there!
Ending up in the Northern side,
To lay waste the woods there too!
Reducing his structure, he climbed the trees,
And beating his thighs, would utter
Cries of victory, signifying the end
To the sufferings of the celestials!
All this Aṉumaṉ did by Kōvinta's grace
Plucking a marvellous tree by its roots
He would smash it against another;

125. *Nāṅku* - Kind of tree; 126. *Tailam* - A tree; 127. *Maiyilai* - A tree

128. *Tātakatti* } - Kinds of trees
129. *Tōtakatti* }

விதைக்குந் தொளியிற் குழைபு தைப்பது மீன்பி டிப்பது போலவே
விரட்டி வாரித் திரட்டி யொதுக்கி வெற்றிக் கால்கொண்
டெற்றியே
உதைத்திட் டரக்கர் சிரத்தைத் திருகி உவர்க்கட லுக்குள் ளெறிந்துதான்
ஒளித்து வனத்தை யழித்து மரத்தி லொதுங்கி கொண்டது வனுமனே

### அரக்க வீரன் அனுமன் செயலை அறிவித்தல்

ஒதுங்கி யனுமன் மரத்திலிருக்க ஒருவன் தப்பித் தவறிப்போய்
உத்த வரக்கன் மெய்த்த கொலுவு உப்பரிகை மண்ட பத்திலே
பதுங்கிப் பயந்து கால்கை நடுங்கிப் பையச் சென்று பகருவான்
பரந்த சோலை வனமெல் லாமொரு குரங்க ழித்ததையா
வென்றான்

### இராவணன் கட்டளை

பிதுங்கக் குரங்கை வனம்விட் டோட்ட பெலத்த பயல்க ளில்லையோ
பெரிய வீரர் பத்துப் பேர்கள் பரிசமாய்ச் சென்று துரிசமாய்
அதுங்கணப் பொழுதினிற் படும்படி யனைத்தும் வனத்தை யழிக்குமோ
அடித்து விரட்டலா லிவ்விடத்தில் பிடித்து வாவென் றேவினான்

### அனுமனைப் பிடிக்க வந்த வீரர்கள் மாய்தல்

ஏவிப் போன பேரைக் கண்டு யிருந்த னுமன்பற் காட்டினான்
இந்தக் குரங்கோ வனத்தை யழித்த தென்றவர்கள்
கைநீட்டினார்

128.15. விதைக்குந் தொளியிற் குழை புதைப்பது மீன் பிடிப்பது போலவே - சேறு கலந்த வயல் சேற்றில் மரக்கிளையைப் புதைத்தாற் போலவும் கலங்கிய குட்டையில் மீனைப் பிடித்தாற் போலவும். வெற்றிக் கால் - வெற்றியைத் தரும் கால். 128.16. உவர்க்கடல் - உப்புநீர்க் கடல். 128.17. உத்த - உள்ள. அரக்கன் - இராவணனாகிய அரக்கன். கொலுவு உப்பரிகை மண்டபம் - இராவணன் கொலுவிருக்கும் மேல்மாட மண்டபம். 128.19. பிதுங்க - குரங்கின் கண்கள் வெளித் தள்ளும்படி. பெலத்த - பலத்த. பயல்கள் - ஆட்கள். பரிசமாய் - கிரகணம் பிடித்தால்போல். துரிசமாய் - வேகமாய். 128.20. அதும் - அதுவும்; அந்த குரஙகும். படும்படி - இறந்து போகும்படி. அடித்து விரட்டு அலால் இவ்விடத்தில் பிடித்து வா - குரங்கை ஓடும்படி அடித்து விரட்டு; இல்லையேல் இங்குப் பிடித்து வா. 128.21. பற்காட்டினான் - பல்லைக் காட்டினான்.

The tall *Vēlam*[130] tree he would uproot
And break into pieces;
*Pālai*[131] and *Vēlai*[132] trees he plucked up,
To play *Ammaṉai* with them like balls in air!
Areca-palms he destroyed so that
The birds flew and the animals fled in fear!
Tamarind and Neem trees he twisted
And broke and piled them up!
Banyan, Pipal[133] and Portia trees he shattered too!
When the watchmen of the groves
Angrily gathered together to oppose him,
Aṉumaṉ jumped upon them forthwith,
And squeezed them to death with his tail.

## AṈUMAṈ DESTROYING THE DEMONS WHO CAME AGAINST HIM

Hearing the report about Aṉumaṉ's destruction
Of the grove, the demons gathered together,
Saying: "See, how this tiny monkey is going to die!"
Excitedly about a hundred of them
Armed with lances, shields and weapons like
*Kuntam*[134] and *Camutāṭu*[135]
They encircled Aṉumaṉ but he swept them before him
Even like boughs of trees being pushed under
A slushy field, or like fish being caught
In a turbid pond! kicking the demons
And twisting of their heads,
He threw them into the salty sea!

130 *Vēlam* - Thorn tree 131. *Pālai* - Ironwood 132. *Vēlai* - Kind of tree
133. Pipal - Bo tree

134. *Kuntam*
135. *Camutāṭu* } Kinds of missile (used in ancient warfare)

*சாவல்ப் போரில் கருவிக் கட்டெனு தண்டைக் காலை நீட்டியே*
*சத்தங்கு தயப்பத்துப் பேரும் தலைகள் மூளைச் சிதறினார்*
*ஆபத்துக்கிறு கருமம் பழய அரக்கனுக்குச் சென்றி யம்பினார்*
*அவனுஞ் சினத்து நூறுபேரை அனுப்பினான் கவிபி டித்திட*
*காவிப்பிடித்து நூறு பேரையும் காலா லெத்திச் சாடினான்*
*கசக்கித் திலர்தம் போட்டங் கனுமன் கைக்கொட்டிக்*
*கவிபாடினான்*

**பெரும்படை புறப்பட்டு அனுமனைப் பிடிக்க வருதல்**

*பாடுந் திறத்தைத் தூத ரோடிப் பத்துத் தலைவர்க் குரைக்கவே*
*பார டாஒரு குரங்கு யிப்படி பரிசு கெடுப்ப தேதடா* 25
*தேடு மரக்கர் கூடிக் கூடிச் சினந்து குரங்கைத் தேடவே*
*சின்னக் குரங்கோ பெரிய குரங்கோ வென்ன சிலபேர் நாடவே*

**பெரும்படையை அனும்ன் மடித்தல்**

*கூடு வர்பதி னாயி ரம்பெயர் கூடிக் குரங்கைத் தேடவே*
*குரங்கு ரூபம் மாறி யனுமன் குருவி போலும் பதுங்கவே*
*நீடும் படைகள் நாலு திசையும் லக்ஷம் பேர்கள் கடிந்ததே*
*நீட்டி வாலைக் கட்டி வளைந்து நெருங்கி யடிக்க மடிந்ததே*

**இராவணன் சினம்**

*மடிந்த செய்தியை ஒருபது முடிவல் லரக்கனு மறியவே*
*மந்திரிமாரைப் பார்த்துச் சொல்லுவன் வனத்தி லேயொரு*
*குரங்குதான்*

*128.22.* சாவல்ப் போரில் கருவிக் கட்டெடன - சாவல் போரில் அதன் கால்களில் கட்டப்பட்ட கத்தியாகிய கருவியைப் போல; இது இங்கு அனுமன் நகத்தின் கூர்மைக்குப் பொருந்தியது. தண்டைக் கால் - தண்டை என்னும் ஆபரணம் அணிந்த கால். சத்தங்கு தயப்பத்துப் பேரும் - அங்கு உதயமான பத்து அரக்கரும் செத்து (மாண்டு). *128.23.* பழய அரக்கன் - பழைய அரக்கன்; இராவணன். கவி - குரங்கு. *128.24.* காவிப் பிடித்து - வந்த எதிரிகளின் உடம்பில் காவி நிறமனைய இரத்தம் வரும்படி பிடித்து. எத்தி - எற்றி. கசக்கி - உடல் நிலைகுலையும்படிச் செய்து. திலர்தம். - பொட்டு. *128.25.* பத்துத் தலைவர் - பத்துத் தலைகளையுடைய இராவணன். பரிசு - இடையூறு. *128.27.* ரூபம் - வடிவம். *128.28.* கடிந்ததே - விரைந்ததே. நெருங்கி யடிக்க - அனுமன் தன் பலத்தை வாலில் கூட்டி வேகமாக அடிக்க. மடிந்ததே - அரக்கர் படைகள் இறந்ததே. *128.29.* ஒருபது முடிவல்லரக்கன் - பத்து தலைகளில் கிரிடம் தாங்கிய இராவணன்.

## A SOLDIER INFORMING RĀVANA ABOUT AṆUMAṆ'S ACTIVITIES

When Aṇumaṇ hid himself among
The branches of the tree
One of the demons escaping somehow
From his hands went to the court of Rāvaṇa
In the terraced ***Tarpār*** hall,
And with trembling arms and legs,
Reported to him fearfully "Sire!
The vast grove of Acōkavaṇam, a monkey has destroyed."

## RAVAṆA'S ORDER

"Is there none here strong enough to squeeze the
monkey's eyes,
And drive it from the wood?
Go ten of you strong, swiftly thither,
And chase it or else bring it here.
How could it ruin my grove?
Kill it soon."

## RĀVAṆA'S SOLDIERS DYING AT AṆUMAṆ'S HANDS

Seeing the band of armed demons sent by Rāvaṇa,
Aṇumaṇ grinned at them, baring his teeth!
Stretching their hands they cried;
"Is this the monkey that destroyed our wood?"
And with his nails sharp as the blades
Tied to the legs of the fighting cocks,
Aṇumaṇ cut them down;
And the noisy band died at a kick
From his ankleted feet.
To the demon-chief reports went, of the danger
From the monkey; and he sent now
A hundred soldiers; and the mighty monkey
Seizing them, slaughtered them all,
Their red blood pouring from their bodies
Smashed by Aṇumaṇ!

விடிந்த தேகதை முடிந்த தேயிது வெகுவ திசய மாச்சுதே
விளைக்கொ ருகவி வனத்தை யழித்து வெகுச னத்தையும்
முடித்துதே
கடிந்த குரங்கு குரங்கல் லவிது கால னோயெம தூதனோ
காதிற் கவச குண்டல முண்டென்று கண்ட பேர்கள் விண்டனர்
முடிந்த சிறையி லிருந்த மாதுக்கு முத்திரை மோதிரம் கொடுத்தார்
மோது மானிட தூதனா மென்று மூக்கி லேவிர லேற்றினார்.

**இலக்கணன் அனுமானைப் பிடிக்க வருதல்**

விருத்தம்

129. ஏற்றிவருந் தூதனைத்தான் மடிக்க வென்றான்
இலக்கண குமாரனுடன் அமைச்ச ரெல்லாம்
தேர்த்திரளும் கரிபரியும் சேனை யோடு
செல்லு மென்றான் லக்கணனும் சீற்றமானான்
வாத்தியங்கள் நாற்றிசையும் முழங்கத் தானே
மட்டில்லா ராக்ஷச பதாதி சேர்ந்து
நாற்றிசையும் வளைந்ததுவை யனுமன் கண்டு
நகைத்திட்டா னிலக்கணன்மேல் பகைத்திட் டானே.

**இலக்கணன் மரணம்**

நடை

130. பகைத்த இலக்கண னனுமானும் பற்கடித்துப் போர்பொ ருதிடவே
இகத்து மந்திரிமாரைக் கொன்று லக்கணனைப் பிச்செறிந்து விட்டான்

**அக்ஷயன் போருக்கு வந்து மாளுதல்**

போட்டதை யிராவண னறிந்தான் போனானே வென்மகனு மென்றான்
தாட்டிமை யிலக்கண குமாரன் தன்னைக் கொன்றதோர் பழிதீரத்

128.30. விடிந்துதே கதைமுடிந்துதே - 'ஒரு நாள் வந்து போவதற்குள் பத்தாயிரம் அரக்கர்களும் அழிந்தார்களே' என்ற பொருளில். கவி - குரங்கு. வெகுசனம் - மிகுந்த போர் வீரர்சள். 128.31. கடிந்த - சினம் கொண்ட. காலனோ - எமனோ. விண்டனர் - கூறினர். 128.32. சிறையிலிருந்த மாதுக்கு - அசோகவனத்தில் சிறையிருந்த பெண்ணுக்கு; சீதைக்கு. முத்திரை மோதிரம் - இராமன் கையில் அணிந்திருந்த கணையாழி. மோது மானிட தூதனாம் - அரக்கர்களுடன் மோதும் மனிதர் தூதனாம். மூக்கிலே விரலேற்றினார் - மூக்கிலே விரலை வைத்து அதிசயம் கொண்டார். 129.1. ஏற்றி வரும் - ஏற்றம் பெற்று வரும். மடிக்க வென்றால் - கொல்ல வேண்டுமானால். இலக்கண குமாரன் - இராவணன் மைந்தருள் ஒருவன். 129.2. கரி - யானை. பரி - குதிரை. 129.3. வாத்தியங்கள் - போர் முரசுகள். பதாதி - படைகள். 130.1. பற்கடித்து - சினத்தால் பல்லைக் கடித்து. 130.2. இகத்து - இகலோகமாம் இலங்கை. பிச்செறிந்து விட்டான் - பிய்த்து எறிந்து விட்டான். 130.4. தாட்டிமை - வலிமை மிகுந்த.

A bigger troop being sent to seize Anuman,
As he gleefully sang victorious,
The demons gathered in larger numbers,
Vexed that a small monkey should
Trouble them so much; angrily
They searched here and there,
Looking for a monkey small or great:
Ten thousand of them joined together
In the search, while Anuman changed his form
Into a sparrow's; but soon
Resuming his shape, he tied them up
With his chain and squeezed them to death;
While from the four directions,
A hundred thousand came running up.

### RAVANA'S WRATH

When Rāvana with crowned heads ten.
Came to know about the massacre of his troops,
Angrily he spoke to his ministers:
"It's surprising indeed that in space of a day,
Ten thousand of my army have died,
At the hand of a single monkey!
Destroying the grove and also
A large number of my people,
This angry monkey is perhaps
Not a monkey at all! May be it is the messenger of death,
Or Yama himself! they say it wears,
Ear-rings bright and armour;
It is said that the monkey gave
To the imprisoned princess a signet ring,
As the envoy from some men
Who intend to confront us."
Thus Rāvana exclaimed, marvelling
At the monkey's might,
With a finger upon the nose indicating wonderment!

தீர்ப்பே னென்று அக்ஷயகுமாரன் சேனையுடன் சென்று எதிர்த்தானே
ஆர்ப்பரித்த சேனையுங் கொன்று அக்ஷயனைத் தூதனுமான் கொன்றான்

### இராவணன் மந்திராலோசனை

தூதனோ யென்மகனைக் கொன்றான் சொல்லமைச்சர் சேனையைக் கொன்றான்
மாதொருத்திக் காய்வந்த தூதன் மக்களுயிர் மாய்த்த விதமே தென்ன
விதமே தென்னவே யரக்கன்கூற விந்தை யமைச்சர் களுரைதேற
பதமாக முள்ள பெலமுடைய பஞ்சசேனா திபர்கள் பட்டார்
இதமா யிவர்பட மந்திரிமார் எதுரைப் பாரா மரக்கனுக்குப்
பதம்பெறு மிந்திர சித்தும்நாக பாசமானதும் கரத்தி லுண்டு
கரங்கொண்டு யிந்திரசித்து வந்தால் கலக்கி யிலக்கணன் றன்பழியும்
குரங்கு செய்குற்றமு மெடுப்பான் கூட்டி வரதூது அனுப்புமென்றார்

### இராவணன் இந்திரசித்துக்கு உரைத்தல்

தூதனை மேகத்தி லனுப்ப சொன்னா னிந்திர சித்துவுக்கு
வாதுசெய் மேக நாதன் வந்துவல் லரக்கன் றன்னடிவீழ்ந்து
அடிதொழு மிந்திர சித்தேஉன் அருமைத் தம்பியிருவர் பட்டார்
குடியெழு மந்திரிமார் கள்பட்டார் குரங்கன் வனத்தையு மழித்தானே

### இந்திரசித்தின் ஏளனவுரை

அழித்த குரங்கதை மடிக்கயிங்கே ஆண்பிள்ளை யொன்றுமில்லை யையா
ஒழித்திடும் புனக்குரங்கைச் சென்று ஒருநொடி யிற்கொடுவா வென்றான்

130.5. அக்ஷய குமாரன் - இராவணன் மைந்தருள் ஒருவன். 130.7. சொல்லமைச்சர் - சொல்லாடுவதில் வல்ல அமைச்சர். 130.8. மாது - சீதை. தூதன் - தூதுவன்; அனுமன். 130.9. விந்தை அமைச்சர் - கண்டோர் வியக்கும் வண்ணம் அறிவுடைய அமைச்சர். 130.10. பதமாகமுள்ள - வலிமையான உடல் உள்ள. பஞ்சசேனாதிபர்கள் - ஐந்து படைத்தலைவர்கள். பட்டார் - இறந்தார். 130.11. இதமாய் - மிக எளிதாய். அரக்கனுக்கு - இராவணனுக்கு. 130.12. பதம் - அழகு. இந்திரசித்து - இராவணன் மைந்தருள் ஒருவன்; மிகுந்த பலசாலி. நாகபாசம் - ஒரு வகை படைக்கருவி; இது எதிரிகளைத் தாக்கி மயக்கமடையச் செய்ய வல்லது. கரத்திலுண்டு - கையிலுண்டு. 130.13. கலக்கி - போரில் எதிரிகளைக் கலக்கி. 130.14. எடுப்பான் - நீக்கி விடுவான். 130.15. தூதனை மேகத்தில் அனுப்ப - இந்திரச்சித்தை அழைத்துவரும்படி தூதனை மேகத்தில் அனுப்ப; இந்திரச்சித்து மேகவெளியில் உறைகின்றதால் அவனுக்கு மேக நாதன் என்ற பெயருமுண்டு. 130.16. வாது- போர். வல்லரக்கன் - இராவணன். 130.18. குரங்கன் - குரங்கு வடிவினன்; அனுமன். 130.20. புனக்குரங்கு - புன்மையான குரங்கு; அனுமன்.

### LAKKAṈAṈ COMING TO SEIZE AṈUMAṈ

129. "Let Lakkaṇa Kumāraṉ accompanied
By ministers, regiments of chariots,
Elephants, horses and infantry
Be sent to kill the envoy
Whose power seems to be increasing!"
Said Rāvaṇa, and his son Lakkaṇaṉ,
Furiously marched, while the musical instruments
Resounded in all four directions!
When Aṉumaṉ saw innumerable troops
Encircling him all round,
He laughed in derision at his foe!

130. When the enemies Lakkaṇaṉ and Aṉumaṉ
Gnashing their teeth fought each other,
Aṉumaṉ after slaying the ministers
Tore to pieces, Lakkaṇaṉ, the son of Rāvaṇa.

### AKṢAYAṈ CHALLENGING AṈUMAṈ AND MEETING HIS END

"Oh my son has gone" exclaimed Rāvaṇa,
On hearing about the death of Lakkaṇaṉ;
Now Akṣayakumāraṉ another son,
Swore; "I shall avenge the killing
Of my powerful brother Lakkaṇaṉ"
And with his army opposed Aṉumaṉ
In battle; and the Lord's envoy,
Annihilated them all and Aksayaṉ as well!

### RĀVAṆA TAKES COUNSEL WITH HIS ADVISERS

"A mere messenger has killed my son;
He has slain my able ministers
And too, my regiments. How is it
That an envoy who came on behalf
Of the imprisoned princess could
Destroy so many of my people?"

கொடுவா சிவனல்ல நந்தியல்ல கோவிந்தன் மாவிந்தனு மல்ல
சடுதியில் பிரமதேவ னல்ல சந்திரன் சூரியனு மல்ல

அல்லல் செயுங்காலன் தூதனல்ல ஆயிரங் கண்ணிந் திரனுமல்ல
பல்லைக் காட்டுற குரங்கெனவே பகர ராவணனேது சொல்வான்.

### இராவணன் பதில்

விருத்தம்

131. இந்திர சித்தே கேளு இதைக்குரங் கென்றெண் ணாதே
வந்தெம னெதிர்த்திட் டாலும் வாலுக்குப் பற்ற மாட்டான்
முந்தநான் சிறையில் வைத்த மொய்குழல் கணவன் விட்ட
சுந்தரத் தூதனாகுந் துரிசத்தில் கொடுவா வென்றான்.

### அனுமனைப் பிடிக்க இந்திரசித்து வருதல்

சிந்து

132. துரிசந்துரிச மென்று யிராவண னுரைத்திடவே
சுந்தரஞ் சிறந்திலங்கும் யிந்திரசித்து மெழுந்து
வரிசைப்படை செருமமாகம் முட்டித் தேர்கள்வர
வட்டமிட்டு ராக்ஷசர்கள் எட்டுதிக்குஞ் சூழ்ந்துவர
எட்டுத்திக்கும் வாத்தியங்க ளிடியென வேமுழங்க
இந்திரகன்னி மந்திக்கன்னி யிணங்கக் கவரிவீசத்
திட்டுக்குத் திட்டாயிருந்து ராக்ஷசர் செருமிவரத்
திசைநாலுஞ் சுத்தியோடித் தேரனந்தங் கோடிவரத்

தேருடன் கொடிவிருது செருமிப்புடை நெருங்கச்
செந்தூ ளெழும்பிவரத் திரண்ட புரவிகோடி

130.21. நந்தி - சிவனது வாசல் காவல்காக்கும் தெய்வம். கோவிந்தன் - திருமால். 130.22. சடுதியில் - விரைவில் கொண்டுவர. 130.23. அல்லல் செயுங் காலன் - துன்பம் செய்யும் காலன். 130.24. பகர - கூற. 131.3. முந்த நான் - முன்பு நான். மொய்குழல் கணவன் வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய சீதையின் கணவன்; இராமன். விட்ட அனுப்பிய. 131.4. சுந்தரத் தூதன் - அழகிய தூதன். துரிசத்தில் - விரைவில். கொடு வா கொண்டு வா. 132.1. சுந்தரம் - அழகு. இலங்கும் - ஒளிவிடும். 132.2. செருமமாகம் விண்ணைத் தொட்டு. 132.3. வாத்தியங்கள் - போர் முரசு. இந்திரகன்னி மந்திக்கன்னி மேற்படி பெயரை உடைய பெண்கள். கவரி வீச - இந்திரசித்துவுக்கு வெண்சாமரம் வீச. 132.4. திட்டுக்குத் திட்டாயிருந்து - மேடுபோல் படைகள் இருந்து. செருமி- சேர்ந்து; நெருங்கி. தேர் அனந்தங் கோடி வர - தேர்ப்படைகள் பல கோடி அளவு வர. 132.5. கொடி விருது - வெற்றிக்கொடி. செந்தூள் - படை நெருக்கத்தால் சிவந்த மண் துகள்கள். புரவி - குதிரை.

When Rāvana said thus,
His ministers of marvellous wisdom,
Suggested that the mighty commanders five
Of the court, be sent against the envoy:
And they too met a similar end!
Seeing the ease with which they were disposed of
By Aṉumaṉ, the ministers now spoke thus:
"Lord! we have the handsome Intirajit,
With his deadly *Nākapācam*;
If Intirajit were to be sent against the enemy
With this weapon in hand, sure he would
Wipe off the disgrace of Lakkaṇaṉ's death
At the monkey's hand;
Please send for Intirajit now;" they counselled Rāvaṇa!

### RĀVAṆA TALKS TO INTIRAJIT

Accordingly Rāvaṇa ordered a messenger
To go to Intirajit in his cloud-castle,
And Mēkanātaṉ, adept in war-fare,
Came forthwith and fell prostrate
At his father's feet in obeisance.
To whom Rāvaṇa said thus;
"O son, Intirajit, your two younger brothers dear,
Have fallen; our ministers have fallen;
And the monkey has destroyed our sweet grove
There is none here manly enough
To kill this murderous monkey:
Go you at once and bring here
The monkey in the wood that is so destructive!"
And he, contemptuous, thus replied;
"It is not Lord Siva or his mount Nanti;
Neither is it the Lord Kōvinta or Intira!
Nor is it Brahmatēva or Cūriya or Cantira
Surely it is not the messenger of Death!
Nor the thousand-eyed king of the celestials;

ஆரும்வந் தொதுங்கும் மதயானை களனந்தங்கோடி
அரக்கர்மந் திரிமார்கள் அனந்தமனந் தங்கோடி
அனந்தமனந் தங்கோடி படையுமிந் திரசித்தும்
அனுமனைப் பிடிக்கவென்ற வனொரு தேரிலேறிக்

**இலங்கை மக்கள் கூற்று**

கனந்தங்கி வாரதெல்லாம் யிலங்கைப்பெண் டுகள்கண்டு
கைதட்டிச் சிரித்தீதென்ன காக்ஷியென்று சொல்லுவாரும்
காக்ஷியோ ஒருகுரங்கைக் கருதிப்பிடிக் கவென்று
கண்கொள்ளாத சேனைசெல்லும் கருமத்தைப் பாருமென்பார்
ஆக்ஷியொரு பொன்மாது அருஞ்சிறை யிலிருக்க
அவளுக்குவந்த தூதனி வருக்குக் காலனென்பார்

காலனா யிராவணற்குக் கண்மணி லக்கணனொடு
கக்கிசமாய்ப் பின்னுதித்த அக்ஷய குமாரனையும்
சீலமுள்ள சேனையையும் தேரொடு மந்திரியையும்
சேர்த்துப்பிடித்து நெற்றியில் திலர்தமிட்ட குரங்கு
திலர்தமிட்ட குரங்கு எளிதல்ல எளிதல்ல
தென்னிலங்கைப் பட்டணத்தைத் தீக்கொளுத்த வந்ததென்பார்
கலகமிட்ட குரங்கு குரங்கல்ல குரங்கல்ல
கட்டழித்துப் பட்டணத்தைச் சுட்டழித்துப் போடுமென்பார்

சுட்டழித்துப் போடுமென்ன தட்டழியச் சிறைவைத்த
தோகையர்க்குத் தூதுவந்ததோ கனபபுன் குரங்கு
பட்டணத் தரக்கியரும் யிப்படிப் புலம்பிநிற்கப்
பந்தான யிந்திரசித்து படையைநெருக் கிக்கொண்டு

132.6. ஆரும் - யாரும். 132.8. கனந்தங்கி வாரதெல்லாம் - மிகுதியாக வருகிற படைகளையெல்லாம். சொல்லுவாரும் - வியப்படைந்து கூறுவாரும். 132.9. கண் கொள்ளாத சேனை - கண்ணால் பார்த்துத் தொலையாத பெரும்படை. கருமம் - செயல். 132.10. ஆக்ஷியொரு பொன்மாது - ஆளுமையுடைய பொன் போன்ற நிறமுடைய பெண்; சீதை. அருஞ்சிறை - கடுமையான சிறை. 132.11. கண்மணி - கண்ணின் கருமணி. இலக்கணன் - இராவணன் மைந்தருள் ஒருவன். கக்கிசமாய் - குலம் விளங்கும்படியாய். அக்ஷயகுமாரன் - இராவணன் மைந்தருள் ஒருவன். 132.12. சீலமுள்ள - பெருமையுள்ள. திலர்தமிட்ட - குங்குமம் இட்ட. 132.13. எளிதல்ல - குரங்காக வந்த அனுமன் எளியவன் அல்லன் என்ற பொருளில். 132.14. கலகமிட்ட - போர்செய்த. கட்டழித்து - இலங்கை நகரின் அழகை அழித்து. 132.15. தட்டழிய - நிலைகுலைய. கனப புன்குரங்கு - வலிமையான அற்பமான குரங்கு. 132.16. பந்தான - திரட்சியான உடல் வலிமை கொண்ட.

It is but a grinning monkey
After all!" To him Rāvaṇa said:

131. "Listen to this, O, Intirajit" said Rāvaṇa;
"Do not think this is only a monkey!
Even if Yama were to oppose him,
He would be no match for his tail!
He is the envoy extraordinary
Of the husband of the princess
(With lovely dense tresses)
Whom I did imprison the other day;
Bring him before me soon," said he!

### INTIRAJIT COMING TO CAPTURE ANUMAN

132. As Rāvaṇa ordered his son to seize the troublesome monkey
And bring it before him quickly,
The handsome prince Intirajit rose and proceeded
To carry out Rāvaṇa's mission.
With serried ranks of chariots touching the very heaven,
And troops of demons surrounding him in eight directions,
And musical instruments and war-drums
Thunderously resounding, with Intirakaṉṉi[136] and Mantrakaṉṉi[137]
Fanning him with chowries, he went,
Bands of soldiers thronging towards him;
Myriads of war-chariots with victorious flags
Fluttering from the tops,
The red-dust rising from the ground,
Millions of horses with riders,
And an equal number of ichorous war-elephants,
Countless numbers of counsellors,-
With such a multitudinous vast power
Intirajit climbed into his chariot great,
With intent to capture Rama's envoy.

136. Intirakaṉṉi } - Name of two women
137. Mantirakaṉṉi }

### இந்திரசித்து படைகளுடன் அனுமன் பொருதல்

படையை நெருக்கிக்கொண்டு துடைதட்டி யார்ப்பரித்துப்
பரந்த படையைக்கண்டு யிருந்தனுமன் சிரித்து
இடைவிட்டுக் கிடக்கிற மரத்தையெல் லாம்பிடுங்கி
எறிந்தா னரக்கன்மேலே முறிந்தது பெரும்படை

முறிந்த படையைக்கண்டு முட்டிமுட்டிக் கிட்டிக்கிட்டி
மோதியே மரம்பிடுங்கி முடுக்கினானே படையை
பறிந்த பெரும்படைகள் பாம்புவாயிற் றேரைபோல
பதறிப் பதறிக்கொண்டு கதறிச் சிதறியோட
கதறிச் சிதறியோடக் கண்டனுமன் வண்டுறுக்கிக்
காலினாலும் கையினாலும் வாலினாலுமே பிடித்து
உதறிப் பெரும்படையை ஒடுக்கித் தலையுடைத்து
உன்னுமுன்னே வாளனுமன் சின்னபின்ன மாக்கிவிட்டான்
சின்னபின்ன மாக்கிவிடச் சேனைகளெல் லாம்மடிய
தேர்புரவி சேனைப்பட்டுத் திடல்திட லாய்க்குமிய

### இந்திரசித்தின் வியப்பு

மன்னன்மகன் படைபட்ட மறுக்கத்தைப் பார்த்திருந்து
மானிடவன் விட்டதூதன் மறலிக்கு மூத்தவனோ
மறலியம காலனொரு குரங்குபோற் கோலங்கொண்டு
வந்தானிந்தப் பட்டணத்தைச் சிந்தவத்த மாகவென்று
[70]பரணிட்டு நந்தகப்பன் பாவையைச் சிறைவைத்தது
பருத்திப்பொதிக் குள்வைத்த நெருப்பென்று நெஞ்சிலுன்னி
நெருப்பென்று நெஞ்சிலுன்னி நினையாததெல்லாம் நினைத்து
நின்றுமின்னு மனுமனை நெருங்கிச் சமர்பொருதான்

132.18. இடைவிட்டு - இடைவெளி விட்டு. 132.19. முடுக்கினானே - விரைவு படுத்தினானே. 132.20. பறிந்த - கிளர்ந்தெழுந்த. தேரை - தவளை. 132.21. வண்டுறுக்கி - அச்சுறுத்தி. 132.22. ஒடுக்கி - அடக்கி. தலையுடைத்து - அரக்கர்கள் தலையை உடைத்து. உன்னுமுன்னே - நிலைக்குமுன்னே. 132.23. திடல்திடலாய்க் குமிய - அரக்கர்கள் பிணங்கள் மேடாய் மாறும்படி குவிய. 132.24. மன்னன் மகன் - இராவணன் மகன்; இந்திரசித்து. மறுக்கத்தை - இக்கட்டான நிலையை. மறலி - எமன். 132.25. மறலி, யமன், காலன் - எமனின் சில பெயர்கள். கோலம் - வடிவு. சிந்தவத்தமாக - எளிமையாக. 132.26. பரணிட்டு - காவல் மேடையிட்டு. நந்தகப்பன் - நம்முடைய தகப்பன்; இராவணன். பாவையை - சீதையை. உன்னி - நினைத்து. 132.27. சமர் - போர்.

70. பறணிட்டு

## THE REMARKS OF THE PEOPLE OF LAṄKA

The women of Laṅka on seeing the troops exceeding numerous,
Clapped their hands and laughed at this wonderful sight,
Of so many troops going to capture a mere monkey!
Some said: "while the golden damsel is in imprisonment,
Over there in the grove, the envoy who came to her
Is going to be their death."
Some would say: "The monkey that killed Rāvaṇa's darlings
Lakkanaṉ and Akṣayakumāraṉ, the pride of his line
And armies great, along with the ministers five
And after, made a victorious mark
With their blood on his forehead,
Is not an ordinary monkey:
No, not certainly a mere monkey; but
The brand of fire that has come to burn Laṅka sure!"
Some would say:
"This quarrelsome monkey is no monkey at all;
Surely it is going to destroy
Our city and burn it down,"
Some would say;
"This mean monkey small, has come
As a messenger to the Lady in the grove;
Whose imprisonment is going to be the prime cause
For destroying the beauty of our city"
Some would say:
As the demonesses spoke thus agitatedly,
Lamenting the events
Following the advent of Aṉumaṉ,
Stout Intirajit, leading his forces,
Came up to Aṉumaṉ to engage him in battle.

## AṈUMAṈ FIGHTING WITH INTIRAJIT'S TROOPS

Seeing the thronging regiments nearing him,
Beating their thighs in challenge,
Aṉumaṉ laughed in contempt!
And seizing all the trees nearby by the trunks,

### அனுமன் மீது இந்திரசித்து போர் தொடுத்தல்

*பருப்பட்ட வாளிக்காகப் பத்துலக்ஷங் கோடிவாளி*
*பார்த்தனுமன் பேரிலெய்யப் பதுங்கிக் கொண்டனுமானும்*
*பதுங்கிச் சரத்தையெல்லாம் உடலுக்குள்ளே யடக்கிப்*
*பட்டதுபோகப் படாமல் நிற்கிற படையின்மேலே*
*ஒதுங்கி யுதறிவிட்ட நின்றபடை யத்தனையும்*
*ஊழிக்காற் றெடுத்துக்கொண்டு ஆழியிற் புதைத்தாப்போலே*
*ஆழிபாய்ந்தாப் போலவந்த படைகளெல்லாம் மடிய*
*அனுமன்முகத்தைப் பார்த்து அரக்கன் மகனுரைப்பான்*

### அனுமனுடைய கதையை இந்திரசித்து வினவ அவன் பதிலுரை

*வாளியிற் பெரியவனே வலுவிலுனைப் போலில்லை*
*வானரமாய் நீசமைந்து வந்தகதை சொல்லுமென*
*வந்தகதை சொல்லுகிறேன் வல்லரக்கன் புத்திரனே*
*மாயவனார் தேவிதனை மறைந்தெடுத்துச் சிறையில்வைக்க*
*அந்தமூதா வுக்குத்தூது வந்தது மல்லாமல்*
*அரக்கரைக் கொன்றுதிரமது குடித்திட வந்தேனென்றான்*
*குடிப்பேனுயிர் முடிப்பே னுந்தனையும் தகப்பனையும்*
*கொல்லாமல் விடுவதில்லை சொல்லுகிறேன் நான்சபதம்*
*படிக்கண மென்றுனக்கு மனம்உண் டாகுமேயானால்*
*பின்னுமொரு சபதம்என் னிடத்தில் வார்த்தைகேளு*
*வார்த்தைகேளு கொப்புவிட்டுக் கொப்புத்தாவு முன்னதாக*
*மயிருக்கொரு கணையும்விட்டு மறுகணை யுந்தொடுத்தானே*
*ஏத்தசமர்த் தனேயுன்னி டத்தில்வலிய வாரேன்*
*எம்பெருமா னாணையென்று நம்பியனு மனுரைத்தான்*

132.28. பருப்பட்ட வாளி - வலிமையான அம்பு. 132.29. சரம் - அம்பு. பட்டது போக - இறந்தது போக. படாமல் - இறக்காமல். 132.30. ஊழிக்காற்று - உலகத்தின் முடிவில் வீசும் பொழுது உண்டாகும் பெருங்காற்று. ஆழியிற் புதைத்தாப் போலே - கடலில் சென்று அழுக்கினாற் போல். 132.31. அரக்கன் மகன் - அரக்கனாகிய இராவணன் மகன்; இந்திரசித்து. 132.32. வாளியிற் பெரியவனே - அம்பு விடுவதில் பெரியவனே. வலுவில் - வலிமையில். சமைந்து - பிறந்து. 132.33. மாயவனார் தேவி - திருமாலாம் இராமன் மனைவி; சீதை. 132.34. உதிரம் - இரத்தம். 132.36. படிக்கணம் - என்னிடத்திலிருந்து மேலும் செய்தியைப் படிக்க வேண்டும். 132.37. கொப்பு - கிளை. 132.38. ஏத்த சமர்த்தனே - வலிமையாய்ப் போர் செய்வதில் திறமையுடையவனே. வாரேன் - வருகிறேன். எம்பெருமாள் - திருமாலாம் இராமன்.

He plucked them from the earth and threw them
Upon the demon forces, which were destroyed forthwith.
He went among them and beat them with his hands and legs,
Uprooting tree after tree; and the remaining soldiers
Frightened like frogs in the mouth of a snake,
Ran in fear, helter-skelter from the field!
But Anuman went after them
And terrifying them with his glowering look,
Caught and smashed them to pieces,
Before they could think of escaping!

### INTIRAJIT MARVELS AT ANUMAN'S GREAT PROWESS

Seeing the carnage wrought by Anuman amongst his army,
With all the soldiers dying or dead,
With chariots and horses piling up in heaps on the field,
Intirajit wondered within himself thus:
"He who can make our position so critical,
Is he elder to the God of Death!
Or has Death himself taken the form of a monkey,
To ruin the city so easily? Oh, our father
Sitting in his dais has ordered imprisonment of Sita,
Even like fire being placed within a bale of cotton!"
Thinking inly thus of Sita as a veritable spark of fire
(Which would eventually burn Lanka), and sore-bethought still,
The faithful son, neared Anuman to engage himself.

### INTIRAJIT FIGHTING WITH ANUMAN

Powerful arrows, millions of them
He bent his bow and sent towards Anuman;
But Anuman, caught them all in his body
And with a mighty shake, threw them back
At the remaining forces still standing beside Intirajit:
And like a tempest at the end of the aeon
Threw all the troops into the sea!

### இந்திரசித்து அனுமன்மீது போர் தொடுத்தல்

நம்பியனும னுரைக்கமேக நாதன் வில்லெடுத்து
நட்புடன் சொன்னசபதமப் படியேயென்று சொல்லி
வம்பனொரு கொப்புவிட்டு மறுகொப்புத் தாண்டுமுன்னே
மயிருக்கொரு கணையும் மறுகணையுந் தொடுத்தானே

### அனுமன் கைது செய்யப்படுதல்

தொடுக்கவனு மானுங்கண்டு துட்டன்கெட்டிக் காரனென
சுகத்துடனவன் கரத்தில் அகப்பட்டகஞ் சென்று
அடுக்க யிராவணனும் பார்த்திருக்கக் கூத்துக்காட்டி
ஆடியிந்தப் பட்டணத்தை யழிக்கிறேன் பாரெனவே

பாருபாரென யிறங்கிப் பையப்பைய வேவரவே
பார்த்தனுமன் கொடுக்கில் பாசமிட்டு மேகநாதன்
தேரின்மேலே குரங்கைவைத்துச் சிங்காரம தாகத்
தென்னிலங்கைப் பட்டணத்துத் தெருவோடே வந்தனராம்.

### அனுமன் வஞ்சினவுரை

விருத்தம்

133. வந்தனு மானைப் பின்பால் வாவென்று பிடிக்கும் போது
உந்தனக் கிளப்ப முண்டோ உனக்குப்பின் வருவ னோநான்
அந்தமா லாணை கொண்டுன் கையகப் பட்டே னின்று
இந்தநா டழிப்பே னென்று ஏறிமுன் னோடி னானே.

132.39. மேகநாதன் - இந்திரசித்தின் மற்றுமொரு பெயர். நட்புடன் சொன்ன சபதம் அப்படியே யென்று சொல்லி - நட்போடு இருவரும் தத்தம் திறமையைப் பார்ப்போம் என்று போட்ட சபதம் அப்படியே யிருக்க என்று அனுமன் சொல்லி. 132.40. வம்பன் - குறும்பில் வல்லவன்; அனுமன். 132.41. துட்டன் - துஷ்டன்; இந்திரசித்து. அகப்பட்டு - அனுமன் இந்திரசித்தால் பிடிபட்டு. அகஞ்சென்று - இராவணன் அவைக்குச் சென்று. 132.42. கூத்துக்காட்டி - வித்தைகள் பல செய்து. ஆடி - ஆட்டமாடி. 132.43. பாருபாரென யிறங்கி - என்னைப் பாருங்கள் என்றே அனுமன் தேரிலிருந்து கீழிறங்கி. பையப்பைய - மெதுவாக. கொடுக்கில் - பின் கோவணத்தில். பாசமிட்டு - கயறிட்டு கட்டி. 132.44. குரங்கை - அனுமனை. சிங்காரமதாக - அழகாக. 133.1. பின்பால் வாவென்று - எனது பின்னால் நீ வாவென்று. பிடிக்கும் போது - அனுமனைப் பிடிக்கும் பொழுது. 133.2. உந்தனக்கு இளப்பம் உண்டோ - உன்னை விட ஒப்புமையில் குறைந்தவனோ. 133.3. மாலாணை - திருமால் மீது ஆணை. 133.4. ஏறி - தேரிலேறி.

And all the cohorts of Intirajit died,
The armies which came like a flood against him!

## INTIRAJIT ENQUIRING ABOUT ANUMAN AND HIS REPLY

Seeing this catastrophic massacre of his men,
Intirajit looked at Anuman's face and told him;
"Oh, you are great in weaponry! None like you
Strong and bold! Tell me why you are
In the form of a monkey?"
And Anuman replied; "O son of the powerful demon!
I shall tell you my story :
As the spouse of Tirumālrāma was imprisoned
By your father, I came as Rama's envoy to her;
Besides, I have come to kill all you demons
And drink your blood. I shall end all your lives,
Yours as well as your father's! I shall not go
Before putting an end to your lives. I swear to you!
If you want to know more from me
Listen to what I say :
Before I leap from one branch to another,
Shoot your arrows at me, an arrow for each hair
And one to keep company with it! If you are capable enough,
Let us see your power!
Then by my Lord, I swear,
I will voluntarily come with you," said Anuman.

## INTIRAJIT SHOOTING AT ANUMAN

Agreeing to his friendly challenge, Mēkanātan
Took up his bow and shot arrow after arrow
At the mischievous monkey in the space of time
He took to leap from one branch to another,
An arrow for a hair and one more besides!

### அரக்கர்கள் அனுமனைத் துன்புறுத்துதல்

நடை

134. ஓடியனுமானைப் பிடித்து வார உறுத்தனைக் கேட்டமடவ ரெல்லாம்
கூடிக்கூடியே வளைந்து நின்று குரங்குக்கோன் வாரகுறிப்பைப் பாராய்
ஆடிவருகின்ற குரங்கைக் கண்டு அகப்பைத் துடிப்பாலு மடிப்பாராம்
மோடிசெய்து முன்னோடி வந்து முகத்திலுங்கை கொண்டி டிப்பாராம்
இடிக்கும் பொழுதினி லனுமன்கண்டு ஏங்கியிழைத்துப் பல்க்காட் டுவனாம்

### அரக்கர்கள் அனுமனைக் கண்டு உரைத்தல்

அடிக்கும் மடவார்களிது குரங்கோ ஆண்மை செய்ததென்றதி சயிப்பார்
வெடிக்கும் மூளைகள் சிதறவிதை வெலியிட்டிடு வன்வல்லரக்க னென்பார்
படிக்கு ளிந்திர சித்தனுட பாசக் கயற்றி னிலகப்பட்டதால்

பாசக் கயற்றினி லகப்பட்டதால் பதுங்கிப் போச்சுது குரங்கிதென்பார்
மோசப் படுத்தியகுரங்கைக் கண்டால் முடிபத்து டையவன்விடு வானோ
நாசப்படுத்திய குரங்கைக்கண்டால் நாய்க்கும் நரிக்குமோ விருந்திடுவான்

### இந்திரசித்து இராவணன் மாளிகை வருதல்

தேசத் தவர்களிப்படி யுரைக்க சென்றா னிந்திரசித்து மங்கே
சென்று ராவணன் கொலுவிருக்கும் செம்பொன் மாளிகை முகப்பில்வந்தான்

### இராவணன் கொலுவிருக்கை

அன்று ராவணன் கொலுவிருக்க அரம்பைமார் கூடிநடனஞ் செய்ய
குன்று போல்வச்ர மகுடமுடி கோடிக் கதிரோன் பிரகாசிக்க
மன்று பரிக்கின்ற மந்திரிமார் மந்திர முரைக்கின்ற தந்திரிமார்

134.1. வார - வருகிற. மடவர் - பெண்கள். 134.2. குரங்குக்கோன் - குரங்கரசன்; அனுமான். 134.3. அகப்பை துடிப்பு - சட்டுவத் தடி. 134.4. மோடிசெய்து - வித்தை செய்து. 134.5. இழைத்து - தளர்ந்து. 134.6. ஆண்மை செய்தது என்று அதிசயிப்பார் - குரங்காகிய அனுமன் வீரச் செயல்கள் செய்தது அதிசயமென்பார். 134.7. இதை வெலியிட்டிடுவன் - அனுமனைப் பலியிட்டிடுவேன். 134.8. படிக்குள் - பூமிக்குள். 134.9. பாசக்கயிற்றின் - இந்திரசித்து வீசிய நாகபாஷண கயிற்றினால். 134.10. மோசப்படுத்திய - இலங்கையை நாசப்படுத்திய. முடிபத்துடையவன் - பத்து தலையுடையவன்; இராவணன். 134.14. அரம்பைமார் - ஆடல் மகளிர்கள். 134.15. வச்ர மகுடம் - வைரத்தாலான மகுடம். கோடி கதிரோன் பிரகாசிக்க - சூரியனின் கோடிக்கணக்கான ஒளி பிரகாசிக்க. 134.16. மன்று பரிக்கின்ற - மந்திரிசபையை நிர்வாகம் செய்கின்ற. தந்திரிமார் - மந்திரிமார்.

### AṈUMAṈ ALLOWING HIMSELF TO BE CAPTURED

Seeing this wonderful bowmanship!
Aṉumaṉ nodded approvingly at Intirajit's ability,
And allowed himself to be seized by him;
Telling himself: "I shall go before Rāvaṇa's court
And show them my tricks and destroy the city,"
Slowly and gently, he came near the enemy.
And Mēkanātaṉ tied him with a rope
Behind his loin-cloth, and seating him in a chariot
He went round the city in a victorious procession.

### AṈUMAṈ'S OATH

133. But when he was about to be tied to a rope,
Aṉumaṉ had leapt on to the deck of the chariot himself,
Saying : "In what way, am I inferior to you?
Will I come behind you? Oh no! By my Lord, I swear
I shall destroy this land though I have allowed myself,
To fall into your hands."

### THE DEMONS HARASSING AṈUMAṈ

134. Hearing that the great monkey
Had been captured without doubt,
Women stood together in streets,
Peering at the king of the monkeys!
"See how he goes," they cried! With ladles,
They would beat the dancing monkey
And jeer at Aṉumaṉ! They would come up to him
And hit him on his face with their hands.
Aṉumaṉ would then pretend to be weak
And grin at them, baring his teeth!
Some of them would **wonder**:

*தந்திர மாகருத்ர வீணை தக்க கயிலாச வீணையுடன்*
*கெந்த மாகிய சுரமண்டலம் கிம்பு ராதியர் வாசிக்கவே*
*மந்திரி மாரொடு படைத்தலைவர் வாசல் காணிக்கர் சேவிக்கவே*
*சுந்த ராதி விபீஷணனும் துணைவர் மக்களும் தொழுதுநிற்கத்*

*தொழுது பாரிவண்டோ தரிதான் சூரன்லக்கண குமாரன் பட்ட*
*பழுது கண்டவளா ழுதுகொண்டு பள்ளியறை தனிலேயிருக்க*
*வழுவில்லா மலிப்படிக் கொல்லுவாய் மன்ன னிருக்கின்ற தருணத்திலே*
*எழுதுஞ் சித்திர வடிவழகன் இந்திரசித் தங்கேபோய் புகுந்தான்*

**இராவணனிடம் அனுமன் புகழை இந்திரசித்து கூறுதல்**

*புகுந்து அனுமானைக் கொடுபோய்விட்டு புத்தியுரைப் பாணாம்*
*தகப்பனோடே*
*மிகுந்த திறவாளி யிவனைப்போலே வீரன்சகத் தினில்கண்ட தில்லை*
*பகுந்து போர்செய்யி லிவனோடே பரமனரிய யனெதிர்ப் பதில்லை*
*தகுந்தெய் வேந்திரனும் பயப்படுவான் சரத்துக் கிவனுடல் சறுக்காது*

*சரத்துக்கி வனுடல் சறுககாது சன்னக்குரங் கென்றுஎன்ன வேண்டாம்*
*வரத்தில் மிகுந்திடும் நம்மோடே வலுவிலெ திர்த்திடுங் குணத்தைக்*
*கண்டால்*
*திறத்தில்ப் பெரியவாளனு மானைச் செயிக்க முடியாது ஐயாவென*
*வரத்து மகன்செப்ப ராவணனும் வன்னமணிச் சிங்காசனத் திருக்க*

134.17. தந்திரமாக - அலங்காரமாக. ருத்திர வீணை, கயிலாச வீணை - வீணை வகைகள். 134.18. கெந்தமாகிய - அனுத்திரள் ஒலியாகிய. சுரமண்டலம் - இனிய ஓசை மண்டலம். கிம்புராதியர் - கிம்பரர்; வீணை வாசிப்பதில் வல்லவர். 134.19. வாசல் காணிக்கர் - வாசலை, கோட்டையைப் பாதுகாக்கின்றவர். சேவிக்க - தொழுது நிற்க. 134.20. சுந்தராதி- அழகிய வடிவமுடைய. விபீஷணன் - இராவணன் தம்பி. 134.21. பாரி - மனைவி. சூரன் - வலிமையாளன். லக்கண குமாரன் - இராவணன் மகன். 134.22. பழுது கண்டவள் - குற்றம் கண்டவள்; வண்டோதரி. 134.25. கொடுபோய் விட்டு - கொண்டு போய்விட்டு. புத்தி - அறிவுரை. 134.26. திறவாளி - திறமைசாலி. சகத்தினில் - உலகத்தினில். 134.27. பகுந்து - கலந்து. பரமன் - சிவன். அரி - திருமால். அயன் - பிரம்மன். 134.28. சரத்துக்கு - அம்புக்கு. சறுக்காது - உடம்பினுள் புகாது; பொருந்தாது. 134.29. சன்னக் குரங்கு - புன்மையான குரங்கு. 134.30. வரத்தில் - இறையின் அருளில். வலுவில் எதிர்த்திடும் - அரக்கர்களின் வலிமையை எதிர்த்திடும். 134.32. வரத்து மகன் - சிவனிடம் பல வரங்கள் வாங்கியவன் மகன்; இராவணன் மகன். வன்னமணி சிங்காசனம் - அழகிய மணிகள் பதிக்கப்பட்ட அரியணையாகிய சிங்காசனம்.

"Is this the monkey that was so valiant?"
Some would say: "This monkey will be given
As a sacrifice, its brains scattering on the ground."
"Now that it is caught in Intirajit's noose
This monkey has become afraid," some would say:
"Will the ten-headed one leave it free,
This monkey that has ruined so much in our city?
Surely he would give it as food to dogs and jackals."

### INTIRAJIT COMING TO RĀVAṆA'S PALACE

As people gossiped thus variously among themselves,
Intirajit at last, reached the golden palace
Where Rāvaṇa sat in state.

### RĀVAṆA'S *TARPĀR*

While Rāvana sat in state in his court
With lovely damsels dancing before him in groups;
His crowned heads huge as hills, (crowns wrought of diamonds
Sparkling like million suns)-with his able ministers,
Counsellors, advisers, surrounding him;
With well decorated *Rutra Viṇas* and *Kailāca Viṇas*,
Kimpuruṭas singing sweet music;
Captains and commanders and the guards of the fort
Stood before him in humble obedience;
With his wife Maṇṭōtari in her bed chamber,
Still weeping at the loss of heroic Lakkaṇakumāraṉ
Rāvaṇa thus sat in state in his *Tarpār* hall!
And now handsome Intirajit, eldest of his sons,
Entered the royal audience hall.

### INTIRAJIT SPEAKING IN PRAISE OF AṆUMAṆ TO RĀVAṆA

Bringing forward his captive Aṉumaṉ,
Intirajit gave sober advice to his father in this wise:
"The world has not seen a more capable hero than him!
To fight with him, neither Siva nor Hari dare come forward:

### இராவணன் அனுமனிடம் வினாவுதல்

இருக்கும் பொழுதிலே யனுமானும் இசைந்த வாலைச் சிங்காசனமாய்
தருக்கு லாவி ராவணனிலேயும் சாணுக் குயரம தாயிருந்தான்
பெருக்கு மணிமுடி ராவணனும் பெலத்தவனு மானைப்பார்த் துரைப்பான்
வரக்கண் மணிமக்கள் தனைகொன்றுநீ வனத்தை யழித்திட்ட வகையேதடா

### அனுமன் மறுமொழி

ஏதடா வென்ற ராவணனே இனிமேற் கேளடா சொல்வேனடா
தீதடா ராமன்தேவி தன்னைத் திருடிவந் தாயேயவள் முன்னடா
தூதடா சொல்ல வந்தேனடா தொடுத்த படையையும் அடித்தேனடா
வாதடா மக்கள் மாண்டதடா மந்திரி மார்களும் பட்டாரடா

ஆரடா யினிமேல் பாரடா அரக்கர் குலமெல்லா மறுப்பேனடா
ஊரடா லங்கை யுனக்கேதடா உமைபங்கன் தந்த வரமேதடா
பாரடா ராமன் வாராரடா பத்துத்தலை யற்றுப்போ ராயடா
தேரடா சேனை யழியுமடா திருவைச் சிறைவைத்த கருமத்தாலே

### அனுமனைக் கொல்ல இராவணன் துணிதல்

கருமமிது சொல்ல மாருதியைக் கைகொண் டடித்தானே வல்லரக்கன்
ஒருகாலா லெத்தி ராவணனை உதைத்து விட்டானே வாளனுமான்
பொருமி யனுமானும் யரக்கனுட புயத்திலொரு குத்துப்போட் டானங்கே
மருவி மதகரிபதித் ததந்தம் வாழைப்பழ மெனப்பறிந் திடுமாம்

*134.34.* தருக்குலாவி - பெருமிதம் கொண்டு உலாவி. சாணுக்கு உயரம் தாயிருந்தான் - தனது வாலையே அரியணையாக்கி அதை இராவணனின் அரியாசனத்தைவிட ஒரு ஜாண் உயரத்தில் ஆக்கி அதன்மீது இருந்தான். *134.35.* பெருக்கு மணிமுடி - அதிகமான மணிகள் பதிக்கப்பெற்ற மணிமுடி. பெலத்த - வலிமையான. *134.36* வரக் கண்மணி - அரக்கர் குலத்தில் கண்மணிகளாய்த் திகழ்ந்த இலக்கணன், அக்ஷய குமாரன் என்னும் இராவண புத்திரர் இருவர். *134.38.* முன்னடா தூதடா - சீதையின் முன்னால் வந்த தூதுவன் நானடா என்ற பொருளில். *134.40.* வாதடா மக்கள் மாண்டதடா - போர் செய்ய வந்ததினால் உன் மக்கள் மாண்டாரடா. பட்டார் - இறந்தார். *134.42.* லங்கை - இலங்கை. உமைபங்கன் - பார்வதியை இடப்பாகத்தில் கொண்டவன்; சிவன். *134.43.* வாராரடா - இராவணா! உன்னை அழிக்க வருகிறாரடா! *134.44.* திருவை - திருமகளாம் சீதையை. கருமத்தாலே - செயலாலே. *134.45.* மாருதி - அனுமன். *134.46.* எத்தி - எற்றி. வாளனுமன் - வலிமையான அனுமன். *134.47.* பொருமி - சினத்துடன். புயத்தில் - தோளில். *134.48.* மருவி - பொருந்தி. மதகரி பதித்த தந்தம் வாழைப்பழமெனப் பறிந்திடுமாம் - 'முன்பொரு காலத்தில் இராவணன் எண்திசை யானைகளோடு போர் செய்யும் பொழுது அத்திசை யானைகளின் தந்தங்கள் அவனது உடம்பில் ஒடிந்து பதிந்து போயின; அவை அனுமன் விட்ட பலமான குத்தினால் வாழைப்பழம் வெளியே வந்து விழுவது போல எளிதாக வந்து விழுந்தன' என்ற பொருளில்.

Teyvēntiraṉ too would be frightened before him;
Weapons do not enter his body: No, they cannot!
Do not think he is but a tiny monkey:
Do not forget, his readiness to oppose
Even us with all our boons, from the Gods!
Sire, it is impossible to defeat great Aṉumaṉ
With his invincible prowess." Rāvaṇa heard his son speak thus,
From his lion-throne, bedecked with gems many-hued;
While Aṉumaṉ made for himself a platform high,
With his tail piled round and round
And sat upon it, a span higher than Rāvaṇa himself!
Turning to the mighty monkey.
Rāvaṇa with gemmed diadems, said:
"Sirrah! How is it that you killed, my dear sons,
And destroyed my precious Acōkavaṉam?"

### AṈUMAṈ'S REPLY

"Rāvaṇa, you asked me something calling me '**Sirrah!**'
Now sirrah! Hear me **Sirrah!**
I tell you what you have done is evil, **Sirrah!**
Stealing Lord **Rama**'s spouse!
I am the envoy to her from **Rama**
I came with a message for her, Sirrah!
It was I who destroyed your troops, Sirrah!
Your people died, Sirrah!, because they came
To fight with me, Sirrah!
Even your ministers, Sirrah! fell before me.
See Sirrah! hereafter I shall root out
Your entire race of demons, Sirrah!
Lanka will not be yours for long Sirrah!
Given to you by Siva (with Uma as a part of Him).
Look out, Sirrah! My Lord **Rama** is coming, Sirrah!
You are going to lose your ten heads, Sirrah!
Your chariot Sirrah! and your vast armies Sirrah!
Will be wiped out because of your base action
In imprisoning, the Goddess Lakshmi."

### விபீஷணன் அறிவுரை

பறிந்த ராவணன் புயம்வெளியாய் பலகணி போல பள்ளமுற
எறிந்த குரங்கையிப் போதுகொல்வாய் என்று தலையாரை மாருரைக்க
அறிந்த மிகவிபீஷண ருரைப்பார் அழகல்ல தூதர்தனைக் கொல்வது
செறிந்த தூதரை மாதரையும் தென்னா கொல்வது பெரியகுற்றம்

### இராவணன் சினந்துரைத்தல்

பெரிய குற்றமென்றிது சபையில் பேசும் மாபாவி விபீஷணனே
அரிய கண்மணி லக்கணனை அக்ஷய னொடுவெகு தளத்தைத்
துரிசமாய் வந்ததூதன் கொன்றான் சொல்லுக் கடங்காத வனமழித்தான்
தரியலர் விட்ட தூதனென்று சத்துருவைக் கொல்ல குற்றமுண்டோ

### அனுமன் வாலில் அரக்கர் தீ வைத்தல்

குற்றம்பல செய்வ தானாலும் கொடுமை பலசெய்வ தானாலுமே
பற்றலர் தூதர்தன்னைக் கொல்லார் பங்கப்படுத்தி யங்கனுப் புமெந்த
இத்தலத் தனிலே யிவனை இலங்கைசீலை எல்லாங் கொணர்ந்து
சுற்றி வாலிலே தீக்கொளுத்தித் துரத்தி யடித்தோட்டி விடுவீரென்றார்

ஓட்டிவிடு மென்ன அவன்வாலில் ஊரில் சீலையெல்லாங் கொணர்ந்து
கூட்டிச் சுற்றவும் வாளனுமான் கொட்டிவாலையும் நீட்டி விட்டான்
நாட்டில் சீலையெல்லாஞ் சுற்றினார் நல்லவாலைப் பின்னையும் நீட்டினான்
தீட்டும் வனத்தினில் சிறையிருக்கும் சீதைசீலையைக் கொடுவா வென்றான்

கொடுவா வென்றசொல் கேட்டுடனே குறுக்கினான் வாலைச்சுருக்கிக் கொண்டான்
படுபாவி யிவனுபாயத் தைப்பார் பழிகாறன் செய்யுந் தொழிலையும்பார்
மொடுவா யாயிரங் கோட்டைஎரு முக்கித்துவைத்தாரே யனுமன் வாலில்
சுடுவா யெனச்சொல்லித் தீக்கொளுத்தித் தூரப் போவென்று துரத்திவிட்டான்

134.49. பலகணி - காற்று வருவதற்குக் குடையப்பட்ட துவாரம். 134.50. தலையாரைமார் - முதன்மை வீரர்கள். 134.51. விபீஷணன் - இராவணன் தம்பி. 134.52. தென்னா - தென்னாட்டு அரசனே; இராவணனே. 134.53. மாபாவி - பெரிய பாவி. 134.54. கண்மணி - கண்ணின் மணிகள் (கருவிழிகள்). லக்கணன், அக்ஷயன் - இராவணன் மகன்கள். வெகுதளம் - மிகுந்த படைகள். 134.56. தரியலர் - எதிரி. சத்துரு - பகைவன். 134.58. பற்றலர்- நம்மீது உறவற்றவர்; இராமன். கொல்லார் - கொல்லமாட்டார். பங்கப்படுத்தி - குறைபடுத்தி. 134.59. சீலை - துணி. 134.62. கொட்டி வாலையும் - நீண்ட வாலையும் கொட்டி. 134.64. தீட்டும் வனத்தினில் - சிறப்பான அசோகவனத்தில். கொடுவா- கொண்டு வா. 134.66 படுபாவி யிவன் உபாயத்தைப் பார் - சீதையின் துணியை எடுத்துவரச் சொன்ன மிகுந்த பாவியான இவன் சூழ்ச்சியைப் பார். 134.67. எருமுக்கி - சாணியைக் காய வைத்துச் செய்யப்பட்ட வரட்டியை முக்கி.

### RĀVAṈA DECIDES TO KILL AṈUMAṈ

Angry with Māruti's insulting words, Rāvaṇa punched him
With his hands, And Aṉumaṉ in turn, kicked Rāvaṇa
With his leg, and still angry, hit him on his arm,
A mighty blow with his hand; at which
The broken tusks embedded in his chest
When, of yore, he fought with the cardinal elephants,
Now fell off like ripe plantains down upon the ground!

### VIPĪṢAṆA'S ADVICE

As a gap appeared in his arms and chest,
Like holes in a window for letting in air,
Wrathfully Rāvaṇa ordered his Chief of the guards,
To kill Aṉumaṉ. Upon this, the wise Vipīṣaṇa,
Pleaded with his brother: "Lord of the South!
It is not fair or just,
To kill envoys or women, It is a great sin."
"You sinner Vipīṣaṇa who proclaims
That killing an envoy is a crime!
Have you forgotten that this monkey
Has slain my darling sons, Lakkaṇaṉ
And Akṣayaṉ, besides many of our troops?
He has destroyed our Acōkavaṉam
Beautiful beyond words. Is it wrong
To kill such an envoy sent by the foes?"
Demanded Rāvaṇa of his brother.

### THE DEMONS SETTING FIRE TO AṈUMAṈ'S TAIL

"Even if he had done many wrongs
And more things cruel, envoys from others
Are not usually killed; send him back maimed;"
Said Vipīṣaṇa, and Rāvaṇa ordered:
"Tie round his tail all the cloth
Available in Laṅka, set fire to it
And drive him back!"

### அனுமன் வாலில் பட்ட நெருப்பு கொண்டு இலங்கையை எரித்தல்

*தூரத்த மாருதிவெளியில் வந்து தோகை சீதையைச் சரணமென்று*
*தூரத்தில் சானகிய னுமனுக்குச் சற்றுஞ் சுடாமலே சாபமிட்டாள்*
*நிரத்தி யிலங்கைபட் டணமெங்கெங்கும் நெருப்பு கொளுத்தினான்*
*விருப்பமாக*
*உரத்த முழக்கோலால் விசுவகர்மன் உடனுக்குடனே பட்டணஞ்*
*சமைத்தான்*

### விஸ்வகர்மாவிடம் அனுமன் வேண்டல்

*சமைத்த விசுவனை யனுமன்பார்த்துத் தயவுபேசியே நயம தாக*
*அமைத்த விருதொன்று பெருமையாக அனுமக்கொடி தாரேன்*
*விஸ்வகர்மன்*
*இமைத்து மூடிக்கண் விழிக்குமட்டும் எனக்காய்ப் பொறுமென்று*
*தனுக்கிவிட்டான்*
*சுமைக்கைக் கூலிக்கு ஆசைப்பட்டு தொழிலை மறந்தானே விஸ்வகர்மன்*
*தொழிலை மறந்தானே விஸ்வகர்மன் சுற்றிவளைந்தே நெருப்பெங் கெங்கும்*
*எளிதல்ல மூதூ ரிலங்கை சுற்றி ஏறி யனுமானும் வாரபோது*
*வழியில் ஔவையா ரொருகிழவி வாளனுமானே சுடுபோ வென்றாள்*
*மொழிதான் மறப்பேனா தாயேயென்று மூடிமுழிக்கு முன்னோடிச்*
*சுட்டான்.*

### இலங்கை எரியும் காட்சி

*விருத்தம்*

*135. சுட்டன விலங்கை மூதூர் சுற்றிய வட்டக் கோட்டை*
*பட்டணம் மாட மேடை பட்டக சாலை கூடம்*

134.70. சுடாமலே சாபமிட்டாள் - வாலில் வைத்த தீ அனுமனுக்கு சுடாமல் இருக்க வரம் தந்தாள். 134.71. நிரத்தி - இலங்கை முழுவதும் நிறைவாக. 134.72. உரத்த - பெரிய. முழக்கோல் - கட்டிடம் கட்டும்பொழுது பயன்படும் ஒரு கோல். விசுவகர்மன் - ஒரு தேவதச்சன். பட்டணம் - இலங்கைப் பட்டணம். சமைத்தான் - செய்தான். 134.73. தயவு பேசியே - பணிவாகப் பேசியே. 134.74. விருது - பரிசு. அனுமக்கொடி தாரேன் - பரிசாக அனுமன் உருவம் பொறித்த அழகிய கொடியைத் தருகிறேன். 134.75. தனுக்கிவிட்டான் - மன எண்ணத்தை மாற்றி விட்டான். 134.76. சுமைக் கைக்கூலி - கைசுமக்கும் அளவு பெறுகின்ற லஞ்சம். 134.78. வாரபோது - வருகிற பொழுது. 134.79. ஔவையார் - தமிழ் பாடல்கள் எழுதவும் பாடவும் வல்ல பெண்பால் புலவர். சுடுபோ வென்றாள் - இலங்கையைச் சுடுவாய் என்றாள். 134.80. மொழிதான் - ஔவையார் சொன்ன மொழிதான். 135.2. பட்டக சாலை - பண்டக சாலை; அங்காடி.

As the servants brought together
All the cloth in the city to be tied
Round and round its prehensile tail,
Aṉumaṉ stretched forth his long tail
Ever lengthening, on which they tied the cloths.
And the evil demon said now: "If required,
Bring also the cloth covering Sita in the *Vaṉam.*"
Upon hearing which foul command, Aṉumaṉ,
At once shrunk his tail thinking to himself:
"O look at the evil ruse of this sinner vile!"
See now the demon's ignoble action:
"Set fire to its tail, after tying it with thousands
Of cowdung cakes dried"; and accordingly,
They did and drove Aṉumaṉ out.

## AṈUMAṈ BURNING THE CITY OF LAṄKA WITH THE FIRE ON ITS TAIL

Thus driven out, Aṉumaṉ now prayed
To Princess Sita (lovely as a peafowl);
And Jāṉaki now blessed him with a boon,
That the fire might not burn Aṉumaṉ!
With great joy Aṉumaṉ now spread the fire
All over Laṅka, everywhere!
When Visvakarma the architect then and there
Did begin to rebuild the city of Laṅka!

## AṈUMAṈ'S REQUEST TO VISVAKARMA

Looking at Viśvakarma at his work of reconstruction,
Aṉumaṉ spoke to him mild and gentle words:
"O Visvakarma, I shall give you a rare prize!
A flag with my figure embossed,
If you but want patiently, for the space
Of the winking of an eye!" And he
Greedy for the bribe, stopped his work.
And now the fire began to spread.
As Aṉumaṉ went round the city,

*கொட்டகை யுப்ப ரிக்கை கோபுரம் மாளிகைக்கால்*
*அட்டதிக் கனுமன் வாலா லழுத்தினான் கொளுத்தி னானே.*

*பதம்*

*136. கொளுத்தினா னனுமான் இலங்கை யிலெரி*
*கொளுத்தினா னனுமான்*

*கொளுத்திய தீயது கொழுந்து விட்டெரிய*
*கூடிய நாடு குலைந்தது பாராய்*
*எழுதின விதியோ வெனச்சில பேர்கள்*
*எழுப்பிய தீயதில் விழுந்துட லெரிய (கொளு)*

*எரிவது கரிவது பொரிபொரி பொரியாய்*
*இந்திரசித்து ராவணன் கும்பகர்ணன் மேடைகள்*
*பரிகரி தேர்படை பணியணி யாடைகள்*
*பட்டுகளுங் கரியாகப் பட்டணத்தில் தீமூட்டி (கொளு)*

*மூட்டிய நெருப்பினி லரக்கியர் திடுக்கிட*
*மோதியே யிலங்காபுரி வீதியெங்குந் தீயெரிய*
*பாட்டனான் மாலியவான் விபீஷணன் மார்புதட்ட*
*பத்துத்தலை யானின்முகம் செத்துக்கும்பி கொதித்திட (கொளு)*

**மக்கள் கலங்கி உரைத்தல்**

*பட்டண ராவணன் கெட்டிடுந் தோசி*
*பத்தி னியைச்சி றைவைத்த தினாலே*
*கெட்டுதை யோகுடி கெட்டது வென்பார்*
*கெடுதி செய்தாலது விடுமோ விடாதென (கொளு)*

135.3. உப்பரிக்கை - மேல்மாடம். 135.4. அழுத்தினான் - பலமாகப் பல இடங்களிலும் தீயை அழுத்தினான். கொளுத்தினான் - நெருப்பைப் பற்ற வைத்தான். 136.2. கொளுந்துவிட்டு - சுடர்விட்டு. நாடு - இலங்கை என்னும் நாடு. 136.4. கரிவது - கரிந்து போவது. 136.5. பணியணி- அழகிய அணிகலன்கள். கரியாக-தீயில் கரிந்து போக. 136.7. மாலிய வான் - இராவணன், குபேரன் ஆகியோர்க்கு முன் இலங்கையை அரசாட்சி செய்தவன்; முதுமை காலத்தில் இராவணன் மந்திரியாகத் திகழ்ந்தவன். பத்துத்தலையான் - பத்து தலைகளுடைய இராவணன். முகம் செத்து - முகம் வாடி. கும்பி - வயிறு. 136.8. பட்டண ராவணன் - இலங்கைபட்டணத்தை ஆளும் இராவணன். தோசி - குற்றமுடையவன். பத்தினி - பத்தினியாகிய சீதை.

He met the sage poetess Auvaiyār,
Who told him! "Go you, O Aṉumaṉ,
And burn the city!" "I shall not forget
To do so, Mother!" said he in glee,
And began the work of destruction with his burning tail!

## LAṄKA BURNING

135. He did burn the ramparts round,
Of the city; mansions with terraces,
Marts, halls, pavilions and canopies
Towers and battlements, palaces, castles·
He set fire to the city entire!

136. Aṉumaṉ set fire to Laṅka city
Oh Aṉumaṉ, he did burn it!
The kindled fire sent tongues of flame!
O see, the city is destroyed,
While some who were fated thus,
Did fall in the fire and burn:
Aṉumaṉ set fire to Laṅka city
Oh Aṉumaṉ, he did burn it!
To ashes black were they atomised,
The pavilions of Intirajit, Rāvaṇa and Kumpakarṇaṉ!
Horses and elephants, chariots and the troops,
Ornaments and jewels and garments silken,
Became blackened ashes because of the fire.
Aṉumaṉ set fire to Laṅka city
Oh Aṉumaṉ, he did burn it!
As the demonesses were shocked to see
The fire enveloping all the streets,
Grandfather Māliyavāṉ and Vipīṣaṇa patted their chests;
While the face of the ten-headed one grew deathly pale,
And his blood boiled at all this havoc:
Aṉumaṉ set fire to Laṅka city
Oh Aṉumaṉ, he did burn it!

*விடுமோ பட்டணம் வேகுது வென்பார்*
*வேந்தன் விளைத்த வினையிது வென்பார்*
*கொடுமை செய்தானே குரங்கதை யென்பார்*
*குரங்கு கொளுத்து துகூகூ கூவென* (கொளு)

*கூகூ கூகூ ராவணன் சிறைவைத்த*
*கோதையர் சீதா ஆகுல கற்புத்தீயோ*
*சாப மிட்டாளோ மாடமும் மேடையும்*
*தழலாய் வெந்து தணிந்துதை யோவென* (கொளு)

*தணிந்தது மாளிகை சூளிகை யுப்பரிகை*
*சாம்பல தாய்வந்த திலங்கை யென்றழுதிட*
*அணிந்திட வேதான் விஸ்வ கர்மனுக்கே*
*அனும கொடியென் றொருவிருது கொடுத்துவிட்டு* (கொளு)

**சீதை அனுமனிடம் உரைத்தல்**

*துடுக்கு*

137. *விருதுகொடுத்து அசோக வனத்தில் மெல்லியரைத் தொழுதா னனுமானே*
*பொருதுசலித் தாய்நீ யனுமானே போய்ப்பசி* [71]*தீர்ந்தாயோநீ யனுமானே*
*பசிதவிர்த் தாயோநீ யனுமானே பசியேற் றாயோநீ யனுமானே*
*வசியமிட் டாயோநீ யனுமானே வளைந்து கொன்றாயோநீ யனுமானே*
*வளைந்திலங் காபுரிப்பட் டணமெல்லாம் வைத்தாயோ தீநீ யனுமானே*
*பளைந்துவளைந்து அரக்கர் பலரை வதைத்தமகனே உரைப்பேன் கேளு*

136.10. வேகுது - வெம்மையால் வேகுது. வேந்தன் - இராவணன். வினை - சீதையைச் சிறை வைத்ததால் ஏற்பட்ட கொடுஞ்செயல். 136.11. கொளுத்துது - கொளுத்துகிறது. 136.12. கோதையர் சீதா ஆகுல கற்புத்தீயோ - சீதையை இராவணன் சிறை வைத்ததால் அவளின் கற்பாகிய நெருப்பு இலங்கையை எரித்ததோ என்ற பொருளில். 136.13. சாபமிட்டாளோ - சபித்தாளோ. 136.14. தணிந்தது - வெந்து தணிந்தது. சூளிகை - அரண்மனை. உப்பரிகை - மேல்மாடம். 137.1. விருது - வெற்றிக் கொடி; அனுமக்கொடி. மெல்லியர் - சீதை. 137.2. பொருது - போர்செய்து. சலித்தாய் - சலிப்படைந்தாய். 137.4. வசியமிட்டாயோ - எதிரிகளைக் கொல்ல வசியம் என்னும் மந்திரம் செய்தாயோ. 137.5. வைத்தாயே - தீ வைத்தாயே. 137.6. பளைந்து வளைந்து - 'வளைந்து' என்ற பொருளில் வந்த ஒருபொருட்பன்மொழி.

---

71. தீர்ந்தயோ.

## THE PEOPLE TALK AMONG THEMSELVES

"Oh it is because of this sinner vile
Rāvaṇa, keeping in durance the chaste Sita,
Our race entire is ruined!
Evil will not go unpunished"
Some would say:
Aṉumaṉ set fire to Lanka city
Oh Aṉumaṉ, he did burn it!
"See how the city is burning,
As a result of our monarch's evil act;
He did cruel harm to the monkey
And now it is kindling fire everywhere!"
Aṉumaṉ set fire to Lanka city
Oh Aṉumaṉ, he did burn it!
"Oh is it the fire of chastity
Of lovely Sita imprisoned by Rāvaṇa?
Oh, did she curse that the mansions and halls,
Be burnt down to ashes thus?"
Aṉumaṉ set fire to Lanka city
Oh Aṉumaṉ, he did burn it!
"Oh palaces and castles, terraces
And mansions have burnt down to ashes!"
They all did cry: When Aṉumaṉ
As agreed, presented Visvakarma with a prize
Of a pennon with his figure drawn upon it!
Aṉumaṉ set fire to Lanka city
Oh Aṉumaṉ, he did burn it!

## SITA'S SPEECH TO AṈUMAṈ

137. And now his work completed
Aṉumaṉ stood before princess Sita
With prayerful obeisances true,
Who spoke to him gently and lovingly;
O Aṉumaṉ! you must have become much tired;
Did you go and sate your hunger?
What charm did you use to destroy the foes?

*வைத்திடு சூடாமணி தனைக்கொடுபோய் மாயவர் திருக்கையிலே*
*கொடுப்பாயோ!*
*அத்தலமிட்ட வரித்தல மேவி அரக்கர் குலத்தை யறுத்தமகனே*

*அரக்கர் குலத்தை யறுத்தமகனே அங்கேநான் வருவே னனுமானே*
*இரக்க மதிப்படி நீயனுமானே என்னுடை நொம்பலஞ் சொல்லனுமானே*
*மானெனுந் தாடகை மலைவிழக்கீறி வழிதனிலே கரும்பாறையி லேறி*
*மேன்மைசெய் தகலிகைக்கு மோக்ஷங்கொடுத்தார் மிதுலையிற் சிலைவளைத்*
*தென்னையுங் கைபிடித்தார்*

*பிடித்தே யானவர்பதம் வருடயிலே பேசினது பரமரகசியம் மகனே*
*குடித்தார திருநீயல் லால்மறு கோதையைத் தொடேனென் றுரைமானே*
*ஆணையிட்டார் பெருவர மிதுதானே அரிதிரு செவியினிலுரை யனுமானே*
*காணவிருப் பமும்நான் மறுகுவதும் கண்மணியே நீசொல் லனுமானே*

**அனுமன் இராமனிடம் நடந்ததைக் கூறுதல்**

*சொல்லென விப்படி சீதையர்சொல்ல தூதனுமா னுஞ்சீதை யைத்தொழுது*
*வல்லபெருங் கடலெல்லாந் தாண்டி வந்தானே கிஷ்கிந்தா கிரியில்*
*கிரியது கண்டே பிரியமதாகக் கேசவ ராகவராமா சரணம்*
*அரிரெகு ராமா சரணஞ்சரணம் ஆயிழை சீதையைக் கண்டேன்கண்டேன்*

*கண்டேன் சூடாமணியது தந்தாள் கருணைக்கடலே சரணம் சரணம்*
*கொண்டே னுன்திருப்பாதந் தலைமேல் கோவிந்தராமா சரணம் சரணம்.*

137.7. சூடாமணி - தலையணியில் ஒரு வகை; இராமன் அனுமனிடம் கணையாழியைக் கொடுத்ததைப் போலவே சீதை இராமனிடம் கொடுக்க அடையாளமாக இதைக் கொடுத்தாள். மாயவர் - திருமால்; இராமன். 137.8. அத்தலமிட்டவர் இத்தல மேவி - கிஷ்கிந்தையிலிருந்த அந்த இடத்தை விட்டு வந்து இலங்கையில் பொருந்தி. 137.9. மகனே- மகன் போன்ற அனுமானே. 137.10. இரக்கம் அதிப்படி - எனது (சீதையது) அதிகமான இரக்க, துன்ப உணர்வு. நொம்பலம் - துன்பம். 137.11. மானெனும் தாடகை - மிகப்பெரிய விலங்கு போன்ற தாடகை அரக்கி. மலை - மலை போன்ற அரக்கி. கரும்பாறையிலேறி மேன்மை செய்த கலிகைக்கு - கரும்பாறையில் கால் வைத்து அகலிகையைப் பெண்ணுருவாக்கியது. சிலைவளைத்து- 'சிவதனுசு' என்னும் வில் வளைத்து. 137.13. பதம் வருடயிலே - பாதம் வருடயிலே; காலை வருடி விடுகையிலே. 137.14. குடித்தார திரு - எனது குலத்துக்கு மனைவியாகிய திருமகள்; மனைவி. மறு கோதை.- வேறொரு பெண். 137.15. அரி திரு செவி - திருமாலின் பெருமையான காது. 137.16. மறுகுவதும் - வருந்துவதும். கண்மணியே - என் கண்ணின் மணி போன்றவனே; அனுமனே. 137.18. வல்ல - தாண்டுவதற்கு அருமையான. கிஷ்கிந்தாகிரி - கிஷ்கிந்தை மலை; சுக்கிரீவன் அரசாட்சி செய்யும் நாடு. 137.19. பிரியமதாக - விருப்பமதாக. 137.20. ஆயிழை - அழகிய ஆபரணம். 137.21. சூடாமணி - தலையில் அணியும் ஒரு வகை ஆபரணம். கருணைக் கடலே - கருணையில் கடல் போன்றவனே; இராமனே.

Turning and bending, did you set fire
To the entire Lanka city? O dear son!
I have a message for you to take
To my Lord! Give this crest-jewel
Of mine, into his hands: O dear son,
Sent from over there to this place to destroy
The demon-race! I will surely return there!
O Anuman, convey truly my pathetic plight
And my present grief to my Lord!
Tell him who slew Tāṭakai the hill-like monster;
Who by stepping on a black rock,
Gave redemption to Akalikai, restoring her
To her human form; who bent the mighty bow
In Mitilai and won me in marriage;
Who assured me when we were alone
In our chamber, as I pressed his feet,
(This is a secret, my son, which he only knows!)
"I will not touch any woman
But you, O my chaste wife:"
This he swore to me in confidence. Tell this
In Harirāma's ear, O Anuman!
O darling Anuman! tell him how I yearn
To see him and how I am grieving here."

### ANUMAN REPORTING TO RAMA

As Princess Sita ordered Anuman to tell all this
To Lord **Rama**, the noble envoy
Bowed to her; and leaving her presence,
He crossed the great sea to reach
Kiṣkintai city near the familiar mountain,
And seeing Lord **Rama** there,
He exclaimed lovingly thus!
"Refuge Lord! Refuge Kēcava Rākava!
Refuge **Rama!** Refuge Hari! Refuge Rakurāma!
Refuge! Refuge! Saw I the Princess Sita,
Saw I! She gave me this crest-jewel

## இராமன் பதிலுரை

விருத்தம்

138. சரணமென் றடியைப் போற்றும் தனதனு மானைக் கண்டார்
வரமுடன் சீதை சூடா மணியுடை யானைக் கொண்டார்
திரைகட லடைக்க வேணும் சீக்கிரஞ் செல்ல வேணும்
தரணியில் சமுத்திர ராசன் தனைகொடு வாநீயென்றார்.

## அனுமன் சமுத்திரராசனை அழைத்தல்

நடை

139. கொண்டுவா சமுத்திர ராசனை நீசென்று கூட்டி வந்தனுமானே
குரைகட லடைத்திட விரைவது பாரென்று கோவிந்தனா ருரைத்து
நெடுவால் கவிகளுந் தலைவருந் மகிழ்சுக்கிரீ பனுமாக வந்து
நெடுங்கட லோரத்தில் பாளையஞ் செய்துமே நீலவர்னருமிருந்தார்
இருந்தா ரிளையவர் திருந்திய வானரம் எழுபது வெள்ளஞ்சேனை
யொவ்வொரு மிருக்கையில் நல்லனுமான் கடல்ஏறியே தேறித் தாண்டிப்
பெருந்தாரணி புயன்சமுத்திர ராசனைக் கண்டு பெருமான் பேருரைத்து
பெருமா னருளிப் பாட்டென வருணனுந் தான்பேசாம லங்கிருந்தான்
போனமேலே யவன்சிலை விளையாட்டும் பெருமை யைப்பார்த் திருக்கப்
பெருமான் சமூகத்தி லனுமா னோடிவந்து பிணக்கம
தாயுரைத்தான்

## அக்கினி அஸ்தரத்தால் இராமன் கடலை வற்றும்படி செய்தல்

ஆசை வருணன்கடல் சுவறும்படி அக்கினி யஸ்தி ரத்தை
அரிதிரு மால்தொட விரிகட லானது அறவே சுவறினதே

138.1. தனது அனுமானை - தனக்கு அன்பனான அனுமானை. 138.3. திரைகடல் அடைக்க வேணும் - கடலை அடைத்துப் பாலமிட வேண்டும். சீக்கிரம் - விரைவாக 138.4. தரணியில் - உலகில். சமுத்திரராசன் - கடலரசன்; வருணன். கொடுவா - கொண்டு வா. 139.1. குரை கடல் - ஒலிக்கும் கடல். விரைவது பாரென்று - விரைந்து செல்வதைப் பாருங்கள் என்று. 139.2. நெடுவால் கவி - நீண்ட வாலையுடைய குரங்கு. பாளையம் - பாசறை; படைகள் தங்குமிடம். நீலவர்னர் - இராமர். 139.3. இளையவர் - இலட்சுமணர். வெள்ளம் - ஒரு பெரிய எண்ணைக் குறிக்கும் சொல். தேறித் தாண்டி - மனதில் வலிமை கொண்டு கடல் தாண்டி. 139.4. பெருந்தாரணிபுயன் - பெரிய உலகத்தில் சிறந்த தோள் வலிமை உடையவன்; அனுமன். பெருமான் - இராமன். வருணன் - கடலரசன். பேசாமல் அங்கிருந்தான் - இராமன் கட்டளைக்குச் செவி சாய்க்காமல் அங்கிருந்தான். 139.5. சிலை விளையாட்டும் பெருமையைப் பார்த்திருக்க - இராமனின் வில் திறமையை அதன் பெருமையை வருணன் பார்த்திருக்கும் படி. பெருமான் - இராமன். சமூகத்தில் - அருகில். பிணக்கமதாய் - வருணனின் மன விருப்பமின்மையைத் தெளிவுறுத்துகின்றவனாய். 139.6. சுவறும்படி - வற்றும்படி. அக்கினி அஸ்திரம் - தீயை உமிழும் அம்பு. தொட - விட. விரிகடல் - பரந்த கடல். அறவே - முற்றிலுமே.

For Yo: Ocean of grace! Refuge!
I place thus your divine feet
Upon my head! Refuge Kōvintarāma! Refuge!"

**RAMA'S REPLY**

138. Rama saw his Aṉumaṉ prostrate
Before him, adoring his feet;
And rejoiced to see the crest-jewel
Which he recognized as Sita's!
"We have to build, a bridge athwart
The billowy sea! and go across soon!
Go you at once and bring the God of the Sea.'

**ANUMAN MEETING THE GOD OF THE SEA AT RAMA'S ORDERS**

139. "Oh see how Aṉumaṉ is hastening swiftly
To bring Varuṇaṉ to build a dam across the sounding waters,"
Exclaimed Kōvinta! The long-tailed monkeys
And the chiefs and happy Cukkirīvaṉ then encamped
On the shore of the big sea.
Along with the blue-hued Lord,
Besides younger Lakshmaṇa
There were seventy *veḷḷam* strong armies,
All of them waiting for the return of Aṉumaṉ!
While so, noble Aṉumaṉ leaped across the sea
To meet the Sea - God and on reaching his seat,
Conveyed the wishes of Lord Rama
To Him; but Varuṇaṉ[138] remained silent
Even after Aṉumaṉ mentioned Rama's name.
(Perhaps to see for himself the powerful play of Rama's bow!)
And Aṉumaṉ ran back to Rama's presence
And reported the indifferent attitude
Of the God of the Sea!

138. Varuṇaṉ - The Hindu God of the sea

அறவே சுவறிட சமுத்திர ராச னடியற்ற மரம்போலவே
அரசர் குலத்தில் தசரதர் மகன்முன் னடியிணைப் பணிந்தானே

### சமுத்திரராசன் கலக்கம்

திறமாய்ப் பருதியைப் பழிக்குமாலை யொன்றுசீர் பதந்தன்னில் வைத்துச்
சிறியோர் செய்பிழை பெரியோர் பொறுப்பீர் திருமாலே சரணம்
சரண மென்றடி தொழஅரி ரெகுராமன் தான்குறு நகைபுரிந்து
சமுத்திர ராயா நமக்கொரு காரியம் தகும்படி செய்வாயோநீ
மரண அரக்கரி லங்காபுரிப் பட்டணத்தில் வானரம் போய்வரவே
வழிபகர் வாயென வெளியம்பால் மாயவன் ஏங்குவனென் மேலே

### திருமால் கடல் தோன்றும்படி மீண்டும் செய்தல்

என்மேலே படைநடத்தண மதுவன்றி இணைய ரிதனை விடுவோம்
இடங்கொண்டு பகர்வேன் றடங்கண்டு போவேனெனத் திருமால் மகிழ்ந்து
உன்மேலே யுறுசினந் தவிர்ந்தோ மெனவொரு கணைமுனை யதிலே
உருண்டிடுஞ் சலமது பெருங்கட லாய்வர உகந்தருள் புரிந்தாரே

### விஸ்வகர்மன் துணையோடு கடலில் பாலம் கட்டுதல்

புரிசெய வருணன் றிருவணை செய்யும் புகலது தடங்காட்ட
புத்தியோ டனுமன் விசுவ கர்மனையே போயவ னழைத்துவர
அரியடி தொழுதே விசுவ கர்மனுமே அணையில் பணிநடத்த
அனுமனும் பாய்ந்தே கனமலை பிடுங்கி அவன்கையிலே கொடுக்கக்

139.7. அடியற்ற மரம் போல - வேரற்ற மரம் போல. தசரதர் மகன் - இராமன். 139.8. பருதியைப் பழிக்கும் மால் - சூரியனைப் பழிக்கும்படியான மிகுதியான ஒளியைக் கொண்ட திருமால். சீர் பதம் - பெருமை வாய்ந்த திருப்பாதம் 139.9. அரி ரெகுராமன் - திருமாலாகிய இராமன். குறுநகை - இளநகை; புன்முறுவல். சமுத்திரராயா - கடல் தலைவனே; வருணனே! தகும்படி - ஆகும்படி. 139.10. மரண அரக்கர் - மரணத்தை, சீதையைச் சிறை வைத்ததின் மூலம் வரவழைக்கும் அரக்கர்கள். வழிபகர்வாய் - வழி விடுவாய். எளியம்பால் மாயவன் ஏங்குவனென் மேலே - திருமாலாகிய இராமன் என் மீது இரக்கப்பட வேண்டும்; கடல்நீர் மீண்டும் தோன்றும்படி செய்ய வேண்டும் என்றவாறு. 139.11. என் மேலே படைநடத்தணம் - கடலரசனாகிய என் மீது படையை நடத்த வேண்டும். அரி - திருமால். இடங்கொண்டு பகர்வேன் - கடலில் செல்வதற்குரிய வழி கொண்டு சொல்லுவேன். தடம் - வழித்தடம். 139.12. கணைமுனை - அம்பின் முனை. சலம் - கடல் நீர். 139.13. திருவணை - மேலான அணை. புகல - கூற. அது தடங்காட்ட - கடல் வழிகாட்ட. விசுவகர்மன் - தேவதச்சன். அவன் - அனுமன். 139.14. அரி - திருமாலாகிய இராமன். அடி திருப்பாதம். பணி - வேலை. கனமலை - பெரிய மலை. அவன் - விஸ்வகர்மன்.

## RAMA DRYING UP THE SEA WITH HIS FIERY ARROW

As Harirāma shot Akkiṉi's dart at the sea,
It dried up at once and the Sea - God appeared forthwith,
Falling at the feet of Tacarata's son,
Even like a tree that had been felled!
Placing at his feet a beautiful wreath,
That put to shame the sun in its radiance,
Varuṇaṉ prayed to Rama; "Refuge O Lord!
Pardon, noble as you are, the wrong
Of this little one! Refuge! Refuge!"
And Rakurāma smiling gently spoke to him thus:
"O Lord of the Sea! can you do us a favour?
Can you make a path through your surface for our monkeys,
To go to Lanka city where the demons dwell,
About to die at our hands for their crime?"
And Varuṇaṉ replied; "The Lord must take pity on poor me,
And restore my waters; I beg of you
To march your armies on my surface.
I shall make way for you and your brother,
To pass across to Lanka."
And Tirumāl pleased with this assurance of Varuṇaṉ
Said; "we are no longer angry with you."
And he shot an arrow again,
So that the sea was full again
With the waters brought by it.

## BUILDING A BRIDGE ACROSS THE SEA WITH VISVAKARMA'S HELP

With Varuṇaṉ marking out the site whereon
To build the bridge, Visvakarma
Whom Aṉumaṉ had brought with forethought
Came now to Rama, and bowing at his feet,

கொடுத்திட எழுபது வானர வெள்ளம் குன்றுகள் பிடுங்கிவர
குறிப்பு டனிருபத்து நால்படைத் தலைவரும் குன்றுகள்
பிடுங்கிவரக்
அடுத்த சராசர பக்ஷிகள் பறவை காடங்கலும் மணல்சொரிய
அணிக்குல மானதுகடல் முக்கிக் கரைபுரண்ட ணையினில்
மணல்சொரிய
மணல்சொரி யணிக்குலந் தனைக்கண்டு திருமால் மலர்க்கரம் முதுகில்
வைத்து
மகிழ்ந்தரி திருவணை செய்த விஸ்தாரத்தை வழுத்துதற் கெளிதாமோ
அணித்தலத் தனுமான் கொடுவரும் பருமலை யதெல்லாம் விஸ்வகர்மன்
அவனொரு கரத்தா லேந்தி வைத்தானதை யனுமனும் மனதில்
வைத்தான்
மனதுவைத் தனுமன்கால் கொண்டும் கைகொண்டும் வால்கொண்டும்
சிரசுகொண்டும்
மகமேரு வொத்ததை விட்டனுமான் பலமலைகளைப் பிடுங்கி வந்தான்
தனதொன்று பத்து நூறாயிர மாயிரம் தடமலை கொடுவரினும்
சரசுவிசு வகர்மன் கரத்தொன் றிலேந்தியுந் தாங்கியுமணை
யில்வைத்தான்
வைப்பது கண்டது மான்மலர் முகமது வாடிட அரியறிந்து
வருத்தி விஸ்வகர் மனிடத்திலுந் திருமால் வளர்திரு வுளம்பற்றுவார்

139.15. வெள்ளம் - ஒரு பேரெண். குன்றுகள் - சிறு மலைகள். 139.16. சராசர பக்ஷிகள் - உலகத்திலுள்ள பறவைகள். அடங்கலும் - எல்லாமும். 139.17. அரி திருவணை - திருமாலுக்காகக் கடலில் போடப்பட்ட பாலம். விஸ்தாரம் - பெரிய செயல். வழுத்துதற்கு எளிதாமோ - கூறுவதற்கு எளியதாகுமோ. 139.18. அணித்தலம் - அழகிய இடம். கொடுவரும்- கொண்டுவரும். பருமலை - பெரியமலை. 139.19. சிரசு - தலை. மகமேரு - மகா மேரு; சிவன் இம்மலையை வில்லாக வளைத்தான். 139.20. தடமலை - பெரியமலை. சரசு விசுவகர்மன் - கலைமகளின் அருளைப் பெற்ற விஸ்வகர்மன். அணையில் - பாலத்தில். 139.21. வைப்பது கண்டு அனுமான் மலர் முகமது வாடி - எவ்வளவு மலைகளை ஒரே நேரத்தில் கடினப்பட்டு தான் கொண்டு வரினும் அவற்றை விஸ்வகர்மன் ஒரே கையில் வாங்கி எளிமையாகப் போட்டு விடுவதால் தான் இராமனுக்குச் செய்யும் பணியில் விஸ்வகர்மனோடு ஒப்பிடுகையில் சிறியேன் ஆகிவிட்டேனே என அனுமன் முகம் வாடி. அரி - திருமால்; இராமன். வருத்தி - வரச்செய்து. வளர் திருவுளம் பற்றுவார் - விஸ்வகர்மனின் சிறந்த உள்ளத்தை அறிந்து கூறுவார்.

He began the construction
Of the bridge across the sea to Lanka.
Anuman plucked by the roots, huge hills
And gave them into Visvakarma's hands
To be used in the work;
The seventy *vellam* Vānaras
Each one uprooted hillocks, as also
The twenty four commanders of the troops:
All creation joined in the holy task,
Birds of the air dropping sand upon the sea;
The tiny squirrels rolled on the beach
And shook off the sand sticking to their backs!
Pleased with which Tirumāl placed
His flower-soft fingers upon the squirrel's back
(The stripes which they possess even now!)
Oh, is it easy to describe the process of construction!
Whatever Anuman brought, hill or rock,
Visvakarma seized with a single hand
And placed upon the sea, equally rapidly!
And Anuman with his hands and legs and tail,
Uprooted many a hill huge as Mēru!
But whatever the numbers he brought,
Hundred or thousand or more, by the grace
Of Goddess Saraswathi, Visvakarma
With one hand received, effortlessly
Placing them where they belonged in the bridge!
On seeing this, Anuman's face grew sad;
Upon which Lord Hari beckoned to Visvakarma
And mildly admonished him; "Son! receive graciously,
The hills brought with much strain
By Anuman, without slighting his effort;
He is also my servant, O Visvakarma!
May success attend on you!"

செப்பமுட னனுமான் கொடுவரு கிரிசிறப்புடன் வாங்கும் பிள்ளாய்
திறமுயர் சேவகனைக் குறைவு செய்யாது செயமாய் விஸ்வகர்மா
செயராமன் கற்பனையை நயமென் றொருகையைச் சென்றொரு கரத்தாலே
சிகரியனுமன் கொண்டு மிகவர் விசுவனும் சிறப்பு வாசாரமதாய்

**வானரப்படைகள் புறப்பாடு**

நயமுட னணையது முடிந்தது வானரம் நடந்தது திருவணைமேல்
நவமணி ராகவன் பவளமா ப்ருவதம் நாடிவந் தேறினரே.

**விபீஷணன் இராவணனுக்கு அறிவுரை கூறுதல்**

விருத்தம்

140. வந்தேறிப் பவளமா பருவ தத்தில்
மாயவனார் சேனைவந்து வளைந்து கூடச்
சிந்தையுடன் பின்னணிப்பா ளையங்க ளெல்லாம்
திருவணைமேல் வருவதுமாற் பரவங் கேட்டு
முந்தியதோர் சானகியைச் சிறைதான் விட்டு
முகில்வண்ண னடிதொழுதால் மோக்ஷ மென்றே
தந்தமைய னிடத்தில்விபீ ஷணனும் வந்து
சத்தியமாய்ப் புத்திசொல்லத் தலைப்பட் டானே.

ஆசிரிய விருத்தம்

141. தலைநா ளுனக்கு நான்வெகு புத்தி
சொன்னது தயவுநீ கேட்கவிலையே
தானவர் கள்வான வர்கள் ஏவல்செய்
திடவரம் தக்கைதங்கு மரசரேறே

139.22. செப்பமுடன் - சிறப்புடன். கொடுவரு - கொண்டு வரு. கிரி - மலை. வாங்கும் பிள்ளாய் - வாங்குவாய் விஸ்வகர்மனே. திறமுயர் சேவகன் - திறமையுடைய சேவகனாகிய அனுமன். குறைவு செய்யாது - அனுமன் பணியில் குறைவு செய்யாது. செயமாய் விஸ்வகர்மா - வெற்றி உண்டாகும்படி செய்வாய் விஸ்வகர்மா. 139.23. கற்பனை - கட்டளை. நயம் - சிறப்பு. ஒரு கையைச் சென்றொரு கரத்தாலே - ஒரு அகங் கையின் பின்னால் மற்றொரு அகங்கையை வைத்து பணிவாக. சிகரி - மலை. விசுவன் - விஸ்வகர்மன். ஆசாரமதாய் - நியதியுடன். 139.24. திருவணை - மேலான பாலம். நவமணி ராகவன் - நவ ரெத்தினங்களை அணிந்த இராமன். பவளமா பருவதம் - பவளம் பொருந்திய பெரிய மலை. நாடி - விரும்பி. 140.1. மாயவனார் - இராமர். சேனை - படை. வளைந்து - பொருந்தி. 140.2. பாளையம் - பாசறை. திருவணை - கடலில் போடப்பட்ட பாலம். ஆற்பரவம் - ஆரவாரமான ஓசை. 140.3. முகில் வண்ணன் - மழைமேக வர்ணத்தான்; இராமன். 140.4. தமையன் - விபீஷணன் தமையன்; இராவணன். 141.1. தலை நாள் - முந்திய நாள். தயவு - பணிவு. தானவர் - அசுரர். வானவர் - தேவர். ஏவல் செய்திட - பணி செய்திட. அரசர் ஏறே - அரசர்களுள் தலைவனே.

And Visvakarma thereafter took
With grace and respect, the hills brought
By Anuman and used them in his work.
Thus at last the work of building the bridge
Was completed, and the Vānara armies marched upon it.
Lord Rama (adorned with nine kinds of gems) crossed the sea
And climbed atop the Coral mountain in Lanka.

## VIPĪṢANA'S ADVICE TO RĀVAṆA

140. In Lanka city the good Vipīṣaṇa heard
The boisterous roar made by the monkey army,
Moving about in their encampment,
After they had followed Lord Rama,
To the great coral mountain;
And thought to himself: "We will be saved only
If Jānaki is released from imprisonment,
And we bow before the cloud-hued Lord in obeisance!"
Accordingly he sought his brother
And began his advice sober, to Rāvaṇa.

141. "But yesterday I advised you earnestly;
You did not care to listen, O king of kings!
Celestials and asuras do your bidding!
You have boons many!

மலைபோலும் மகுடமுடி பத்துடைய கத்தனே
மன்னவா என்னண் ணாவி
மாதரசி யானதொரு சீதையைச் சிறைவிட்டு
மாயனை யடுக்க நன்றே
அலைகடலின் மேலணை திருத்தினார் பவளமலை
யருகாக வந்து விட்டார்
அம்பொன்று தொட்டேழு மராமரமும் வாலியும்
அறுத்திட்ட ராம பாணம்

சிலையினால் பெரியவ னரிராம னிளையவன்
தென்னி லங்கையி லடுத்தே
தீவைத்த தூதனும் வானரத் தலைவரும்
சேனா சமுத்தி ரமுமே

இராவணன் பதிலுரை

சேனா சமுத்திர மெனப்பெருமை பேசுறாய்
சிறிய மானிட வேடரைத்
திருமாலு மிளையோனு மென்றுபுக ழிக்கிறாய்
சிறுமை நம்மை பேசுகிறாய்

ஆனாலும் நீபகை யானாலும் உனக்குமுன்
அவன்கும்ப கர்ண னுண்டே
அந்தரத் திந்திரசித் துண்டு அதிகாயன்
அமைச்சர்கள் மிகுத்து முண்டே

141.2. மகுடமுடி - கிரீடம். அகத்தனே - உடம்புடையவனே. அண்ணாவி - அண்ணா. மாதரசி - பெண்களுள் அரசி போன்றவள்; சீதை. மாயன் - திருமாலாகிய இராமன். அடுக்க - அடிபணிய. 141.3. அறுத்திட்ட - தொலைத்திட்ட. ராமபாணம் - இராமனது கை அம்பு. 141.4. இளையவன் - இலட்சுமணன். அடுத்தே - பொருந்தியே. தூதன் - தூதனாக வந்த அனுமான். வானரத் தலைவர் - சுக்கிரீவன். சேனா சமுத்திரம் - கடல் போன்ற படைகள். 141.5. பேசுறாய் - பேசுகிறாய். புகழிக்கிறாய் - புகழ்ந்து பேசுகிறாய். சிறுமை நம்மை பேசுகிறாய் - சிறியவனாக என்னைக் கருதிப் பேசுகிறாய். 141.6. பகையானாலும் - எனக்கு நீ பகையானாலும். கும்பகர்ணன் - இராவணன் தம்பியருள் ஒருவன்; அதிபலசாலி. அந்தரத்து - வானத்தில் உறைகின்ற. இந்திரசித்து - இராவணன் மகனுள் ஒருவன்; அதி பலசாலி. அதிகாயன் - இராவணன் மகனுள் ஒருவன்; பெருத்த உடம்புடையவன்.

O Lord, with ten crowned heads upon a sturdy frame!
My king! My brother! It is good even now,
To release the queen among woman, Sita,
And to seek the friendship of Tirumālrāma!
They have built a bridge across the billowy sea
And encamped near our Coral mountain!
Rama's arrow has pierced sal trees seven;
His arrow has slain invincible Vāḷi!
Both Rama and his brother Lakshmaṇa, and the envoy
Who came to Laṅka and burnt it down,
Along with Vāṉara chieftains and armies
Vast as the sea, are knocking at our gates."

### RĀVAṆA'S REPLY

"You talk with pride in their vast armies!
Small men you praise,
As Lord Tirumāl and his younger brother!
You speak disparagingly of us;
All right! even if you were to become my enemy,
I still have your elder brother Kumpakarṇaṉ!
There is Intirajit dwelling amidst the clouds;
There is Atikāyaṉ; there are my ministers;

வானாடர் பணியுண்டு மயிலிரா வணனுண்டு
மாமூல பலமு முண்டே
வரையேந்து திண்புயமும் ஒருமூன் றரைக்கோடி
வானா ளெனக்கு முண்டே

நானா விதஞ்சொல்லி வந்தாய் விபீஷணா
நமக்குநீ தம்பி யல்ல
நல்லதா மென்கிட்ட நில்லாதே போவென
நகைத்திளை யோனைப் பகைத்தான்.

### மீண்டும் விபீஷணன் அறிவுரை கூறுதல்

நடை

142. இளையோனுந் திருமாலும் [72]எளிதல்லவே ரெகுராமன்
வளையாத்த வில்வளைத்து மணம்புணர்ந்த காதலியை
காதலியைக் கொண்டுவந்து கடுஞ்சிறையில் வைத்தாயே
சீதையரைச் சிறைநீக்கித் திருமாலைக் கண்டிருப்போம்

கண்டிருந்தால் நமக்குமொரு காலத்திலு மழிவில்லையே
பண்டிருந்த வாழ்விலேயும் பாக்கியங்கள் மெத்தவுண்டாம்
மெத்தமெத்த புத்திசொன்னேன் வேந்தேநீ கேட்கலையே
கொற்றவனார் தேவிநம்மை கொல்லவந்த செல்விகண்டீர்

செல்விசிறை யிருப்பதனால் சேனைவந்து மூண்டதுபார்
அல்லலற்றே வாழவென்றா லாயிழையைச் சிறைவிடுவாய்

141.7. வானாடர் - தேவர். பணியுண்டு - அடிபணிந்து நடப்பதும் உண்டு. மயில்ராவணன்- இராவணனுக்கு உறவில் சகோதரனானவன்; பாதாள இலங்கையை அரசாளுகின்றவன். மாமூல பலம் - மிகப்பெரிய மூலப்படையின் வலிமை; இப்படையில் மிக பலசாலிகள் இருப்பர். வரையேந்து - மலையை ஏந்துகின்ற. திண்புயம் - வலிமையான தோள். 141.8. நானாவிதம் சொல்லி - பலவிதமாகத் தன் வலிமைகளைக் கூறி. கிட்ட - அருகே. இளையோன் - விபீஷணன். 142.1. எளிதல்லவே - எளியவன் அல்லவே. 142.2 வளையாத்த- 'வளையாத' என்பதின் பேச்சு வழக்கு. வில் - சிவதனுசு என்னும் வில். 142.6. பண்டிருந்த- முன்பிருந்த பாக்கியம் - புண்ணியம். மெத்தவுண்டாம் - மிகவுண்டாம். 142.7. மெத்த - அதிக அளவு. 142.8. கொற்றவனார் தேவி - அரசனாகிய இராமன் மனைவி; சீதை. 142.9. மூண்டது - வந்து சேர்ந்தது. 142.10. அல்லலற்றே வாழவென்றால் - துன்பம் இல்லாமலே வாழ வேண்டுமென்றால்.

72. ஒழிதல்ல

There are the celestials to do my bidding,
There is still Mayilrāvaṇan![139]
And last of all, we have our invincible reserve forces!
There is this mighty arm of mine,
Which lifted up the Himalaya mountain!
Forget not that my lifetime streches
To three and a half crores of years!"
Thus listing his own strength, he told his brother;
"O Vipīṣaṇa! you are no brother of mine:
It is good for you,
If you don't come near me:
Go hence from my sight."
Thus Rāvaṇa, laughing scornfully at Vipīṣaṇa,
As if he were his enemy.

### VIPĪṢAṆA CONTINUES WITH HIS ADVICE

142. "The younger Lakshmaṇa and Rama who is Tirumāl
Are not easy to conquer;
You brought and placed in durance vile,
The loving spouse of Rakurāma, whom he wedded
After bending the mighty bow of Siva!
Let us even now rectify this wrong;
Release Sita from her imprisonment.

139. Mayilrāvaṇan - Demon-Emperor of the underworld - a cousin of ten-headed Rāvaṇa

### விபீஷணனை இராவணன் இழித்துரைத்தல்

சிறைவிடென்றே புத்திசொன்னாய் தோசவி பீஷணனே
குறையுரைத்தாய் நம்மையும்நீ கோவிந்தனைப் பெருமைசொன்னாய்
பெருமையுற்ற ராமனல்லோ பெண்கொடியைப் பறிகொடுத்தான்
அருமையுற்ற எனதுதங்கை ஆர்ப்பரித்த சூர்ப்பனகை

சூர்ப்பனகை மூக்கரிந்த சுணையுனக்கே யில்லையடா
தாப்புடையா ளுன்னுடைய தங்கையென்றுஞ் சொல்வாரோ
தங்கையைமூக் கரிந்தமன்னன் தாரமல்லோ சிறையில்வைத்தேன்
மங்கையவள்க் குள்ளாளாய் மகளையங்கே காவல்வைத்தாய்

காவில்வந்த வேடரைத்தான் கார்மேக வர்னனென்றாய்
ஆவலுடன் நல்லபுத்தி அறைந்ததெல்லாம் போதுமடா
போதுமடா அவனோட போய்க்கூடி நீயிருடா
வாதுசமர் வந்ததென்றால் வாணாளை மாய்ப்பேனடா
வாணாளை மாய்ப்பேனடா வன்கொலையாய்க் கொல்வேனடா

### அனுமன் வலிமையை விபீஷணன் கூறுதல்

பூணாரம் பூண்டவனே பொன்னுமுடி ராவணனே
ராவணனே நல்லபுத்தி நானுரைக்கக் கேட்டிலையே

காவலனாம் லக்கணனைக் கனத்தபடை மன்னவரை
மன்னவரை யொருகுரங்கு வதைத்த செய்தியறியாயோ
தென்னிலங்கைப் பட்டணத்தைத் தீயெரித்த தறியாயோ
தீயெரித்துப் போங்குரங்கு சீதையர்க்குத் தூதனல்லோ
ஆயமிட்டுப் போங்குரங்கு வந்துதென்றால் விட்டிடுமோ

142.11. தோஷ விபீஷணனே - குல்த்திற்குக் கேடுவிளைக்கும் விபீஷணனே. 142.12. கோவிந்தன் - திருமால்; இராமன். 142.13. பெருமையுற்ற - பெருமையுடைய. பெண்கொடி - கொடி போன்ற பெண்; சீதை. 142.14. ஆர்ப்பரித்த - ஆரவாரம் செய்த. 142.15. சுணை - சுரணை; உணர்ச்சி. 142.16. தாப்புடையாள் - பெண்ணென சொல்வதற்குத் தகாதவள். 142.17. தாரம் - மனைவி. 142.18. மங்கை அவள்க்கு உள்ளாளாய் மகளை அங்கே காவல் வைத்தாய் - விபீஷணனே! சீதைக்கு வேண்டப்பட்ட ஆளாய் நீ உனது மகளான திரிசடையைக் காவலாக அசோகவனத்தில் வைத்தாய். 142.19. கா - சோலை. வேடர் - வேட்டையாடு வோர். கார்மேகவர்னன் - கரிய மேக நிறத்தையுடையவன்; இராமன். 142.20. அறைந்ததெல்லாம் - கூறியதெல்லாம். 142.22. வாதுசமர் - போர். 142.24. பூணாரம் பூண்டவனே - நல்ல மாலையை அணிந்தவனே. பொன்னுமுடி - பொன்னாலாகிய கிரீடம். 142.26. காவலனாம் - சிறந்த தலைவனாம். லக்கணன் - இலக்கணன்; இராவணன் மைந்தருள் ஒருவன். கனத்தபடை - மிகப்பெரிய படை. 142.30. ஆயமிட்டுப் போங்குரங்கு வந்துதென்றால் விட்டிடுமோ - சுற்றத்தாரோடு வந்த குரங்காகிய அனுமன் இலங்கையையும் உன்னையும் அழிக்காமல் விட்டிடுமோ? என்ற பொருளில்.

Let us meet Rama and seek his grace;
Then we can never be destroyed.
We have had many blessings in the past:
I have given you repeated advice,
O king! but you did not care to listen.
The spouse of King Rama,
Is the instrument of God to kill us,
See! the hostile armies surround us,
Only because of her imprisonment here.
If you want to live a trouble-free life
Straight release Sita from her confinement."

### RĀVAṆA ABUSING VIPĪṢAṆA

"You are the enemy to our race, Vipīṣaṇa!
You advise me to release her,
Blaming me for my action:
You are singing the praise of Kōvinta.
It is your Rama, the great, who lost his woman!
My dear sister Cūrppaṉakai lost her nose;
Have you no sense of shame,
That a maimed Cūrppaṉakai is your sister?
And what did I do? I placed in durance,
The wife of him who caused my sister's nose to be cut!
Whereas you placed your daughter,
Tiricaṭai as a protector to Sita!
You call the hunter of the forest 'cloud-hued Lord!'
Enough of your advice, Sirrah!
Go join him if you want, Sirrah!
But in battle I shall end your life:
End your life I shall, in murder brutal!"

### VIPĪṢAṆA SPEAKING ABOUT AṈUMAṈ'S POWERS

"O Rāvaṇa, with golden crown adorned,
And lovely chaplets! Are you not aware

### இராவணன் பதிலுரை

விட்டிடுமோ கெட்டமொழி விண்பறைந்த ஆண்மையல்லோ
இட்டமுள்ள தூதனைப்போல் எட்டுலக்ஷங் கோடியுண்டே

### விபீஷணன் மறுப்புரை

எட்டுலக்ஷங் கோடிக்குமேல் எழுபதுவெள்ளஞ் சேனையுண்டே
கட்டுடனே யுனைவாலில் கட்டிவைத்த பெலவாலி
கட்டிவைத்த பெலவாலி கார்வர்னரில் பாணமதால்
பட்டுவிட்டான் ஏழுமரம் பற்றறுத்தான் பாராமலே

பாராமல் சொன்னாரே பழிகாரா நீயுமிப்போ
ஆராலும் வெல்லரிய ஆங்காரத் தாடகையை
தாடகையோ டாங்காரத் தாடாகையும் பட்டாளே
வாடாத லக்கணனை வருந்ததூதன் கொன்றானே

தூதனொரு குரங்குவந்து சுட்டழித்தான் பட்டணத்தை
மாதரசி சீதையினால் வாழ்விழந்து போவாயே
வாழ்விழந்து நாடிழந்து மகவிழந்து அரசிழந்து
தாழ்வுவந்து கூடுதுகாண் சானகியாள் தன்பொருட்டால்

தன்பொருட்டால் கெடுவார்கள் தமக்கொருவர் புத்திசொன்னால்
அன்புவைத்துக் கேட்பாரோ அதுக்குமறு தலையுமுண்டோ
தலையொருபத் திருந்ததென்றும் சங்கரன்வா ளிருந்ததென்றும்
மலையெனவே புயமுண்டென்றும் மந்திரிமார் பலருண்டென்றும்

142.31. விட்டிடுமோ கெட்டமொழி - இராமனை உயர்வாய் பேசிய கெட்டமொழி உன்னை விட்டிடுமோ. பறைந்த - 'கூறிய' என்ற பொருளுடைய மலையாளச் சொல். இட்டமுள்ள தூதன் - உன் மனதிற்கு விருப்பமான தூதன்; அனுமன். 142.35. கார்வர்னர் - கருமேக நிறமுடையவர்; இராமர். பாணம் - அம்பு. 142.36. ஏழுமரம் - ஏழு மராமரம். 142.37. பழிகாரா - இலங்கை அழிய காரணமாய் இருப்பதால் விபீஷணன் இராவணனைப் 'பழிகாரா' என்று கூறியவாறு. 142.38. ஆராலும் - யாராலும். 142.39. தாடகை, ஆங்காரத் தாடகை - வலிமையான, கொடிய அரக்கியர்கள்; இராமனால் இறந்து போனவர்கள். 142.40. லக்கணன் - இராவணன் மகனுள் ஒருவன். தூதன் - தூதனாக வந்த அனுமன். 142.45. தன் பொருட்டால் கெடுவார்கள் தமக்கொருவர் புத்தி சொன்னால் - புத்தியற்றவனுக்கு அறிவுரை சொன்னால் அதைக் கேட்காமல் கெட்டுப் போவார்கள். 142.46. மறுதலையுமுண்டோ - வேறுபாடான கருத்துமுண்டோ? 142.47. தலை ஒரு பத்து - இராவணனுக்குத் தலை பத்து உண்டு என்ற பொருளில். சங்கரன் வாள் - இராவணன் கையில் சிவன் அருளால் கிடைத்த மந்திரவாள். 142.48. புயம் - தோள்.

How a monkey slew the great captain Lakkaṇaṉ
With all his troops vast, and their leaders?
Are you not aware how it gave to fire
The city of Lanka in the South?
Is not the monkey which burnt our city, the messenger to Sita?
It has now come with its tribe against us:
Surely it will not leave us alone.'

### RĀVAṆA'S REPLY

"You will not give up singing the praise
Of the enemy, unpleasing to my ear;
Is it manly of you to speak thus?
We have millions and millions of heroes,
Mighty like your famous envoy!" said Rāvaṇa.

### VIPĪṢAṆA'S REBUTTAL

And Vipīṣaṇa replied:
"If you have millions in your army,
They have seventy *veḷḷam* monkeys with them!
Remember, mighty Vāli who tied you up
In his tail! He fell by a single arrow
Of Rama cloud-hued! He pierced
With a single arrow seven huge trees.
You sinner responsible for the impending ruin of Lanka!
Tāṭakai fell whom none could vanquish;
The envoy of Rama destroyed another Tāṭakai, the arrogant,
As well as your son Lakkaṇaṉ.
A mere messenger has burnt down our city!
Surely, I tell you, you are going to lose your life,
Because of the queen of women, Sita!
On Jāṉaki's account you will lose your life,
Kingship, children, your power and all!
Ruin only will accrue to you:
Persons who are ruining themselves,
Must listen with respect,
If another were to offer sane advice;
There can be no two opinions on this.

*சிலையுண்டென்றும் மகிழாதே ஸ்ரீராமன் கணைதொடுத்தால்*
*உலையிலிட்ட மெழுகதுபோல் உன்னாணை பறந்திடுமே*
*பறந்திடுமே வுன்வாழ்வு பாவியுன் சகோதரமாய்ப்*
*பிறந்ததினா லிதுவுரைத்தேன் பின்னையுன்னா லானதைப்பார்*

**இராவணன் தன் மகிமை யுரைத்தல்**

*பாரினில் விபீஷணனைப் பகைத்தானே சத்துருவாய்*
*தேரிருக்க வாளிருக்கத் தென்னிலங்கை நாடிருக்கக்*
*வாரிருக்கும் பூமுலையாள் வண்டோ தரியிருக்க*
*காரிருக்கும் மேகத்திலே காதலிந்தர சித்திருக்க*

*இந்திரசித் தொருவனுண்டே எவர்களையும் வெல்வானே*
*சந்தவதி காயனுண்டே தம்பிகும்ப கர்ணனுண்டே*
*தம்பியென்றே பாதாளத்தில் தனித்தமயி லரக்கனுண்டே*
*தும்பிரத பரிகாலாள் தொடுத்தபடை மிகுத்துமுண்டே*
*வம்பருயிர் மாய்க்கவரும் மந்திரிமகோ தரனுமுண்டே*
*எம்பியல்லால் மூலபலம் எண்ணிறந்த சேனையுண்டே*
*சேனைமன்னர் நானுமுண்டே சிவன்கொடுத்த வாளுமுண்டே*
*ஆனைநகர் மானிடவர் அரித்திரளாம் ராக்ஷசர்கள்*
*நானெடுத்த சானகியை ராமனுக்கே பயந்துவிட்டால்*
*ஊனெடுத்துப் பறிகொடுக்கும் ஓரியெனச் செப்புமென்றார்*

142.49. சிலை - வில். கணை - அம்பு. 142.50. உலையிலிட்ட மெழுகு - நெருப்பு ஊது வாய் முன்பு வைத்த மெழுகு. 142.51 பறந்திடுமே - வாழ்வின் மேன்மை எல்லாம் பறந்திடுமே. 142.53. சத்துரு - பகைவன். 142.54. வாளிருக்க - மந்திர வாளிருக்க. 142.55. வாரிருக்கும் பூ முலையாள் - மார்பு கச்சு அணிந்த மேன்மையான மார்பகத்தாள்; வண்டோதரி. 142.56. காரிருக்கும் மேகத்திலே - மழை மேகம் இருக்கும் வானத்திலே. காதல் - அன்புடைய. 142.58. சந்த அதிகாயன் - அழகிய அதிகாயன்; இராவணன் மைந்தருள் ஒருவன். 142.59. தம்பி - இராவணனுக்குத் தம்பி உறவுமுறை உடைய மயில்ராவணன். 142.60. தும்பி - யானை. ரதம் - தேர்ப்படை. பரி - குதிரை. 142.61. வம்பர் - புதியவர்; இராமன் முதலியோர். 142.62. எம்பி - என் தம்பி; கும்பகர்ணன். மூலபலம் - மூலப்படையின் வலிமை. 142.64. ஆனநகர் மானிடர் - (கேவலம்) என்னை எதிர்ப்போர் நகர மாந்தர்கள். அரித்திரளாம் - சிங்கக் கூட்டமாம். 142.65. நானெடுத்த - நான் கவர்ந்து எடுத்த. 142.66. ஊனெடுத்து - மாமிசத்தை எடுத்து விட்டு. பறி கொடுக்கும் - மிகுதியை விட்டுவிடும். ஓரி - கிழநரி.

Do not be happy and complacent
That you have ten heads; that you have
The sword of Cankara; that you have arms
Huge as hills; that you haved ministers many;
That you have a mighty bow!
If Sri **Rama** were to shoot his arrows,
All your power and authority will vanish,
Like wax before the fire in a forge!
Your life will fly off! O you poor wretch!
As one born as your brother after you,
I tell all this to you:
The rest is up to you.

**RĀVAṆA BOASTING ABOUT HIS OWN ARMED MIGHT**

Treating brother Vipīṣaṇa as his enemy,
Rāvaṇa pridefully said to him:
"I have chariots innumerable, in my Lanka;
I have as my chief queen Maṇṭōtari
Of corseted breasts flower-soft and lovely.
There is my adoring son, Intirajit in his aerial palace,
Who can conquer anyone on earth;
There is too, my handsome son Atikāyaṉ,
And my borther Kumpakarṇaṉ; there is also
My cousin Mayilrāvaṇaṉ in the underworld!
Exceeding numerous troops of four kinds,
Elephantry, Chariotry, Cavalry and Infantry!
And Makōtaraṉ, mighty minister, to kill all aliens;
Myriads of warriors in my reserve forces!
I am, of course, there, chief of all the armies,
With the sword given by Lord Siva himself;
After all, those who oppose me, are just humans;
Pride after pride of lions are my demon hordes!
If I were to return Jāṉaki to Rama,
They will call me an old jackal,
Surrendering its fleshy prey to others!"

### இராமன் திருமால் அவதாரமென விபீஷணன் உரைத்தல்

செப்புமென்றே சொன்னவண்ணே திறங்களெல்லாம் நானறிவேன்
பத்மநாபன் ரெகுராமன் பாரளந்த மேகவர்ணன்
முப்பிறப்பி லிரணியனை முடிதுணித்த நரசிங்கந்தான்
இப்பிறப்பில் ராக்ஷசரை யிடழிக்க ராமனென்றே
ராமனென்றே தசரதற்கு நல்லமக னாய்ப்பிறந்து
பூமகளாஞ் சானகியைப் புணர்ந்துவந்தான் பூதலத்தில்
காமனுக்குத் தந்தையுமாம் கண்ணுதல்க்கு மைத்துனனாம்
கோமதிக்குத் தமையனுமாம் கோவிந்தன் ராமனுமாய்

சிறியவனென் றெண்ணாதே சிலையெடுக்கி லுயிர்முடிப்பான்
குறியாய்நான் புத்திசொன்னேன் கொள்ளேனென்றாய் பாலனென்றாய்
மறியோடு மழுவேந்தும் மங்கைபங் காளனறிவார்
அறியாமல் புத்திசொன்னேன் அவரிடத்தில் நான்போறேன்

### விபீஷணன் இராமனிடம் சரணடைதல்

நான்போறே னென்றெழுந்து நாலுமந்திரி மாரோடே
தேன்பொதிந்த சொல்லுடையான் தேச விபீஷணனும்
ஊன்பொதிந்த உயிர்மோஷம் உதவவென்றே வந்துவிட்டான்
கான்பொதிந்த வானரங்கள் கண்டிருக்கும் பவளமலை

பவளமலை யருகில்வந்து பற்றியதேர் விட்டிறங்கிச்
சிவமயமே சரணமென்றும் ஸ்ரீராமா சரணமென்றும்

*142.68.* பத்மநாபன் - திருமால்; இராமன். பாரளந்த மேகவர்னன் - ஓரடியில் உலகளந்த மேக வர்ண திருமால்; இராமன். இரணியன் - பிரகலாதன் தந்தை; இரணிய கசிபு. முடி துணித்த- கொன்றொழித்த. நரசிங்கம் - நரசிங்க மூர்த்தி. சிங்கமுகமும் மனிதவுடலும் கொண்ட திருமால். *142.73.* காமன் தந்தை - மன்மதனுக்குத் தந்தை; திருமால். கண்ணுதல் மைத்துனன்- நெற்றியில் கண்ணையுடையவனான சிவனின் மைத்துனன்; திருமால். *142.74.* கோமதிக்குத் தமையன் - பார்வதியின் அண்ணன்; திருமால். *142.75.* சிலை யெடுக்கில் - வில்லை எடுத்தால். *142.76.* குறியாய் - வருவதை நினைத்து குறிப்பாய். பாலன்- சிறுவன்; இராமனைக் குறித்தது. *142.77.* மறியோடு மழுவேந்தும் மங்கை பங்காளன் - மான் குட்டியோடு மழு ஆயுதத்தை ஏந்தியவனும் உமையவளை உடம்பில் சரிபாதியாகக் கொண்டவனுமான சிவன். *142.79.* நாலு - நான்கு. *142.80.* தேச விபீஷணன்- இலங்கை தேசத்து விபீஷணன். *142.81.* ஊன் பொதிந்த உயிர்மோக்ஷம் - (இராமனிடம் சரணடைவது மூலம்) தசையோடு கூடிய உடம்புக்கும் உயிருக்கும் மோக்ஷம். *142.82.* கான் பொதிந்த - காட்டில் உறைந்துள்ள. பவளமலை - இராமன் மற்றும் அவரோடு வந்த படைகள் தங்கியிருக்கும் இடம்.

## VIPĪṢAṆA REMINDS RĀVAṆA THAT RAMA IS TIRUMĀL INCARNATE

"O brother, full well I know all your strength!
But remember, Patmanāpa, Lord Rakurāma,
Is the cloud-hued One who measured the earth
(In a single stride); He is sure Narasinka
Who did kill Hiraṇiya in an earlier avatar!
And in his present birth, He has come
To destroy the demon race entire,
As Rama, virtuous son of Tacarata,
Who has wedded Jāṉaki, daughter of the Earth!
He is father to Maṉmataṉ, God of Love,
And brother-in-law to Siva with his forehead-eye,
Brother to Kōmati; he is Kōvintarāma!
Do not underestimate him as just a youth!
If he were to take up his bow,
He will straight consume your life!
Take careful note of what I have said
By way of good advice; but you will not,
Dismissing Lord Rama as a mere boy!
The God who holds the deer and the axe
In his hands, Siva concorporate with his consort,
He knows I speak true; I go to Rama now!"

## VIPĪṢAṆA SEEKS REFUGE UNDER RAMA

And leaving Rāvaṇa's court, Vipīṣaṇa
Of Lanka, of sweet-honeyed speech,
Rose into the air with his ministers four,
Seeking salvation for his life and body,
And coming to the Coral mountain near the sea,
Where the monkeys of the forest had encamped,
He alighted from his aerial car
Crying: "Refuge Siva! Refuge Sri Rama!"
And neared the camp; as Aravinta - Rakurāma
Watched his approach, the agitated monkeys

அவன்வரவு ரெகுராமன் அரவிந்தன் கண்பார்த்திருக்க
இவனாரோ வல்லரக்கன் இங்குவா ராளெனவே

இங்குவாரா னெனவே எழுந்துதல்லோ. வானரங்கள்
அந்த விபீஷணரை யனுமன்கண்டு மனதுமெய்த்து
ஞானந்தரு மன்னனிவன் நல்லவனா மென்றுரைக்க
மானந்த விபீஷணரை வருகவருள் புரிந்தாரே.

### விபீஷணன் இராமனை வேண்டுதல்

விருத்தம்

143. அருள்புரிந் திடவே யந்த அனுமனு மெதிரே சென்று
பொருள்தர வென்கைக் காத்த பூஷணா வாரு மென்று
கருணைமால் கமல பாதம் காணப்பொன் மாலை மூன்றும்
மருமலர் மாலை மூன்றும் வண்டணித் தாரன் வைத்தான்

வண்டணி துளபத் தானை மகாமுடி மகுடத் தானைக்
கண்டுயான் கண்ட போது கண்கொள்ளா காக்ஷி பெற்றேன்
தெண்டிசை யயோத்தி ராச தசரதன் மைந்தா வுன்னை
அண்டினே னெனக்கு வந்த ஆபத்தை நீக்கு வாயே.

### விபீஷணன் தன்நிலையை உரைத்தல்

ஆனந்தக் களிப்பு

144. நீக்கிய ராவண னோடே - வெகு
நீதஞ் செய்வேத னெனைப்படைத் தானே

142.85. அரவிந்தன் - திருமால்; இராமன். கண் பார்த்திருக்க- விபீஷணன் வருகையைப் பார்த்திருக்க. 142.86. வாரான் - வருகிறான் என்பதின் பேச்சு வழக்கு. 142.87. எழுந்துதல்லோ - விபீஷணனோடு போர் புரிய எழுந்ததல்லவா. 142.88. மெய்த்து - பொருந்தி. 142.89. ஞானந்தரு மன்னன் - பேரறிவு படைத்த மன்னவன்; விபீஷணன். மானந்த - அழகிய உருவமுடைய. 143.2. பொருள் தர - திறையாகப் பொருள்களை விபீஷணன் தர. என் கைக் காத்த பூஷணா- எனது கையைக் காத்த விபீஷணா (உன் வரவால் எனது கரத்துக்கு வலிமையுண்டாயிற்று என இராமன் உரைத்த பொருளில்). பூஷணா - விபீஷணா என்பதின் முதற்குறை. 143.3. மால்- திருமால். பொன் மாலை - பொன்னால் செய்யப்பட்ட மாலை. 143 4. மருமலர் மாலை - மிகுந்த மணம் வீசும் பூமாலை. வண்டணித் தாரன் - வண்டுகள் மொய்க்கும் பூமாலை அணிந்தவன்; விபீஷணன். 143.5. துளபத்தான் - துளசி மாலை அணிந்தவன்; இராமன். மகாமுடி மகுடத்தான் - பெரிய கிரீடத்தை அணிந்தவன்; இராமன். 143.6. போது- நேரம்; இராமனைக் கண்ட நேரம். 143.7. தெண்டிசை - தென்திசை. தசரதன் மைந்தா - இராமனே! 143.8. அண்டினேன் - அடைக்கலமானேன். 144.1. நீதம் செய் - கொடுமை செய்ய. வேதன் - பிரம்மன்.

Got up and prepared to engage him,
Shouting: "There he comes this powerful demon,
There he comes!. But sage Aṉumaṉ
Realizing the truth, on seeing Vipīṣaṇa
Said to the Lord: "This is a king, virtuous and good"
And Rama graced him with welcome cordial!

143. Graced by the Lord, Vipīṣaṇa went before Aṉumaṉ
And offered much wealth by way of tribute:
And Rama said: "Welcome Vipīṣaṇa!
Your coming has strengthened our hands."
And Vipīṣaṇa adorned with garlands buzzed by bees,
Placed at the lotus feet of the Lord,
Chaplets wrought of gold and wreaths of fragrant flowers,
Three of each, saying: "sight glorious
I have had, on seeing you, O son of Tacarata!
O Lord adorned with basil-wreaths and crown great!
O king of Ayōtti! I seek refuge under you!
Save me from the danger that threatens me!"

### VIPĪṢAṆA EXPLAINING HIS POSITION

144. "O the Lord of the Vēdas has created me as the brother
Of cruel, wicked Rāvaṇa! when he
Imprisoned the Goddess Pākkiyalakshmi,[140]
I admonished him with foresight true!
But he did not relish my advice.

140. Pākkiyalakshmi - Lakshmi - Goddess of prosperity

பாக்கிய லக்ஷிமி தன்னை - முழுப்
பாதகத் துட்டன் சிறைவைக்கக் கண்டு
போக்கிய மாய்ப்புத்தி சொன்னேன் - நானும்
உரைப்பது சற்று முகந்திட்டா னில்லை
நோக்கிப் பல்லாண்மைகள் சொன்னான் - அந்த
நொம்பலங் கண்டு அனுபாதங் கண்டேன்
கண்டேன் கடும்பாவி யோடே - நற்
கமலப் பிரம னெனைப்படைத் தானே

சண்டாள னோடு பிறந்து - அதி
சானகியைச் சிறைவைத்த நாள் முதலாய்
திண்டாடிப் புத்திகள் சொன்னேன் - நான்
செப்பின புத்தியவன் கேட்க வில்லை
கொண்டோடித் தோசியை விட்டு - ஆதி
கோவிந்தன் பாதத்தில் கூடவந் தேனே

வந்தேன் விபீஷண னடியேன் - எங்கள்
மாதா வயற்றி லுதித்தவர் மூவர்
முந்திய ராவணன் முன்னோன் - எனக்கு
முன்னவ னோர்கும்ப கர்னனு முண்டே

சுந்தரச் சானகி தன்னை - அந்த
தோசி சிறைவைத்த நாள்முத லாகச்
சந்தோஷ மாய்புத்தி சொல்லி - அது
தட்டிவிட் டானுன்னைக் கிட்டிட வேணும்

வேணுஞ் சகோதர மாது - வெகு
பாவியோர் சூர்ப்பனகை யுண்டு சாமி

144.2. பாக்கிய லக்ஷிமி - சீதை. பாதகத் துட்டன் - கெட்டச் செயல்கள் செய்யும் மோசமானவன்; இராவணன். 144.3. போக்கியமாய் - அனுபவ உண்மையை உணர்ந்தவனாய். உகந்திட்டானில்லை - விரும்பவில்லை. 144.4. பல்லாண்மைகள் - பலவிதமான வீரம். நொம்பலம் - வேதனை. அனுபாதம் கண்டேன் - அனுசரிக்கும் உந்தன் (இராமன்) பாதம் கண்டேன். 144.5. கடும்பாவி - கொடிய பாவி; இராவணன். கமலப் பிரமன் - திருமாலின் கொப்பூழ் கொடியிலுள்ள தாமரை வழி தோன்றிய பிரம்மன். 144.6. சண்டாளன் - கொடிய செயல்களைச் செய்பவன்; இராவணன். அதி - மிகுதி. 144.7. திண்டாடி - செய்வதறியாது திகைத்து. செப்பின - கூறின. 144.8. தோசி - பாவி. 144.11. கிட்டிட வேணும் - சேர்ந்திட வேண்டும். 144.13. சகோதர மாது-சகோதிரியான பெண்; சூர்ப்பநகை. சாமி - தெய்வமே!

Instead, he made many statements brave,
Which only added to my anguish!
Hence I am now at your gracious feet!
O the lotus-born Brahma has made me
Brother to the base cruel wretch, Rāvaṇa!
From the day he incarcerated Jāṉaki
I have been advising him in various ways,
But he would not listen; and hence
Fleeing from the vile sinner's side,
I have come to place myself at your feet.
Three of us were born to my mother,
Rāvaṇa the eldest, and Kumpakarṇaṉ elder to me;
Ever since the day he placed the lovely Jāṉaki
In durance vile, him have I advised
In soft words mild, but ever he scorned them!
Hence I have surrendered at your feet!
I have a sister, Cūrppaṉakai the wicked,
Whom we gave in marriage to arrogant Ciṅkaṉ;

ஆணவஞ் சேர்சிங் கனுக்குத் - தங்கை
யவளையுங் கட்டிக் கொடுத்தோமே சாமி

வாணாளை ராவணன் மாய்த்தான் - அந்த
மாபாவி காட்டுக்குள் வந்தாளே நீலி
பூணார மூக்குறுப் புண்டா - ளந்தப்
பொல்லா தவள்செய்த புண்பாடு சாமி

புண்பாட்டை யானென்ன சொல்வே - னந்தப்
பொற்கொடி யைச்சிறை வைத்ததி னாலோ
முன்பாட்டன் நாளையி லுள்ள - ஆதி
மூதூரி லங்கை யழியுது சாமி

விண்பாட்ட னாருக்கும் கேட்க - நான்
மேல்புத்தி கேட்டு விளம்பிடச் சாமி
கண்பூத்த வன்கேட்க வில்லை - உன்னைக்
காணவந் தேனெனைக் காத்துக்கொள் வாயே

காத்துக் குள்பீளைப்பூப் போலே - ஆதி
காலத்து மாமனை மானாக விட்டான்
ஏத்துச்சண் டாளனும் பட்டான் - அவன்
இளைய பெருமாளுக் கபயமென் றிட்டான்

சாத்திய பெண்சொல்லுங் கேட்டான் - உடன்
தானே யிளையவர் தேனைக்கை விட்டார்

144.14. சிங்கன் - ஓர் அரக்கன்; சூர்ப்பநகையின் கணவன். கட்டிக் கொடுத்தோம் - திருமணம் செய்து வைத்தோம். 144.15. வாணாளை - வாழ்நாளை. நீலி - சூர்ப்பநகை. 144.16. பூணார - மூக்குத்தி ஆபரணம் அணிந்த. பொல்லாதவள் - சூர்ப்பநகை. புண்பாடு - மனம் வருந்தும்படி செய்த செயல். 144.17. பொற்கொடி - பொன்னாபரணம் அணிந்த கொடி போன்றவள்; சீதை. 144.18. முன்பாட்டன் - புலஸ்தியர். ஆதி மூதூர் - பழமையான ஊர்; இலங்கை. 144.19. விண்பாட்டன் - பிரம்மன். 144.20. கண்பூத்தவன் - அறிவு மயங்கியவன்; இராவணன். 144.21. காத்துக்குள் - காற்றுக்குள். பீளைப்பூ - ஒரு வகை மணமற்ற கனமற்ற பூவகை. ஆதிகாலத்து மாமன் - இலங்கையிலுள்ள முதுமையான மாமன்; மாரீசன். 144.22. ஏத்து - இராவணன் கூறியதை ஏற்று. சண்டாளன் - பாவி; மாரீசன். பட்டான் - மாண்டான். இளைய பெருமாளுக்கு அபயமென்றிட்டான் - மாரீசன் தான் இறக்கும் பொழுது இலட்சுமணனே என்னைக் காப்பாற்று என இராமன் குரலில் அபயக்குரல் எழுப்பினான். 144.23. சாத்திய பெண் சொல்லுங் கேட்டான் - இலட்சுமணன் சீதை சாற்றிய சொல்லைக் கேட்டான். இளையவர் - இலட்சுமணர். தேன் - தேன் போன்றவள்; சீதை.

But he was killed by Rāvaṇa!
That great sinner, she came to the forest
Where she got her bejewelled nose cut off!
It is all her evil work, O Lord,
Too distressing for words! (that Sita
Is now confined in Laṅka!)
Lord! our ancient Laṅka city,
Famous since our great-grandsire's day,
Is sure to be ruined! The advice I gave
Rāvaṇa, would have reached the ears
Of Grandfather in heaven (the creator Brahma)!
But, crazed with lust, Rāvaṇa would not listen!
Like *pūḷai*[141] flower light, sent in the wind,
He sent his old uncle Māricaṉ
As a deer to your wood; agreeing, that sinner
Too did meet his end; as he
Cried in a voice of distress
Calling to the younger Lord Lakshmaṇa
(Imitating your own voice)
He (Lakshmaṇa) obeying her words,
Left her alone (she of honeyed-speech),
Which made it easy for Rāvaṇa
To lift her and transport her to Laṅka
Where he keeps her in durance!

141. *pūḷai* flower - Wood-plant flower

பேத்துச் சிறைவைத்துக் கெட்டான் - அந்தப்
பெண்பாவம் வந்து பிடித்தது சாமி

பிடித்திரு மாது சிறைக்கே - நான்
பெற்ற மகளைச் சிறைவைத்தேன் சாமி
கொடித்திரு மாதவள் கூட - பின்னும்
கூண்ட வரக்கிகளைக் காவல் வைத்தான்

அடித்திரு மாதை யடுத்தால் - எரி
யக்கினிக் கோட்டை யவர்க்குண்டு சாமி
படித்திரு லட்சுமி சீதை - பதம்
பற்றினே னுன்பாதம் பற்றினேன் சாமி

பற்றிவைத் தேன்பத்ம நாபா - கோ
பாலா நரசிங்க ரூபாவனு கூலா
சித்திரச் சீதை மணாளா - அரி
செயரா மாரெகு ராமா ஸ்ரீராமா

வெத்தி முகுந்தா வனந்தா - கார்
மேகவர்னா சக்கிரி ராகவ னாதா
புத்திதந் தாண்டரு ளென்றே - வி
பீஷண னடைக்கலம் புகுந்துகொண் டானே

### இராமன் அபயம் கொடுத்தல்

அடைக்கல மாய்நீ யிருப்பாய் - சற்று
மஞ்சாதே யென்றப யஸ்தங் கொடுத்துக்
கடைக்கண் ணருட்பார்வை கொண்டு - கமலக்
கார்வர்னர் விபீஷணர் தம்மோடு ரைப்பார்

144.24. பேத்து - பெயர்த்து. கெட்டான் - கெட்டான் என்றது இராவணனை. 144.25. திருமாது - திருமகள்; சீதை. நான் பெற்ற மகள் - விபீஷணனாகிய நான் பெற்ற மகள்; திரிசடை. 144.26. கொடித்திரு மாதவள் - கொடி போன்ற செல்வமகள்; சீதை. கூண்ட - அதிகமான. 144.27. எரி அக்கினிக் கோட்டை - தீ எரிகின்ற வளையம்; சீதைக்குப் பாதுகாப்பாகத் திகழ்வது. 144.28. பதம் - திருப்பாதம். 144.29. பற்றி வைத்தேன் - இராமா! உன் பாதத்தில் பற்று வைத்தேன். பத்மநாபா ,கோபாலா, நரசிங்கரூபா - திருமாலின் பல்வேறு நாமங்கள். 144.30. சித்திரச் சீதை மணாளா - அழகிய வடிவுடைய சீதையின் கணவா! இராமா! 144.31. வெத்தி முகுந்தா - வெற்றி முகுந்தா! திருமாலே. அனந்தா - திருமாலே. கார்மேகவர்னா - முகில்வர்ணநிறத்தவனே; இராமா!. சக்கிரி - திருமால். ராகவனாதா - திருமாலே. 144.33. அபயஸ்தம் - அடைக்கலம். 144.34. கார்வர்னர் - கார்வர்ண நிறத்தவர்; திருமால்.

O Lord! the sin against a pure woman
Cannot go unpunished! And I, Lord,
Did what I could; I made my good daughter
Tiricaṭai, keep company with Sita in Acōkavaṉam,
As he had ordered terrible ogresses to be the jailors!
There is, O Lord, a ring of fire round her,
Lest any one aproach too near her!
The divine Sita's feet and yours,
O Lord! are my refuge true, forever!
My faith I have placed in your feet,
Patmanāpa! Kōpāla! Lord in the Naracinka form!
Gracious Lord! spouse of Sita beautiful!
Lord Hari! Jayarāma! Rakurāma!
Srirāma! victorious Mukunta! Aṉanta!
Cloud-complexioned Lord! Lord with the Conch!
Lord Rākava! Give me gnostic true,
And grace me with your blessing!"
Thus did Vipīṣaṇa surrender to the Lord
And seek refuge under him!

### RAMA GIVING SANCTUARY TO VIPĪṢAṆA

Casting on Vipīṣaṇa his glance of Grace
The cloud-hued one, lovely as a lotus,
Extended his protecting hand with palm open,
Assuring him; "You will be safe
With me; fear not!" And continuing said:

படைக்கல மேன்கா ணமக்கு - குரு
        பரனாம் வசிட்டர் கிருபையே போதும்
சடைத்த ரிஷிமுனி வோர்கள் - அவர்
        தந்த வரங்களுந் தான்துணை நமக்கே

நமக்கெனத் தானிங் கிருப்பீர் - உங்கள்
        நாடு மிலங்கையுந் தந்தோ முமக்கே
அமர்க்கேகி வாரா மலேதான் - உன்
        அண்ண னென்பெண்ணைச் சிறைவிட்டு விட்டால்

உமக்கெங்கள் அயோத்தி தன்னில் - அஞ்சி
        லோர்பங்கு தாறோம் உலகாண் டிருப்பீர்
எமக்கது தானே சிறப்பு - இனி
        என்பங் குமக்கென்று ராமன் சொன்னானே.

**வானரங்கள் இராவணனது படைவளம் நோக்குதல்**

விருத்தம்

145 ராமனுட திருப்பாதந் தொழுது போற்றி
        நல்லவிபீ ஷணனிருக்கும் நாளி லேதான்
வாமன முகுந்தன் சுக்ரீப னோடே
        வானரமு மனுமானும் இளையோன் றானும்
தாமதியாச் சாம்பவனும் படைவீ டாகத்
        தானிருந்து இலங்கைவளந் தன்னைப் பார்த்தார்
கோமகுட ராவணனும் சேனை யோடே
        கண்டுவந்து வானரத்தின் குணம்பார்த் தானே.

144.35. படைக்கலம் ஏன் காண் நமக்கு - இராவணனை எதிர்த்துப் போரிட படைக்கலக் கருவிகள் எங்களுக்கு எதற்கு? என்ற பொருளில். குருபரனாம் - குருவாம். கிருபை - அருள். 144.36. சடைத்த ரிஷி முனிவோர்கள் - சடைமுடி தரித்த ரிஷிகள். 144.38. அமர்க்கு ஏகி வாராமலேதான் - போருக்கு இராவணன் எங்கள் மீது வராமல் இருந்தால். சிறைவிட்டு விட்டால் - விடுதலை செய்துவிட்டால். 144.39. அஞ்சு - ஐந்து. தாறோம் - தருகிறோம். 144.40. எமக்கது தானே சிறப்பு - எம்மைப் போன்ற (இராமனை) பேரரசர்க்கு அதுதான் சிறப்பு என்ற பொருளில். என்பங்கு உமக்கு - சமாதானம் கொள்ளாமல் போர் நடந்தால் என்னால் கைப்பற்றப்படும் இலங்கையாகிய நாடு உமக்கு என்ற பொருளில். 145.1. ராமனுட - இராமனுடைய. 145.2. வாமன முகுந்தன் - திருமால். இளையோன் - இலட்சுமணன். 145.3. தாமதியா - காலந் தாழ்த்தாத. சாம்பவன் - ஜாம்பவான்; பிரமபுத்திரன்; கரடி வேந்தன். படைவீடு - பாசறை. 145.4. கோமகுட ராவணன் - கிரீடம் தரித்த அரசனாகிய இராவணன். கண்டு வந்து- சேர்ந்து வந்து.

"Why do we need weapons at all?
The blessings of preceptor Vaciṭṭar are enough!
The boons given by the sages and seers
With matted locks, are our only help!
You can stay here with us, and for us!
We do grant the Lordship over Laṅka
And the land solely to you.
If perchance, your brother were to release
My spouse and thus avoid war,
We will yet give you a fifth of Ayōtti,
To rule over as the monarch!
Is not that alone the noble course, for us?
Hence forward, my share of the conquest
Will be yours for good!"

### THE VĀṈARAS SEE FOR THEMSELVES RĀVAṆA ARMED MIGHT

145. Rama (Lord Vāmaṉa Mukunta) along with Cukkirīvaṉ
Aṉumaṉ and other Vāṉara chiefs,
The younger Lord, and never-delaying Jāmpavāṉ,
From their bivouac saw the opulence
Of Laṅka and its armed strength.
And Rāvaṇa with his royal crown,
With his troops came up to assess
The strength and quality of the monkey armies.

### இராமன் அரக்கப் படைகளை நோக்குதல்

*சிந்து*

146. பார்த்திடும் பொழுது அரக்கனும் படைகளு மாகப்
பவளமால் வரையில் ரெகுபதி படைகளைப் பார்த்தான்
சேர்த்திடத் திருமால் வானரச் சேனைக ளோடே
தென்னிலங் கையில்வா ழரக்கர்தன் சேனையைப் பார்த்தான்
ஆத்திரத் தோடே விபீஷண னவர்தனைப் பார்த்து
அரிரா கவனார் கண்டொரு திருவாய் மொழிபகர்வார்
தோற்றுது தெற்கே வருமொரு சூரியன் போலே
சுடர்தெக் குறுமோ விபீஷணா சொல்லு மென்றாரே

### விபீஷணர் இராவணனது வருகை உரைத்தல்

சொல்லு மென்றுரைக்க விபீஷணர் தொழுதடி பணிந்து
சூரிய னல்ல ராவணத் தோசியென் றாரே
நல்லது காணு மிப்படி நவமணி முடியான்
நம்முட னெதிர்க்க வகையே நரபிரம கல்பனையோ
செல்வரிப் படியே பகர்ந்தவர் சிரித்தினி திருக்கச்
சித்திர வடிவான் வானரச் சுக்கிரி பனுமே

### இராவணனின் பத்து முடிகளையும் சுக்கிரீவன் கவர்தல்

ஒல்லையில் புகுந்தே ராவண னொருபது முடியும்
உடைத்தவன் கரத்தே படையிற் சென்றொதுங்கிக் கொண்டானே
ஒதுங்கிய போது திறங்கண்டு உலகளந் தவர்தான்
ஓடியே தனித்தான் சுக்கிரீ பனங்கொ ளித்தான்

**146.1.** அரக்கனும் - இராவணனும். பவளமால் வரை - இராமன் மற்றும் அவரது சேனைகள் தங்கியுள்ள மலை. ரெகுபதி - இராமன். *146.3.* அரி ராகவனார் - இராமன். திருவாய் மொழி பகர்வார் - அழகிய வாயிலிருந்து சில மொழிகளைக் கூறுவார். *146.4.* தோற்றது - தோன்றுகிறது. சுடர் தெக்குறுமோ - சூரியன் தெற்கில் வருமோ. *146.5.* ராவணத் தோசி - இராவணனாகிய பாவி. *146.6.* நவமணி முடியான் - நவரெத்தினங்களைத் தன் கிரீடத்தில் பதித்தவன்; இராவணன். நரபிரம கல்பனை - பிரம்மனின் கட்டளை. *146.7.* செல்வர் - செல்வ குணம் படைத்தவர்; இராமர். சித்திரவடிவான் - அழகிய வடிவுடையவன். *146.8.* ஒல்லையில் - விரைவாக. ஒருபது முடியும் - பத்து தலைகளில் சூட்டப்பட்ட கிரீடங்களையும். கரத்தே - மறைத்துக் கொண்டே. படையில் - இராவணன் படையில். திறம் - வலிமை. உலகளந்தவர் - உலகத்தை ஓரடியில் அளந்தவர்; திருமால். தனித்தான் - இராவணன் படையில் தனித்திருந்தான்.

## RAMA IEWING THE DEMON FORCES

146. The demon king and his troops saw from afar
The regiments of Rakupati in the coral mountain!
And the Lord too with his Vāṉara armies
Viewed the forces of the demon of Laṅka in the south!
Seeing the rage of Vipīṣaṇa by his side,
Hari Rākava's divine lips these words uttered:
"O Vipīṣaṇa! Radiant like a Sun, someone
Stands in the South! Does the Sun ever rise
In the South?" And bowing at Rama's feet,
Vipīṣaṇa replied: "He is not the Sun,
But Rāvaṇa the sinner vile!"
And the opulent Lord, beautiful Rama
Smiled and said: "O good it is
To see Rāvaṇa adorned with a crown
Of nine-kinds of gems, confronting us,
If it is so ordained by Brahma!"

## CUKKIRĪVAṈ SNATCHING AWAY THE TEN CROWNS OF RĀVAṆA

And now Cukkirīvaṉ the handsome Vāṉara
Swiftly leapt across and seizing
The crowns upon the ten heads of Rāvaṇa
Hid himself amongst the troops there!
Even as the Lord who measured the earth
Applauded his valiancy: While Cukkirīvaṉ

*பதுங்கி யங்கழுகாய் முடிபத்தும் பறித்தவன் கொணர்ந்து*
*பச்சை மால்திரு முன்னடி யிறைவைத் திடுவானே*
*பிதுங்கிய மணிகள் கதிரெனப் பிரவொளி வீசப்*
*பெருமா னெடுத்தே விபீஷணர்க் கருள்செய்து கொடுத்தார்*
*இதுங்கனகக் கேடே யெனச்சொல்லி ராவணன் வீழ்ந்தான்*
*இளக்கிய முடிதான் சணத்திலே முளைத்தது தானே*

**இராவணன் இலங்கையில் இருத்தல்**

*தானவ னெழுந்து அவனுட தன்படை யோடே*
*தலத்தினில் சேர்ந்தா னிலங்கையில் பெலத்துடன் போந்தான்*
*பானுவும் மதியு மிலங்கையின் பட்டணத் தூடே*
*பயப்பட்டு வாரா ரப்படிச் செயபட்ட பேரான்*
*சேனைக ளோடே யிலங்கையில் தென்ன னிருந்தான்*
*திருமாலும் பவளமா பருவதந் தன்னி லிருந்தார்*
*எனனு மானே செருச்செய யினித்தா மதமேன்*
*என்றவன் தூதாய னுப்புவ தியம்பு மென்றாரே*

**அங்கதன் தூது செல்லுதல்**

*இயம்பு மென்றிடவே அனுமா னிணையடி பணிந்தே*
*எம்பெரு மானே யங்கத னிவனாகு மென்றார்*
*செயம்பெறத் திருமா லங்கத தீரனை வருத்திச்*
*சென்றிடு வாயே வாலிக்குச் செயபுத்ரா நீயே*
*நயம்பெற வுரைக்க அங்கதன் நமக்காச் செனவே*
*ராவண னிடத்தில் தூதுக்கு நடந்த வன்றானே*

146.10. பச்சைமால் - இராமன். திருமுன்னடி - திருப்பாதத்தின் முன்பாக. இறை - திறை 146.11. பிதுங்கிய மணிகள் - கிரீடத்திலிருந்தும் வெளியில் உந்தி நிற்கும் மணிகள். பிரவொளி - பிரகாசமான ஒளி. 146.12. கனகக் கேடே - பொன் போன்ற எனது மிகுந்த செல்வத்திற்குக் கேடே. இளக்கிய முடிதான் - தலையிலிருந்து பிரிந்து போன கிரீடங்கள் தான். சணத்திலே - விரைவிலே. 146.13. தானவன் - அரக்கன்; இராவணன். அவனுட தன்படையோடே - இராவணன் தனது படைகளோடு கூடி. தலத்தினில் - இருப்பிடத்தில். 146.14. பானு - சூரியன். மதி - சந்திரன். பேரான் - பெயரையுடையவன். 146.15. தென்னன் - இராவணன். 146.16. செருச்செய - போர்ச்செய்ய. இயம்பும் - கூறும். 146.17. இணையடி - பொருந்திய பாதங்கள். அங்கதன் இவன் ஆகும் என்றார் - இராவணனிடம் தூதுவனாகச் செல்ல வாலியின் மகனான அங்கதன் தகுதியுடையவன் ஆவான் என்றார். 146.18. செயம் பெற - வெற்றி பெற. அங்கத தீரன் - அங்கதனாகிய வீரன். வருத்தி - வரச் செய்து. 146.19. நமக்காச்செனவே - நமக்குத் தகுதியான வேலை கிடைத்தது என்றே.

Alone by Rāvaṇa's side, slunk away
And with all the ten crowns ran back
To **Rama** the emerald-hued Lord
And placed them before him as tribute!
As the dislodged gems sparkled radiantly
The Lord took them up and gave them to Vipiṣaṇa!
While Rāvaṇa fell on the ground lamenting
Their loss as an inauspicious indication
Of the loss of his wealth and golden pelf!
But the crowns back did grow on his heads!

## RĀVAṆA BACK IN LANKA

Up rose the demon with his armies
And reached his city with all his hordes;
He who had the reputation
That the very Sun and the Moon
Did tremble to pass over Lanka, the Lord of the South
Went back with all his hosts,
While Tirumālrāma, was in his camp
In the Coral Mountain great!

## THE EMBASSY OF AṄKATAṈ

Rama said to Aṉumaṉ now;
"Why do we delay the battle still?
Say, who shall we send as our envoy to him?"
And Aṉumaṉ replied: "My Lord! Aṅkataṉ,
Is the one to go to Rāvaṇa's court!"
Tirumāl then beckoned to Aṅkataṉ
And gently spoke to him: "O victorious son of Vāli"
Go you to Lanka as our ambassador.
And Aṅkataṉ, proud that he had been chosen
For this honour, went forthwith to Rāvaṇa.

### இராவணன் கொலுவிருக்கை

பயம்பெறத் தானே யிலங்கை யாம்பார ரசாளும்
பத்தணி முடியான் சித்திரப் பளிங்கு மண்டபத்தில்

மண்டபந் தனிலே நவரத்ன மாணிக்க மகுடம்
மலைபோ லிருக்கும் ஒருபத்து தலையா னிடத்தில்
அண்டரும் வெருவி ஏவல்செய் யரக்கரும் பணிய
அரம்பையர் கவரி வீசிட அமைச்சரும் வரவே
தொண்டர்கள் வந்து யெச்சரிக்கை சுவாமி பராக்கு
தொட்டிடும் பிரம்பால் வழிதள்ளிக் கட்டியங் கூறத்
தண்ட [73]ரளத்தார் புயத்தினில் தளதள தளென
தரித்த மந்திரவாள் கரத்தினில் பளபள பளென

பளபள பளென யிலங்கிய பருமணி மகுடம்
பருதியி னொளிபோ லெவர்களும் பயப்படத் தானே
அழகவன் கொலுவை எளிதினி லளவிடப் படுமோ
அரக்கர் குலத்தில வனொரு வன்றிற சாலி

### அங்கதன் இராவணனைக் காண வருதல்

புளகித் துடனே ராவணன் மகன்கொலு விருக்கப்
பொன்கவி ரூபனங் கதன்சிங் கத்தைப் போலே
தளதளப் புடனே திடுதிடு தடதட தடென
சகலரும் பார்க்க அங்கதன் பகலவன் தீர்க்கம்

146.20. பயம் பெற - மக்கள் அச்சம் கொள்ளும்படி. பத்தணி முடியான் - பத்து தலைகளிலும் கிரீடம் அணிந்த தலையுடையான். சித்திர பளிங்கு மண்டபம் - வேலைப்பாடுகள் மிகுந்த பளிங்கு மண்டபம். 146.21. ஒருபத்து தலையான் - பத்து தலைகளை உடையவன்; இராவணன். 146.22. அண்டர் - தேவர். வெருவி - அச்சம் கொண்டு. அரம்பையர் - தேவமகளிர். கவரி - வெண்சாமரம். 146.23. பராக்கு - கவனக்குறைவால் வேறிடத்தை நோக்குதல். வழிதள்ளி - வழியில் நிற்போரை அகற்றி விட்டு. கட்டியம் கூறி - இராவணன் வருகையை அறிவித்து. 146.24. தண்டரளத்தார் - குளிர்ச்சி பொருந்திய முத்துமாலை அணிந்தவர். புயம் - தோள். தளதளதளென - ஒளியைக் குறித்து வந்த ஒலிக்குறிப்புச்சொல். மந்திர வாள் - சிவனருளால் கிடைக்கப்பெற்ற இராவணன் கையிலுள்ள மந்திரவாள். 146.25. இலங்கிய - பிரகாசிக்கின்ற. பருமணி மகுடம் - பெரிய மணிகளால் பதிக்கப்பட்ட கிரீடம். பருதி - சூரியன். 146.26. அழகவன் - அழகனான இராவணன். கொலுவை - கொலு மண்டபத்தை. அவனொரு - இராவணன் ஒரு. திறசாலி - திறமை படைத்தவன். 146.27. புளகித்துடனே - மகிழ்ச்சியுடனே. பொன்கவி ரூபன் - பொன் போன்ற நிறத்தையுடைய குரங்கு வடிவினன். அங்கதன் - வாலியின் மகன்; இராமனால் தூதுவனாக அனுப்பப்பட்டவன். 146.28. பகலவன் - சூரியன். தீர்க்கம் - கதிர்களின் நீளம்.

---

73. ரழத்தார்.

## RĀVAṆA SEATED IN HIS *TARPĀR*

It were not easy to describe with ease
The splendour of the exalted *Tarpār*
In which the handsome emperor sat in state!
Amongst his race, he was the greatest!
Inspiring fear in his people;
In his beautiful, marble audience hall,
Enthroned sat the ruler of Laṅka
With ten heads diademed bright!
Gems of nine kinds like rubies flashed,
From his ten heads on his hill-like body;
The celestials scared of his might,
Performed his bidding; other demons
Were in plenty, to execute his command!
Celestial maidens fanned him on either side with chowries
As, escorted by his ministers, and heralds
Proclaiming his various titles, and clearing the way
For his approach with batons, he came!
His arms adorned with pearl chaplets cool,
Sparkled with a splendid sheen!
His hand held a fulgurant magic sword;
His gemmed crowns shone, bright as the sun's rays,
Presenting a picture awe-inspiring and splendiferous,

## AṄKATAṈ COMING TO SEE RAVAṆA

As proudly Rāvaṇa sat thus in state:
Like a lion in monkey form!
Golden Aṅkataṉ noisily entered the hall
Bright as the long-rayed sun, with every one
Looking on with amazement at his sudden entry!

பகலவன் போலே ராக்ஷச படைகளும் காண
பங்க மில்லா மலங்கத னங்கிருந் தானே
மிகமொழி பகர்வான் நீயார் வேந்தர்கள் சபையில்
வீற்றிருப் பறியா குரங்கு நீசரி யிருப்பிருந்தாய்

### அங்கதன் மொழி

புகல்வது செய்தி யேதுநீ பூருவ முரைப்பாய்
போர்ந்து நீநில்லடா நீவந்த தேது சொல்லடா
அகமதி யேண்டா ஏனடாநீ அதிக்கிரம் தாண்டா
அடர்வாலி பெற்றவன் அங்கதன் என்பேர் தானடா.

விருத்தம்

147. தானடா வுனைவாலிக் கட்டிப் போட்டுத்
தலையுடைய சகலபல மலைக ளோடும்
வானடா சுக்கிரீபன் தனக்கு மூத்த
வாலிபெற்ற மைந்தனடா வரிசை நாமம்
பானடா பயப்படும் அங்கத னடாநான்
பத்தினியைச் சிறைவிடுநீ பழுது செய்தால்
மீனடா கடல்கலக்கிப் பிடித்தாப் போலே
வெல்லுவான் ராமனுன்னைக் கொல்லு வானே.

### இராவணன் சாதுரிய மொழி

நடை

148. கொல்லுமென்று சொல்லிடவே கோபமெத்தத் தானெழும்பி
வெல்லவந்த கோமானென்றாய் வீரமுள்ள ராமனென்றாய்
கல்லுலகம் காவேரி கடலும்மலை யுள்ளமட்டும்
சொல்லுநிற்க அவனுடைய தோகையரைச் சிறையில்வைத்தேன்

146.29. பங்கமில்லாமல் - குறைவுமில்லாமல். 146.31. புகல்வது - கூறுவது. பூருவமுரைப்பாய் - உன் வரலாற்றைக் கூறுவாய். வந்ததேது - வந்த காரணமேது. 146.32. அகமதியேன் - மனத்தால் உன்னை மதிக்கமாட்டேன். அதிக்கிரம்தாண்டா - மிகுந்த இடையூறுகள் செய்பவன் தானடா. அடர் வாலி - வலிமையான வாலி. 147.1. உனை - உன்னை; இராவணனை. தலையுடைய - தலைகள் உடைந்து போகும்படி. சகல பல மலைகளோடும் - பல மலைகளில் இராவணன் தலை அடிபட்டு உடையும்படி. 147.2. வானடா - மிகுந்த வாழ்நாளைக் கொண்ட. பானடா - பானுவடா; சூரியனடா. பத்தினியை - சீதையை. சிறைவிடு - விடுதலை செய். பழுது - குற்றம் 148.1. மெத்த - அதிகமாகவே. தானெழும்பி - இராவணன் எழும்பி நின்று. 148.2. கோமான் - அரசன். 148.3. காவேரி - ஓர் ஆறு. 148.4. சொல்லுநிற்க - 'இராமன் மனைவியை இராவணன் கவர்ந்தான்' என்ற சொல் நிலைபெற.

Fearless he sat in the midst of the demons
In the hall: "Who are you that comes
Thus suddenly and sits as the equal of the kings?
What is your parentage? What message
Do you bring? Sirrah! stand up!
Speak, why you have come here? Sirrah!"
And Aṅkataṉ replied with equal scorn:
"I do not have any regard within me for you.
Sirrah! I am going to give you
Much trouble, Sirrah! My name is Aṅkataṉ!
Sirrah! I am the son of mighty Vāli"

Vāli[147] son I am; Vāli elder to long-lived Cukkirīvaṉ!
Vāli, `Sirrah!, who tied up in his tail,
All your heads, knocking them against
Many mountains! I am very like the Sun, Sirrah!
Aṅkataṉ I am! Straight release the chaste
Goddess; else, If you continue to do wrong
**Rama** will seize you like fish caught in the sea,
And slay you sure!

### RĀVAṆA'S DIPLOMATIC REPLY

148. As Aṅkataṉ declared that **Rama**
Would surely kill him, Rāvaṇa
Stood up in anger and said:
"You hail him as a king victorious,
Your valorous **Rama**! I have
Incarcerated his spouse, and the disgrace
That I have abducted his wife.
Will remain as long as the river Kāvēri,
The Mountains, the seas and the rocky earth

தோகையரைத் தோற்றவர்க்கோ தூதுவந்தா யங்கதனே
சாகாமல் சாகவைத்தேன் தணல்வாலில் கொளுத்திவிட்டேன்
போகமதி தெரியாமல் போன்றவன்றா னவனுடனே
ஏகாம லென்னிடத்தில் இருப்பாய்நீ யங்கதனே

அங்கதனே யுன்தகப்ப னண்ணனல்லோ எந்தனக்குச்
சங்கையுள்ள வாலிமகன் தமையன் மகனானதினால்
பங்கமில்லா திங்கிருப்பாய் பாலகனே மானிடர்பால்
அங்கிருக்க ஞாயமுண்டோ அங்கதனே யிங்கிருப்பாய்

பாயும்பெல வாலிதன்னைப் பகைத்தவர்கள் கொன்றபழி
நீயெடுக்க உதவிசெய்(வன் நினைத்தபடி முடித்திடலாம்
தாயமாட்டே னுன்சிறிய தகப்பனையும் கொன்றிடலாம்
மாயனைச்சுக் ரீபனையும் வதைத்துவிட்டா லுனக்குநன்றே

நன்றாமே உந்தனக்கு நாளையது செய்திடலாம்
குன்றாதே கன்றாதே கோடாதே வாடாதே
என்றானே ராவணனும் இதைக்கேட்டான் வாலிமகன்
ஒன்றான தலையசைத்து உரைத்திடுவா னங்கதனும்

### அங்கதன் மறுமொழி

அங்கதன் நான்நீ யழைத்தா லரக்கரிடஞ் சேர்வேனோ
பங்கமல்லோ நீயுரைத்தாய் பாவியடா தோசியடா
தங்கமென்ற சீதையரைத் தயங்கச்சிறை வைத்தவனே
சிங்கமகிழ் குட்டியது செந்நாயருகே சேருமோடா

148.5. தோகையரை - மனைவியை; சீதையை. 148.6. தணல் - நெருப்பு. வாலில் - அனுமன் வாலில். 148.7. போக மதி தெரியாமல் போன்றவன் - எப்படி பிழைக்க வேண்டும் என்ற அறிவு தெரியாமல் போனவன்; அனுமன். அவனுடனே - அனுமனுடனே. 148.8. ஏகாமல் - போகாமல். 148.9. உன் தகப்பன் - உன் தகப்பனாகிய வாலி. 148.10. சங்கையுள்ள - மதிப்புள்ள. தமையன் - அண்ணன். பங்கமில்லாது - எந்தக் குறையும் இல்லாமல். 148.12. ஞாயமுண்டோ - நீ குரங்கினம்; இராமனாதிகள் மானிடர்கள். ஆகவே நியாயமில்லை என்ற பொருளில். 148.13. பகைத்தவர்கள் கொன்ற பழி - இராமனால் பகைவனாகக் கருதப்பட்டு அவனால் கொல்லப்பட்ட பழி. 148.14. நீயெடுக்க - நீ தீர்க்க. 148.15. தாய மாட்டேன் - சொன்ன சொல்லிலிருந்து பின்வாங்க மாட்டேன். சிறிய தகப்பன்- அங்கதனின் சிறிய தகப்பன்; சுக்கிரீவன். 148.16. மாயனை - திருமாலை; இராமனை. வதைத்துவிட்டால் - கொன்று விட்டால். 148.18. குன்றாதே - மெலியாதே. கன்றாதே - மனதால் புண்படாதே. கோடாதே - கொண்ட கொள்கையில் மாறாதே. வாடாதே - வருந்தாதே, 148.22. பங்கமல்லோ - குற்றமல்லோ. தோசி - குற்றம் புரிந்தவன். 148.23. தங்கமென்ற சீதை - தங்கம் போலும் நிறத்தையுடைய சீதை. தயங்க - வருந்த. 148.24. சிங்கமகிழ் குட்டி - அங்கதனுக்கு உவமை. செந்நாய் இராவணனுக்கு உவமை.

Last! Is it for such a man,
That you have come as the envoy?
Your predecessor Anuman nearly died!
But I set fire, to his tail,
And drove him away:
I do not know where that witless monkey
Has gone now! But you, O Ankata!
Stay with me; for your father
Was my brother! As the son
Of honoured Vāli my dear boy,
Be with me, by my side, without any harm!
Is it fair that you stay on the other side?
I shall help you to wreak vengeance
On those enemies who killed your mighty father!
I won't go back on this commitment:
You can also kill Cukkirivan; if we
Were to slay Cukkirivan and RAma,
it will be all the better for you!
Tomorrow we shall do it!
Don't grieve (over your dead father)!
Do not hesitate or change
From this stand!' Thus Rāvana!

### ANKATA'S REPLY

Hearing this, the son of Vāli shaking
His single head, thus made reply!
"I am Ankata! Will I join the demons
Because you have invited me?
Blasphemy you have uttered, you sinner vile!
O you who imprisoned golden Sita,
Making her suffer thus; Will a lion's whelp
Join with a dhole, a brown dog?

அருகாக வந்துவிட்டா ராதிநா ராயணர்தான்
பெருமானை விட்டகன்று பேடிகிட்டக் கூடுவனோ
திருமாதை விடுவாயோ செருச்செயநீ வாராயோ
ஒருமாது தன்னாலே உயிரிழக்கப் போறாயோ

போறாயோ ராவணனே பொல்லாத புத்தியினால்
வீறாகயிந்த மொழிவீரனவன் சொன்ன போது
கூறான ராவணனும் கோபமுற்றுக் கண்சிவந்து
நீறாக முன்புவந்து நெருப்புவைத்த குரங்கதைப்போல்

குரங்கது போலிக்குரங்கைக் கொன்றிடத்தான் வேணுமென்றான்
வரங்கள் பெற்றராவணனே வாடாநீ மற்பொரவே
தரங்கெடுப்பே னுன்னையிப்போ சமர்த்தனென்றால் புறப்படடா
கரங்கள்கொட்டித் துடையுந்தட்டிக் கதித்தெழுந்தா னங்கதனும்.

### அங்கதன் போர் தொடுத்தல்

விருத்தம்

149. எழுந்தன னடர்ந்து சீறி யிறுக்கிவால் முறுக்கிக் கொண்டு
கொழுந்தழ லெரியும் போது கொதிநெய்யை வார்த்தாப் போல
விழுந்தரக் கரைத்தா னண்டம் வெடித்திட யிடித்தா னங்கே
அழுந்திடுக் கிடத்தள் ளாட அங்கத னமர்செய் தானே.

### அங்கதன் அரக்கர் பெரும் போர்

துடுக்கு

150. அங்கத னிப்படிச் சீறிடும் போது
அரக்கர் படைக ளடர்ந்து திரண்டு
வங்கி சமுதொடு வாள்குந்த மீட்டி
வல்லயஞ் சூலா யுதமெடுத் தனராம்

148.25. ஆதிநாராயணர் - திருமால்; இராமர். 148.26. கிட்ட - அருகில். 148.27. செருச் செய- போர்ச் செய்ய. 148.29. போறாயோ - உயிர் இழக்க போறாயோ. 148.30. வீறாக - வலிமையுடன். மொழி - கூற்று. வீரனவன் - வீரனான அங்கதன். 148.32. நீறாக - சாம்பலாகுவதற்காக. 148.34. மற்பொரவே - மற்போர் செய்யவே. 148.35. தரங்கெடுப்பேன்- இராவணன் என்ற பெயருக்குப் பின்னுள்ள மகிமையை அழிப்பேன். சமர்த்தன் - வலிமையாளன். 148.36. கதித்தெழுந்தான் - எழுச்சியோடு எழுந்தான். 149.1. இறுக்கி - உடம்பை வலிமையாக்கி. 149.2. தழல் - நெருப்பு. வார்த்தாப் போல - சொரிந்தால் போல. 149.3. அண்டம் - பூமி. 149.4. அழுந்திடுக்கிட - பூமியில் அரக்கர்கள் அழுந்தித் திடுக்கிட. அமர் - போர். 150.1. சீறிடும் போது - கோபத்தால் சீறிடும் போது. 150.2. வங்கிசம் - ஒரு படைக்கருவி. வாள், குந்தம், ஈட்டி, வல்லயம், சூலாயுதம் - சில போர்க்கருவிகளின் பெயர்கள்.

Āti Nārāyaṇa has come close to Laṅka!
Will I leave the Lord's side,
And join a coward, unmanly like you?
Are you not going to release divine Sita?
Or, are you going to face the battle?
Because of a woman do you want
To meet your end?"
Thus challenged by Aṅkataṉ in words
Fearless and bold, evil-minded Rāvaṇa
Grew wrathful; with inflamed eyes
He shouted; "This monkey is like the one
Which came earlier and set fire to Laṅka:
This must be killed at once!"
And Aṅkataṉ fearless arose, clapping his hands
And beating his thighs and cried:
"O Rāvaṇa, with your many boons!
Come Sirrah! Come, wrestle with me!
I will ruin your reputation!
Come fight with me,
If you are really so strong!"

### AṄKATAṈ BEGINS HIS FIGHT

149. Up he arose furious, toughening his limbs,
And twisting his tail, his anger kindled,
As when ghee is poured on raging flames!
He fell upon the demons
And battered them with a sound,
As if the earth were cracking!
He pushed them into the earth thereafter!

150. While Aṅkataṉ raged thus, the demon troops
Gathered together with weapons like *Vaṅkicam*[142], *Kuntam*
*Vaiyam*[143], spear, trident, and lances!

142. *Vaṅkicam* } - Ancient weapons of war
143. *Vaiyam*

சிங்கஞ் சினத்துச் செருச்செய் வதுபோல்
    திக்கெட்டுஞ் சுற்றி வளைந்துகொண் டாரே
எங்கும் நிரந்த படைகளைக் கண்டு
    ஏறிட்டுப் பார்த்தங் கதனுஞ் சிரித்து

ஏறிட்டுக் கூறிட்டு வீறிட்டுச் சீறி
    எட்டுத் திசையிலுந் தட்டு மறித்தான்
ஆறிட்ட சென்னி யரனை நினைத்து
    ஆதி நாராயணன் நாமந் துதித்து
ஏறிட்டுப் பாருபா ரென்று குதித்து
    வேந்த னிருந்த சபையி லரக்கர்
சீறிச் சினத்த வன்கை யாலடிக்கச்
    செத்தது கோடி யரக்கர் படைகள்

கோடி யரக்கரைக் கையா லொடித்தான்
    கோடி யரக்கரைக் காலா லுதைத்தான்
கோடி யரக்கரை வாலால் நெரித்தான்
    கோடி யரக்கரை வாயால் கடித்தான்
கோடி யரக்கர் சிரத்தைத் திருகிக்
    கோபித்து அண்டத் திலேவீட் டெறிய
ஓடி யரக்கரைச் சுற்றி வளைந்து
    ஒருத்தனைத் தூக்கி யொருத்தனைக் கொல்ல

ஒருத்தனைத் தூக்கி யொருத்தனைக் கொல்ல
    உக்கி யிராவணன் வெட்டிப் பயந்து
கரத்து நடுவிரல் மூக்கினி லெத்திக்
    கண்டா னதிசயங் கொண்டிருந் தானே

150.3. செரு - போர். திக்கெட்டும் - எட்டுத் திசைகளிலும். 150.5. தட்டுமறித்தான் - கிளியாந்தட்டு விளையாடும் சிறுவன்போல் அங்குமிங்கும் ஓடியாடி எதிரிகளுக்குப் பிடிபடாமல் நின்றான். 150.6. ஆறிட்ட சென்னி யரன் - கங்கை என்னும் நதியைத் தலையில் வைத்த சிவன். ஆதிநாராயணன் - திருமால்; இராமன். 150.7. ஏறிட்டு - நிமிர்ந்து. 150.8. சினத்தவன் - சினம் கொண்டவன்; அங்கதன். 150.11. சிரம்- தலை. அண்டத்திலே - வானத்திலே. 150.13. உக்கி - பயந்து. வெட்கி - வெட்கம் அடைந்து. 150.14. கரத்து நடுவிரல் மூக்கினில் எத்தி - வலது கை நடு விரலை மூக்கில் வைத்து; இது ஆச்சரியத்தைக் குறிக்கும் அபிநயம்.

Like a lion angrily he fought in directions eight,
With the troops encircling him!
All the while laughing at them,
Looking up at them, shouting at them,
Screeching at them, hissing at them,
He played with them as in a game with children!
Meditating on the Lord with the Ganga on his head.
And chanting the name of Ātinārāyaṇa
He leaped hither and thither, challenging them!
Myriads of demons died as he buffeted them
With his fists, in great wrath!
He broke them with his hands;
He kicked them;
A few millions, he squeezed with his mighty tail;
An equal number he bit with his teeth!
Countless numbers, he killed,
By twisting off their heads and throwing them
Up in the sky! Sometimes he would
Chase the foes and use one of them
As a missile to throw at another!
Seeing all this, Rāvaṇa grew
A little frightened and wondered at his might.
Placing his finger on the tip of his nose!

### அங்கதன் இராமனிடம் வருதல்

பரத்திப் பெரும்பண்ட யிப்படி மாயப்
பட்டணஞ் சுட்ட பகுத்தையும் பார்த்து
வரத்திரு மாய னிடத்திலே சென்று
மாலே சரணஞ் சரண மென்றானே

மாலே சரணஞ் சரண மரக்கன்
வாய்த்த யிலங்கையில் தூதுக்குப் போனேன்
தால மாதாவைச் சிறைவிடச் சொன்னேன்
தாயை விடாவிடில் போர்செயச் சொன்னேன்

கோல வரக்கன் என்னை வளைந்து
கோபித்த பேருக்குப் புத்தியுஞ் சொன்னேன்
நீல வண்ணநீ துணைசெய்து சொல்லி
நீங்காமல் சீக்கிரம் பாங்காக வந்தேன்

வந்தேன் திருவுளச் சம்மதி போலே
வாய்க்கிறே னுன்புத்தி கேட்கிறே னையா
அந்தக் கருத்தை யெல்லாரு மறிந்தார்
ஆதி விபீஷணன் றானு மறிந்தார்
சந்தேக மில்லை யினிச்சமர் செய்ய
தக்க விபீஷணரே யென்று செப்ப
கொந்தார் குழலா ரனுமார் துடைத்தட்டிக்
கோவிந்த னார்முன்பு சேவித்து நிற்க

### இராமரும் அவரது சேனை கூட்டமும் இலங்கையை வளைத்தல்

சேவித் திருபத்து நாலு தலைவரும்
சேர்ந்த எழுபது வானர வெள்ளமும்

150.15. பரத்தி - பரவலாக. பட்டணம் - இலங்கைப் பட்டணம். பகுத்தையும் - விதத்தையும். 150.16. திருமாயன் - திருமால்; இராமன். 150.17. அரக்கன் - இராவணன். 150.18. தாலமாதா - பூமிக்குரிய மாதா; சீதை. 150.19. கோல அரக்கன் - அழகுடைய அரக்கன். கோபித்த - சினத்த. 150.20. நீல வண்ண - நீல நிறத்தனே; இராமனே!. 150.21. திருவுளச் சம்மதி போலே - இராமரே! உங்கள் உள்ளத்தின் சம்மதத் தன்மையைப் போல. 150.24. கொந்தார் குழலசர் - நறுமணமுடைய பூங்கொத்தைச் சூடிய கூந்தலுடையான்; அனுமான். சேவித்து - வணங்கி. 150.25. வெள்ளம் - பெரும் எண்ணிக்கையைக் குறிக்கும் பெயர்.

## AṄKATAṈ RETURNS TO RAMA

As thus large numbers of demons died at his hands
Aṅkataṉ went round the city, admiring its layout,
And returned to Lord Rama saying: "Refuge O Lord!"
Refuge Lord Tirumāl! refuge! I went
To Laṅka of the demons, carrying your message:
I demanded the release of Sita:
Else, to be ready for war, I warned him.
When the handsome Rāvaṇa had me surrounded,
I gave him good advice telling him
That the blue-hued Lord alone is his help.
Then quickly I returned to your presence:
The rest is as my Lord pleases.
"All know now what is to be done:
Doubtless war is certain!" said Rama.
And Vipīsana also approved this.
Now Aṉumaṉ adorned with fragrant wreath,
Beating his thighs, stood before Kōvinta
Ready to commence the deployment of the forces.

## THE STRENGTH OF RAMA'S ARMY AND THE SIEGE OF LANKA FORT

Bowing at Rama's feet, the twentyfour commanders
Of the seventy *veḷḷam* Vāṉara armies

ஆவித் துணைதம்பி லட்சு மணனும்
அனுமானுஞ் சாம்புவ னங்கதன் நீலனும்
மேவிக் குமுதன் பனசன் வசந்தன்
வீரர்க ளெல்லாரும் சேகர மாகப்
பாவித்த பவள மலைதனை விட்டு
பச்சைமால் சேனை படர்ந்தங் கெழும்பி

எழும்பி யிலங்கா புரியி லடுத்து
எட்டுத் திசைக்கும் வளைந்து கொண்டாரே
ஒழுங்கான மூதூ ரிலங்கையின் கோட்டை
ஒருநாலு கோட்டையும் அடைகோட்டை யாகத்
தொழுந்திருந தம்பி யிளையவர் சென்று
துடருவி ரென்னவே படையணி வகுக்க
குழுந்த மொழிவீர னனுமானைப் பார்த்துக்
கோவிந்தன் வைத்த பதிவின் படிக்கே

பதினேழுரை வெள்ளஞ் சேனை வானரமும்
பனசனும் நீலன் குமுத னாதித்தன்
அதிகமாம் கீழக் கோட்டை வாசலிலே
ஆஜராய் நில்லென்று அணிவகுத் தனரே

இராம சேனை பிரிந்து போர்புரிய செல்லும் காட்சி

விதிகொண்ட தெக்கு கோட்டை வாசலிலே
வியன்பதி னேழுரை வெள்ளச் சேனையும்
குதிகொண்ட சாம்புவன் வசந்தன் குவிந்தன்
கூட்டமாய் நில்லென்று கொண்டணி வகுத்தார்
சேனையும் மேற்கே கவாந்தன் சுவந்தன்
சேர்ந்த பதினே ழுரையுடன் கூடித்

150.26. ஆவி - உயிர் போன்றவன்; இராமன். 150.30. அடைகோட்டையாக - வெளிப்போகப் பெறாத தடையையுடைய கோட்டையாக; இராவணன் கோட்டை வலிமையை உரைத்தவாறு. 150.31. குழுந்த - குளிர்ந்த. கோவிந்தன் - இராமன். பதிவின் படி - முறையின் படி. 150.33. பனசன், நீலன், குமுதன், ஆதித்தன் - இராமர் சேனையிலுள்ள முக்கிய படைத்தலைவர்கள் சிலரின் பெயர்கள். 150.34. கீழக்கோட்டை - கிழக்குக் கோட்டை. ஆஜராய் - தயாராய். 150.35. விதி - வலிமை. தெக்கு கோட்டை - தெற்குக் கோட்டை. 150.36. குதிகொண்ட - முயற்சி மிகுந்த. சாம்புவன், வசந்தன், குவிந்தன் - இராமரின் அணியிலுள்ள சிறந்த வீரர்கள். 150.37. மேற்கே - மேற்குக் கோட்டையிலே. கவாந்தன், சுவந்தன் - இராமர் சேனையிலுள்ள வீரர்கள்.

With brother Lakshmana, dear as life to Rāma,
Aṉumaṉ, Jāmpavāṉ, Ankataṉ, Nīlaṉ, Paṉacaṉ
Vacantaṉ and other chiefs left the encampment
Beside the Coral mountain! The armies
Of the jasper-hued Lord neared Lanka fort
And beseiged it in eight directions.
Realising the well-defended nature of the for
With its four portals, Lakshmana divided the forces
As ordered by Kōvinta! "Go you Aṉumaṉ of cool speech,
With seventeen and one half *veḷḷam* Vāṉara troops
Accompanied by Paṉacaṉ, Nīlaṉ Atittaṉ!
And Kumutaṉ and stand in front of the eastern gate
Ready to commence the attack, ordered Lakshmaṇa

## THE MARCHING OF RAMA'S ARMIES TO TAKE UP THEIR POSITIONS

At the entrance of the strongly-defended
Southern gate, stood in battle-formation
Enterprising Jāmpavāṉ with Vacantaṉ and Kōvintaṉ
With seventeen and one half *veḷḷam* troops;
While at the western portal stood an equal number

தானைகளும் மற்றுள்ள தலைவர னுமானும்
தரணி யளந்த மாலுமிளைய பெருமானாம்
ஆனைவடக்குக் கோட்டை வாசலது தன்னில்
அணிவகுத்தார் பள்ளிப் பாடமுஞ் செய்தார்
வான்மணி மாளிகை கொலுவு மணிமேடை
மண்டபம் அலங்கார மாகவே செய்து

செய்ய மணிமேடை தன்னில் வையகம்புகழச்
சித்திர விஸ்தாரமாகச் சிங்காரஞ் செய்து
வையக மளந்த மாலதிலெ ழுந்தருள
வானரம் பதினேழரை வெள்ளம் சூழத்
தையலைச் சிறைவைத்த சண்டாள தேர்ச்சி
சகோதர விபீஷணன் றானங் கிருந்தான்
ஐயனு மிப்படிப் படையணி வகுத்து
அழகான இளைய பெருமாளும் நின்றாரே.

### அதிகாயன் போருக்கு வருதல்

விருத்தம்

151. நின்றிலங்கைக் கோட்டையது வாசல் நாலும்
நெருங்கியே வானரங்கள் நிறைந்த போது
குன்றுதனைத் தோளேந்தி யெடுத்த வீரன்
கொடியரக்கன் முடியசைத்துக் கோபத் தோடே
அன்றதிகா யனைவருத்தி நீயே சென்று
அக்குரங்குப் படையையெல்லாம் மடித்துத் துரச்
சென்றோடும் படிதுரத்தா யெனவே சொல்லத்
திறப்பட்டா னதிகாயன் புறப்பட் டானே.

150.38. தரணி - உலகு. மால் - திருமால்; இராமன். இளையபெருமான் - இலட்சுமணன். 150.39. வாசல் - வாயில். பள்ளிப் பாடம் - போர்ப்பயிற்சி. 150.40. வான்மணி மாளிகை - வானத்தை முட்டுமளவும் செய்யப்பட்ட மாளிகை. கொலுவு - உல்லாச வீற்றிருப்பு மண்டபம். 150.41. சிங்காரம் - அழகு. 150.42. வையகம் அளந்த மால் - உலகத்தை அளந்த திருமால்; இராமன். 150.43. தையல் - பெண்; சீதை. சண்டாள தேர்ச்சி - கொடுஞ்செயல் செய்வதில் வல்லவன்; இராவணன். 150.44. ஐயன் - தலைவன்: இராமன். 151.1. வாசல் நாலும் - நான்கு திசைகளிலுமுள்ள கோட்டை வாசல். 151.2. குன்றுதனைத் தோளேந்தி யெடுத்த வீரன் - கைலாய மலையை பெயர்த்து எடுத்த வீரன்; இராவணன். முடியசைத்து - பத்து தலைகளையும் அசைத்து. 151.3. அதிகாயன் - இராவணன் மகனுள் ஒருவன். வருத்தி - வரச் செய்து. 151.4. துரத்தாய் - துரத்துவாய்.

Led by Kavantaṉ and Cuvantaṉ and others:
Now in the north gate stood
The rest of the armies with Aṉumaṉ and the Lord
Younger, to him who measured the earth,
And began their war-game in preparation
For the actual battle!
Upon a platform well-decorated with gems
Sat the Lord with the good Vipīṣaṇa!
Brother to the evil Rāvaṇa (expert in wicked deeds)
Who had imprisoned princess Sita
Thus did the Lord and handsome Lakshmaṇa
Stand prepared for the battle with the foes.

### ATIKĀYAṈ COMING TO FIGHT WITH THE BESIEGING ARMY

151. As the Vāṉara legions thronged the city-gates
The cruel demon who had once lifted
Mount Kailas with his arms,
His crowned head shaking in anger,
Summoned his son Atikāyaṉ and ordered him
"Go you and kill all these monkey regiments
Drive them away!"
Obeying his father's order,
In strength did Atikāyaṉ march towards the enemy.

*சிந்து*

152. *புறப்பட்டா னதிகாய னுஞ்சேனையும் பின்னமில் லாதவன்னப் புரவியும்*
*திறப்பட்டே கனதேருங் காலாளுமாய்த் தென்னரும் பலமந்திரி மார்களும்*
*சிறப்புசேர்ந்த கொடிகளி டக்கயம் செங்கதிர்ப் பிரகாசத்தை வெல்லவே*
*இறப்புக்காய் பதினாயிரங் கோடி இரக்கமற்ற அரக்கருங் கோடியே*

*கோடிசேனைப் புறப்படும் போதினில் கொற்றவ னதிகாயனும் போகையில்*
*ஆடித்தீர்த்தங் களாடிக் களித்து அங்கத்தில் கதம்பங் களும்பூசி*
*நீடித்தானல்ல முரதங்கள் மூட்டிரெட்டின வஸ்திரம் நிலையங்கி பூட்டி*
*சூடியா பரணப் புரைபுக்கிச் சொர்னவர்னப் பணிகளிட் டானே*

*இட்டமான தோர்அப்பனைக் கண்டுதான் எந்தையே பெற்றதந்தையே*
*சுவாமியே*
*கட்டழகன் இலக்கண தீரனும் கக்கிச மாகியஅக்ஷய குமாரனும்*
*பட்டசேனை பழியெடுப்பேன் நானே பாரமந்திர வாள்கையில் தாருங்கள்*
*வட்டமிட்டு அரைநாழிகை தன்னில் வானரத்தைத் துரத்துவே னென்றான்*

**இராவணன் வாழ்த்தி வாள்கொடுத்தல்**

*துரத்துவே னென்றுரைத்த மகனைத் துங்கமாமுடி மன்னன் மகிழ்ந்து*
*வரத்தினால் வந்தமந்திர வாளை வலக்கையா லவன்வாழ்த்திக் கொடுத்து*
*நிலத்தில்சேனை முகத்திலே சென்று நீவெல்வா யென்று பூஷணமிட்டு*
*கரத்தினால் அபயஸ்தங் கொடுத்துக் காவியே சொல்லியேவிய போதே*

152.2. பின்னமில்லாத - குறைவில்லாத. வன்னப்புரவி - அழகிய குதிரை. 152.2. திறப்பட்டே - பலப்பட்டே. கனதேரும் - மிகுதியான தேர்ப்படையும். தென்னரும் - பகைவரும். 152.3. கொடிகளிட - கொடிகளுடைய. கயம் - பெருமை. செங்கதிர் - சூரியனின் சிவந்த கதிர். வெல்லவே - மறைக்கவே. 152.4. இறப்புக்காய் - இராமனுடைய படைகளோடு போரிட்டு இறந்து போவதற்காய். 152.6. அங்கத்தில் - உடம்பில். கதம்பம் - வாசனைப் பொடி. 152.7. நீடித்தான- செழுமையான. நல்ல - சிறந்த. முரதங்கள் - பாஞ்ச சன்னியங்கள்; சங்குகள். மூட்டி - ஒலிக்கச் செய்து. ரெட்டின வஸ்திரம் - ரெத்தின ஆடை. நிலையங்கி - உடல் மறைக்கும் சட்டை. பூட்டி - அணிந்து. 152.8. புரைபுக்கி - குற்றம் நீக்கி. சொர்னவர்னப் பணி - பொன்னாலாகிய ஆபரணம். 152.9. அப்பன் - அதிகாயன் தந்தை; இராவணன். 152.10. கக்கிசமாகிய - முயற்சியில் மிகுந்த. இலக்கணதீரன், அக்ஷயகுமாரன்- இராவணன் மைந்தர்கள்; அனுமனால் கொல்லப்பட்டவர்கள். 152.11. பாரமந்திர வாள் - வலிமையான மந்திர வாள். 152.12. வட்டமிட்டு - சுற்றிச் சுழன்று. 152.13. துங்கமாமுடி மன்னன் - வெற்றி பொருந்திய பெரிய கிரீடத்தை அணிந்த மன்னன்; இராவணன். 152.15. சேனை முகம் - படையின் முன்பகுதி. பூஷணம் - ஆபரணம். 152.16. அபயஸ்தம் - அச்சம் தவிர்க்கும்படி அமைக்கும் கை அடையாளம். காவியே சொல்லி - வீரமொழிகளையே கூறி.

152. Atikāyaṉ began his march riding a blameless steed,
Accompanied by chariots, and the infantrymen
In strength, with other chieftains and ministers,
While the noble pennons and flags of the regiments
Shone brighter than the red sun's rays:
And myriads of these pitiless demons
Marched only to their certain death!
When the innumerable forces of Atikāyaṉ stood ready,
The commander prepared himself for the engagement,
Cheerfully bathing in holy springs,
Daubing fragrant powders on his body,
With plump conches resounding;
Garments sparkling with rubies, covered his body,
Besides a coat adorned with ornaments of pure gold!
Going up to his father, to get his blessings
Before the battle, he said to him;
"My Lord! my Sire! the deaths of handsome Lakkaṇaṉ
And enterprising Akṣayakumāraṉ and their regiments,
I shall avenge!
Give me your powerful, magic sword:
In the space of half a *nāḻikai*
I shall drive away these monkeys."

**RĀVAṆA BLESSING HIM AND GIVING HIM THE SWORD**

Pleased with his son, who swore
To drive away the enemies, Rāvaṇa (With victorious crown)
Gave the magic sword obtained as a boon,
To his son, blessing him;
"Go you in the vanguard of your troops!"
You are sure to conquer!
Adorning him with jewels,
He extended his hands before his son as a mark of blessing
And protection, and encouraged him with brave words.

### வண்டோதரி அறிவுரை

போது வீரியமாகத் துணிந்து புத்தியாய்ப் பெற்றதாய் கிட்டவந்தாள்
மாது வண்டோ தரிதடுமாறி மகனைக் கூட்டி மடியிலிருத்தி
ஏதடா தம்பிநீ படைபோவது இந்தப்போருக்கு நீசெல்ல வேண்டாம்
சீதை மாதைச்சிறை வைத்ததாலே சொல்லுமோ செயம்வெல்லுமோ தம்பி

தம்பியான் புத்திசொல்ல வுமுங்கள் தகப்பனாரதைத் தட்டி விட்டாரே
வெம்பியுங் கள்சிறிய தகப்பன் விபீஷணர் சொல்வெறுத்து விட்டாரே
அம்பிலுங் கொடிதாக விபீஷணன் அந்த ராமரிடம் புகுந்தானே
கும்பிநொந்து துடிக்குது மைந்தா குடிகெட்டேன் படைநீ போகவேண்டாம்

### அதிகாயனின் பதிலுரை

வேண்டா மென்றுவுரைத்த மாதாவே வேந்தர் வரத்தை மறுப்பதோநீதி
ஆண்டவன் கயிலாசத் தில்புக்கி அந்த நாள்பெற்ற மந்திர வாளுண்டு
தூண்டவேண்டி யிருக்குது தாயே தூள்படுத்தியே வானரச் சேனையை
மூண்டமானி டர்தம்மையும் வெல்ல முனைப்பதாயனுப் பென்று தொழுதான்

### தாயார் சம்மதிக்க அதிகாயன் செல்லுதல்

தொழுதபால னைக்கண்டு தள்ளாடிச் சொந்தமாய்ப் பெற்றதந்தை கெடுத்தால்
அழுதுயான் சலித்தால் விதிபோமோ ஆகட்டுந்தம்பி போய்வாரு மென்றார்
எழுதுஞ் சித்திரவடி வதிகாயன் ஏகினான் தேரினிலே றும்போது
பழுதுகாகந் தடுக்கவும் பின்னோர் பல்லிபட்ட மரத்துற்றுச் சொல்ல
பல்லிசொல் லவும்காகந் தடுக்கவும் பார்த்திடாமற் படந்து தேரேறி
எல்லையற்ற துரக பதாதி எட்டுக்கோடி யரக்கரு மாகச்

152.17. வீரியமாக - துடிப்பாக. கிட்ட - அருகில். 152.20. சொல்லுமோ செயம் - 'வெற்றி' என்ற சொல் நம்மை நாடுமோ? நாடாது என்ற பொருளில். 152.21. தம்பியான் - இராவணன் தம்பி; விபீஷணன். தட்டி விட்டாரே - ஏற்க வில்லையே. 152.22. வெம்பி - மனம் வாடி. 152.24. கும்பி - அடிவயறு. நொந்து துடிக்குது - வருந்தித் துடிக்கிறது. குடி கெட்டேன் - நீ போனால் இறப்பாய் என்ற பொருளில் குடி கெட்டேன் என்றவாறு. 152.25. வேந்தர் - இராவணர். வரம் - ஆணை. 152.26 புக்கி - புகுந்து பெற்ற. 152.27. தூண்ட வேண்டி இருக்குது - வாளின் கூர்மையைத் தூண்டிப் பார்க்க வேண்டி இருக்கிறது. 152.28. மூண்ட - போருக்குப் பொருந்தி வந்த. முனைப்பதாய் அனுப்பு - முன்நின்று அனுப்பு. 152.30. விதி போமோ - விதி விலகிப் போகுமோ. 152.31. சித்திரவடிவதிகாயன் - அழகிய வடிவத்தைக் கொண்ட அதிகாயன். 152.32. பழுதுகாகம் - குற்றம் தரும் காக்கை. பல்லி பட்ட மரத்துற்றுச் சொல்ல - பல்லி மரத்தில் பொருந்தியிருந்து தீயச்சொல்லைக் கூற. 152.33. படந்து - விரைந்து. 152.34. துரக பதாதி - குதிரை மற்றும் காலாள் படை.

## THE ADVICE OF MAṆṬOTARI

As Rāvaṇa was sending his son
With words of encouragement to join battle
With the enemy forces, she who gave birth to him
Queen Maṇṭōtari, rushed up;
And embracing her son she appealed
To him: "Dear boy! How can you go to fight thus?
Please do not go to the field,
How can anyone get victory,
After imprisoning princess Sita?
Your father, he dismissed the advice
Given by his brother (Vipīṣaṇa);
And your uncle disillusioned with your father,
Has left his side to join with **Rama**
This is deadlier far, than an arrow;
Dear son! My heart is stricken sore;
I suffer in anguish! we are all ruined!
If you go to battle, I will be lost;
Do not go!"

## ATIKĀYAṆ'S REPLY

"O mother who prevents me from going to war;
Is it fair on my part
To refuse the king's orders?
The magic sword is there for me to use,
Which my Lord received from Siva at Kailas!
It is time now to test its sharpness, mother!
I shall smash to smithereens the Vāṉara troops;
I shall defeat the men who lead them!
Mother, cheerfully give farewell to me
I pray you!"

செல்லவே கீழ்க்கோட்டை யின்வாசல் திறந்திடக் கண்டுவா னரசேனை
கல்லினால் மலைகொண் டெறிந்தாரது கண்டுமே யதிகாயன் பொருதான்

### இலட்சுமணன் - அதிகாயன் போர்

பொருதபோது திருமா லறிந்து புத்திசே ரிளையோனை வருத்தி
விருதுகூறி வந்தானி வனென்ன விபீஷண ரதிகாய னென்றோத

தருவுலாவிய தம்பி யிசைந்து சமர்செய் வீரென்று கல்ப்பனையாகப்
பெருமைகண் டிளையோனும் மகிழ்ந்து பின்சொல்லாமல் புறப்படு வாராம்

வாரமாகிய அண்ணரைப் போற்றி மாருதி யங்கதனையுங் கூட்டித்
தீரனார்கீழ்க் கோட்டையில் வந்து சேனைபோர் செய்திறத்தையுங் கண்டு
தாரணித் திருமால் தம்பிநிற்கத் தக்கராக்ஷசர் சேனையின் மேலே
வீரவாள னுமானுஞ் சினத்து வெற்றி மாமலைபத தெறிந்தானே

பத்துமாமலை ராக்ஷசர் பேரில் பட்டபோதுப் பதறிச் சிதறிச்
செத்துராக்ஷ சரத்து முடிந்து சடலமா னதுகண்டதி காயன்
ஒற்றையாய்த் தனித்தே யடர்ந்தோடி ஓடினா னனுமானைத் துரத்திக்
குத்தினானதை வானரங் கண்டு குலைந்து சேனையுலைந்து வாய்விண்டு
உலைந்த செய்தியிளை யோனறிந்து ஓடும்வானரச் சேனையைக் கூட்டி
மலைந்தி டாதனுமானை யுந்தேற்றி மாய்வன் றிருநாமமும் போற்றிக்
கலைந்த வானரச்சேனை யைவாட்டும் காயனை அதிகாயனை நோக்கித்
துலைந்து மாளத்துணிந்து வந்தாயே துட்டனே யெந்தன்கிட்ட வாவென்றார்

152.35. கீழ்க்கோட்டை - கிழக்குத் திசையிலுள்ள கோட்டை. 152.36. கல்லினால் மலை - மலையினையே கல்லாகக் கொண்டு. 152.37. வருத்தி - வரச்செய்து. 152.38. விருது கூறி - வெற்றி வார்த்தைகள் கூறி. வந்தான் இவன் என்ன - வந்தவனாகிய இவன் யார் என இராமன் விப்ஷணனிடம் வினவ. ஓத - கூற. 152.39. தருவுலாவிய - அழகு நிறைந்த. இசைந்து - பொருந்தி. கல்ப்பனை - கற்பனை; கட்டளை; இராமன் கட்டளை. 152.40. பின் சொல்லாமல் - எதுவும் கூறாமல். 152.41. வாரமாகிய அண்ணர் - அன்பு மிகுந்த அண்ணன்; இராமன். மாருதி - அனுமன். அங்கதன் - வாலியின் மகன். 152.42. தீரனார் - வலிமையாளர். கீழ்க் கோட்டை - கிழக்குக் கோட்டை. 152.43. தாரணித் திருமால் - உலகத்தை ஆளும் திருமால்; இராமன். தம்பி - இலட்சுமணன். 152.44. வெற்றி மாமலை - வெற்றியைத் தரும் பெரிய மலைகள். பத்து எறிந்தானே - பத்து மலைகளைப் பிடுங்கி எறிந்தானே. 152.45. பேரில் - மீதில். பட்டபோது - விழுந்த பொழுது. 152.46. ராக்ஷசரத்து - ராட்சச சேனை. முடிந்து - மாண்டு. 152.47. ஒற்றையாய் - தனித்த ஆளாய். அடர்ந்தோடி - நெருக்கமாய் ஓடி. 152.48. வாய்விண்டு - வாய்விட்டு அலறி. 152.50. மலைந்திடாத - போர் செய்யாத. தேற்றி - உற்சாகப்படுத்தி. 152.51. காயன் - அதிகாயன். 152.52. துலைந்து - தொலைந்து; அழிந்து. துட்டனே - துஷ்டனே. கிட்ட - அருகில்.

Seeing her son praying for her permission,
Maṇṭōtari said: "If the father who sired you
Were bent on ruining you, of what use
Is all my weeping: can fate be avoided?
All right, my dear boy! go you to battle;
May you fare well!"
And when Atikāyaṉ, handsome as a painted picture
Climbed into his war-chariot,
The inauspicious crow did obstruct, and the lizard,
From its tree did clack, presaging evil!
But unworried about either omen,
With limitless forces of horses and soldiers
He went through the Eastern portal to battle
With the Vāṉara troops, which threw
Hillocks themselves as missiles at him!

## THE BATTLE BETWEEN LAKSHMAṆA AND ATIKĀYAṈ

When Atikāyaṉ emerged from the eastern gate
The Lord sent for the wise younger brother
And enquired: "Who is this who comes,
With so many victorious challenges?"
And Vipīṣaṇa said, it was Atikāyaṉ
A son of Rāvaṇa. Rama then ordered
His handsome brother, to engage Atikāyaṉ
In battle. Accepting this honour, Lakshmaṇa
Without a word started for the battle field ,
Bowing to his loving brother **Rama,**
And taking Māruti and Aṅkataṉ with him,
Reached the eastern gate;
As Lakshmaṇa younger to the Lord of the Earth, Tirumāl,
Stood watching the conflict between the armies,
Heroic Aṉumaṉ, angrily uprooted ten hills,
Which, falling upon the demon-troops,
Smashed them; on seeing which Atikāyaṉ,

*வாவென்றா ரதிகாயனுங் கண்டு மந்திரவா ளையெடுத்துச் சுழற்றி*
*நீவந்தா யுன்சமர்த்து மென்வீரமும் நீணிலந்தனில் காணுவ மென்ன*
*கோபந்தான் கொண்டிளைய பெருமாள் குதித்துச் சாடிமிதித்து வில்லேந்திச்*
*சாபந்தான் வளைத்துச் சரந்தொட்டிட தப்பினா னதிகாய னொளித்தான்*

### அதிகாயன் மாளுதல்

*ஒளித்துப் போகவனுமனுஞ்சாடி ஓடிப்போ மதிகாய னைக்கட்டி*
*நெளித்துத் தானிருபேரும் மல்லாடி நிற்கும்போது யிலக்குவன் சாடிக்*
*கழித்துப்போர் செய்தனு மனைத்தள்ளிக் கணையைத் தானதிகாயன் மேலேவ*
*விழித்துமூடு முன்னேயதி காயனும் விட்டவாளியில் பட்டுவிட் டானே.*

### மகன் இறப்பை இராவணன், வண்டோதரி அறிதல்

*விருத்தம்*

153. *பட்டுவிட் டானதியா னிளையோன் கையால்*
*பட்டசெய்தி பத்துமுடி யரக்கன் கேட்டான்*
*கெட்டுவிட்டோ மென்றுவண்டோ தரியுங் கேட்டாள்*
*கெடுதிசெய்தே யென்மகனைக் கெடுத்தா யென்றாள்*
*தட்டழிந்து உடல்பதறி யரக்க னோடே*
*தாரமுமா யதிகாயன் சமரில் வீழ்ந்த*
*பொட்டலிலே யிருபேரும் வந்து கண்டு*
*புலம்புவார் புழுங்கிமனங் கலங்கு வாரே.*

### வண்டோதரி புலம்பல்

*நடை*

154. *வாரணத்தின் கையாலே வந்துசிங்கம் பட்டாப்போல்*
*பூரணமா யென்மகனே பொருதலுத்து மாண்டாயோ*
*மாண்டாயோ என்மகனே வலுவுடைய அதிகாயா*
*வேண்டாமென் றுரைத்தேனே வெல்வனென்றே வந்தாயே*

152.54. சமர்த்து - வீரம். நீணிலம் - பரந்த உலகம். காணுவம் - காண்போம். 152.55. சாடி - தாண்டி. 152.56. சாபந்தான் - வில்லைத்தான். சரம் - அம்பு. தொட்டிட - விட்டிட. தப்பினான் - தப்பிச் சென்றான். ஒளித்தான் - மறைந்து கொண்டான். 152.57. ஓடிப்போம் - ஓடிப் போகும். 152.58. நெளிந்து - உடலை நெளித்து. மல்லாடி - போர்செய்து. இலக்குவன்- இலட்சுமணன். 152.60. விழித்து மூடு முன்னே - கண்ணைத் திறந்து மூடுமுன்னே. பட்டு விட்டானே - இறந்து விட்டானே. 153.1. இளையோன் - இலட்சுமணன். 153.3. தட்டழிந்து- உடல் தடுமாறி. தாரம் - அதிகாயன் மனைவி. 153.4. பொட்டல் - போர்க்களம். இருபேரும்- அதிகாயன் தாயும், மனைவியும். 154.1. வாரணம் - யானை. 154.2. பொருதலுத்து - பொருதலுற்று; போர் செய்து. 154.3. வலுவுடைய - வலிமையுடைய.

All by himself ran after Anuman
And pummelled him with his fist:
The Vānara armies began to scatter;
On seeing which, Lakshmana stemmed
Their retreat, comforting dazed Anuman;
And praising the name of the Lord
And calling out to Atikāyan who was
Harassing the Vānaras, challenged him thus;
"O wicked demon! come near me
And fight! boldly you have come,
Only to lose your life!"
And Atikāyan wielding his magic sword,
Said: "So you have come! Good! Let us see
Your valour and mine! this world
Will know who is greater!"
Angrily the younger Lord leapt up
And lifting his bow and bending it,
Made to shoot his arrows at him,
When Atikāyan hit himself in fear.

### THE DEATH OF ATIKĀYAN

Running after the fleeing demon
Anuman jumped upon him,
And wrestled with him; Lakshmana now
Thrust aside Anuman and engaged
Atikāyan himself in battle.
At last by an arrow shot by him
Atikāyan fell dead, before the winking of an eye.

### RĀVANA AND MANTŌTARI COMING TO KNOW OF ATIKĀYAN'S DEATH

153. The ten-headed demon chief
Came to know that Atikāyan had fallen

தாயிருக்க நீயிறக்கத் தகப்பன்மெத்த மதிகலங்க
ஞாயமுண்டோ வென்மகனே நாடழிந்து போகுமடே

போகுதடே என்வாணாள் புத்திமெத்த கலங்குதடே
நோகுதடே எனதுசிந்தை நோக்கிமுகம் பாராயோ

பாராளு மென்மகனே பணிமகுடஞ் சூடாமல்
போராடி யிறந்தாயே புத்திரனை யிழந்தோமே

**தம்பிகள் இறந்தது அறிந்து இந்திரசித்து புலம்பல்**

புத்திரரை யிழந்த தென்றும் போரரக்கர் மடித்ததென்றும்
வெற்றியுள்ள யிலங்கைசுற்றி வேடர்படை யிருந்ததென்றும்

இருக்குதென்று தூதர்சொல்ல இந்திரசித்த றிந்தானே
மருக்கமழும் மேகம்விட்டு வந்தானே இந்திரசித்து

இந்திரசித் தோடிவந்து இளையதம்பி படுகளத்தில்
எந்துணையே அதிகாயா லக்கணனே அக்ஷயனே

அக்ஷயனே நீங்கள்பட அண்ணன் தனித்திருந்தேனே
கக்கிசமாய் தாய்தந்தைக்கே [74]கர்மக்கடன் கழியாமல்

கழியாமல் நீங்களெல்லாம் காலனெம னூர்புகுந்தால்
வழியாமோ யெந்தனுக்கு மறுதுணையுங் காணேனே

காணேனே தம்பியரே கட்டழகா பொட்டழகா
பூணேனாரப் பணியும் பொக்கிக்ஷமார் கைக்கொளுவார்

154.5. மெத்த - மிகுதியாக. மதி - அறிவு. 154.6. அடே - அன்பாய்த் தன் மகனை அழைத்த சொல். 154.8. நோகுதடே - மனம் வருந்துகிறதடே. 154.9. பணி மகுடம் - வேலைப்பாடு அமைந்த கிரீடம். 154.11. போரரக்கர் - போர் செய்வதில் வல்ல அரக்கர். 154.12. வேடர்படை - வேட்டைத் தொழிலில் சிறந்தோர் படை; இராமர் படையைக் குறித்தது. 154.14. மருக்கமழும் - வாசனை வீசும். 154.15. படுகளத்தில் - போர்க்களம். 154.17. பட - இறந்து போக. 154.18. கக்கிசமாய் - பிரயாசையுடன். கர்மக்கடன் - அந்திமக்கடன்; சாவுச் சடங்கு. 154.19. எமனூர் - எமனின் நாடு. 154.20. வழியாமோ யெந்தனக்கு - எனக்கு உற்ற துணை இனி என்ன இருக்கிறது? என்ற பொருளில். 154.22. பூணேன் ஆரப்பணியும் - நகைகளையும் அணிய மாட்டேன். பொக்கிஷம் - கருவறை; பொருட்களைச் சேமித்து வைத்திருக்கும் அறை.

74. கற்ம.

At Lakshmaṇa's hands; Maṇṭōtari
Also coming to know about it,
She cried; "Ruined we are! you have
Destroyed my son," she accused Rāvaṇa.
Trembling all over and agitated,
The demon and his wife went to the battlefield,
Where they saw their slain son:
And both did lament, heart-sore and grieving.

### MAṆṬŌTARI'S LAMENT

154. "O my darling son! Have you fought
So well only to die, like a lion
Killed by an elephant? O my
Mighty Atikāya! Are you dead?
Did I not tell you not to go to war?
But you were so sure of victory!
Is it fair that you should die,
When your mother is alive,
And leaving your father so agitated.
My boy! I am sore-stricken and crazed
With grief! The days of my life
Are nearing the end. Won't you look at me,
My son? My mind is agonised;
O my son, born to rule the earth!
You have died in battle, without wearing
The crown well-wrought!"

### INTIRAJIT LAMENTING THE DEATH OF HIS YOUNGER BROTHERS

Coming to know from the messengers
About the death of Rāvana's sons,
And their warriors, and the encirclement
Of Lanka by the foes,
Intirajit leaving his fragrant abode
Among the clouds, ran up to the battle field,
And lamented the death of his dear brothers;

கைக்கொளுமோ ராஜாக்கள் காவலர்கள் கணிப்பாரே
மெய்க்கொள்ளுமோ தம்பியரே வேடர்கையால் பட்டீரே

வேடர்கையால் நீங்கள்பட விதியோவென் தம்பியரே
ஆடவரே யென்றுசொல்லி அழுதானிந்திர செயித்து

செயித்துவிட்ட மானிடரைச் சணப்பொழுதில் முடிப்பனென்றே
வயிற்றிலிடித் தழுதுகொண்டு மடிந்தவரை யெடுத்தடக்கி

எடுத்தடக்கி மாளிகையில் ராவணனார் கிட்டவந்தான்
அடுக்கவந்து துயரமுற்றா னமைச்சர்களும் பணிந்துநின்றார்

இராவணன் மந்திராலோசனை

நின்றனரே மந்திரிமார் நீங்களெல்லா மிப்பொழுது
சென்றவதி காயனுயிர் செயித்தவனைக் கொல்வதற்குக்

கொல்வதற்கு நாளைப்படை கூடுவதார் செப்புமென்றார்
வெல்வதற்கு நாளடுத்து வேடரையும் கொன்றுழக்கி

கொன்றுழக்கித் தம்பியரைக் கொன்றபழி நானெடுப்பேன்
என்றுசொன்னா னிந்திரசித்து ராவணனும் சம்மதித்தான்

சம்மதித்தார் மந்திரிமார் சமர்த்தர்களு மொத்திருந்தார்
வெம்மையுற்ற கதிரவனும் மேல்கடலில் போய்மறைந்தான்

போய்மறைந் தான்கதிரவனும் புத்தியுள்ள யிளையவனும்
மாயவனார் முன்புசென்று வணங்கியடி பணிந்தாரே

தான்பணிந்த யிளையவரே சமர்நடந்த செய்தியென்ன
ஊன்பொதிந்த வதிகாயன் உடன்படைகள் வெகுகோடி

வெகுகோடி படைகளெல்லாம் வென்றுகொன்றான் வாளனுமான்
தகுதியதி காயனைநான் சங்கரித்தே வந்தேனென்றார்.

154.23. கைக்கொளுமோ - பிற அரசர்கள் நமது செல்வத்தைக் கைக்கொள்ளுவார்களோ. காவலர்கள் - வீரர்கள். கணிப்பாரே - நம் வீரம் குறித்து நினைப்பாரே. 154.24. மெய்க்கொள்ளுமோ - உங்கள் உடம்புதான் எதிரிகள் அம்புக்கு இடம் கொடுத்து ஏற்றுக் கொள்ளுமோ; அதிகாயன் மற்றும் முன்பு அனுமனால் இறந்த இலக்கணன், அட்சயகுமாரன் போன்றோர் உடலால் வலிமையாளர் என்ற குறிப்பில். 154.27. சணப் பொழுதில் - நிமிட நேரத்தில். முடிப்பன் - கொன்று முடிப்பேன். 154.30. அடுக்க வந்து - அருகில் வந்து. 154.32. அதிகாயன் உயிர் செயித்தவன் - அதிகாயனைக் கொன்றவன்; இலட்சுமணன். 154.33. ஆர் - யார். 154.34. அடுத்து - சென்று. கொன்றுழக்கி - கொன்று இல்லாமலாக்கி. 154.37. சமர்த்தர் - திறமை சாலிகள்.

"My companion and brother Atikāyan,
Lakkaṇa and Akṣaya! I am left alone
While all of you are dead!
Instead of living to perform obsequies
For our parents properly,
If all of you were to go to Yama's world,
Who is there to keep company with me?
None there is, O my brothers handsome and good looking!
I shall not wear ornaments hereafter;
Who is there to take our coffered wealth?
Will other kings take over our treasures?
What will our soldiers think about our valour?
How could your bodies receive the darts
Of these hunters from the woods?
Is it fate that you should die at their hands?"
Thus weeping Intirajit swore to himself:
"In a moment I shall kill the men
Who defeated my brother!" Beating his breast,
In grief, and carrying the slain heroes,
He came to Rāvaṇa in his palace,
Where stood all the ministers tongue-tied
With sorrow, by the side of Rāvaṇa.

## RĀVAṆA TAKES COUNSEL WITH HIS MINISTERS

As the ministers stood round him, Rāvaṇa
Said to them: "All of you are assembled here
To discuss who should be sent as commander
Of our forces to take the life of him
Who killed my son Atikāyan."
'I am here' said Intirajit, 'to vanquish
Our foes, slay them all and avenge the
Death of my brothers.' And Rāvaṇa agreed.
The decision was approved by all the ministers
And other leaders assembled there.

## இராமன் பெற்ற வெற்றியால் மகிழ்தல்

விருத்தம்

155. வந்தேனென் றிளையோன் செப்ப மாதவன் மகிழ்ந்து கொண்டார்
சிந்தைமா ளிகையில் ராமர் செயமுடன் பள்ளி கொண்டார்
அந்தநாட் கழித்துப் பின்னா ளாதவ னுதிக்கு முன்னே
கந்தனார் பிதாவும் நித்ய கடன்முறை கழித்திட் டாரே.

## இந்திரசித்து போருக்குத் தயாராதல்

156. திட்டமா யரக்கன் றானும் சினத்துடன் சேனை கூட்டி
வட்டமா னிடரை வென்று வருவது நானே யென்றார்
பட்டணத் தலைவ மாரும் படைத்திர ளமைச்சர் சேனை
திட்டமா யரக்கி வண்டோ திரிஅரக் கனைக்கண் டாளே.

## வண்டோதரியின் மறுப்பு மொழிகள்

157. கண்டெடுந்தன் கணவா கேளு கன்னியைச் சிறைவைத் தாயே
மண்டலத் தரசர் போரில் மக்களு மிறந்திட் டாரே
கண்டவர் நகைப்பார் நீதான் கடுஞ்சமர்க் கேக வேண்டாம்
அண்டர்கோ னறியச் சொன்னே னறிந்துகொள் ளரசர் கோவே.

## இந்திரசித்துப் புறப்படல்

158. அரசர்கோ விதனைக் கேட்டு அவன்பெறும் மகனைப் பார்த்து
வரவுமா னிடரை வெல்ல வருமிந்திர சித்தை யேவ
திரைகடல் போலவே சேனை தேர்கரி பரிகள் சூழ
முரசொலி யதிர வாச்சியம் முழங்கிடப் புறப்பட் டானே.

## இந்திரசித்தை அனுமனும் இலட்சுமணனும் எதிர்த்தல்

நடை

159. முழங்கித் திரள்திரளாய் முப்பத்து முக்கோடி யரக்கர்வர
தளங்கள் செருமி வரஉயர்சங்கீத ராகங்கள் தான்பயில

155.1. இளையோன் - இலட்சுமணன். மாதவன் - இராமன். 155.2. சிந்தை மாளிகையின் - இன்ப மாளிகையில். 155.3. ஆதவன் - சூரியன். 155.4. கந்தனார் பிதா - மன்மதனின் தந்தை; திருமால். 156.1. அரக்கன் - இந்திரசித்து. 156.2. பட்ட மானிடரை - இழிந்த மானிடரை. 156.4. அரக்கன் - இராவணன். 157.1. கன்னியை - சீதையை. 157.2. மண்டலத் தரசர் - அயோத்தி நாட்டரசர். 157.3. கடுஞ்சமர் - கடுமையான போர். ஏக - செல்ல. 157.4. அண்டர் கோன் - சிவன். 158.1. அரசர் கோ - பேரரசர்; இராவணன். 158.2. வரவு மானிடர் - வந்துள்ள மானிடர்கள். 158.4. வாச்சியம் - பறை. 159.1. முழங்கி - போர்க்கருவிகள் முழங்கி. 159.2. தளங்கள் - படைகள். செருமி - சேர்ந்து. சங்கீத ராகங்கள் - இனிய இசைகள்.

The hot sun gradually sank in the western main;
The wise Lakshmaṇa went up to Lord Rama
And bowed at his feet. "O younger
Brother! What news from the front?"
And he replied; "The armies led by
Atikāyaṉ of massive frame clothed with flesh,
Were myriads; but all, all of them were
Annihilated by Valiant Anumaṉ;
Capable Atikāyaṉ by me was slain."

### RAMA REJOICING AT THE VICTORY

155. As Lakshmaṇa gave him the news of victory
In the day's battle, Mātava rejoiced
And went to bed happily in his abode.
The next day rising before dawn
Tirumāl, (Father of Maṉmath)
Performed his morning rituals in due form.

### INTIRAJIT GETTING READY FOR BATTLE

156. Planning for the battle, Intirajit
Gathered his armies together, proudly swearing
That he would surely defeat the human foes;
While Maṉṭōtari encountered her husband
Surrounded by the chiefs of the city and ministers
And spoke to him thus.

### THE PROTESTS OF MAṆṬŌTARI

157. Seeing her Lord, she said; "My Lord!
You did imprison the princess Sita!
In the battle so far, many people have died;
You will be laughed at, if still
You go to battle today with the same foes!
King of Kings! This I have said to you
In the name of the Lord of the Universe,
Lord Siva! Perpend and be wise!"

விளங்குகட் டியங்கூறத் தெய்வ வேனுதல் மார்கள் கவரியிட
வளமாய்ப் படைநடத்த நின்ற வானரம் மாற்றான் சீற்றமறிந்து

சீற்றமதை யறிந்து மெத்த சில்காட்டிக் குரங்குகள் பல்க்காட்டி
ஆற்றாமலோ டுவதைக் கண்ட ரிந்தொரு தூதன் விரைந்தோடிப்
பூத்தாமரை முகத்தாள் செ(ய்)ய பூபதி ராமனிடத்தில் வந்து
எற்ற வரக்கன் மகன்துடி யிந்திர சித்துடன் வந்துபடை

படைவாற் கெதியறிந்து மெத்தப் பதுங்கியே வானரம் பிதுங்குதென
உடையா னுடனுரைக்கப் பாரு லகளந்தோ ரதுதான் கேட்டுச்
சடையா தரக்க னுடசெய சந்ததி யிந்திரசித்து வந்தான்
புடைவா னரங்க ளெல்லாம்அடர் போருக்குச் செல்லப்பொறா தெனவே

தென்னன் ஸ்ரீராமன் திருச்சித்தத் திலேயொரு புத்தி வந்து
இன்னாளப் பொருந்தம்பி நீஎன் றேறிட்டுப் பார்த்து விபீஷணரே
மன்னா யிருமென வேதிரு மாலிளை யோனு மனுமானும்
அன்னா ழிகையில் வந்துஅந்த அரக்கன் மகனுடனே யெதிர்த்து

**இந்திரசித்து போரில் பின்வாங்கி வேள்வி வளர்க்கச் செல்லல்**

எதிர்த்தார் சிலைவளைத் தார்தொடுத் தெய்தார் சரம்மழை பெய்தாப்போல்
மதித்த பெரும்படை யும்வரும் மந்திரி மார்களும் பட்டுவிட்டார்
குதித்தா னரக்கன் மகன்ஆதி கோபத்துக்கு அஞ்சி மேகத்திலே
பதித்த முகில்புகுந்து நீளப் பகைவெல்ல வேள்வி வளர்க்கலுற்றான்

159.3. கட்டியம் - புகழ்மொழி. வேனுதல்மார்கள் - வேல் போன்ற கூரிய விழிகள் உடையவர். கவரி - வெண்சாமரை. 159.4. மாற்றான் - எதிரி; இராவணன் படைகள். 159.5. மெத்த சில்காட்டி - அதிகமாக ஆரவாரம் புரிந்து. 159.6. ஆற்றாமல் - எதிர்த்து நிற்கமுடியாமல். தூதன் - இராமன் படையிலுள்ள ஒரு தூதன். 159.7. பூத்தாமரை முகத்தாள் செ(ய்)ய பூபதி ராமன் - பூந்தாமரை போன்ற முகமுடைய சீதையின் கணவனான அரசன்; இராமன். 159.8. துடி - துடிப்புள்ள; வேகமுள்ள. 159.9. படைவாற் கெதியறிந்து - இந்திரசித்தின் படைமிகுதியின் தன்மையும் வலிமையும் கண்டு. பிதுங்குது - கண்ணில் மருட்சி கொண்டு விழி பிதுங்குகிறது. 159.10. உடையான் - உலகத்தைத் தனதாக உடையவன்; இராமன். பாருலகளந்தோர் - உலகத்தை அளந்தவர்; திருமாலாகிய இராமன். 159.11. சடையாது - தளராது திகழும். அரக்கனுட செய சந்ததி - இராவணனுடைய வெற்றி பொருந்திய சந்ததியில் வந்த இந்திரசித்து. 159.12. புடை - திரட்சி. செல்லப்பொறாது - செல்வதற்குத் தகுதியற்றது. 159.13. திருச்சித்தம் - மேன்மையான உள்ளம். 159.14. பொருந் தம்பி - போரிடும் தம்பி; இலட்சுமணர். 159.16. அந்நாழிகை - அந்த நேரம். அரக்கன் மகன் - இராவணன் மகன்; இந்திரசித்து. 159.17. சிலை வளைத்தார் - வில்லை எடுத்து வளைத்தார். தொடுத்து - அம்பைத் தொடுத்து. சரம் - அம்பு. 159.18. மதித்த - பெருமையாகக் கொள்ளத்தக்க. பட்டுவிட்டார் - மாண்டுவிட்டார். 159.19. ஆதி கோபத்துக்கு அஞ்சி - ஆதிமூலரான திருமாலின் கோபத்திற்குப் பயப்பட்டு.

## INTIRAJIT LEAVING FOR THE BATTLE FIELD

158. Even after listening to his queen's protest,
Rāvaṇa turned to his son and ordered him
To go to fight against the men on the other side;
Like the billowy sea the army marched;
Chariots, elephants, horses and men)
With the war-drums resounding
And the trumpets blowing wildly!

## AṈUMAṈ AND LAKSHMAṆA OPPOSE INTIRAJIT

159 Band after band of demon forces,
Thirty three crores of them in close formation,
Marched to the sound of bugles and trumpets,
Under the command of Intirajit
His titles announced by heralds,
And lance-eyed damsels, fanning him with chowries;
Seeing the mighty army on the march
Realizing the fury of the enemy forces,
The monkeys grinning in fear ran back
Noisely before Intirajit; which seeing,
A messenger ran up to Lord Rama,
(Spouse of Sita with lotus-face)
And reported to him: "Our monkey bands,
Are stampeding in fear
Of the fierce son of the demon-king."
And Rama hearing this bethought to himself:
"The fatigueless son of Rāvaṇa has come,
With whom our monkeys are not strong enough
To fight, And turning to his younger brother,
Asked him to take command for the day:
Accompanied by Aṉumaṉ, Lakshmaṇa
Engaged Intirajit in battle fierce.

### இராவணன் போருக்கு வந்து பின் வாங்குதல்

உற்றவன் போனசெய்தி தூத னொருத்தன் ரக்கர்க்குரைத் திடவே
பத்துத்தலை யரக்கன் படை பாவித்துத் தேரினிலேறிக் கொண்டு
மெத்தத் தளஞ்செ ருமபெல வீரத்துடன் வந்துபோர் பொருதான்
மெய்த்த ரகுரா மன்அதி வேகமுடன் கணைமாரி பெய்தார்

பெய்தார் சரமா ரிஅவன் பெலமுள்ள சேனை தலையுருள
எய்தார் திருமா லும்அதை யிராவணன் கண்டு மனந்தளர்ந்து
கைதானும் மூக்கில் வைத்துஆனை காத்தவன் போருக்கு ஆற்றாமல்
மைதான சிங்கத்துக்கு அஞ்சும் மதகரியும் போலவன் ஓடிவிட்டான்

### இராவணன் பெருமைகள்

விருத்தம்

160. வாரணம் பொருத மார்பன் வலியகுன் றெடுத்த தோளன்
நாரணன் முனிவோர்க் கெல்லாம் நடுங்கிட வுரைத்த நாவன்
தாரணி மௌலி பத்தான் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமுங் களத்தில் போட்டு மீண்டுமா துயர முற்றான்.

### இராவணன் வருத்தம்

161. மாதுலர் தன்னை நோக்கான் வானகர் தன்னை நோக்கான்
காதலி தன்னை நோக்கான் கடல்பெருங் சேனை நோக்கான்
தாதவிழ் கூந்தல் மாதர் தனித்தனி நடனம் நோக்கான்
பூதல மென்னு மங்கை தன்னையே நோக்கிப் போனான்.

159.21. உற்றவன் - இராவணனுக்கு உறுதுணையானவன்; இந்திரசித்து. அரக்கர் - இராவணன். 159.22. படை பாவித்து - படைகளுக்குத் தலைமை தாங்கி. 159.23. தளஞ் செரும- போர்க்களம் நிறைய. 159.24. கணைமாரி பெய்தார் - மழை பெய்தாற் போல அம்பைப் பெய்தார். 159.27. கைதானும் மூக்கில் வைத்து - கையை மூக்கில் வைத்து; ஆச்சரியமடைந்து. ஆனை காத்தவன் - யானையை அழிவிலிருந்து காத்தவன்; கஜேந்திரன் என்ற யானையை முதலை வாயிலிருந்து மீட்டவன்; திருமால் அவதாரமாம் இராமன். 159.28. மைதான சிங்கம்- வலிமை வாய்ந்த சிங்கம். அஞ்சும் - பயப்படும். 160.1. வாரணம் பொருத மார்பன் - எண்திசைகளிலுமுள்ள காவல் யானைகளோடு போர் செய்த வலிமையான மார்புடையவன்; இராவணன். வலிய குன்றெடுத்த தோளன் - பெரிய குன்றாம் கயிலை மலையைத் தூக்கிய தோளுடையவன்; இராவணன். 160.2. நாரணன் முனிவோர் - திருமாலுக்குத் தொண்டு புரியும் முனிவர்கள். நாவன் - கொடிய நாவன்; இராவணன். 160.3. தாரணி - மாலை யணிந்த. மௌலி பத்தான் - பத்து மணி முடிகளை உடையவன். சங்கரன் - சிவன். 160.4. களம் - போர்க்களம். மாதுயரம் - பெருந்துயரம். 161.1. மாதுலர் - மகளிர். வானகர் - தேவலோக ...ர். 161.2. காதலி - தன்னைக் காதலிக்கும் மனைவி; வண்டோதரி. 161.4. பூதலம் ...ம் மங்கை - பூமாதேவி என்னும் பெண்.

## INTIRAJIT RETREATING AND GOING AWAY TO PERFORM A SACRIFICE

Opposing Intirajit, Lakshmaṇa bent his bow
And shot his arrows, like a downpour of rain
At the enemy; the huge army,
Its leaders and the ministers fell before them.
Seeing which the demon's son afraid of
Lord Tirumāl's wrath, hid himself in the clouds
And under cover of the nimbi prepared
To perform a sacrifice to make him invincible.
Hearing from a messenger that Intirajit
Had left the field, the ten-headed demon,
Took command of the forces; and getting
Into a chariot, with his numerous troops,
Covering the field entire, valorously
He fought a battle fierce with **Rama**
And Rakurāma, the true, rained a shower
Of arrows against the demon armies,
Decapitating them all; disheartened at this,
Still, Rāvaṇa wondered at this feat
Of arms placing his finger on his nose,
And like an ichorous tusker fleeing
Before a lion powerful, he left the field,
Dismayed at the Lord's powers.

## THE GREATNESS OF RĀVAṆA

160. He who had of yore fought
With the cardinal elephants eight,
Who had lifted Mt. Kailas
With his mighty arms; who had chastised
With his tongue, the sages devoted to Tirumāl;
Who wore on his garlanded heads,
Gemmed diadems ten; retreated from the field,
Leaving behind his magic sword
That Lord Siva himself gave,
Along with his own valour!

### நாகபாஷணத்துடன் இந்திரசித்து இராவணனிடத்து வருதல்

பள்ளு

162. நோக்கிப் புக்கியே ராக்ஷசர் மனம்தேக்கித் தட்டழி வாகவே
நோக மகனை மேகநாதனை நொடிக்குள்ளே கொடுவா வென்றான்
பாக்யதூதன் சணத்தி லேகிப் பாய்ந்து இந்திர சித்துடன்
பட்ட பாடும் கெட்டகேடும் பகர வவனும் பயப்பட்டான்
நீக்கியிவனை வளர்த்த தகப்பன் நெஞ்சிற் கலக்கந் தீர்க்கவே
நினைக்கும் பொழுது நாகப்பாசக் கணையுங் கொண்டு புறப்பட்டான்
ஆக்கித் தகப்பன் சமூகத்தேகி அடிதொழு திடச்ச கலபேர்
அந்த யிந்திரசெயித்தைக் கண்டு சிந்தை பதறிக் கலங்கவே

### இந்திரசித்து போருக்குச் செல்லுதல்

கலங்கச் சேனைரத கசங்களும் கருதி யனந்தங் கோடியாம்
கடியமந் திரிமார்கள் கோடி கதிமைத் தலைவர் கோடியாம்
மலங்க மேளவாச் சியதொனி வானத் திடிய தாகவே
மடந்தை மார்கள் நடனஞ் செய்யும் வளமுஞ்சே னைத்தளமுமாய்
துலங்க யிந்திர சித்துவந்து தொடுத்த படையை நடத்தினான்
துய்யவ னிளையோனுங் கண்டு சுவாமி கல்பனை வேண்டியே
பெலங்க ளாகவந்து இளைய பெருமாள் சிலைதொட் டெய்யவே
பெய்த வாளி பெய்தசீலம் பெய்த மாரி போலவே
மாரி போல இளையவன்சரம் வாரிப் பொழியக் கனபடை
மடிந்திட வுங்கண்டிந் திரசித்து வண்டுறுக்கிப் பற்க டித்துமே

2.1. புக்கியே - புகுந்தே. ராக்ஷசர் - ராட்சதனாகிய இராவணன். தேக்கி - சோகமான ...ணங்களைத் தேக்கி. தட்டழிவாகவே - நிலைகுலைந்தே. நோக - வருந்த. மேகநாதன் ...இந்திரசித்து. 162.2. பாக்யதூதன் - இராவணனிடத்தில் புண்ணியம் செய்த தூதன். சணம் விரைவு. 162.3. நாக பாஷணத்தோடு - பாம்பு வடிவிலமைந்த விசங் கக்கும் அம்பு. 162.4. ...மகம் - முன்னிலை. சகலபேர் - பலபேர். சிந்தை பதறிக் கலங்கவே - இந்திரசித்து நாக ...சக்கணையோடு போர்க்களம் ஏகினால் என்ன நடக்குமோ என மனம் கலங்கவே. 162.5. ...ம் - யானை. அனந்தம் - பல. கதிமைத் தலைவர் - கூர்ந்த அறிவுடைய படைத்தலைவர். ...6. மலங்க - மிகுதியாக. வாச்சிய - வாத்திய. தொனி - ஓசை. சேனைத்தளம் - ...டகளின் கூட்டம். 162.7. துலங்க - பிரகாசிக்க. துய்யவன் - மேன்மையானவன். ...ளையோன் - இந்திரசித்து. சுவாமி - இராமன். கல்பனை - கற்பனை; கட்டளை. 162.8. ...லங்களாக - வலிமையுடையவராக. இளையபெருமாள் - இலட்சுமணன். சீலம் பெய்த ... போலவே - அழகுடன் பெய்த மழையைப் போலவே. 162.9. வாரி - மழை. கனபடை ...ந்த படை. வண்டுறுக்கி - அச்சுறுத்தி. பற்கடித்து - சினத்தால் பல்லைக் கடித்து.

## RĀVAṆA'S DESPONDENCY

161. He would not look at women of his own
Nor celestial damsels; ashamed too,
He would not look at his beloved Maṇṭōtari
Nor was he interested in enjoying,
The sight of lovely women dancing,
(Their tresses, adorned with fragrant flowers)
Only his eyes bent towards the ground,
As he walked dejected, back to his palace!

## INTIRAJIT COMING TO HIS FATHER WITH THE *NĀKAPĀCAM*[144] WEAPON

162. Disturbed in mind and disconsolate,
His heart heavy with shame and sorrow,
Rāvaṇa ordered that his son Mēkanātaṉ
Be brought before him at once.
The eager messenger swiftly flew,
To Intirajit; to whom he told the day's debacle,
Their losses and their sufferings;
And he too grew frightened on hearing it;
But determined to retrieve the suffering
Of his father who had reared him,
He picked up his own deadly weapon,
*Nākapācam* and reached the audience hall,
Where Rāvana waited; and bowed at his feet!

## INTIRAJIT GOING INTO BATTLE

On seeing Intirajit with his dreadful dart,
All present, grew terrified!
Accompanied by millions and millions of forces,
Foot soldiers, chariots, and war-elephants,
With countless counsellors, capable captains,

144. *Nākapācam* - A dreaded weapon - the Serpent Noose

### இந்திரசித்து நாகபாசந் தொடுத்தல்

நாரணன் படைத்தளங் களையரை நாழிகையிற் கொல்வே னென்றே
நாகபாசந் தன்னைப் பூட்டி ராமன் படையைக் கட்டினான் 10
வீரியத் தோடுநாக பாசம் மிகுந்த வானரத் தளத்தையே
வீசி வளையக்கூசி வானரம் விஷங்கொண் டவர்களு றங்கினார்
காரியத் தோடுமேக வர்ணரும் கரும மிப்படி முடிந்ததே
கருணைத் தலைவர் வானரப்படை கருணைத் தம்பியும் மயங்கினார்

### நாகபாஷாணம் முறிக்கக் கெருடன் வருதல்

மயங்கி னாரிதற் கேதுசெய்வது வல்லரக் கர்செய் சூதுதான்
வாசனையில் விபீஷணன் வந்து மாலைத் தொழுது கூறுவான்
பயங்களாக யிந்திர சித்து பதறச் செய்த காரியம்
பச்சைமாலே கெருடன் வருகில் பறக்கும் நாக பாசமே
நயக்கருடனைத் திருமா லழைக்க நாடிக் கெருடன் கேட்டுமே
நல்வைகுந் தத்தலத்தைக் காக்க நாடிக் கெருடன் கேட்டுமே 15
செயங்களாக நமது சுவாமி சீதர னடிதொழ வென்றே
திறத்தில் வல்லமை யுறைத்த கருடன் சிறப்புடனவன் புறப்பட்டான்

புறப்படும் பலதிறத் துடன்கண உறப்புடன் சிறக டித்துமே
பெரிய வெற்புகள் சிதறவே மிருகபறவை பக்ஷிகள் பதறவே
பறப்பதி லிறகடிப்ப திலண்ட பகிரண் டங்களும் குலுங்கவே
பருவச்சொரூப் புவனமிரு நூற்றிரு பத்து நாலும் நடுங்கவே
சிறப்புடன் சரப்பணி பதைக்கமும் சிரக்கி ரீடமுந் துலங்கவே
சிவந்தவுடலும் வெளுத்த கழுத்தும் திரண்டு சுருண்ட மூக்குமாய்

162.10. நாரணன் - திருமால். இளங்காளையர் - இளம் வீரர்கள். கட்டினான் - நாகபாஷண அம்பால் மயக்கமுறச் செய்தான். 162.11. வானரத் தளம் - வானரப்படை. வளைய்க் கூசி - வானரப்படைகளை அச்சம் கொள்ளும்படி வீசி. உறங்கினார் - மயங்கினார். 162.12. காரியத்தோடு - இந்திரச்சித்தின் செயலோடு. கருணைத் தலைவர் - இரக்க சொரூபி; இராமர். தம்பி - இலட்சுமணர். 162.13. ஏது - என்ன. சூது - சூழ்ச்சி. வாசனையில் - அறிவில் சிறந்த. மால் - திருமாலாகிய இராமன். 162.14. பயங்களாக - அச்சம் ஏற்படும் படியாக. பதற- நெஞ்சம் துடிக்க. வருகில் - வந்தால். பறக்கும் நாகபாசமே - நாகபாசத்தால் கட்டப் பட்ட விஷம் மறைந்தோடும். 162.15. வைகுந்தத் தலம் - வைகுண்ட தலம். 162.16. சீதரன்- திருமாலாகிய இராமன். அடி - பாதம். வல்வமையுறைத்த - வலிமையில் சிறந்த. 162.17. கண உறுப்புடன் - மிகுதியான வ்லிமையுடன். வெற்புகள் - மலைகள். 162.18. அண்ட பகிரண்டங்கள் - பிரபஞ்சம். பருவச்சொருப் புவனம் - வனப்புடன் கூடிய அழகு மிகுந்த உலகம். 162.19. சரப்பணி, பதைக்கம் - மார்பில் அணியும் ஆபரண வகைகள். சிரக்கிரீடம் - தலையில் சூட்டப்பட்ட கிரீடம். துலங்க - ஒளிவிட.

With drums and tumbrils, bugles and pipes
Resounding like thunder in the sky
(Dancing women celebrating the event;)
And the thronging armies eagerly pressing forward
Brightly did Intirajit take the field!
Which the pure-hearted Lakshmaṇa witnessing,
Opposed him as commanded by Lord Rama.
The multitudinous shower of arrows
Discharged by Lakshmaṇa's great bow
Threw into wild disarray the demon armies!

### INTIRAJIT SHOOTS HIS *NĀKAPĀCAM*

Seeing the destruction of his forces
Intirajit grew wrathful and with louring looks
And gnashing of teeth,
He fixed the dreaded *Nākapācam* and shot it.
At Rama's army. Furiously did the dart
Encircle the monkey-army and its leaders,
And all of them did fall mortally hurt,
And all unconscious! **Rama** the embodiment
Of Grace, grew sad at the outcome
Of Intirajit's terrible weapon,
As everyone (including Lakshmaṇa)
Was lying prone upon the field.

### KARUṬAṈ COMING TO REMOVE THE EFFECT OF THE VENOMOUS DART

As **Rama** dazed at the sight, was wondering
What next was to be done to counteract
The wily demon's action, perspicacious Vipīṣaṇa,
Came up to the Lord and bowing, said to him!
"Inspiring fear all round is Intirajit's action,
Terrifying all hearts, O emerald-hued Lord!,
The power of his weapon charged with the venom
Of serpents, will fly away
If Karuṭaṉ were to come."

இறப்புடன் பலபிறப்பு வஞ்சகம் இருட்ப வந்துலைத் திடவரும்
  எங்க ளையகர் செங்கண் மாதவரின் பகவானக் கருடனே
இன்பக்கருடன் முந்திக் கிளம்பி யெழும்பும் பறவைத் தொனியிலே
  எட்டுமலையு மட்ட கெஜமும் ஏழு நீளப் பரவையும்
கெம்பிக்கோடு கலங்கிக் குழும்பிக் கிடுகிடு கிடுகி டெனவே
  கெண்டைக் காலில்தண்டை சதங்கை கிண்கிணி சிலம்பொ லிக்கவே
அம்பிற் கொடியஅரக்கர் கயிலை ஆயிரத் தெட்டுக் கொடுமுடி
  அமையது திசைகள்விசை யில்பிசக அனந்த சேடன் பதுங்கவே
சம்புத்தீவுஞ் சகல செகமும் தாண்டி யிலங்கைத் தலத்திலே
  சங்குசக்கர பாணி சரணம் சரண மென்றது கெருடனே

**இராமன் உத்திரவுபடி நாகபாஷாணம் முறிதல்**

சரணஞ் சரணமென் றரிநாமம் சாற்றிக் கருடன் போற்றவே
  சட்டமா யரிநாட்ட மார்பி லட்ட லட்சுமி கூடவே
மரணப் பிறவி தடுக்கும் மாயனைவந்து கருடன் கண்டுமே
  வைகுண்டப் பதிவாழு மெந்தனை வருவித்த தென்ன அரிஹரி
இரணிய சிங்கரு பமேயின மென்னை யாளுமி ராகவா
  என்று கெருடன் புகரும் பொழுதுமன் றளித்தவ ரென்சொல்வார்

162.20. இறப்புடன் பலபிறப்பு வஞ்சகம் இருட்ப வந்து துலைத்திட வரும் - இறப்பு பிறப்பு என்னும் பிறவி தொல்லைகள் ஏற்பட காரணமாய் விளங்கும் மாயையாம் வஞ்சகப் பிடியின்னும் நீக்கி மன இருளை விரட்ட வரும். செங்கண் மாதவர் - சிவந்த கண்களை உடைய திருமால். 162.21. அட்ட கெஜமும் - எட்டுத் திசைகளையும் காவல் காக்கும் யானைகளும் பரவை - கடல். 162.22. கெம்பி - ஆரவாரித்து. கோடு - மலையின் உச்சி. கெண்டைக் கால் - முழந்தாளின் கீழ்க்கால். தண்டை, சதங்கை, கிண்கிணி, சிலம்பு - காலணி வகைகளின் பெயர்கள். 162.23. அம்பிற் கொடிய அரக்கர் - அம்பை விடவும் கொடிய. உயிரை மாய்க்கும் அரக்கர். கொடுமுடி - உயர்ந்த சிகரம். திசைகள் விசையில் பிசக - எட்டுத் திசைகளும் கருடன் பறக்கும் வேகத்தில் தன்நிலையில் பிறழ. அனந்தசேடன் - திருமால் பள்ளி கொள்ளும் பாம்பு. 162.24. சம்புத்தீவு - நாவலந் தீவு என்ற பெயருடைய ஏழு தீவுகளுள் ஒன்று. சகல செகமும் - சகல உலகமும். சங்குசக்கர பாணி - சங்கு சக்கரங்களைக் கையில் தரித்தவர்; திருமால். 162.25. அரிநாமம் - திருமால் நாமம். சட்டமாய் அரிநாட்ட - பூரணமாய் திருமால் நிலைநிறுத்திய. அட்டலட்சுமி - தனலட்சுமி, தானிய லட்சுமி, தைரிய லட்சுமி, சௌரிய லட்சுமி, வித்தியா லட்சுமி, விசய லட்சுமி, கீர்த்தி லட்சுமி, ராச்சிய லட்சுமி என்னும் அட்ட லட்சுமிகள். கூடவே - பொருந்தவே. 162.26. மாயன் - திருமால். அரிஹரி - திருமால். 162.27. இரணிய சிங்க ரூபமே - நரசிங்க அவதாரமே. மன்றளித்தவர் - இலங்கை நாட்டை விபீஷணனுக்குக் கொடுத்தவர்; திருமால்.

As Tirumāl-Rama's call summoning Karuṭaṉ
Reached the ears of Karuṭaṉ in Vaikuṇṭam
Anxious for the victory of Sridhara,
His master, the giant-bird with
Supernatural strength left his abode;
Uprose he beating his wings!
The very rock-cliffs did shatter to pieces;
Beasts and birds did tremble!
Rocking the many worlds in the universe,
He came, while the two hundred and twenty four
Youthful orbs did shake and shiver!
With collars and carcanets and crowns,
Sparkling with gems, on his ruddy body
And white neck, his rotund beak curved in shape,
He came, the pleasant mount of the Lord
With red-streaked eyes, who destroys
All treachery and guile and nescience
That cause the cycle endless, of birth and death;
At the noise made by the giant-bird,
Flying aloft, and his great call,
The mountains eight and cardinal elephants
And the seven seas huge, trembled in dismay;
And roared in fearful agitation!
At the sound of his tinkling anklets
(*Taṇṭai, Caraṅkai, Kiṇkiṇi* and *Cilampu*),
The demons fiercer than arrows,
And the thousand and eight peaks
Of Kailas did tremble!
The directions eight went haywire!
Āticēṣaṉ himself slunk in fear;
As crossing swiftly the isle of Jambolan
And all the universes, the great Karuṭaṉ,
Landed in Laṅka at the feet
Of the Lord, crying "Refuge, O Lord,
Adorned with conch and Discus!"

கிரணவன்னத் தங்கப் பிரபை கிட்டின வாகனக் கருடனே
கெட்ட தோசியிந்திர சித்து கெட்டும் நாக பாசத்தை
நாக பாசமதனை நீயும் நடுக்கியே பொடிப் படுத்தியே
நமது சேனை முழுதுமெழும்பி நடந்து நீகொடு வருவையே
ஏக ராமன் கல்பனைப்படி யிசைந்து கருடனெ ழும்பியே
இலங்கைப் பட்டணம் கிடுகிடுத்திட எத்திப் பறந்து சுற்றியே
மோக நாகப்பாசக் கணையே முறித்துத் தவிடு பொடியதாய்
முறிந்து நாகமிறந்து போக முழங்கிச் சேனை யெழும்பியே
மேக வர்னர் பாதம்பரவி விந்தை யாக நிறைந்தனர்
விந்தைக் கருடன் வைகுந்தத்திலே சிந்தை யாகப் புகுந்ததே.

## கருடன் வைகுண்ட லோகம் அடைதல்

விருத்தம்

163\. புகுந்து வைகுந்த லோகம் புகழ்பெறக் கருடன் சென்று
பகர்ந்த வநாக பாசப் படையினா லடித்தோ மென்று
மகிழ்ந்திடத் திருமால் சேனை வளைத்தன ரிலங்கை யெல்லாம்
மிகுந்த நாகமுங்கை விட்டதென் விதியென மனதில் கொண்டான்.

## இந்திரசித்தை இராவணன் சினத்தல்

நடை

164\. கண்டிளையோ னனுமானும் கனத்தபடைத் தலைவருமாய்
மண்டுகின்ற வானரமும் வந்திலங்கை தனைவளைந்தார்
வளைந்துகொண் டேயார்ப்பரிக்க வல்லரக்கனது கேட்டு
எழுந்துமனக் கோபமுற்று இந்திரசித் தோடுரைப்பான்

162.28. கிரணவன்னத் தங்கப் பிரபை - சூரிய ஒளியின் வர்ணமாம் தங்க ஒளியை வெளியிடும். கிட்டின வாகன - கிருஷ்ணனுக்கு வாகனமாகத் திகழ்கின்ற. கெட்ட தோசி - கெடுதல் செய்யும் பாவி. கெட்டும் - கட்டி வைத்துள்ள. 162.29. நாகபாசம் - நாக பாஷண அம்பால் செலுத்தப்பட்ட விஷம். நடுக்கியே - நடுங்கச் செய்தே. கொடு வருவையே - கொண்டு வருவாயே. 162.30. கல்பனை - கற்பனை; கட்டளை. கிடுகிடுத்திட - நடுநடுங்கிட. எத்திப் பறந்து - தாவிப் பறந்து. 162.31. நாகமிறந்து - பாம்பின் விசம் அழிந்து. 162.32. மேகவர்னர் - மேக வர்ண நிறத்தை உடையவர்; இராமன். விந்தை- ஆச்சரியம். வைகுந்தம் - வைகுண்ட லோகம். சிந்தையாக - மன விருப்பம் கொண்டு. 163.2. பகர்ந்து தவ நாக பாசப்படை - சொல்லுவதற்கு அரிய தவத்தால் பெற்ற நாகபாஷாணப்படை. அடித்தோம் - இராமர் சேனையை அடித்தோம். 163.4. நாகமும் கை விட்டதென் விதி - நாகபாஷணமும் செயல்படாது போனது இந்திரசித்தாம் என் தலைவிதி. 164.1. இளையோன் - இலட்சுமணன். கனத்த - வலிமையான. 164.2. மண்டுகின்ற - பொருந்துகின்ற.

## KARUṬAṈ BREAKING THE SPELL OF *NĀKAPĀSAM* AS ORDERED BY RAMA

As Karuṭaṉ sang the praises of the Lord,
Crying 'Refuge, Refuge' at the feet of him
Who cuts the cycle of birth and death,
(Who has in his chest the eight Goddesses Lakshmi ensconced)
Karuṭaṉ asked Lord Hari
(Who incarnated as Narasiṅka
To destroy Hiraṇiyaṉ in an earlier avatar),
Why he was summoned by Him.
The Lord, who gave to Vipīṣaṇa
The rule over Laṅka land, said;
"My Karuṭaṉ mount, radiating golden light
Bright as the sun's rays!
The evil sinner Intirajit has tied us
All up, and rendered unconscious
Even Lakshmaṇa. You have to counter
Its venomous effect, pulverise the dart
To pieces and restore to life,
Our Vāṉara forces entire,"
And the great bird circled Laṅka city
Round upon round! and by the air
From the flapping of its wings,
The delusive power of the dreaded dart,
Was broken straightway!
The poisonous effect was removed for good
The Vāṉaras all rose with a roar,
And prostrate before the blue-hued Lord
Did fall! It was a marvel,
That happened truly; as they
Rose and spread over all the field;
While the miraculous bird, happily returned,
To its seat in Vaikuṇṭam

உரையறியாப் பேய்மகனே உன்னையல்லோ படைக்குவிட்டேன்
கரையாத நாகம்விட்டு கட்டிவைத்தே னென்றாயே
கட்டிவந்தே னென்றுசொல்லிக் கதிமையுள் ளசேவகன்போல்
கிட்டிவந்து பொய்யுரைத்து கெடுத்தாயே யென்மகனே

வெட்டிவைப்பே னுன்னையல்லால் வேறொருதர் பொய்யுரைத்தால்
அட்டிசெய்தா னவன்போர்க்கு ஆற்றாமல் சொன்னதன்றே
ஆற்றாமல் சொன்னதென்றே அரக்கனும்போர்க் கோலங்கட்டிப்
பூத்தான வல்லரக்கன் பூஷணங்கள் தான்சேர்த்து

### இராவணன் போர்க்களம் செல்லல்

சேர்த்தபடை வீரரையும் சீக்கிரத்தில் வரவழைத்து
வாய்த்தநல்ல வாத்தியங்கள் மண்டலமெல் லாம்முழங்க
முழங்கிவரும் ராக்ஷசர்கள் முன்னூறு கோடிலக்ஷம்
விளங்கியவன் டோதரியும் வேண்டாமென் றேவிலக்கத்

தளஞ்சேரு மாயுதங்கள் தளதளென முடிதுலங்க
உளங்களிப்பாய் ஆர்ப்பர்த்து உத்தரவாய் போர்க்களத்தில்
உத்தரவா சல்வழிக்கே ஒருகோடித் தேர்நடத்திப்
பத்துமுடி ராவணனும் பாரறியத் தேரேறிச்

### இலட்சுமணன் மயக்கம்

சித்திரவாள் வில்லெடுத்து சேனைசமுத் திரமெனவே
கர்த்தனெங்கள் மாயவனார் கண்ணெதிரே போர்க்களத்தில்
போர்க்களத்தில் விபீஷணன்மேல் பொழிந்தானே யம்பெடுத்து
எற்குமந்த அஸ்திரத்தை இளையவன் போய்மார்பேறக்
நேர்க்குள்ளே யம்புபட்டு லட்சுமணர் மயங்கிவிட்டார்

164.5. உரையறியா - எனது பேச்சை கேட்டு அறியாத. அல்லோ - 'அல்லவா' என்பதின் பேச்சு வழக்கு. 164.6. கரையாத நாகம் விட்டு - எதனாலும் கரைக்க முடியாத நாகபாஷண அம்பு விட்டு. 164.7. கதிமை யுள்ள - கூர்மை யுள்ள. சேவகன் - வேலைக்காரன். 164.8. கிட்டிவந்து - அருகில் வந்து. 164.9. ஒருதர் - ஒருத்தர்; இடைக்குறை. 164.10. அட்டி செய்தான் - தடை செய்தான். 164.11. பூத்தான - வலிமையான. பூஷணங்கள் - ஆபரணங்கள். 164.16. விளங்கிய - ஒளி பெற்றுத் திகழ்ந்த. 164.17. தளம் - படை. தளதளென - தளதளவென்று ஒளி வீச. 164.18. உளங்களிப்பாய் - மன மகிழ்ச்சியோடு. 164.19. உத்தர வாசல் - வடக்கு வாயில். 164.20. பாரறிய - உலகறிய. 164.22. கர்த்தன் - தலைவன். 164.24. ஏற்குமந்த அஸ்திரத்தை - விபீஷணன் மீது விடப்பட்ட அந்த ஆயுதத்தை. மார்பேற - மார்பில் பாய்ந்து உள்ளுக்குள் ஏற.

163. As the reputed mount of the Lord, returned to Vaikuṇṭam,
Intirajit who rejoiced at first
That the *Nākapācam* acquired by his askesis
Had destroyed the Vāṉara forces,
Became sad again on seeing Rama's troops
Back on their legs, alive and kicking,
Encircling Laṅka again! "It is my fate
That even my invincible *Nākapācam*
Has been rendered ineffective."

## RĀVAṆA BERATES INTIRAJIT

164. Lakshmaṇa and the sturdy Vāṉara chieftains
And thronging bands of Vāṉaras,
Encircled Laṅka: hearing their boisterous uproar
The demon-chief angrily rose from his seat,
And chastised Intirajit thus:
"You ignornant fool! you have not cared
To execute my order. How could I have
Chosen you to lead my troops?
You boasted that your serpent-dart
Was absolute in its lethal power;
Like a keen serving-man, you came near
And spoke lies to me; ruined we
Are, my son! Had anyone else
Lied thus to me, I would have
Cut him to pieces for obstructing
My plans because of his incapacity."
And now himself putting on his armour
And wearing ornaments, the powerful demon
Prepared to go into the battle.

### இராமன் சேனையரின் அதிர்ச்சி

பார்க்குமிளை யோன்விழவே பச்சைவர்னர் மனங்கலங்கி
மனங்கலங்கி மால்மலங்கி வானரங்கள் சோர்ந்துநிற்க
தினங்கலங்கிச் சாம்புவனும் சீர்பெரிய அனுமானும்
இனங்கலங்கி மாயவரை எல்லோருந் தெண்டனிட்டார்
கனங்கலங்கி நிற்பளவில் காத்துமகிழ் வாளனுமான்

### அனுமன் இராவணனோடு பொருதல்

வாளனுமா னோடிவந்து வல்லரக்கன் முகம்பார்த்து
ஏழைஎன் றோஎம்பெருமாள்க் கிளையவரை எய்தாய்நீ
கோழையடா நீயெனவே குத்திவிட்டா னவன்மார்பில்
வாழையின் மேலம்புவிட்ட வகைபோலவே ளனுமான்
வேளனுமான் குத்தினது வெங்குருதி புனலாறாய்
தாழவவன் மார்பிலணி தார்க்கரிகொம் பானதந்தம்

### இராவணன் திகைத்துரைத்தல்

தந்திகுத்தும் கொம்புதிர தமிழனுமான் குத்தினது
அந்தரமாய் ராவணனும் அயர்ந்துமனந் தட்டழிந்து
இந்திரனோ யுங்கரந்தா னிரும்புலக்கை யோகெடுவாய்
சந்திரகதி ரவனெமனோ சானகிக்குத் தூதுவந்தாய்
தூதுவந்த சிறுகுரங்கே துடிக்கநெஞ் சிலிடித்தாயே
ஏதினிநான் பிழைப்பதடா இரத்தம்மெத்தப் பெருகுதடா
தீதுனைத்தான் கண்டுபடை சிதறுதடா கதறுதடா
போதுமடா வுன்னோடே போர்நடத்த மலைக்குதடா

164.26. பச்சைவர்னர் - இராமர். 164.27. மால் - திருமால். சோர்ந்து - மனம் வாடி. 164.28. சாம்புவன் - கரடி முகம் கொண்ட வீரன்; வானரத் தலைவர்களுள் ஒருவன். 164.29. தெண்டனிட்டார் - அடிபணிந்தார். 164.30. கனங் கலங்கி - வலிமை கலங்கி. 164.32. ஏழை - வலிமை அற்றவன்; எளியவன். 164.33. அவன் – இராவணன். 164.34. வேள் அனுமன் - வலிமையான அனுமான். 164.37. தந்தி குத்தும் கொம்பு உதிர - பண்டு அட்டதிக்கு யானைகளோடு போர் செய்த இராவணன் மார்பில் பதிந்த யானை தந்தங்கள் உதிர்ந்து போக; இது அனுமன் இராவணன் மீது விட்ட குத்தின் வலிமையைக் குறித்தது. 164.37. தமிழனுமான் - தமிழ் மொழி பேசும் அனுமான். 164.38. அந்தரமாய் - ஆதரவற்று. தட்டழிந்து - தடுமாறி. 164.39. இந்திரனோ - அனுமனே! நீ இந்திரனோ என்றவாறு. 164.40. சந்திர கதிரவன் எமனோ - அனுமனே நீ சந்திரனோ? சூரியனோ? எமனோ? என்றவாறு. சானகி - சீதை. 164.41. துடிக்க - நெஞ்சம் துடிக்க. 164.42. மெத்த - அளவுக்கு அதிகமாய். 164.43. தீதுனைத்தான் - இராவணர் சேனைக்குத் தீயவனாகிய உன்னைத்தான். 164.44. மலைக்குதடா - திகைப்பு உண்டாகுதடா.

## RĀVAṆA TAKING THE FIELD AGAINST RAMA

Summoning quickly his forces escorted by
Three hundred crores of milling troops
Raring to fight, while the musical instruments
Resounded, he stepped out for battle!
Radiant Maṇṭōtari tried her best
To prevent his departure, in vain!
Innumerable weapons shone bright
As Rāvaṇa happily emerged through
The northern gate with cheer in his heart,
While his crowns dazzled on his heads,
A crore of chariots accompanied him.
As ten-headed Rāvaṇa climbed onto
His royal chariot and left for the field
At the head of his army, he saw
Rama's forces huge as the ocean!
And full of wrath he took up
His bow and shot a deadly arrow
At his brother Vipīṣaṇa beside
The brothers, but Lakshmaṇa standing near
Pushed him aside, and received the powerful
Dart intended for Vipīṣaṇa; pierced
By Rāvaṇa's arrow, which entered his chest
Lakṣhmaṇa fell down unconscious and hurt.

## THE DISMAY OF RAMA AND HIS ARMY

Seeing his brother fall, the emerald-hued one
Grieved sore at heart; and seeing the Lord's anguish
The Vāṇaras stood in dejection great,
Jāmpavāṇ, great Aṇumaṇ and all the tribes,
Now bowed at the Lord's feet,
As if to comfort him.

## AṆUMAṆ'S FIGHT WITH RĀVAṆA

Aṇumaṇ now ran upto Rāvaṇa
And looking him in the face

மலைக்குதடா மாபாவி வானரம்நீ யல்லவடா
உலருதடா என்சேனை உன்னைக்கண்டு நடுங்குதடா
சிலைக்குனைப்போல் சமர்த்தனில்லை திட்டமும்நீ துட்டனென்றான்
நிலைக்குமெனைச் சமர்த்தனென்றாய் நீசமர்த்தன் வாளரக்கா

### அனுமன் மறுமொழி

வாளரக்கா என்குத்துக்கு மார்புதந்து மிளைத்தாயே
கேளரக்கா மற்றொருத்தர் கீழ்விழுந்து சாவாரே
நீளரக்கா வுன்படைக்குள் நீயொருதன் புயபெலந்தான்
ஆளரக்கா யென்சுவாமி அம்பிருந்து திகைக்குமென்றே

அம்பிருந்து திகைக்குமென்றே அறிந்தொருகுத் துவிட்டேன்
வெம்பிமறுகுத் துவைத்தால் விழுந்திறப்பாய் நிச்சயமே
எம்பெருமாள்க் கிளையவனை எய்துவிட்ட பழியெடுக்க
தம்பிரெகு ராமன்கையில் ராமசரமுண் டுகண்டாய்

### அனுமனிடம் இராமன் வருந்தி உரைத்தல்

ராமசர முண்டுமென நடந்தானே வாளனுமான்
தாமதுளபப் புயத்தான் தன்திருமுன் வந்துநின்றான்
சோமத்துங் கராமச்சந்திரன் துணையிழந்த வருத்தமதால்
நாமினிதான் செய்வதென்ன நாடுவிட்டுக் காடுறைந்தோம்

காடுறைந்து தாரமென்ற காதலியைக் கைநெகிழ்ந்தோம்
தேடுகின்ற வானரத்தைச் சேகரித்துத் திரும்பவந்தோம்
கூடுமுயிராய் வளர்ந்த குணத்தமியன் லட்சுமணர்
வாடுவது பொறுக்கரியோம் மாண்டுவிடப் பொறுத்தோமே

164.46. உலருதடா - வாடி வதங்குகிறதடா. 164.47. சிலை - வில். திட்டம் - உறுதி. 164.49. இளைத்தாயே - வலிமை குன்றிப் போனாயே. 164.50. மற்றொருத்தர் கீழ் விழுந்து சாவாரே - நீ ஆனதினால் என் குத்துக்குச் சாகாமல் இருக்கிறாய். பிறர் ஒருவராயின் இந்நேரம் கீழே விழுந்து மாண்டிருப்பார் என்ற பொருளில். 164.52. திகைக்கும் - என்ன செய்வது என்று அறியாமல் திகைக்கும். 164.54. வெம்பி - வாடி. மறுகுத்து - மீண்டும் ஒரு குத்து. வைத்தால் - விட்டால். 164.56. ராமசரம் - இராமன் கையிலுள்ள அம்பு. 164.58. தாமதுளபப் புயத்தான் - துளசிமாலையை அணிந்த, வலிமையான தோள்களுடையான்; இராமன். 164.59. சோமத் துங்க - பரிசுத்தமான சந்திரன்; இராமன் முகத்திற்கு உவமை. துணை - மனைவி; சீதை. 164.61. தாரம் - மனைவி; சீதை. 164.63. குணத் தமியன் - நற்குணத்தில் சிறந்த தம்பியன். 164.64. பொறுக்கரியோம் - பொறுக்கமாட்டோம்.

Challenged him thus: "Did you think
Our young Lord Lakshmaṇa is a weakling
That you shot your dart at him?
You are a coward, Sirrah!" And so saying
He gave a mighty blow to him
Upon his chest! It was like an arrow
Piercing a plantain stem; the blood
Pouring out of the demon's chest ran
Like a hot stream while the tusks
Of the elephants that had embedded
Within his mighty chest, fell down in a shower;
Rāvaṇa stood helpless, dazed by the powerful
Blow; agitated in mind and crazed,
He cried to Anumaṉ; "Are you Intiraṉ?
Is your hand of flesh and blood?
Or an iron pestle? Are you
The Moon or Sun or God of death?
O! you who came as an envoy to Jāṉaki,
You little monkey! you have whacked
Me with your fist; How can I
Survive your blow? See, Sirrah!
The blood pouring profusely! seeing you
My troops are running helter-skelter,
Crying in fear! Enough, Sirrah!
I am too baffled to fight with you:
O you sinner! you are no monkey;
See Sirrah, my armies are trembling.
Before you, withered and lifeless!
There is none so brave as you
Before the might of my bow!
But surely, you are a wicked fellow."

### ANUMAṈ'S REPLY

"You call me brave! but you are
Truly brave, O demon powerful!
You have received my blow,

மாண்டுவிட்டா னென்றுசொல்லி வானகரி நாமடுத்தால்
வேண்டுகின்ற தம்பியெங்கே மெல்லிநல்லாள் சீதையெங்கே
நீண்டவனே என்றுரைத்தால் நீதிமொழி ஏதுசொல்வேன்
ஆண்டுவரும் நாட்டவர்க்கும் அன்னையர்க்கு மென்சொல்வதே.

## தம்பியின் இறப்பு கண்ட இராமன் வருத்தம்

விருத்தம்

165. அன்னையும் பிதாவும் வேறாய் அயோத்திமா நகரை விட்டு
மின்னையு மிழந்து வேதன் விதியினால்ப் பிரியாத் தம்பி
உன்னையு மிழந்து யானு முய்வனோ உலகு தன்னில்
என்னையும் பிரியா தாவி எமன்கொள்ள மனம்வைத் தானோ.

## கலி விருத்தம்

166. மனைவி தேடலாம் மக்களைத் தேடலாம்
புனையு மாடையும் பூதலந் தேடலாம்
வினையைத் தேடொணா மெய்யுறு தம்பியே
உனையி ழந்துநா னுய்வது யேதென்றான்

## இலட்சுமணன் உயிர்த்தெழுதல்

நடை

167. உய்யும்வகை நானறியே னிளைய பெருமாளே
உன்னைவிட்டு நானிருப்ப தொருநாளு மில்லை
தெய்வநிலை யில்லையோ சிவகிருபை யிலையோ
தசரதற்கு யான்மகவும் சிவகிருபை யிலையோ

164.65. வான் நகரி நாமடுத்தால் - சிறப்பு வாய்ந்த அயோத்தி நகரில் நாம் சென்றால். 164.66. தம்பி - இலட்சுமணன். 164.68. நாட்டவர் - நாட்டு மக்கள். 165.1. மின் - மின்னல் போன்ற சீதை. 165.2. பிரியாத் தம்பி - என்னை என்றும் பிரியாத தம்பி. 165.3. உய்வனோ- பிழைப்பேனோ. 165.4. என்னையும் பிரியாத ஆவி - என்னை ஒரு நேரத்திலும் பிரிந்து அறியாத இலட்சுமணன் உயிர். 166.2. புனையும் - அணியும். பூதலம் - உலகம். வினையைத் தேடொணா மெய்யுறு தம்பி - என் கூடவே இணைந்திருந்து தொழிலாற்றிய, வேறெங்கும் இதுபோல் தேடி அறிய முடியாத உடலோடு பொருந்திய தம்பி; இலட்சுமணன் என்றவாறு. உய்வது - பிழைப்பது. 167.1. உய்யும் வகை - பிழைக்கும் வழி. இளைய பெருமாளே - இலட்சுமணனே. 167.2. தெய்வநிலை யில்லையோ - தெய்வத் துணையாகிய அருள் இல்லையோ. சிவகிருபை - சிவனருள்.

And only become weak thereby:
Listen demon! anyone else would
Have fallen down with a single blow
From my fist! Lofty demon!
Amongst all in your army,
You are truly the strongest!
But I hit you only once,
As I want my Lord's arrow
To find its mark into you!
Else, had I clouted you once more"
You had fallen dead without a doubt!
See, there is Rakurāma's arrow,
Waiting to avenge the insult
Of your shooting at his younger brother!
Telling Rāvaṇa that Rama's arrow was there
To take care of him, Aṉumaṉ
Came back to mighty-armed Rama
Adorned with wreaths of sacred-basil!
His face beautiful like the pure Moon,
Sorrowing at the absence of his spouse;
Said the Lord to Aṉumaṉ now: "Oh what is there
For us left to do now? Leaving the kingdom
We came to dwell in the wilderness;
Whilst there, I lost my beloved wife!
Collecting together the Vāṉara troops sent out
To Search for her, we came here at last.
I cannot bear even to see my brother wilt;
Dear as my own life, Lakshmaṇa of noble virtue:
But I have to bear now his loss.
If I were to go back to Ayōtti city.
They are sure to ask of me
"Where is your beloved brother
Oh, where is the gentle Sita, the good woman
O Noble Rama? What fair reply can I make
To them? To the mothers and to the people
Of the land, Oh, what can I say?"

வையகத்தில் தாடகையைக் கொன்றது கையானால்
மாதகலிகைக் குச்சாபந் தீர்த்தது காலானால்
தையலர்க்காய் மிதுலையில் வில்முறித்தது கையானால்
சானகிகற் பினியசத்தி ரியஸ்திரீ யானால்
குருமுனி வோர்களறந் தந்ததுமெய் யானால்
நற்றவ முனிவர்கட்கு ஆதிகுரு வானால்
கோனிலங்கை ராவணனை நான்செயிப்பே னானால்
குற்றமன்றத் தம்பியுயிர் பெற்றெழுந் திருப்பான்
ஆனமொழி யிதுரைத்து அஞ்செழுத்தை யுன்னி
அங்கையி னாலேதட வதம்பி யெழுந்தானே
வானவர்க் கபயச்செங்கை மார்பில் வைத்தபோது
வச்சிரம்போல் லட்சுமணர் மிச்சமா யெழுந்தார்

இராவணன் - மந்திரியர் ஆலோசனை

லட்சுமணன் றானெழுந்து பச்சைமாலைப் போற்ற
நிற்கிற படைகளெல்லாம் மெத்தத் சயித்தார்
அச்சமின்றி யென்தம்பியை யெய்தவ் ராவணனை
அறுத்தல்லா மலிருப்ப தில்லையான் பொருதிட்டாலும்
நிச்சயமாய் மாலுரைக்கச் சேனை தெழும்பி
நீட்டியங்கே தாட்டிமையாய் கோட்டையி லடுக்கப்
பச்சைமால் படைநடுங்கப் பத்துத் தலையானும்
பார்த்திருந்து யானைவிட்டு சேர்த்தபடை வெல்வோம்

167.3. தாடகை - ஓர் அரக்கி. மாது - பெண். 167.4. தையலர் - பெண்; சீதையைக் குறித்தது. சத்திரிய ஸ்திரி - அரச குலத்துப் பெண். 167.5. ஆதி குரு - குருவுள் முதலானவர். 167.6. கோன் - அரசன். குற்றமின்றி - எந்த ஊனமுமின்றி. 167.7. அஞ்செழுத்து - 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து. உன்னி - நினைத்து. அங்கையினாலே - அழகிய கையினாலே. எழுந்தானே - உயிர்பெற்று எழுந்தானே. 167.8. வானவர்க்கு அபயச் செங்கை - தேவர்களுக்கு அபயம் அளிக்கும் சிவந்த கை. வச்சிரம் போல் - மிக உறுதியான வச்சிராயுதம் போல. 167.9. மெத்த அதிசயித்தார் - மிகுதியும் அதிசயம் கொண்டனர். எய்த ராவணன் - அம்பினால் எய்த இராவணன். 167.10. அறுத்ததல்லாமல் இருப்பதில்லை - கொன்று ஒழிக்காமல் ஓய மாட்டேன் என்ற பொருளில். பொருதிட்டாலும் - போர் செய்தாலும். 167.11. மால் - திருமாலாகிய இராமன். தாட்டிமையாய் - வலிமையுடனே. அடுக்க - பொருந்த. 167.12. படை நடுங்க - இராமன் படை இராவணன் படையை நடுங்க வைக்க.

## RAMA'S GRIEF AT THE DEATH OF HIS BROTHER

165. "As ordained by the Lord of the Vēdas,
Was it not enough to part from father and mother
And leave Ayōtti city and lose Sita,
Bright as lightning? Should I lose you too,
O brother mine, ever inseparate from me?
Can I survive your great loss?"

166. One can seek far and get a wife; on earth.
One can acquire children or garments fine:
But where can I get a brother like you, ever close to me
In life and action, almost a part of my own body?
How can I survive after losing you?

## LAKSHMANA REVIVES

167. O my dear younger brother, I know not
How to live after you have left me;
No, not for a day will I exist without you;
Is there no God! Is Siva's grace no longer with us,
No longer with me, son of Tacarata?
Oh! if it is true that this hand of mine
Slew the demoness Tāṭakai; that this foot of mine
Redeemed the curse of Akalikai and that this hand
Again, broke the mighty bow in Mitilai;
If it is true that Jāṉaki is a chaste,
Kṣhatriya woman: if it is true that
Holy sages have given us boons; that sage Vaciṭṭar
Of great askesis is my primal preceptor;
If it is true that I will surely vanquish Rāvaṇa,
Then my brother shall return to life
Wholly unaffected, the same Lakshmaṇa as before!"
Swearing thus, meditating upon the mystic pentad.
He gently caressed his brother with his beautiful hand,
And Lakshmaṇa woke up as if from sleep!
Strong as adamant and unharmed, rose Lakshmaṇa,

சேர்த்தபடை வெல்வதற்கு நான்செல்ல ணமானால்
தீரனனுமான் குத்தினசெம் புண்ணாற வில்லை
ஏத்தமைந் தனதிகாயன் லக்கண னக்ஷயன்
எல்லோரு மிறந்து விட்டாலிந் திரசித்துண்டு
மாற்றலரை வென்றிடும் மகனிந்திர சித்தை
வாருமென் றருகழைத்து வார்த்தை யேதுசொல்வான்
நேற்றுநாக பாசம்விட்டுக் கட்டிவந்தே னென்றாய்
நீயும்மேகம் புக்கநானும் நெஞ்சில்குத்துப் பட்டேன்

குத்துமுன்னே ராமனுக் கிளையவரைக் கொன்றேன்
கொன்றவன் பிழைத்துவந்தான் கூற்றுமவர்க் கச்சம்
சற்றுநேரம் போர்க்களத்தில் காணவில்லை யானால்
தட்டழிந்து வந்திலங்கைப் பட்டணம் பிடிப்பான்
சுற்றுக்குச்சுற் றுக்குரங்குச் சேனைகளைப் பாராய்
தூங்கிவந்த வானரங்கள் ஆங்காரத்தைப் பாராய்
ஒத்துநீ படைக்களத்தில் சென்றுமே புகுந்து
ஓடிவானரத் தைக்காட்டி லோட்டிவெற்றி கொள்வாய்

**படைகளைத் திரட்டி இந்திரசித்து போருக்குத் தயாராகும் நிலை**

வெற்றிகொள்ளு மென்று சொன்னதந்தை யரைப்போற்றி
மேகநாதன் கொடியபல சேனைகளைக் கூட்டித்
தத்திதத்தி யாகப்படை மந்திரி மார்சூழத்
தன்பதியில் வாழ்பவர்கள் கண்டதி சயிக்க
முத்துநவ ரத்தினத்தால் முடியது புனைந்து
மோகமுள்ள ஆபரண மாலைக ளணிந்து
சித்திரத் தேரேறியவன் கைச்சிலையு மேந்திச்
சிந்தைபெற சந்தனமும் குங்குமமும் பூசி

167.13. செல்லணமானால் - செல்ல வேண்டுமானால். தீரன் - வலிமையானவன். 167.15. மாற்றலர் - பகைவர். ஏது - என்ன. 167.17. கூற்றும் அவர்க்கு அச்சம் - எமனும் அவர்க்கு அஞ்சுகிறான். 167.18. தட்டழிந்து - இராவண சேனைகளை நிலைகுலையச் செய்து 167.19. சுற்றுக்குச்சுற்று - இலங்கையின் திசைகள் தோறுமுள்ள கோட்டைகளைச் சுற்றி. ஆங்காரம் - சினம்.. 167.20. ஒத்து - வானர படைகளுக்கு இணையாகச் சென்று. 167.21. மேகநாதன் - இந்திரசித்து. 167.22. தத்திதத்தியாக - கூட்டம் கூட்டமாக. பதியில் - நாட்டில்; இலங்கையில். 167.23. முடி - கிரீடம். மோகமுள்ள - கண்டோர்க்கு ஆசையைத் தரவல்ல. 167.24. சித்திரத் தேர் - அழகிய தேர். சிலை - வில். சிந்தை பெற - கருத்துத் துலங்க.

As the ruddy hand that ever protects the celestials,
Was placed by the Lord upon his brother's chest!
As Lakshmaṇa got up and adored the Lord,
All the troops standing by marvelled
At this miracle! Said the Lord, "I shall not rest
Till I destroy Rāvaṇa who fearlessly
Shot at my brother, whoever may war against me;
This is certain!" And now once more,
The Vāṉara legions did strongly invest
The enemy's fort, terrifying the demons within.

## RĀVAṆA DELIBERATES WITH HIS MINISTERS

The ten-headed once saw all this
And worried, spoke this: "Whom shall we
Send to conquer these foes?
If I were to go myself,
The wound on my chest is not healed yet,
Caused by heroic Aṉumaṉ:
My noble sons Atikāyaṉ, Lakkaṇaṉ and Akṣayaṉ
Are all dead. There is only Intirajit who can
Defeat the enemy at the gate! Go someone
And fetch my son here." And when
Intirajit arrived, Rāvaṇa told him: "Yesterday
You boasted that you had tied them up
With *Nākapācam*: when you went
Back to your abode in the clouds
Here on the field, I got punched on my chest,
Before which I had killed Rama's younger brother,
But lo! the dead came back to life: even death
Seems to be scared of them. If we are not
Seen on the battle field soon,
Surely they will cause havoc
And capture our city: see there!
Ring after ring of monkey regiments!
Look at their haughtiness, well-rested after
Their sleep of Death! Go you now into the field
And chase the monkeys back to their jungles."

*பூசியே கதம்பமும் புழுகுட னணிந்து*
*போற்றியே யமைச்சர்கள் படைகளுஞ் செரும*
*வாசனைசெய் ராகத்தோடு வாத்தியம் முழங்க*
*வந்தடுத்து மேகநாதன் வானரத்தைப் பார்த்தான்*
*தோசிகண் பொறிபறக்கத் துட்டத்தன மாகச்*
*சுடர்வனச் சந்திரன் வெருவிபதறிவிழுந் தோடப்*
*பேசியவாய் புகையெழுப்ப அக்கினிமுச் செறிய*
*பெலத்ததொரு பெரும்படையை மலைக்கவும்செய் தானே.*

### இந்திரசித்து விபீஷணனைப் பழித்துரைத்தல்

*விருத்தம்*

168. *செய்யகண் சீறிப் பார்த்துத் தேரினில் நின்று கொண்டு*
*கையொடு கையைத் தட்டிக் கனவிபீ ஷணன்பால் கிட்டிப்*
*பையரா நாக பாசம் பறத்தின சிற்றப் பாநீ*
*நெய்யின்வாய் நெருப்புப் போலவே லட்சை கெட்டவனா ரென்றான்.*

*நடை*

169. *நாரண னெங்கே யிளையவ னெங்கே*
*நல்ல விபீஷணனே சொல்ல வாடா*
*காரணன் நீசிறு தந்தை யெனக்கே*
*காட்டினில் வேடரைக் கூட்டிக் கொண்டாயே*
*கூட்டித் தமையனைக் கொல்லத் துணிந்தாய்*
*கொட்டி யபகீர்த்தி கேட்டுக் கொண்டாயே*

167.25. கதம்பம் - பல மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை. புழுகுடன் - கஸ்தூரி மானிலிருந்து கிடைக்கும் புனுகுடன். செரும - சேர்ந்து செல்ல. 167.26. ராகம் - இனிய ஓசை. வாத்தியம் - இசைக்கருவிகள்; படை முரசங்கள். 167.27. தோசி - பாவி; இந்திரசித்து. கண் பொறி பறக்க - கண்ணில் கோபம் என்னும் தீ பறக்க. துட்டத்தனமாக - 'பிழைக்கும் வழிவகை ஏதென்று அறியாமல்' என்ற பொருளில். சுடர் வனச் சந்திரன் - ஒளி விட்டு பிரகாசிக்கும் சந்திரன். வெருவி - அச்சம் கொண்டு. 167.28. பெலத்ததொரு பெரும்படையை - வலிமையானதொரு பெரும்படையாம் இராமர் சேனையை. 168.1. சீறி - சினத்து. 168.2. கிட்டி - அருகில் வந்து. 168.3. பையரா நாக பாசம் பறத்தின சிற்றப்பா - நச்சு பையை உடைய நாக பாஷணம் தன்னைச் செயலற்று போகும்படி செய்த சிற்றப்பா; விபீஷணா. 168.4. லட்சை கெட்டவன் - வெட்கம் கெட்டவன். ஆர் - யார். 169.1. நாரணன் - நாராயணனாகிய இராமன். இளையவன் - இலட்சுமணன். 169.2. காரணன் - அரசன். கூட்டிக் கொண்டாயே - நட்பாக்கிக் கொண்டாயே. 169.3. கொட்டி - புகழைக் கவிழ்த்து. அபகீர்த்தி - நிந்தை; பிறர் பழிக்கும் சொல்.

### INTIRAJIT GATHERING HIS ARMIES FOR THE BATTLE

Making his obeisances to his father who blessed him
That he may gain victory, Mēkanātan gathered
Together fierce troops many; and surrounded
By his counsellors, band after band of them,
He prepared for the battle, to the wonderment
Of the citizens! Dressed splendidly with enchanting
Chaplets diademed with a crown of pearl,
Ruby and other precious gems, he climbed
On to his chariot beautiful, his bow in his hand!
Bedaubed he was with sandal-paste and kumkum,
And fragrant civet on his body and bedecked
With garlands woven of many flowers!
His ministers crowded around him.
Thus, while the instruments played musically,
In tune with the drums resounding,
He came upto the field and looked
At the Vāṉara forces. The sinner demon's eyes
Emitted sparks of fire, at which the very moon
Lambent, did flee in fear! Breathing fire, his
Mouth puffing smoke, he appeared a terror
To the huge army of monkeys!

### INTIRAJIT ABUSING VIPĪṢAṆA

168. Standing on the deck of his chariot,
He stared with wrathful eyes ruddy,
At Vipīṣaṇa on the other side!
Clapping his hands to draw his attention,
He approached him and began
To abuse him roundly; "You are
The wicked uncle, who rendered ineffective
My deadly dart of the serpent,
With the poison-sac! Aren't you
The shameless ignoble one? Like ghee before fire,
You will be consumed sure!"

*தீட்டிய பெண்டிலை வீட்டிலே வைத்தாய்*
*தீச்சடை யைத்துணை யாகவே வைத்தாய்*

*வைத்தண் ணன்மக்களைக் கொல்லத் துணிந்தாய்*
*மாணிடர் பக்ஷம் வருத்திக் கொண்டாயே*
*பெற்றவ ளோடு பிதுர்க்க ளிருந்த*
*பெரும்பதி விட்டுநீ பேர்ந்து கொண்டாயே*
*பேர்ந்து கொண்டாயினி வாழ்ந்திருப் பாயே*
*பேசா திருந்து பேய்போல் முழித்தாயே*
*ஏந்தல் செய்தார வரின்றைக் கிறப்பார்*
*என்னூரிலே வந்தா லுன்னையுங் கொல்வேன்*

*கொல்வேனடா மெத்த கூறு கெட்டவனே*
*கோழை யரக்கர் குலத்தில் வந்தாயே*
*செல்வத்தை விட்டி றக்கத் துணிந்தாயே*
*சிற்றப்பனே லச்சை கெட்டுப் போனாயே*
*கெட்டுப் போனாயென்று மெத்தச் சினத்துக்*
*கேசரி மார்க்கத்திலே சென்று லாவி*

**இந்திரசித்து அனுமனைப் பார்த்துக் கூறுமுறை**

*அட்டி சொன்னபல பேரைய தட்டி*
*ஆண்மை யுடைய வனிந்திர சித்து*
*தட்டுப் படாத நிலத்திலே கூடித்*
*தம்பி யிளையவர்தன் மேலே சாடி*

169.4. தீட்டிய பெண்டில் - மை தீட்டப்பட்ட கண்ணை உடைய மனைவி; விபீஷணன் மனைவி. தீச்சடை - திரிசடை; விபீஷணன் மகள். துணையாகவே - சீதைக்குத் துணையாகவே. 169.5. பக்ஷம் - பக்கம். வருத்தி - வரச்செய்து. 169.6. பிதுர்க்கள் - முன்னோர்கள். பெரும்பதி - பெரிய மாளிகை; இராவணன் அரண்மனை. பேர்ந்து - நீங்கி. 169.8. ஏந்தல் செய்தார் - பெருமை செய்தார். 169.9. மெத்த கூறு கெட்டவனே - அதிகமான அளவு அறிவு கெட்டவனே. 169.10. லச்சை கெட்டு போனாயே - வெட்கம் கெட்டு போனாயே. 169.11. கேசரி மார்க்கம் - குதிரைப் படைக் கொட்டில். 169.12. அட்டி சொன்ன - தடை வார்த்தைகள் சொன்ன. 169.13. தட்டுப்படாத நிலத்திலே கூடி - நிலம் சென்று முட்டாத இடமாகிய; ஆகாயத்தில் சேர்ந்து. இளையவர் - இலட்சுமணர்.

169. "Where is Rama? Where is his brother?
A king you are and my father's own brother!
But you have allied yourself
With the hunters of the forest, with whom,
You are planning to kill,
Your elder brother! Ruining your name,
You have invited ill-repute from other!
Leaving at home your wife
(With kohl-fed eyes,) you have
Placed your daughter Tiricaṭai
As a friend and companion to Sita!
You have decided to kill the children
Of your brother; you have joined
Wholly with mere humans!
You have shifted away from the
Great city of your parents and forebears!
Do you hope to live peacefully?
Like a ghoul you blink tongue-tied
And shame-faced! Those who made you great
Will die today! If you come to my place
I shall kill you also; Kill you I shall,
You witless fool! How could a coward
Like you be born in the demon-race?
O you have chosen to die,
Not caring for our opulence, O uncle!
You have lost your sense of shame!
Surely you are lost forever!" Thus,
In wrath extreme he chastised his uncle.

### INTIRAJIT SPEAKS OF ANUMAN

Riding on his powerful horse, Intirajit
Full of manly valour went up in the air,
Scorning the ground, and uttered challenges
To Lakshmaṇa and Anuman never-submissive;

மட்டுப் படாத அனுமனைப் பார்த்து
வாலிலே தீவைத்த வானரம் நீயோ
வானரமே யினிச்சண் டைக்கு வாடா
வாயைக் கிழித்து வதைக்கிறே னென்றான்
கோனரன் ராமன் பெண்டனைத் தோற்றுக்
குரங்குப் படைக்குயர் கோமானும் நீயோ

### இந்திரசித்தின் போர்த்திறமை

நீயோ வெனச்சொல்லி எட்டெட்டு திக்கும்
நீட்டிச் சிலை வளைத்தெய்ய லுற்றானே
வாய்பிளந்தே எங்கும் வானரச் சேனை
வாடி மலங்கியே ஓடலுற் றாரே
ஓடவும் மந்திர வாளுறை விட்டு
ஓரெட்டுத் திக்கும் உறுக்கி வளைந்து
சாடிடச் சாரி வலசாரி சுற்றித்
தக்க குரங்கு தளத்தை வளைந்து
வளைந்தொரு பக்கமும் போக விடாமல்
வானரச் சேனையைத் தானறுத் தானே
தளைகவி வெள்ளம் அயன்படை கொள்ள
சண்டை யிலேகண் டதுண்டங் களாக
துண்டங் களாகவே வானரச் சேனை
சூழக் கிடந்து துடிப்பதைப் பாராய்

169.14. மட்டுப்படாத - யாருக்கும் அடங்காத. 169.16. கோனரன் - பேரரசன்; இராமன். பெண்டு - மனைவி; சீதை. கோமான் - தலைவன். 169.17. சிலை வளைத்து - வில்லை வளைத்து. 169.18. மலங்கியே - திகைத்தே. 169.19. மந்திர வாள் - சிவனிடமிருந்து பெறப்பட்ட மந்திர வாள். உறை - வாளை வைத்திருக்கும் உறை. உறுக்கி - அச்சம் கொள்ளச் செய்து. வளைந்து - மந்திரவாளால் வானரப்படைகளை வளைத்துப் பிடித்து. 169.20. சாரி - சூறைக்காற்று. வலசாரி - வலப்பக்கமாய் வீசும் சூறைக்காற்றைப் போல. 169.21. தான் அறுத்தானே - இந்திரசித்தாகிய இராவணன் மகன் கொன்றொழித்தானே. 169.22. தளை கவி வெள்ளம் - மிகுதியான குரங்குப் படை. அயன்படை - பிரம்மாஸ்திரம்; இதை வில்லில் வைத்து விட்டால் அனைவரும் மூர்ச்சையாகி இறந்து விடுவர்.

"Are you the monkey whose tail was set fire to?
Monkey, come thou to fight with me!
I shall tear your mouth and kill you:
Aren't you one of the chiefs of the monkey army
Of king **Rama** who lost his wife?"

### THE MARTIAL VALOUR OF INTIRAJIT

Thus proudly challenging his foes, Intirajit
Bent his bow and began to shoot
His arrows at them: mouths agape, the Vāṉaras
In consternation did fly from the field!
Then drawing his magic sword from the scabbard,
In all the eight directions, he wielded it
Against the monkey bands; wheeling now to the right
And now to the left preventing their escape,
Like a gale, he destroyed the foes,
Using the weapon irresistible, the dart of Brahma!
Into pieces fell the monkeys! See how the Vāṉaras
All of them lie in the field mutilated to many pieces!
See the *Piramāstiram*[145] causing havoc!
Legs and hands, severed, do fly in the air!
The divine weapon killed all in various ways;
The leaders and the commanders all of them did die;
Some that became dazed and witless,
Died soon after, along with the troops:
The young Lord Lakshmaṇa also fell.

145 *Piramāstiram* - The most powerful and invincible weapon in a warrior's quiver.

### இராமன் சேனைகளை வென்ற இந்திரசித்து இல்லம் திரும்புதல்

கண்டமிடும் பிரம அத்தி ரமங்குக்
காலொடு கைதுள்ளிச் சாவது பாராய்

சாவதிலே சிலமாய் கையைச் செய்தான்
தலைவரிலே பலமாய் கையைச் செய்தான்
போவதி லேசில வானரச் சேனை
புத்தி மயங்கிக் கிடக்கவுஞ் செய்தான்
செய்து குரங்குப் படைகளைக் கொன்றான்
சேர்ந்திளை யோனும் மயங்கி விழுந்தான்
எய்து பிரமன் படைத னையே
இலக்கு வனோடு கவித்திர ளையும்

மெய்து ணித்தே னென்று மாளிகைபுக்கி
வீரனி ராவணனைக் கண்டு போற்றி
ஐயனாஞ் சிற்றப்பன் தன்னை மதியா
தறைந்ததும் அங்குள்ள வானரச் சேனை
சேனை யெல்லாம் பிரம அஸ்திரத்தாலே
செயங்கொண்டு வந்தே னெனவுரை செப்ப
ஆன மகனை யரக்கன் மகிழ்ந்து
ஆணிப்பொன் மேடையில் வீற்றிருந் தானே

### இராமன் போர்க்களத்தைப் பார்த்து வருந்துதல்

இருந்தானே ராமன் தனித்தங்கு நின்று
ஏங்கி யிளைத்திடச் சாம்புவன் வந்தான்
தருஞ்சாம் புவன்வர மாதவ ராமன்
தாசன் விபீஷணன் றானும் வந்தானே
வந்தபேர் மூவரு மொன்றாகக் கூடி
வானரச் சேனை கிடப்பதைக் கண்டு
எந்தத் தலந்தனிலுஞ் சுற்றிப் பார்த்து
இறந்ததைக் கண்ணாலே கண்டு மலங்கிக்

169.24. கண்டமிடும் - உடலைத் துண்டிக்கும். 169.25. மாய்கை - மாய வித்தை. பல மாய்கை- பல மாயச் செயல்கள். 169.26. போவதிலே - உயிர் போவதிலே. 169.28. பிரமன் படை - பிரம்மாஸ்திரம். இலக்குவன் - இலட்சுமணன். கவித்திரள் - குரங்குக் கூட்டம். 169.29. மெய் துணித்து - பிரம்மாஸ்திரம் எய்து; இராமனது படைகளின் உடம்புகளைச் சாய்த்து. மாளிகை - அரண்மனை. புக்கி - புகுந்து. 169.30. ஐயன் - தலைவன். அறைந்ததும்- கூறினதும். 169.33. சாம்புவன் - வானரப் படைத்தளபதிகளுள் ஒருவன். 169.34. தாசன் - தொண்டு செய்பவன்; விபீஷணனைக் குறித்தது.

## INTIRAJIT RETURNING TO RĀVAṆA REPORTS TO HIM ABOUT HIS EXPLOIT

Going back to his father, Intirajit bowed to him
And told him how he had cut to pieces
With the help of the *Piramāstiram* Lakshmaṇa
Along with the enemy forces entire,
And how he had chastised his uncle Vipīṣaṇa.
On hearing which the demon-chief was pleased,
As he sat with his son on a dais of beaten gold.

## RAMA VIEWING THE CARNAGE IN THE FIELD

Alone stood Rama disconsolate and grieving,
When he was joined by Jāmpavāṉ and Vipīṣaṇa
Devotees of Mātavarāma; the three of them
Went round the field and saw all the troops
Lying dead except handsome Aṉumaṉ,
Who rose and came up to his master.

### இராமனின் மந்திராலோசனை

கண்டவர் திட்டம் விசாரித்துப் பார்க்கக்
  கட்ட முகனனு மானும் பிழைத்தான்
அண்டர் பெருமானி டத்திலே வந்தான்
  ஆகவே நால்வருமா யொன்றாய்க் கூடிக்
கூடித் திகைத்து மறுகிக் கலங்கிக்
  கோவிந்த னார்மொழி கூறிடு வாராம்
தேடியே வானரச் சேனைகள் மாளச்
  செய்தானே யிந்திர சித்தென்ற பாவி
பாவிக்குச் செய்தியினி மேலு ரைப்பேன்
  பட்டார் பிழைக்கப் பயனேது செப்பீர்

### சஞ்சீவி மலையில் மூலிகை எடுக்க முடிவெடுத்தல்

மேவிச்சிக் கந்தன் மலையரு ணாசலம்
  வெள்ளிக் கயிலா சத்துக்கும் வடக்காய்
தாவிப் பருவத மெல்லாங் கடந்து
  தங்க மகமேரு வுக்கும் வடக்காய்
வாவிகள் தேசம்மலர்க் காவுச் சோலை
  வளைந்த வடக்குக் கடலுக்குந் தெற்காய்
தெற்காக வெற்பொன்றில் சஞ்சீவி யுண்டு
  செத்தார் பிழைப்பா ரதுகொண்டு வந்தால்
சக்காகக் கார்க்கு மலையனு மானே
  சாமசஞ் சீவி கொண்டோடி வாவென்ன
ஓடிவா வென்ன நொடிக்குள்ளே சாடி
  உன்னி நிமிர்ந்துயரப் பாய்ந்து சென்று

169.37. திட்டம் – போர்க்கள நிலை. 169.38. அண்டர் பெருமான் - தேவர் தலைவன்; இராமன். 169.39. மறுகி - வருந்தி. 169.41. பயனேது - வழியென்ன. 169.42. மேவி - பொருந்தி. சிக்கந்தன் மலை - சஞ்சீவி மலைக்கு போகும் வழியிலுள்ள ஒரு மலை. அருணாசலம் - அண்ணாமலை; தற்பொழுது இது திருவண்ணாமலை என்றழைக்கப் படுகிறது. கயிலாசம் - கயிலை மலை; இமயமலை; இம்மலையில் சிவன் உறைவதாக ஐதீகம் உள்ளது. 169.43. மகமேரு - மகாமேரு மலை; சிவன் இம்மலையை வில்லாய் வளைத்தான் என புராணக் கதை உள்ளது. 169.44. வாவி - நீர்த் தடாகம். 169.45. வெற்பு - மலை. 165.46. சக்காக கார்க்கும் - கண் போன்று காக்கும்; விரைந்து காக்கும் எனினும் அமையும். சாமசஞ்சீவி - சமயத்தில் (நேரத்தில்) காப்பாற்றும் சஞ்சீவி மலை. 169.47. உன்னி- உந்தி.

## RAMA TAKES COUNSEL WITH THE LEADERS PRESENT

As the four of them stood in anguish
Wondering what was to be done next,
Kōvinta spoke thus to them; "O, the sinner,
Intirajit has killed all our forces:
What is the way to restore them to life!"

### IT IS RESOLVED TO BRING THE HERB FROM SANJEEVI MOUNTAIN

And the Lord said to Anuman
"Beyond the Arunachala hill, north of argent Kailas
And going beyond the golden Mount Meru,
Crossing lakes and flowery groves, south of the sea
In the north, is the mountain called Sanjeevi![146]
As it contains a life-restoring herb
If it is brought here, the dead will come
Back to life! O, Anuman! Who guards us ever
As eyes are guarded! go you and bring
The timely revivifying herb, Sanjeevi!
Quickly go and return soon."
In a moment Anuman stretched himself
And leaping up in the air, went North,

146. Sanjeevi - Legendary hill in the North where the life-restoring herb Cañcivi is said to grow

### அனுமன் மலையைக் கொண்டு வருதலும் இறந்தவர்கள் பிழைத்தலும்

கூடி மருத்து மலைதனைக் கண்டு
கூண்டவர் சொற்படி மூன்று மருந்தும்
மூன்று மருந்தையும் தேடிப் பிடுங்க
முடியா தெனவே அடியோடே பேர்த்து
ஏண்டு வரச்சிவன் சத்தி யிடத்தில்
ராகவன் போர்க்காண்போம் நாளை நாமென்ன
பேசி யிருக்க அரைநாழிக் குள்ளே
பெரியோ னிடம்வர வாச மெழும்ப
வாச மெழும்ப வயன்படை யாலே
மாண்டா ருயிர்பெற் றெழுந்திருந் தாரே.

#### வானரங்களின் மகிழ்ச்சி

விருத்தம்

170. எழுந்திருந்து வானரமுந் தலைவன் மாரும்
இளையவரும் விபீஷணர்சொல் மந்திரி மாரும்
தொழுந்திரு மாலே சரணசரண மென்றார்
தூயவனே மாயவனே சரண மென்றார்
விழுந்திறந்த சேனையெல்லா முயிர்த்தந் தாண்ட
மேகவர்ன ராகவனே சரண மென்றார்
அழுந்துகின்ற வரக்கருயிர் முடிப்போ மென்று
ஆர்ப்பரித்துக் கோட்டையில்வந் தடர்ந்திட் டாரே.

நடை

171. அடர்ந்தி லங்கையைத் துடந்தது வானரம்
அதுபா ரித்துப் பாரெனவே சீறினர்
கடந்து போர்செய்ய மடங்கி ராக்ஷசர்
கலங்கி ஓடினர் மலங்கி வாடினர்

169.48. கூண்டவர் - கூறியவர்; இராமர். 169.49. பேர்த்து - பெயர்த்து. 169.50. ராகவன் - இராமன். 169.51. பேசியிருக்க - சிவன் உமையவளிடம் இராமன் நடத்தும் போரை நாளைக்குக் காணலாம் எனப் பேசியிருக்க. பெரியோன் - இராமன். வாசம் எழும்ப - சஞ்சீவி மலையிலிருந்து மூலிகை வாசனை எழும்ப. 169.52. அயன்படை - பிரம்மாஸ்திரம். 170.2. தூயவனே, மாயவனே - இராமனே!. 170.3. ஆண்ட - அனுக்கிரகம் செய்து ஆளச்செய்த. 170.4. கோட்டையில் - இராவணன் கோட்டையில். 171.1. அடர்ந்து - சேர்ந்து. துடந்தது - 'தொடர்ந்தது' என்பதின் பேச்சு வழக்கு. பாரித்து - தோற்றம் பார்த்து. 171.2. மடக்கி - பின்வாங்கி. மலங்கி - குழப்பமடைந்து.

And as ordered by the Lord, tried to identify
The three rare plants growing there; pressed for time,
He uprooted the hill entire and came back
To Lanka! Even as Siva in Kailas was telling,
Sakthi his spouse; "Tomorrow we shall see Rama's fight!"
In the space of half a *nāḻikai* Aṉumaṉ
Came back to great **Rama** holding aloft
The medicinal mountain in his hand!
The powerful aroma from the life-giving herb
Did revive at once all those,
Who were slain by the divine weapon!

### THE VĀṈARAS REJOICE

170. The revivified Vāṉaras and their leaders
Lakshmaṇa, Vipīṣaṇa and the ministers
Bowed at the feet of Lord **Rama** crying;
"Refuge, refuge!" All the troops that had died
And come back to life cried, "Refuge, cloud-hued Rākava!"
Roaring boisterously that they would end the lives
Of the troublesome demons, they surged
Towards the gates again.

171. Again they went close to the ramparts
And looking at the battlement they shouted
And hissed in anger; at which the demons
Retreated in confusion helter-skelter.

### இந்திரசித்து யாகம் வளர்த்தல்

வாடின போது மகாமுடி மன்னன்
மத்தெறி யுந்தயி ரொத்து மலைந்திட
ஆடி மலங்கிய வன்றரு புத்திரன்
அந்திர வேள்வி செய்யிந்திர சித்து
இந்திர சித்து மனது கலங்கி
இறந்தவர் மீண்ட வதிசயங் கண்டு
விந்தை யிலாயுத மும்பெற வேண்டி
மேகத்தில் சென்று யாகம் வளர்க்க

### விபீஷணன் யாகவளர்ப்பைக் காணுதல்

யாகம் வளர்க்க விபீஷணர் கண்டு
அம்பர மானதில் வெம்புகை போது
சாக நினைத்தவ னிந்திர சித்து
தானொரு வேள்வி வளர்ப்பது காணு
காண வவன்செயும் வேள்வி யிலேதான்
கனபடை யரனது கைவச மாகில்
ஆண்மை யுடன்பய லாரையும் வெல்வான்
அனுமார் சென்று அழித்திட வேணும்

### அனுமன் யாகம் அழித்தல்

அழித்திட வேணு மெனப்பகர் போதில்
அனுமான் குதித்தே யாகம ழித்தான்
செழித்த விபீஷணனே சொல்லி விட்டான்
சென்ற வன்றனை நான்கொன் றிடுமெனவே
கொன்றிடு மென்று விபீஷணன் மேலே
கொட்டி நெடுங்கணை தொட்டிடு வரனாம்

171.3. மகாமுடி மன்னன் - பெரிய கிரீடம் அணிந்த மன்னன்; இராவணன். மத்தெறியுந் தயிரொத்து மலைந்திட - 'தயிரைக் கடையும் மத்து மிகுந்த சுழற்சிக்கு உள்ளானாற் போல இராவணன் திகைத்திட' என்றவாறு. 171.4. தரு புத்திரன் - இராவணன் புத்திரன்; இந்திரசித்து. அந்தர வேள்வி - ஆகாயத்தில் யாகம். 171.6. விந்தையில் - ஆச்சரியப் படும்படியான. 171.7. அம்பரம் - ஆகாயம். வெம்புகை - அதிகமான புகை. 179.9. கனபடை- மிகுதியான படை. 171.10. பயல் – சிறுவன்; இந்திரசித்து. ஆரையும் - யாரையும். 171.11. பகர்போதில் - கூறும் பொழுது. 171.13. கொட்டி - அம்பைச் செலுத்தி.

## INTIRAJIT PREPARING TO PERFORM A SPECIAL SACRIFICE

When the great demon emperor became agitated
Like curds when churned by a churning-rod,
His son worried sorely at the miracle
Of the dead coming back to life,
Went up behind the clouds
To perform a sacrifice extraordinary,
For acquiring special weapons for use
Against the foes; which seeing, Vipīṣaṇa
Began to wonder at the smoke exceeding
Coming out of the cloud:
"He, who was thinking of death, Intirajit, is now
Performing some sacrifice mysterious!
If he successfully completes it, irresistible
Weapons deadly, he would acquire!
The fellow will vanquish all others then:
Aṉumaṉ must go and destroy the Yagna
Before that happens," said Vipīṣaṇa

## AṈUMAṈ DESTROYING THE SACRIFICE (NIKUMPALAI)

As suggested by Vipīṣaṇa, Aṉumaṉ
Went to the place where Intirajit was performing
The great sacrifice and leaping upon it
He stamped out the Yagna! Enraged
At this, Intirajit, realising it must have been
The work of Vipīṣaṇa, swore to kill his uncle
And taking up his bow, he sought out Vipīṣaṇa
To shoot him dead with his long arrows.

### இந்திரசித்து - இலட்சுமணன் போர் செய்யும் காட்சி

அன்றிளை யோனு மிந்திர சித்தும்
அதுபா ரிதுபா ரெனவே பொருதார்
பொருதா ரிளையோன் புவிமீதில் நின்று
பொன்றிடுவான் மகனண் டத்தில் நிற்க
இருபேர் பொருகையில் மாருதி யடுத்தான்
இளைய பெருமாளைத் [75]தோளி லெடுத்தான்
தோளி லெடுத்திட யிளையோனு முயர்ந்து
துட்டன் மகனொடு கிட்டிப் பொருதார்

வேளையி லவனோடு வாளியா லேதான்
மேக வர்ணர்க் கிளையோ னமர்செய்தோர்
செய்த சமரை எழுத்தி லடக்கிச்
செப்பப் புலவரி னித்து லையாதே

மெய்ய னுமானொரு வாகன மானான்
வீரனி ளையவர் போர்செய்வ தானான்
போரது பொருவதி லிந்திர சித்து
பூமியில் வந்து பொருது நின்றானே
தீரன் ஸ்ரீராமனைப் போற்றி யனுமான்
சிங்க மெனத்தான் செங்கை யடித்தான்

### அனுமன் இந்திரசித்தைத் தாக்கிப் பொருதல்

அடித்தா னிடித்தான் பொடித்தான் நற்கரத்தான்
அனுமனைக் கண்டவரும் மகிழக்
கடித்த னுமானிரு காலா லுதைத்துக்
கையது கொண்டவன் மெய்துடித் தானே.

171.14. அதுபார் இதுபார் எனவே - எனது போர்த் திறமையை அதோ பார்; இதோ பார் என்றே. 171.15. புவி - பூமி. பொன்றிடுவான் மகன் - எதிரிகளை அழிப்பதில் வல்ல இராவணன் மகன்; இந்திரசித்து. அண்டம் - வானம். 171.16. மாருதி - அனுமன். அடுத்தான் - நெருங்கினான். 171.17. துட்டன் மகன் - துஷ்ட செயல்கள் புரியும் இராவணன் மகன்; இந்திரசித்து. இட்டி - நெருங்கி. 171.18. வாளி - அம்பு. 171.19. புலவர் இனித் துலையாதே - புலவரால் எழுதி முடிக்கத் தொலையாதே. 171.20. வாகனமானான் - தோளில் இலட்சுமணரைச் சுமக்கும் வாகனமாய் அனுமார் திகழ்ந்தார் என்றவாறு. 171.22. செங்கை - சிவந்த கை. 171.24. கடித்தனுமான் - உக்கிரம் மிகுந்த அனுமான். கையது கொண்டவன் - வலிமையான கைகளைக் கொண்டவன்; இந்திரசித்து. மெய் துடித்தானே - உடல் துடித்தானே.

75. தோழி.

## THE BATTLE BETWEEN INTIRAJIT AND LAKSHMAṆA

And now the young Lord Lakshmaṇa engaged
Indignant Intirajit in battle fierce;
Here now, now there and all over the field, they fought!
As Lakshmaṇa stood on the ground, the son of the demon
Adept in slaying foes, Intirajit, stood in the sky!
As they engaged each the other,
Māruti came up to Lakshmaṇa and lifted him
On to his shoulders and from this vantage of height,
Lakshmaṇa fought a close battle with the son
Of the wicked demon. It were not possible
To indite truly the great battle that
The brother of the cloud-hued Lord fought
With Intirajit, as Aṉumaṉ became
The mount for him. Intirajit came down then
To the ground, to fight the young hero:
When Aṉumaṉ chanting **Rama**'s name
Hit him with his ruddy hand, fierce as a lion.
He did hit him, he punched him, he pounded him
With his mighty hand, to the joy of the on-lookers!
Ferociously Aṉumaṉ kicked him with his feet
And stout-armed Intirajit shook all over,
His limbs trembling in pain.

*சிந்து*

172\. அனுமன் சென்றடித் தானே - இந்திரசித்து
மனம்நொந்து துடித் தானே
தனுவந்த கரத்திலும் முகத்திலும் மூக்கிலும்
தட்டித் தட்டி குத்தி குத்தி
தத்தி தத்தி எட்டிக் கிட்டி (அனு)
சீதையைச் சிறைவைத்த பாதக தோசிக்கு
தீக்கடன் நீர்க்கடன் தீர்க்க
பாதகப் பயலுனக் காதர வாரென
பகட்டிப் பகட்டிக் கொண்டு
பத்திப் பத்தி சுத்திச் சுத்தி (அனு)
கனங்கொடை இந்திரசித்தை மனங்கொண்ட மட்டுமாக
மன்னனி லங்கையிலே மாயனெ னையனுப்ப
மாதாவென் சீதைக்குத் தூதாக நான்வர 5
அன்னாளில் வாலிலக்கினி வைத்த குற்றத்துக்கு
அடியிடி படுபடு பிடிபிடி யெனகுத்தி (அனு)
மேகத்திலே புகுந்து யாகம் வளர்த்ததுக்கும்
வெஞ்சமரில் நாகபாசம் வேதனஸ்திரம் வாள்வெட்டுக்கும்
சாகத் துணிந்து ராமன்பேரைப் பழித்ததற்கும்
தக்கத் தக்க வாயி(ல்) ரத்தம்
கக்கக் கக்க குத்திக் குத்தி (அனு)

172.2. தனு - வில். தத்தி - பாய்ந்து. எட்டி - தாவி. கிட்டி - அருகில் வந்து. 172.3. பாதக தோசி - துரோகச் செயல் புரிந்த பாவி. தீக்கடன், நீர்க்கடன் - இறப்பு காலத்தில் செய்யும் சடங்குகளில் சில. 172.4. பாதகப் பயலுக்கு ஆதரவு யார் என - பாதகச் செயல்கள் புரிந்த இராவணனுக்கு இந்திரசித்தே! நீ இறந்து போக இருப்பதால் யார் இனி மேல் ஆதரவாக முடியும் என்றவாறு: பகட்டி - அதட்டி. பத்தி - பற்றி; இறுகப்பற்றி. சுத்தி - சுற்றி; அகப்படுத்தி. 172.5. கனங்கொடை - வலிமையான. மாயன் - திருமாலாகிய இராமன். மாதா - தாய்; சீதை. 172.6. அக்கினி - தீ. 172.7. வெஞ்சமர் - கொடிய போர்க்களம். நாகபாசம்- நாகாஸ்திரம் என்ற அம்பு. வேதன் அஸ்திரம் - பிரம்மாஸ்திரம் என்ற அம்பு. வாள் வெட்டு - வாள் வீச்சு.

172. "Aṉumaṉ did go and beat him
And Intirajit did tremble heart sore and in pain"
Upon his hand holding the bow
And his face, upon his nose, he leaped
And whacked him!
"Aṉumaṉ did go and beat him
And Intirajit did tremble heart-sore and in pain
Abusing him harshly, seizing him firmly, .
He cried: "To you, O, deadly sinner who imprisoned
Our Sita! who will be left to perform your funeral rites
With fire and water?"
"Aṉumaṉ did go and beat him,
And Intirajit did tremble heart sore and in pain.
Saying: "The Lord did send me the other day
To Laṅka as envoy to Mother Sita:
But you set fire to my tail! For that
Now you take this and this"
And thus Intirajit was beaten by Aṉumaṉ
To his heart's content.
"Aṉumaṉ did go and beat him
And Intirajit did tremble heart sore and in pain."
For going behind the clouds to perform sacrifice,
For shooting the serpent-noose and the *Pirammāstiram*
And for using your magic sword;
For abusing Rama's name at the cost of your life"
Fittingly Aṉumaṉ punched him in the mouth
The blood pouring out in jets.
"Aṉumaṉ did go and beat him
And Intirajit did tremble heart-sore and in pain."

### போரில் அரக்கர் படைகளின் நிலை

*விருத்தம்*

173. துடித்திட அடிக்க அம்பு தொடுத்திட மேக நாதன்
அடுத்திட வனுமன் சீற அரக்கரும் பதறி யோட
வெடித்திடக் காளி கூளி விருந்துண்ணச் செய்வே னென்று
பிடித்தகைச் சிலைகெம் பீரன் பின்னிளை யவர்தான் வந்தார்.

*நடை*

174. வந்திளைய பெருமான் ஒருசில வாளியுங்கை யெடுத்து
வட்டக் கடல்போலே யரக்கரைத் தட்டழியப் பொருதார்
கொந்துகொந் தாய்முறிந்ததே யரக்கர் கோடான கோடிப்படை
கோனிளை யோன்சரத்தால் அரக்கரை வானுல கேற்றிவிட்டார்

மந்திரி மார்படவே வதிபெல வாள்வீரரும் படவே
வாய்த்த கரிபரியும் வெகுவெகு தேர்க்கொடியு மறுத்தார்
அந்த யிலங்கையிலே முளைத்திடும் அரக்கரெல்லாம் படவே
அந்தமில்லா வரக்கர் தொகையினை அச்சுதன்தம்பி கொன்றார்

### அனுமன் போரில் வீரர்களைக் கொல்லுதல்

கொன்ற பெரும்படையி லனுமான் கொக்கரித்துச் சிங்கம்போல்
கோவிந்த னார்தம்பிக் கோவாகன மாய்நின்று உச்சிதமாய்
தன்றலை ராக்ஷசர்கள் அறுபட தானவர் வானவர்கள்
சக்கரமொடு சங்கு தரிப்பவர் தம்பியை மெய்த்திடவே

173.1. துடித்திட - உடல் வேதனையால் துடித்திட. 173.2. அடுத்திட - அருகில் வர. 173.3. வெடித்திட - அரக்கர்கள் உடல்கள் வெடித்துச் சிதறிட. 173.4. சிலை கெம்பீரன் - வில்லை பெருமிதமாகப் பிடித்தவன்; இலட்சுமணன். 174.2. கொந்து கொந்தாய் - கொத்துக் கொத்தாய்; கூட்டம் கூட்டமாய். கோன் இளையோன்- இளைய அரசன்; இலட்சுமணன். 174.3. பெலவாள் வீரர் - வலிமையான வாள் வீரர். கரி - யானை. பரி - குதிரை. 174.4. முளைத்திடும் - தோன்றிடும். படவே - மாண்டு போகவே. அச்சுதன் தம்பி - திருமாலாகிய இராமன் தம்பி; இலட்சுமணன். 174.5. கொக்கரித்து - ஆரவாரித்து. கோவிந்தனார் தம்பிக்கோ - இராமன் தம்பி; இலட்சுமணருக்கோ. உச்சிதமாய் - பொருத்தமாய். 174.6. தானவர் - அசுரர். வானவர் - தேவர். சக்கரமொடு சங்கு தரிப்பவர் - சங்கு சக்கரங்களைத் தரித்த திருமால். மெய்த்திடவே - சேர்ந்திடவே.

173. As Anuman pummelled him thus fiercely
Making him writhe in pain, Mēkanātan
Came near and shot his arrows: Anuman
Grew furious; the demons fled in fear;
When holding his bow majestically
Came the young Lord Lakshmana,
Swearing that he would provide
Feast sumptuous for Goddess Kāḷi and her goblin bands!

174. Taking a few darts, in his hand
He shot them at the demons, multitudinous
As the round ocean; and destroyed them.
Cluster after cluster of them fell,
The innumerable millions sent to the upper world
By the arrows of Lakshmana
The counsellors, the mighty warriors, the elephants
Horses, all, all of them fell. The chariot-flags
Were cut; all demons Lanka had engendered
Fell: The endless numbers of demon hordes,
Achyuta's brother did annihilate!

### ANUMAN SLAUGHTERING THE SOLDIERS

Roaring very like a lion, Anuman stood
Amidst the slaughtered soldiers
As properly the brother of Kōvinta
Mounted on his shoulders, cut off the demons heads;
Celestials and others gathered near the brother,
Of Him adorned with the Conch and the Discus,

அன்றெவ ரும்புகழப் புகுந்து அறுத்தார் பெரும்படையை
அரக்கனி ராவணனும் மலைத்து அடைகோட்டைக் குள்ளிருந்தான்
வென்றன ரின்றைக்குத் தான்ராக்ஷச வேட்டை முடிந்(த)து தென்பார்
வேட்டையில்(த்) தூள்ப்படுத்தி யிளையவர் துட்டரை வேரறுத்தார்

**வானரங்களின் மகிழ்ச்சியும் இலங்கை மக்களின் வருத்தமும்**

துட்டர்கள் வேரறவே களந்தனில் சோரைக ளாறாகத்
தோற்றா னிராவணனுமெனச் சொல்லிக் கூத்தாட வானரமே
கொட்டாவி யிட்டு நரிசுணங் கொடுகூளியும் காளிமெய்க்கக்
கொஞ்சமோ துஞ்சினபேர் உயிர்கொள [76]கூற்றன் சலியானோ
கூற்றன் சலியானோ பிடித்த கொடுங்கை சலியாதோ
கூவென் றிலங்கை யெல்லாம் கூடிக்கூடிக் கோவென் றழுவாரே

ஆற்றிலா லட்சுமியைக் கவர்ந்து அருஞ்சிறை வைத்ததனால்
அரக்க னிராவணனும் இறக்கவே அடுத்தது கால மென்பார்
ஏற்ற யிளையோனை யனுமா னெடுத்தே சுமந்துவர
இந்திர சித்தோடே பொருசமர் எப்படி யான்புகல்வேன்
வாய்த்த நெடும்போரி லிளையோன் வதைத்த சமர்த்துகளும்
வழுத்த முடியாதே எழுத எழுத்தி லடங்காதே

**இந்திரசித்தின் மரணம்**

அடங்கா திளையோனும் சிலைதொட் டம்பால் மழைபொழிய
அந்தக் களமதிலே தனித்தா னிந்திர சித்தொருவன்
மடங்கா தரக்கன்மகன் சூறாவளிக் காலெடுத் தாப்போல்
மன்னவ னிலட்சுமணன் வூழியில் வானிலிடித் தாப்போல்

174.7. அறுத்தார் - கொன்றொழித்தார். மலைத்து - திகைத்து. அடைகோட்டை - வெளியே போக முடியாத பெருந்தடையுள்ள கோட்டை. 174.8. ராக்ஷச வேட்டை - அரக்கர்களைக் கொன்றொழிக்கும் வேட்டை. தூள்படுத்தி - சிறப்பாகப் போர் செய்து என்ற பொருளில். துட்டரை - துஷ்டச் செயல்கள் புரியும் அரக்கர்களை. 174.9. சோரை - 'இரத்தம்' என்ற பொருளுடைய மலையாளச் சொல். 174.10. சுணங்கு - பேயினுள் ஒரு வகை. துஞ்சின பேர்- இறந்த பேர். கொள - கொள்ள; இடைக்குறை. சலியானோ - சலிப்படைய மாட்டானோ. 174.11. கொடுங்கை - வலிமையான கொடுமையான கரம். 174.12. ஆற்றிலா - அளவிட்டுச் சொல்ல முடியாத. அடுத்தது கால மென்பார் - நேரம் நெருங்கி வந்துவிட்டது என்பார். 174.13. எப்படி யான் புகல்வேன் - எப்படி என்னால் சொல்ல முடியும்; கவிக்கூற்று. 174.14. சமர்த்து - திறமை. வழுத்த - புகழ்ந்து கூற. 174.15. அடங்காது - சினம் அடங்காது. களம் - போர்க்களம். 174.16. மடங்காது - பின்வாங்காது. அரக்கன் மகன் - இராவணன் மகன்; இந்திரசித்து. சூறாவளிக் கால் - சூறாவளிக்காற்று. ஊழியில் - ஊழி காலத்தில்.

76. கூத்தன்.

And praised his valour in destroying the huge forces
Of the enemy; while Rāvaṇa baffled
And confounded stayed within his fort!
The day belonged to Lakshmaṇa!
The hunt of the demons was ended for the day;
By his remarkable valour, he pulverised
The evil forces, wiping them off by the roots.

## THE JOY OF THE VĀṆARAS AND THE SORROW OF THE CITIZENS OF LAṄKA

As the wicked were rooted out and blood ran
In streams upon the battle-field,
The monkeys danced in joy shouting,
"Vanquished is Rāvaṇa!" Sated with
The feast of blood and gore, the very jackals,
Goblins of Goddess Kāḷi and sprites yawned in the fulness
Of their bellies! The dead were not a few
Countless were those who lost their lives!
"Won't death be tired with his work
Of seizing lives in his powerful hand?"
Thus lamented and wailed, the citizens
Of Laṅka gathering in groups all over the city.
"As he abducted Goddess Lakshmi of ineffable greatness
And imprisoned her; he is going to die;
His time is up!" some said.
As Anumaṉ carried the young Lord on his shoulders,
And fought with Intirajit,
How can I tell of the glory of their fight!
Lakshmaṇa's prowess and valiancy in the battle
Could not be adequately praised,
Nor indited in words!

## THE DEATH OF INTIRAJIT

With anger unabated the younger lord
Shot a rain of arrows at the enemy,

நடங்கா ணீரீசுரனே செயரெகு ராமா சரணமென்றே
நற்றவ முனிவோர் களுதவிய அஸ்திரமது தெரிந்து
படங்காண் முப்புரத்தை நகைசெய்து பரமனெ ரித்தகணை
பச்சைமாலுக் கிளையோன் தொடுத்திட பட்டானிந் திரசித்து

செயித்திடத் தொட்டகணை யிந்திர செயித்தைத் தலையறுத்து
தெய்வேந் திரனார்க்கும் முனிவர்க்கும் தேவர்க்கும் காட்டியதே
பயிற்றுந் தொழிலரக்கன் மகன்றலை பாரினிற் பாரெனவே
பதினாலு உலகத்திலுங் காட்டியெப் பாரிலுங் காட்டியதே
காட்டி யிந்திர செயித்தை ராமனென்ற காகுத்தன் தம்பிகொன்றான்
கற்றவர் கொற்றவரே தேவர்களே கண்டுகொள் வீரெனவே

நீட்டி யெங்குங் காட்டித் தலையை நிமிசத்தில் கொண்டுவந்து
நேர்முடி ராவணனார் மடிதனில் பாரென வைத்ததுவே
தேட்ட முடன்நாகனும் உனைநம்பித் தென்னிலங் கைநகரைத்
தாணையமாய்த் திருமால் அம்புறாத் தூணியில் சேர்ந்ததுவே

### இராவணன் சோகம்

கோட்ட மதாயரக்கன் மகன்மடி கூர்விழியால்(ப்) பார்த்து
கும்பி துடித்தலறி ராவணன் தேம்பி யழுதானே
வேட்டைப் புலிபோலே சமர்செய்து வென்றிடப் போனவனே
மேகத்திலே யிருந்து படைவெல்ல யாகம் வளர்த்தவனே

174.17. நடங்காணீர் ஈசுரனே - ஊழிக்காலத்து நடனத்தைக் காண்பீர் இறைவனே. அஸ்திரம் - அம்பு. 174.18. படங்காண் முப்புரம் - சிறப்பு வாய்ந்த முப்புரம்; இது அரக்கர்களால் இரும்பு, பொன், வெள்ளியால் கட்டப்பட்ட மூன்று கோட்டைகளாலானது; சிவனால் அழிக்கப்பட்டது. பட்டான் இந்திரசித்து – இந்திரசித்து இறந்தான். 174.19. தலையறுத்து - தலையை இருகூறாக்கி. 174.20. பயிற்றும் தொழில் அரக்கன் - கொடிய தொழில் செய்யும் அரக்கன; இராவணன். பாரினில் - உலகத்தினில். 174.21. ராமனென்ற காகுத்தன் தம்பி - இராமன் என்று சொல்லப்படும் திருமால் தம்பி; இலட்சுமணன். கொற்றவரே - அரசரே. 174.22. நிமிசத்தில் - நிமிடத்தில். 174.23. தேட்டமுடன் நாகனும் உனை நம்பி - மிகுந்த விருப்பமுடன் இந்திரசித்தே உன்னை நம்பி. தென்னிலங்கை நகரை - தென்னிலங்கை நகர் பாதுகாப்பாய் விளங்கும் என நினைத்தேன் என்ற பொருளில். தாணையமாய் - பந்தய்மாய். திருமால் அம்புறாத் தூணியில் சேர்ந்ததுவே - இந்தரசித்தை அழித்த இலட்சுமணன் அம்பு திருமாலின் அம்புறாத் தூணியில் சேர்ந்தது என்ற பொருளில். 174.24. கோட்டமதாய் - மனம் கோணியவனாய்; வருந்தியவனாய் - அரக்கன் மகன் முடி - இந்திரசித்தின் தலை - கும்பி துடித்து - அடிவயறு துடித்து.

Where, alone stood Intirajit!
Unretreating he stood fighting, fierce as a tempest,
While Lakshmaṇa bombarded him,
Like thunder at the end of the aeon!
See! see, the dance of death in the field,
As the Lord younger to the jasper-hued one,
Choosing a weapon granted by the sages,
(The dart of Supreme Iswara himself, when he
Incinerated with smile the triple cities great)
And chanting the name of victorious Rakurāma,
He shot it at Intirajit
And down he fell! The weapon cut off Intirajit's head,
And carrying it aloft, displayed it
To Tevēntiraṉ, the sages and the celestials :
"This is the head of the cruel demon chief"
On earth it was shown all the fourteen worlds!
"The brother of Kākuttarāma killed Intirajit!
O men of learning! O kings of earth!
This is the head!" thus displaying it everywhere,
In a moment, it brought it back
And dropped it on the lap of Rāvaṇa!
While the serpent-noose saying; "It was for you
I came to Laṅka city in your care;
Now I go back to my abode",
Straight went back into Tirumāl's quiver.

## RĀVAṆA'S GRIEF

His mind torn with grief, looking keenly
At his son's head, his heart trembling in anguish,
Rāvaṇa wept and wept; "Oh like a jungle tiger
You went into the battle!
O you, who prepared for a sacrifice
To acquire invincible weapons up behind the clouds!

வளர்த்த வயறெரிய இருந்து மறுகித் தவித்திடவும்
மாது கொதித்திடவு முனையிந்த மானிடர் கொன்றாரே
சளத்தில் விழுந்தேனே எனக்குத் தலைமகன் பட்டானே
தம்பிமார் பட்டதல்லா லுனையல்லோ நம்பியிருந் தேனடா
வளத்திடு சொத்தவனே மகுடமணி முடிவைத் தவனே
வானத் திலிந்திரனைச் செயங்கொண்டு வந்தயிந்திர செயித்தே
நிழற்றுங் குடைக்கீழே யிலங்கையில் நீநின்று லாவயிலே
நேர்விழி நாலைந்தினால் பவுரிசம் நானென்று காண்பேனடா

நானென்று காண்பனடா இலங்கை நன்னா டழிந்துதடா
ராவணன் தோர்வை யென்று தேசத்து ராசர் நகைக்குமடா
தேனென்ற கண்மணியே எனதுட சித்தங் கலங்குதடா
தேவி வண்டோதரி யாளுனைப் பெற்றபாவி மறுகுதடா

வண்டோதரி துயரம்

மானாளிதை யறிந்த வுடனே வண்டோதரி வோடிவந்து
வல்லரக்கன் காலில் விழுந்து மறுகித் தவித்தாளே
கோனே யிந்திரசெயித்தே விலகிநான் கூறவுங் கேளாமல்
கூண்டு சமராடிக் களத்தினில் மாண்டுவிட் டாய்மகனே
மாண்டுவிட் டாய்மகனே பெற்றிட்ட வயிறு கொதிக்குதடா
வானவர் கோன்றனக்கு மரம்பைக்கும் மாச்சல் தெளிந்துதடா
ஆண்டி லங்காபுரியி லிருந்து அரசு செலுத்தாமல்
அப்பனிடும் பாலே யெமனுனை யிப்பொழுதில் பிடித்தான்

174.26. மறுகித் தவித்திடவும் - மனம் வருந்தித் தவித்திடவும். மாது - இராவணன் மனைவி; வண்டோதரி. 174.27. சளத்தில் - வஞ்சனையில். தம்பிமார் - இந்திரசித்தே! உனது தம்பிமார் இலக்கணன், அட்சயகுமரன் முதலியோர். 174.28. வளத்திடு சொத்தவனே - நான் வளர்த்த சொத்து போன்றவனே என்ற பொருளில். இந்திரனைச் செயங்கொண்டு வந்த யிந்திரசெயித்தே - இந்திரனை மாயையாற் கட்டிச் சிறையிட்டு அவனை வெற்றி கொண்டவனே. 174.29. நிழற்றுங் குடைக்கீழே - மக்களுக்கு நிழல் கொடுக்கும் வெண்கொற்றக் குடையின் கீழே. நேர்விழி நாலைந்தினால் - இருபது கண்களால். பவுரிசம் - பெருமை. 174.30. தோர்வை - பின்னடைந்தவன்; சிறப்பிழந்தவன். 174.31. தேனென்ற கண்மணியே - தேன் போன்று இனிய மொழி பேசும் என் கண்ணுள் மணி போன்றவனே; இந்திரசித்தே. மறுகுதடா - செய்வதறியாது கலங்குகிறாளடா. 174.32. மானாள் - மான் போன்ற விழியாள்; வண்டோதரி. வல்லரக்கன் - கொடிய அரக்கன்; இராவணன். கூண்டு - பொருந்தி. 174.34. வானவர் கோன் - இந்திரசித்து. அரம்பை - தேவ மகளிர். மாச்சல் - மரணபயம் 174.35. இடும்பாலே - அகந்தையாலே.

I shudder in agony; my innards are burning;
Your mother will rage in grief;
Killed by these men, you have been!
Oh, I have fallen in treachery!
Oh, my eldest is dead;
I put my faith in you, after your brothers' death;
O my dear son, dearer to me
Than all my opulent wealth! my crowned darling!
O you who conquered Intira in his heavenly abode!
As under the white canopy of state
You promenaded majestically,
With my twenty eyes, I proudly enjoyed the sight
Of your manly greatness! When can I see it again?
The goodly land of Lanka is ruined :
Oh, kings will laugh, that Rāvaṇa has lost;
My dear son, sweet as honey! dearer than my own eyes!
Oh, my heart is agitated; Your mother
Maṇṭōtari will be heart-broken and sore anguished".

## THE LAMENT OF MAṆṬŌTARI

The doe-eyed Maṇṭōtari came running up
On hearing of this calamity,
And falling at Rāvaṇa's feet, she lamented :
"O my young king, Intirajit! Inspite of my advice
To avoid going to the field,
You went there and lost your life!
O son! my womb is burning!
The Lord of heaven and celestial-damsels
Will have no fear of death now!
Instead of ruling over Lanka city,
Because of the arrogance of your father,
Yama has caught you in his grip;

வேண்டும் பணிபுனைவாய் அழகுள்ள மெல்லியரைப் புணர்வாய்
    மேகத்திலே புகுவாய் பகைவெல்ல யாகமும் நீவளர்ப்பாய்
மீண்டுவரக் காணேன் சமர்செய்யவே கித்த மானிடரை
    வெற்றி கொள்வாயெனவே நானும் சித்தத்தில் வைத்திருந்தேன்
வைத்திருந் தேன்மகனே யிப்படி மாற்றலர் கையாலே
    மாளவிதி வசமோ யிலங்கையை ஆள்வதி னியாரோ

சித்திர வடிவழகா சதாகோடி தேருக்கதி பதியே
    தேவர் தெய்வேந்திரனைச் சணத்தில் செயங்கொண்டு வந்தவனே
பத்திய மானிடரும் குரங்கும் பகைத்துச் சமர்பொருதால்
    பாதகன் சிற்றப்பனு முனக்குப் பகையாளி யானானே
ஏத்திய மானிடர்கள் அம்புவிட் டெய்து வதைக்கையிலே
    இந்திர சித்தே யுன்கையினில் மந்திர வாளுமெங்கே.

விருத்தம்

175. மந்திர வாளும் தோற்று வலுவுடன் பெலமும் வாங்கி
இந்திர வானோர்க் கேவல் சொல்லிடு மாண்மை நீங்கித்
தந்திரத் துடனே நாக பாசமும் நேச மற்று
இந்திர சித்தும் பட்டா னிலங்கையும் அழிந்த தன்றே.

## இந்திரசித்து இறப்பால் ஏற்பட்ட பெருந்துயரநிலை

நடை

176. அன்று யிலங்கை யழிந்திட வானவ ரல்லோரு மேமகிழ
    ஆதி நாராயணர் பாதத்தில் தேவர்க ளங்கேபுஸ் பஞ்சொரியச்
சென்ற வனிந்திர சித்தை நினைந்து செயலற் றறிவழிந்து
    சேர்ந்த முகத்தி லறைந்து புரண்டவன் சீறிய பயமிட்டான்

174.36. பணி - ஆபரணம் 174.37. வேகித்த - வேகமடைந்த. 174.39. சணத்தில் - நொடிப் பொழுதில். 174.40. பத்திய மானிடரும் - உன்னைப் பற்றிய (பொருந்திய) மானிடரும். சிற்றப்பன் - இந்திரசித்தின் சிற்றப்பன்; விபீஷணன். 175.1. பெலமும் - உடல் வலிமையும். 175.3. நாகபாசம் - நாசபாசம் என்னும் அம்பு. நேசமற்று - இந்திரசித்தே! உன் மேலுள்ள அன்பை மாற்றி. 176.1. புஸ்பம் - மலர். 176.2. சென்றவன் - மாளிகையினுள் சென்றவன்; இராவணன். அபயமிட்டான் - ஓலமிட்டான்.

Oh, you used to do as you pleased
And enjoy yourself with lovely damsels;
Entering the clouds, you did begin
The sacrifice for vanquishing the foes.
I did not see you come back alive.
I still thought that you would defeat
The men who challenged you to fight :
O son! Is it fate that you should die thus,
At the hands of the enemy?
Oh, who is going to rule Laṅka now?
O my darling son! lovely in form as a painting!
O Lord of hundred crores of chariots,
O you who defeated Tēvēntiraṉ in a moment!
Mere men and monkeys fought against you,
And yet you have died!
Your uncle has become your enemy;
Oh, where was your magic sword, when the men
Shot the arrows at you and killed you?"

175. Thus his magic sword becoming ineffective,
His strength rendered useless, losing his manly prowess
That forced Intira and the Gods
To do humble service to him,
His powerful serpent-noose no longer with him.
Intirajit fell! with him in ruins,
Fell great Laṅka!

**THE GREAT SORROW CAUSED BY THE DEATH OF INTIRAJIT**

176. The celestials all, did rejoice
At the loss to Laṅka that day!
At the feet of Primal Nārāyaṇa, the Gods showered flowers!
While Rāvaṇa who went into his palace, grew
Desolate and disconsolate;
Beating his face with his hands,
He rolled on the ground in grief;

*இட்டமுடனே நான்பெற்று வளர்த்தே னென்னிரு கண்மணியே*
*இந்திர சித்தே யிறந்து விட்டாயினி யெந்தனக்குத் துணையார்*
*பட்டது கோடிபடை களிறந் திட்டும் பாவியுனை நம்பினேன்*
*பாராம லுன்னைக் கெணியாமலே யெமன் பற்றிப் பிடித்தானோ*
*பத்தியே வண்டோதரி வந்து காலினில் பாய்ந்து புரண்டழவே*
*பத்துத் தலைவனும் மந்திரி மாரும் படைகளுந் தானழவே*
*எத்திசை யிலுள்ள வீர ராஜாக்களும் எல்லோருந் தானழவே*
*இலங்கையில் வாழ்ந்துண் டிருக்கு மரக்கர்க ளெல்லோருந் தானழவே*

**கும்பகர்ணனை வீரர்கள் எழுப்பும் காட்சி**

*எல்லோரும் மந்திரி மார்களுங் கூடியே ராவணனைத் தேற்றி*
*எவராலும் வெல்லாத கும்பகர்ணனை எழுப்ப வென்றே துணிந்தான்*
*நல்லவன் கும்பகர்ணன் முக்கா லத்தில் நாடி தவம்புரிந்து*
*நாட்டமுட னவன்நித்தியத்துவம் நன்மை யாய்க்கேட் டிடவே*
*நித்திய தத்துவம் வேணுமென்றே யவன்நெடு நாட்டவம் புரிந்து*
*நிமலனா ரீய்ந்திட மாயவர் மாற்றிப்பின் நித்திரையை யளித்தார்*
*பத்தி யன்று முதலிந்திர சித்து பட்டிது நாள்வரைக்கும்*
*பாரமலை போலு றங்கிடும் கும்பகன்ன பாவி எழுந்திரடா*
*எழுந்திரு வென்றிரு நூறுக் கிங்கிலி யரிரும்பு லக்கையடிக்க*
*இன்பமாய்த் தாயார் துடைதட்டி னாப்போலெ ழும்பாமலே கிடக்கக்*

176.4. இறந்திட்டும் - இறந்த போதிலும். பாராமல் - உன் வலிமையைப் பாராமல். கெணியாமல் - வலிமையைக் கணித்துப் பார்க்காமல். 176.5. பத்தியே - பற்றியே. பத்துத் தலைவனும் - பத்து தலைகளையுடைய இராவணனும். 176.6. வாழ்ந்துண்டிருக்கும் - வாழ்ந்து கொண்டிருக்கும். 176.7. கும்பகர்ணன் - இராவணனின் இளைய சகோதரன். 176.8. முக்காலத்தில் - முற்காலத்தில். நாடி தவம்புரிந்து - சிவனை நாடி, தனக்கு என்றும் சாகாநிலை வேண்டும் என்று தவம் புரிந்து. நித்தியத்துவம் நன்மையாய்க் கேட்டிடவே - அழியாத் தன்மையைத் தனக்கு வரம் அளிக்க வந்த சிவனிடம் நன்மையாய் கும்பகர்ணன் கேட்டிடவே. 176.9. நிமலனார் - சிவனார். ஈய்ந்திட - வழங்கிட. மாயவர் மாற்றிப் பின் நித்திரையை யளித்தார் - அரக்கனாம் கும்பகர்ணன் சாகாவரம் பெற்று வாழ்ந்தால் கேடு உண்டாகும் என்பதை அறிந்து மாயவராம் திருமால் நித்தியத்துவத்தை மாற்றி நித்திரையாக போகும்படி வரம் அளித்தார். 176.10. பத்தி அன்று முதல் இந்திரசித்து பட்டிது நாள் வரைக்கும் - அனுமன் வாலில் கொளுவிய நெருப்பினால் இலங்கை பற்றியது முதல் இந்திரசித்து இறந்தது வரை உள்ள இடைப்பட்ட நாள் வரைக்கும். பாரமலை - கனத்த மலை. 176.11. கிங்கிலியர் - குற்றேவல்காரர். துடை தட்டினாப்போல் - இரும்பு உலக்கையால் அரக்கன் கும்பகர்ணனை இடித்தது தாய் குழந்தையைத் தாலாட்டும் போது அதன் தொடையில் மென்மையாக அடித்தாற் போல் என்ற பொருளில்.

He wailed and wailed; "O my dear son!
My darling, whom I brought up with loving care!
O Intirajit! dead you are!
Who is going to be my help now?
O wretched boy! I put my faith in you;
Though myriads of forces and tuskers
Had been destroyed on our side.
Oh, did Yama seize you without reckoning your greatness?"
As Maṇṭōtari fell on his body and cried thus,
The ten-headed one and the ministers,
The regiments of brave chieftains assembled there
On all sides, all, all did cry!
All the citizens of Laṅka did cry and cry!

## THE EFFORTS OF THE WARRIORS TO WAKE UP KUMPAKARṆAṈ

Now all his ministers together comforted Rāvaṇa
In his grief, and he decided now
To wake up Kumpakarṇaṉ unconquerable by any one.
The good Kumpakarṇaṉ in days past had performed
Penance severe, desiring eternal life:
Lord Siva granted the boon;
But Tirumāl later changed the boon
From 'eternal life' to 'slumber'[147]
From that day till the day Intirajit fell,
Kumpakarṇaṉ had been asleep!
"O wake up Kumpakarṇaṉ, lying like a mountain huge!
Wake up" said they, and beat him and stamped upon him
With hundereds of iron pestles; but he slept on,
As if his fond mother was patting him on his lap!

147. Slumber etc. - Kumpakarṇaṉ lost his bid for eternal life on earth when he asked for *Nittirai* instead of *Nittiyam*

குழுந்துடன் மேளங்கள் வானத் திடியெனக் கொட்டி முழங்கிடவே
கூண்டந்த ராக்ஷினர் தாராட்டி னாப்போல கூசாமலே கிடந்தான்
கூசாம லாடுகள் மாடுகளானை குதிரைக ளொட்டகையும்
கும்பகர்ண னுடமேனி யிலெற்றிக் குளம்பால் மிதித்தி டவே

## இராவணன் கும்பகர்ணன் ஆலோசனை

ஆசார மாகவே சோம்பி முழித்து அசைந்து எழுந்திருந்தான்
அப்போது ராவணன் தம்பியைக் கட்டியலறி யபய மிட்டான்
அலறி யவனு மிவனும் அழுதிட அங்கவர் தானமர்ந்து
அண்ணனுந் தம்பியுந் தானுமிருந்து பலஆலோ சனைகள் செய்தார்.

## கும்பகர்ணன் இராவணனிடம் வினாவுதல்

விருத்தம்

177. செய்யதோ ரண்ணே யுந்தன் திறமெங்கே யாண்மை யெங்கே
கொய்யுளை புரவி யெங்கே குமரரும் படையு மெங்கே
மெய்யதி காய னிந்திர சித்துட வீர மெங்கே
தையலாள் சீதை யாலே சகலது மெங்கே யண்ணே.

## கும்பகர்ணன் உபதேசம்

நடை

178. அண்ணே யண்ணே சீதையொரு பெண்ணினாலே வாழ்வு மிழந்தாயே
ஆனைபடை தேருடனே சேனை குதிரை களுந்தோற் றாயே
மண்ணிழந்தும் வாழ்விலங்கை நாடி ழந்தும் மகனை யிழந்தும்
வாழ்விழந்து போயுஞ் சீதை மாதை விடேனென்று ரைக்கிறாயே
உரையறியா வண்ணர்கோவே வுத்த புத்தி யானுரைக்கக் கேளாய்
உயிரிழந்து போனதல்லால் இருக்கிற பேர்நாமள் நன்றாய்
வாழ்வோம்

176.12. குழுந்துடன் - கொழுந்துடன்; தீச்சுவாலையுடன். தாராட்டினாப் போல - தாலாட்டினால் போல். 176.13. ஒட்டகை - ஒட்டகம். எற்றி - காலால் எற்றி. குளம்பு - விலங்குகளின் காலின் அடிப்பகுதி. 176.14. ஆசாரமாகவே - நியதிப்படியே. அபயமிட்டான்- கூக்குரலிட்டான். 177.1. செய்யதோர் அண்ணே - செய்வதற்கரிய செயல்களைச் செய்யும் அண்ணனே. 177.2. கொய்யுளை புரவி - சீராகக் கத்தரிக்கப்பட்ட பிடரி மயிரையுடைய குதிரை. குமரர் - மைந்தர். 177.3. அதிகாயன், இந்திரசித்து - இராவணன் மைந்தர்களுள் சிலர். 178.3. அண்ணர் கோவே - அரசனும் அண்ணனுமாகிய இராவணனே. உத்த - உற்ற. நாமள் - நாம்.

The drums and pipes rumbled like thunder
Accompanied by lightning; but the gargantuan demon
Lay undisturbed as if a lullaby was sung to him!
Unhesitatingly, flocks of sheep, herds of cattle
Brigades of elephants and troops of horses
And droves of camels,
Trampled upon him with their hooves;
And at last, slowly Kumpakarṇaṉ, opened his eyes.
And shaking himself this way and that,
Got up from his slumber deep!
Then Rāvaṇa holding him in his hands wept,
And at the news of Intirajit's death,
Kumpakarṇaṉ too wept in grief;
A while after, the two brothers sat down,
To take counsel on what was to be done next.

### KUMPAKARNAṈ SPEAKS TO RĀVAṆA

177. "O brother, capable of action valorous!
Where has all your prowess gone?
Where has gone your manly courage?
Where are your horses with well-cut manes?
Where are your sons and their troops?
The great Atikāyaṉ, the true, and Intirajit, the brave?
O brother all these have gone,
Because of the lady Sita in durance."

### KUMPAKARṆAṈ'S ADVICE

178. "O brother, O brother, because of a woman called Sita
You have lost all prosperity;
You have lost you armies of chariots,
Horses and infantry men; you have lost
Land, territory and kingdom,
And your sons; having lost all,
Still you say you will not let go Sita!

சொரிகுழலாள் சீதைதனை யிப்போ சிறைவிட்டு விட்டீ ரானால்
தோஷமில்லை படையெடுப் பாராரு மில்லை நல்லபுத்தி
சொன்னேன்
புத்திசொன்னேன் சீதை சிறைவிட்டு விட்டால் நாம்பிழைப்போ மண்ணே
பொன்னை விடமாட்டீ ரென்றால் கொன்னிடுவார் திட்டம்நா
மள்போனா

### இராவணன் சினம்

வெத்தியுடன் புத்திசொன்ன தம்பியுந்தன் கண்ணு முன்னே நான்போய்
வெட்டியந்த மானிடரைத் தட்டழியக் கொன்றிடுவேன் பாராய்
பார்புகழ் ராமனையும் தம்பியை யுமென்கை யாலே கொல்வேன்
பங்கமொழி ஏன்சொல்லுறாய் முன்போல் நீபோ யுறங்கு வாயே

### கும்பகர்ணன் மறுமொழி

ஆருக்குஞ் சமர்த்த னென்று சாமர்த்திய வாக்குரைத்தா யண்ணே
ஆண்மை யிந்திரசித்தைக் கொன்ற அம்பிருக்கு தல்லோ
அவரிடத்தில்
அவரிடத்தில் நம்முடைய தம்பி சென்றி ருக்கிறதி னாலே
அடிக்கடி யுபாயஞ் சொல்லி யவனிருக்க அவர்கள் கையே
வெல்லும்

### இராவணன் மறுப்பு

எவரிருந் தெவர்போனா லுந்தம்பி எந்த னுயிரை யிழந்தாலும்
ஏந்திழையை விடுவதில்லை என்னோடு நீபேச வேண்டாம்
போங்காண்

178.4. சொரிகுழலாள் - தேன் சொரியும் மலரணிந்த கூந்தலையுடையவள்; சீதை. தோஷமில்லை - குற்றமில்லை. 178.5. பொன்னை - பொன் போன்ற சீதையை. கொன்னிடுவார் - கொன்றிடுவார். திட்டம் - உறுதி. நாமள் போனா - நாம் போருக்குப் போனால். 178.6. வெத்தியுடன் - வெற்றியுடன்; தைரியமாய் எனினும் அமையும். தட்டழிய - கெடுமாறும்படி. 178.7. தம்பி - இலட்சுமணன். பங்கமொழி - குற்றமுள்ள சொல். சொல்லுறாய் - சொல்லுகிறாய். 178.8. ஆருக்குஞ் சமர்த்தன் - யாரை விடவும் சமர்த்தன். 178.9. நம்முடைய தம்பி - விபீஷணன். 178.10. ஏந்திழை - சீதை.

O brother! my king! listen to me
As I give you advice due and proper!
Let all of us who are left
(After the death of all who have gone)
Save ourselves; if you release Sita
(With tresses adorned with honey-dripping flowers)
There is nothing wrong in it.
No one will come against us then;
This is good advice that I give you,
If you let her go, we can survive :
If you still obstinately refuse
To release the golden Princess,
Certain it is we will all be killed."

### THE WRATH OF RĀVAṆA

As thus his brother gave advice, bold and true,
Wrathful Rāvaṇa shouted : "Before your eyes
I shall go, and cut those men down to pieces!
You will see the famous Rama and his brother
Slain by my hands! Oh, why do you speak
Unpleasing words to me? Go back
To where you came from and continue your sleep!"

### KUMPAKARṆAṆ'S REPLY

"Brother, cleverly you have talked to me,
As if you are wiser than all others!
Don't they still have the arrow
That slew valorous Intirajit?
Forget not that our brother Vipīṣaṇa,
Has gone over to them; and he is there
To guide them every now and then,
And surely their side alone will win."

### RĀVAṆA'S REPLY

"Brother! I carenot who stands with me
Or who goes; even if I lose my life,
Release Sita, I will not!
Don't you talk to me; go hence."

### கும்பகர்ணன் போருக்குச் சம்மதித்துத் தயாராதல்

போங்காணெனக் கும்பகர்ணன் நல்லபுத்தி மெத்த மெத்தச் சொல்லிப்
பொன்றுதற்குக் காலம் வந்தால் புத்திகேட் பானோவென வேபோந்து
ஆங்காலம் மெய்வருந்த வேண்டா மென்ற பழமொழியைப் போல
அவனு யிரும்நம் முயிருமாக வொன்றாய் மடிவமென்றே சொன்னான்
சென்றுநல்ல நீராழியில் தீர்த்தமாடிச் சிவபூசை யுஞ்செய்து
சிவனையு மடிபணிந்து பரிமண சவ்வாது பன்னீர் பூசி
அன்று பன்னி ராயிரங் கோட்டை யரிசிவெந்த முதைபடைத்து
ஐயாயிரம் பன்றி கோழி ஆடுகறி களிட்டா ரதன்மேல்
கறியமுதும் கள்ளும் சுள்ளும் கருமலைபோல் கொண்டு குவித்தாரே
கையாரவே திரட்டி யுண்டு பசியாறி யெழுந்து கும்பகர்ணன்
அறிவுடனே கையலம்பி அடைக்கா யும்வெள் ளிலையு மருந்தி
அப்போ பணிபூண வென்று வைப்பறையை வந்து திறந்தானே.

### கும்பகர்ணன் வருகையை இராமனிடம் விபீஷணன் கூறுதல்

விருத்தம்

179. திறந்தன னறையி னுள்ளே சென்றனன் புவியோர் மெய்க்க
நிறைந்திடும் பணிக ளெல்லாம் நெடுமுடல் தனிலே பூண்டு
அறம்பல வரக்கர் சேனை அழிந்திட முன்னே மாண்டு
இறந்திடும் பழிக ளெல்லாம் எடுத்திடு வதுதா னென்றார்.

180. என்றவன் பணிக ளெல்லாம் எடுத்துமே யணிந்து கொண்டு
பொன்றினார் துயரம் நீக்கப் புறப்பட்டுப் படையுங் கூட்டி
அன்றவன் வாற செய்தி அறிந்தரி ராமன் றானும்
தென்றிசை வாறவனார் செப்பிடுந் தம்பி யென்றார்.

178.11. பொன்றுதற்கு - அழிந்து போவதற்கு. 178.12. ஆங்காலம் மெய்வருந்த வேண்டாம் என்ற பழமொழியைப் போல - ஆகும் காலத்தில் நடப்பவை நடந்தே தீரும்; ஆகவே அதற்காக உடம்பை வருத்தப்படுத்திக் கொள்ள வேண்டாம் என்ற பழமொழியைப் போல. அவன் உயிர் - இராவணன் உயிர். நம்முயிர் - கும்பகர்ணன் உயிர். 178.13. நீராழி - குளம். பரிமண - நறுமணமுள்ள. 178.14. கோட்டை யரிசி - 21 மரக்கால் அளவு கொண்ட அரிசி. 178.15. சுள்ளும் - கருவாடும். கருமலை - பெரியமலை. 178.16. அடைக்காயும் வெள்ளிலையும் அருந்தி - பாக்கு வெற்றிலை சாப்பிட்டு. பணிபூண - ஆபரணங்கள் அணிய. வைப்பறை - ஆபரண வைப்பறை. 179.1. பணிகள் - ஆபரணங்கள். 180.2. பொன்றினார் - அழிந்தார்; இராவணன் படைகளைக் குறித்தது. 180.3. வாற - வருகிற. 180.4. வாறவன் ஆர் - வருகிறவன் யார்? 180.4. தம்பி - விபீஷணனாகிய தம்பி.

## KUMPAKARNAN AGREES TO TAKE THE FIELD

Having tried repeatedly with words
Of good advice, to change Rāvaṇa's attitude
And having been curtly dismissed by him,
Sadly Kumpakarṇaṉ decided to put on his armour
And to take the field at the head of the forces.
"If the time comes to die
No one will care for advice;
What must happen, will happen!
And there is no use struggling against fate"
Following this wise saw, Kumpakarṇaṉ
Thinking to himself that it were better
For two who lived as close as they,
To die together, went to prepare himself
For battle forthwith; bathing in a pool deep,
He performed Siva **pūja**;
And bowing at the God's feet,
Dressed himself in proper order,
Using fragrant *Javvātu* and rose water!
Twelve thousand *kōṭṭai*[148] measures of rice
Were cooked to feed his hunger!
Five thousand swine, chicken, and sheep, were butchered
And cooked for his meat, with toddy galore
And salted-fish kippered!
Huge like dark hills they heaped them before him!
And gobbling up all these with his hands,
Kumpakarṇaṉ, his hunger sated, rose up
And washing his hands well,
Took betel-leaves and betel-nut to complete his fare;
And went to his jewel room for adorning himself.

179. Entering the chamber, he chose the ornaments
And fitted them to his huge body,

148. *Kōṭṭai* - A grain measure containing 21 *marakkāls* or 42 Madras measures

181. நாரண னிதுவே கூற நன்மையாய் வணங்கி ஐயா
பேர்பெறும் ராவ ணற்குப் பின்னவ னெனக்கு மூத்தோன்
காரியக் கார னாகும் கனபுத்தி யவர்க்கே சொன்னான்
பாதகன் கேட்டா னில்லை படைவென்று வாரே னென்றான்.

### கும்பகர்ணன் பெருமையை விபீஷணன் கூறல்

நடை

182. என்றரக்க னுக்கிளையோன் எந்தனுக்கு முன்னுதித்தோன்
கொன்றயிந்திர சித்தோடே கூடவென்று வந்ததுகாண்
வந்தமந்திர மெய்ஞான வசனம்மற வாதவன்காண்
தந்திரவான் புத்தியிலே சகலகலை யுள்ளவன்காண்

உள்ளபல நற்குணங்கள் உகந்துபுக ழுடையவன்காண்
கள்ளமதி ராவணனும் கார்குழலி லட்சுமியை
லட்சுமியைச் சிறையில்வைத்த நேரம்முத லின்றுவரை
நிச்சயமா யெந்தனைப்போல் நெடுநாளாய்ப் புத்திசொன்னான்

சொன்னதொன்றுங் கேளாமல் துரத்திவிட்டா னிவனையுந்தான்
மின்னரக்கன் மொழிகேட்டு விதியதனால் வாறான்காண்
வாறவனை நீருமிப்போ மன்னா விபீஷணரே
தேறுதலைப் பலதுரைத்து சென்றழைத்து வாருமென்ன

வாருமென்ன கும்பகர்ணன் வகுத்தவணி பகுத்துடனே
சீரணிகள் பின்னடக்க முகனையணி பின்னடக்க
முன்னணிகள் முன்னடக்க முகனையணி பின்னடக்க
வன்னமணி மாயன்முன்னே வந்தெதிர்த்தான் கும்பகர்ணன்

181.1. நாரணன் - திருமாலாகிய இராமன். 181.3. காரியக்காரன் - விவரம் தெரிந்தவன். கனபுத்தி - மிகுதியான அறிவுரை. அவர்க்கு - இராவணனுக்கு. 181.4. பாதகன் - பாதகச் செயல் புரிவோன்; இராவணன். 182.2. கூடவென்று - சேரவென்று; தானும் அழிவதற்காக என்ற பொருளில். 182.4. தந்திரவான் - சிறந்த தந்திரசாலி. சகலகலையுள்ளவன் - அனைத்து கலைகளையும் அறிந்தவன். 182.5. உகந்து - விரும்பி. 182.6. கள்ளமதி - கள்ள அறிவு; வஞ்சகப் புத்தி. கார் குழலி - கறுத்த மேகம் போன்ற கூந்தலை யுடையவள்; சீதை. 182.10. மின்னரக்கன் - மின்னல் போலும் ஒளியுடைய கிரீடம் சூட்டிய அரக்கன்; இராவணன். 182.11. வாறவனை - வருகிறவனை. நீரும் இப்போ - நீங்களும் (விபீஷணனும்) இப்பொழுது. 182.12. தேறுதலை - தேறுதல் மொழிகளை. 182.13. அணி - படை. பகுத்து உடனே - உடனே வரிசைப் படுத்தி. 182.14. முகனை யணி - முன்னணிக்கு அடுத்த படை. 182.16. வன்னமணிமாயன் - அழகிய மணிகளை அணிந்த விபீஷணன்.

Saying to himself: "It is now
My turn to try to avenge
The deaths of all these in the demon army."

180. Saying thus, he put on his armour
And left his place to take the field,
Surrounded by his armies to avenge the dead demons.
Hearing about his coming Harirāma called
To Vipīṣaṇa and asked him: "Tell me
Who is he who is coming from the South?"

181. As Nārāyaṇa inquired thus,
Bowing before him Vipīṣaṇa said
"Sire, he is the younger brother of the famous Rāvaṇa!
Elder to me, he is very knowledgeable,
And wise; substantial advice he gave to Rāvaṇa:
But the wicked one did not care to listen;
And so he has come now,
Promising to take arms against the enemy!"

### VIPĪṢAṆA SPEAKS ABOUT KUMPAKARṆA'S GREATNESS

182. "Younger to Rāvaṇa and elder to me,
He has come to join Intirajit (In the land of death);
He is very learned; and never forgetful of true wisdom:
Very intelligent, he is versatile in all arts;
Known for his good qualities and virtues,
From the day that the evil-minded Rāvaṇa
Abducted Sita and kept her imprisoned,
Till now, he has been giving him advice
Even like me; not caring for any of his words,
He has now driven him into the field!
And obeying the demon with fulgurant crown,
Impelled by fate, there he comes!"

### கும்பகர்ணன் - விபீஷணன் சந்திப்பு

வந்தவனை யழைத்து வரமாயவனா ரேவிவிட்டார்
சிந்தைபயில் விபீஷணன் றான்சென்றனரே கும்பகர்ணன்முன்
கும்பகர்ணன் முன்னேசென்று கும்பிட்டுவாய் புதைத்து
பண்புடனே தொழுதெழுந்து பதிந்துமுந்தி தானொதுக்கி

ஒதுக்கிமுந்தி வாய்புதைத்து உகந்துநின்ற தம்பியரே
மதுக்குளிந்த மலர்வாசன் வாருமென்று அருகழைத்து
அருகழைத்துத் தம்பிவந்த அழைப்பை எல்லா முறையுமென
தருவெனுங் கையுடையவரே தாங்வேந்தே யண்ணாவி

### விபீஷணன் அறிவுரை

அண்ணா விநந்தமையன் அரக்கனைப் போல்நீரிவரை
மண்ணில் வளர்மனி தரென்று மனதிலெண்ண வேண்டாமே
புண்ணியன் காண்வைகுண்டம் பொருந்திநின்ற வச்சுதன்காண்
தண்ணலையில் பாம்பணைமேல் சாய்ந்துபள்ளி கொண்டவன்காண்

கொண்டலென்ற அரியளித்து கொடியவரம் பெற்றவனை
வண்டலென்ற யிரணியனை வதைத்துவிட்ட நாரணன்காண்
நாரணன் காணிசுரர்க்கு நன்மைபெறு மைத்துனன்காண்
வாரணற்கும் அறுமுகற்கும் மாமனென்ற மாதவன்காண்

182.17. மாயவனார் - இராமர். 182.20. பதிந்து - ஒடுங்கி. முந்திதான் ஒதுக்கி - மேலாடையைப் பணிவாய் இடையில் அணிந்து. 182.21. உகந்து நின்ற - மகிழ்வோடு நின்ற. 182.22. மதுக்குளித்த மலர் வாசன் - தேன் சொரியும் குளிர்ந்த மலர் வாசனையுடையவன்; விபீஷணன். 182.24. தருவெனும் கையுடையவரே - கற்பகத் தருப்போல கேட்டதைத் தரும் வள்ளல் தன்மையுடையவரே!. அண்ணாவி - அண்ணா. 182.25. நந்தமையன் - நம்முடைய அண்ணன்; இராவணன். 182.27. அச்சுதன் - திருமால். 182.28. தண்ணலையில் - குளிர்ச்சி பொருந்திய அலைகள் வீசும் திருப்பாற்கடலில். பாம்பணைமேல் - ஆதிசேடன் என்னும் பாம்பின் மேல். 182.29. கொண்டல் என்ற அரி அளித்து - இரணியனுக்கு மேகம் போன்ற நிறமுடைய அரி வரம் கொடுத்து. பெற்றவனைவண்ட லென்ற இரணியனை - வரத்தைத் திருமாலிடமே பெற்று அவனையே துஷ்டன் எனறு சொன்ன இரணியனை. 182.30. வதைத்து விட்ட - கொன்று விட்ட. 182.31. சுரர்க்கு - தேவர்க்கு. மைத்துனன் - திருமால். 182.32. வாரணம் - யானை; இங்குக் கணபதியைக் குறித்தது. அறுமுகம் - ஆறுமுகங்களை உடைய முருகன். மாதவன் - திருமால்.

### RAMA ASKING VIPIṢAṆA TO BRING KUMPAKARṆAN

"O King Vipiṣaṇa! call your brother near
And with comforting words bring him here'
And Kumpakarṇaṉ with his forces deployed in order,
With Vanguard, rearguard and centre,
Came before his brother adorned with lovely gems.

### THE MEETING BETWEEN KUMPAKARṆAN AND VIPIṢAṆA

As suggested by Rama, thoughtful Vipiṣaṇa
Met his brother, Kumpakarṇaṉ:
Going up to him with obeisance true,
His hand covering his mouth
He prostrated before him,
Tying his upper cloth as a mark of respect!
Kumpakarṇaṉ hailed him, pleased with the homage
Of Vipiṣaṇa redolent of honeyed flowers,
And asked him why he called to him

### VIPIṢAṆA'S ADVICE

Vipiṣaṇa spoke thus to him:
"O brother, generous as the Kaḷpaka tree!
Do not underestimate these two,
As mere men of the earth, as our brother does!
Rama is the Lord of Vaikuṇṭam, Achutha himself!
He is the one recumbent on the Serpent-couch,
Upon the cool waves of the ocean!
He is the one who slew Hiraṇiyaṉ
Who insulted the Lord himself who gave him boons:
Nārāyaṇahari, the cloud-hued one he is!
The brother-in-law of Iswara he is!
Uncle to the Vināyaka and Āṟumukaṉ,

மாதவனார் வேதாவாம் மறையவர்க்குத் தந்தையுமாம்
கீதமொழி கெருடன்மேல் ஏறிவருங் கேசவன்காண்
காணுமுன்னாள் நம்மளண்ணர் கயிலைதனை யெடுத்தவன்னாள்
ஆணுவத்தா லவனெடுக்க அம்மையுமை பயப்படவே

பயப்படவே யரன்சினத்துப் பருவிரலா லூன்றினரே
மயக்கமுற்று ராவணனும் வந்துவிழ்ந்தான் பாதாளம்
பாதளந்தனில் விழ்ந்து பாழுடம்பில் நரம்பெடுத்து
நாதமுறு வீணைசெய்து நாவால் வாசித்தனரே

வாசித்தான் றவன்நெடுநாள் மங்கையுமை யாளிரங்கிச்
தோசிக்கு வரங்கொடுக்க சோதியுடன றிக்கைசெய்ய
அறிக்கையிட அரனழைத்து அரக்கன்மொழி கேட்டிடவே
குறித்தவனே யுனக்குமென்ன கொடியவரம்வேணு மென்ன

வேணுமென்றான் மந்திரவாள் வெள்ளைப்பிள்ளை யாருடனே
ஆணுவத்தால் முக்கோடி யரைக்கோடி வாணாளும்
சேணுலகர் தங்களையும் திரணமென மதித்திடவும்
கோணுதலாள் பார்வதியும் கூடவர வேணுமென்றான்

என்றந்த வேளையிலே ஈஸ்பரனார் கொடுத்துவிட்டார்
குன்றரக்கன் வருகையிலே கோவிந்தனார் வழியறிந்து
வழிமறித்து எதிரேசென்று மாயவனா ரேதுசெய்தார்
தளிர்குளிரு மால்மரத்தைத் தலைகீழாய் தானிறுத்திப்

182.33. வேதாவாம் மறையவர் - வேதங்களைப் படைத்த மறையவராம் பிரம்மன். 182.35. நம்மள் அண்ணர் - நம்முடைய அண்ணர்; இராவணன். 182.36. ஆணுவத்தால் - ஆணவத்தால். அம்மையும் - கயிலை மலையிலுள்ள உமையும். 182.37. அரன் - சிவன். பருவிரல் ஊன்றினாரே - கால் கட்டை விரலால் கயிலை மலையை அழுத்தினாரே. 182.42. தோசிக்கு - பாவிக்கு. சோதியுடன் அறிக்கை செய்ய - சோதி வடிவான சிவனிடம் முறையிட. 182.43. அரனழைத்து - சிவன் இராவணனை அழைத்து. அரக்கன் - இராவணன். 182.44. கொடிய வரம் - வலிமையான வரம். 182.46. ஆணுவத்தால் - ஆணவத்தால். 182.47. சேணுலகர் - தேவர் உலகத்தார். திரணமென மதித்திடவும் - அற்பமென மதித்திடவும். 182.48. கோணுதலாள் - வளைந்த அழகிய விழியுடையாள். 182.49. ஈஸ்பரனார் - சிவனார். 182.50. வழியறிந்து - நடந்த நிகழ்வுகளை அறிந்து. 182.52. தளிர் குளிரும் ஆல்மரத்தை - குளிர்ந்த தளிரையுடைய ஆலமரத்தை.

He is the father of Brahma, Lord of the Vēdas!
He is Kēcava riding upon the Karuṭa Mount
Long ago our brother, by pride impelled,
Tried to lift up Mount Kailas itself;
When, Goddess Uma becoming afraid,
Hara became angry, and pressed with his toe
And Rāvaṇa fell unconscious!
Down he fell to the nether-world,
Where plucking his own nerves,
He made a beautiful *Viṇai*
And sang the *Cāmakāṉam*[149] melodiously!
For a long time he played:
Till at last, Uma taking pity on him,
Pleaded with the Supreme Light Siva,
To grant a boon to the vile sinner:
And accordingly, Hara summoned the demon to him,
And said: "Ask whatever boon you want!
And he asked for a magic sword invincible
And Piḷḷaiyār white to protect him!
A long life three and a half crores of years;
And continued in his arrogance;
Nor caring for Siva, the Lord of the celestials,
He asked for Goddess Pārvati of lovely forehead
To be sent with him!
True to his word Iswara granted the boon!
As the hill-like demon was coming along,
Kōvinta coming to know of his heinous request,
Waylaid him thus! He made a cool banyan tree
Stand on end, with its roots up in the sky!"

149. *Cāmakāṉam* - Samaveda chanted musically.

பழிகாரன் காணவென்று பாணையில்லி ஆயிரமாம்
பளிருடனே ஆயிரங்கண் பாணைகொண்டு பாணிவிட்டான்
பாணிவிடக் கண்டரக்கன் பயித்தியமோ வுனக்குமென்ன
வீணுரைத்த ராவணனே மெய்வரமோ வேண்டிவந்தாய்

வந்தாய்நீ பித்தனடா மதிகேடா பெற்றவரம்
இந்தவர மொக்குமடா வென்றுரைத் தாரவனெதிரே
எதிரேசென்று மதிமயங்கி ராவணனே நீதிரும்பு
சதிகேடாய் பொய்வரத்தைத் தான்வாங்கிப் போவார்களோ

போவார்களோ மீண்டுசென்று புகழ்வரங் கேளுமென்றார்
ஆவலுட னென்னசொல்லி ஐயாநான் கேட்கவென்றான்
ஐயாவென்று ரைத்தவனே அரைக்கோடி வாணாளும்
தையல்வண்டோ தரியும் தாருமெனக் கேளுமென்றார்

கேளுமென்று அதைக்கொடுத்த கேசவன் காணண்ணாவி
ஆளுமிந்த வரமிருந் தாலனேக நெடுங்காலமெல்லாம்
நெடுங்காலம் வாழாமல் நிச்சயமாய் அழித்தவன்காண்
கடுந்திடுக்க மாயவனார் கவலையெல்லாந் தீர்க்கவென்றே

தீர்க்கவென்றே தசரதற்குத் திருமகனாகப் பிறந்து
வாக்குடைய ராமனென்ற மாதவன் காணண்ணாவி
அண்ண லிந்திரன் பொருட்டால் ஆனகல்லா மகலிகையைப்
பெண்ணாகவர வழைத்துப் பேறீந்த பெருமான்காண்

மாளாத தாடகையை வதைத்த முகில்வர்ணனிவர்
தாளாத வாலிதனைச் சங்கரித்த சுவாமிகண்டீர்
கண்டீரிலங்கை யெல்லாம் கருமாண்டு போகவென்று
வண்டாடும் பூங்குழலாள் மாதுசிறை வந்திருந்தாள்

182.53. பழிகாரன் - இராவணன். இல்லி - துவாரம். பளிருடனே - தெளிவுடனே. பாணி - அம்பு. 182.56. வீணுரைத்த - வீணாகப் பேசிய. மெய்வரமோ - உண்மையான வரத்தையோ. (182.50 -லிருந்து 59 - வரையிலுள்ள வரிகள் இராவணன் தன் அழிவிற்காகச் சிவனிடம் வரம் பெற்றான் என்பதைத் திருமால் உணர்த்தியது). 182.60. சதி கேடாய் - வஞ்சனை புத்தியுடைய கேடு கெட்டவனே; இராவணனே. பொய் வரம் - நடைமுறை படுத்த இயலாத வரம். 182.65. கேசவன் - திருமால். 182.67. அழித்தவன் காண் - சீதையைக் கவர்ந்ததால் தன் வாழ்நாளை தானே அழித்தவன் காண். 182.68. கடுந்திடுக்க மாயவனார் - அரக்கர்களுக்குக் கடும் சினத்தைத் தரும் திருமால். கவலையெல்லாம் தீர்க்கவென்றே - தேவர்கள் கவலையெல்லாம் தீர்ப்பதற்கே. 182.71. இந்திரன் பொருட்டால் - இந்திரன் செயலால். 182.72. பேறு - நற்பேறு; கதிமோட்சம். 182.74. சங்கரித்த - கொன்றொழித்த. 182.75. கருமாண்டு - பூண்டோடு அழிந்து. 182.76. வண்டாடும் - வண்டு மொய்க்கும். பூங்குழலாள் - பூச்சூடிய கூந்தலாள்; சீதை.

A huge pot was there with thousand holes;
Deliberately he was shooting his arrows at it!
On seeing this folly Rāvaṇa asked him:
"Are you mad to do this?"
To which the reply came;
"O Rāvaṇa! did you get boons true, from Siva?
You have been fooled!
You are stupid to ask the boon you got!
Crazed you are! Rāvaṇa turn back!
Will any one accept this false boon,
Which cannot be enjoyed?
Go back and ask him for good boons!"
And Rāvaṇa asked: "Sir, what shall I demand?"
And he replied: "Ask for half a crore years of life,
And the damsel Maṇṭōtari as your wife!
It was Kēcava, who got that boon to our brother,
But before enjoying his boon in full,
He is sure to be destroyed,
The Lord who can relieve the grief of Tēvas,
Is now born as the son of Tacarata,
With the name Rama! It is he who is now before you;
It is he who transformed back as a woman
Akalikai, who had become a stone on account of Intira's lust;
It was he who gave her redemption!
He again who slew the terrible Tāṭakai;
He is the cloud-hued one,
Who slew the terrible Vāli:
As our brother has imprisoned Sita,
(Of bee-haunted tresses),

வந்திருந்தாள் நம்மரசும் மதிலிலங்கை மாளவென்றும்
இந்தப்படி யண்ணருக்கே எடுத்துரைத்தேன் புத்தியெல்லாம்
புத்திசொல்லிக் கேளாமல்பொன் றிடுவான் றன்னுடனே
மத்தியமாய் மாளாமல் வாறீரோ மாயர்கிட்ட

### கும்பகர்ணன் மறுப்புரை

வாறீரோ வண்ணாவீ மாயவரைக் கண்டிருப்போம்
தேறியிந்த மொழியுரைக்கத் தென்னன்கும்ப கர்ணன்சொல்வான்
சொல்லரிய தம்பியரே சேர்ந்த விபீஷணரே
நல்லதுநீர் சொன்னதெல்லாம் நானுரைக்கக் கேளுந்தம்பி.

விருத்தம்

183. கேளடா வரக்கர் வாழ்வு கெடுத்திடத் திருமால் வந்த
நாளடா யிந்தக் காலம் நான்புத்தி சொலக்கே ளாமல்
மாளடா வெனநான் வந்தேன் மாளாம லிலங்கை நீயே
ஆளடா தம்பி யென்றா னதைவிபீ ஷணன்கேட் டானே.

நடை

184. கேட்டருளும் தம்பிநீ மாயவரைக் கண்டு
கிட்டாத வைகுண்டங் கிட்டியிருந் தீரே
நாட்டமுட னண்ணர்தனை நானிழந்து வந்தால்
ராசாதி ராசாக்கள் நகையாரோ தம்பி
தம்பியுடனே தமையன் தனக்கிடறு வந்தால்
சாகப் பயந்துவரச் சங்கதியோ சொல்லு
நம்பியிருந் தவர்தனைச் சதித்து நானே
நாரணரைக் கண்டுநலம் பெற்றோமே யானால்

182.77. மதிலிலங்கை - கோட்டைகள் சூழ்ந்த இலங்கை. 182.78. அண்ணருக்கே - அண்ணனாகிய இராவணனுக்கே. 182.79. புத்தி சொல்லிக் கேளாமல் பொன்றிடுவான் - என் அறிவுரைகளைக் கேளாது அழிந்துபடுபவன்; இராவணன். 182.80. மத்தியமாய் - விபரீதமாய். மாயர் - திருமாலாம் இராமன். 182.82. தென்னன் - தென்நாடாம் இலங்கை தேசத்தன்; கும்பகர்ணன். 183.3. மாளடாவென நான் வந்தேன் - இராமன் படைகளோடு போர் செய்வாய் என அண்ணன் இராவணன் கூற நான் வந்தேன். நடை 184.1. கிட்டாத - கிடைக்காத. கிட்டி - பெற்று. 184.3. இடறு - துன்பம். சங்கதியோ - முறையோ. சதித்து - சதிசெய்து. நாரணர் - திருமாலாம் இராமன்.

Now Lanka entire is going to be rooted out,
With not a blade of grass standing.
I had myself repeatedly warned him,
That because of her, our empire of Lanka
Will surely be destroyed.
But all my words fell upon deaf ears.
He is sure to be killed! Why do you continue
To stay with him, disaster staring in the face?
Why don't you come to us, to our Lord,
Instead of thus challenging fate and death?"

**KUMPAKARṆAṈ REBUTS THIS**

Vipīṣaṇa invited him with such wise words
To join hands with them Kumpakarṇaṉ replied:
"O brother rare, who is with the Lord!
What you say is good!"

183. "But it is not for me!
This is the day that the Lord has come
To destroy the demon's prosperity,
Not caring for my advice also,
He has forced me to take the field,
Resigning me to my fate, that is, death in battle!
At least you remain to rule Lanka
Saving your life, brother mine!

184. Listen, brother; meeting Lord Tirumāl,
You attained Vaikuṇṭa inaccessible to many!
If I were to leave our brother's side,
Kings and rulers, will laugh at me O, brother!
If the younger were to desert, afraid to die,
When his elder brother is in trouble -
Is it right, to leave one who has trusted us,
And to benefit by allying with Lord Nārāyaṇa?

பெற்றபிள்ளை தாயார்க்கு வசையே நினைக்கப்
பேர்பெரிய பூவுலகில் மானிடர்க் [77]கேறாது
எத்தலமுங் கீர்த்தி கொண்ட
ஏவல்கொளுந் தேவர்களு ·மிந்திர செயித்து
இந்திர செயித்துக்கு இளைய அதிகாயன்
எண்ணிறந்த கோடிப்படை எல்லா மிழந்து
சிந்தை கலங்கியவர் தன்செய லழிந்து
தேக்கினிலை யினீர்போல தியங்குகிறா ரண்ணர்
அண்ணருக் கிடறுவர நம்முயிரைப் பேணி
அஞ்சி யித்தறுவாயில் பிழைத்தோமே யானால்
மண்ணில் வளர்மானிட வர்தானும் நகையாரோ
மார்பிலிட்டு நம்மை வருந்தி வளர்த்தானே
வளர்த்த அண்ணர்க் கவசம் வந்தால்
வரவொண்ணாதுக் கலிவம்பினிலே நீயுமெங்கள் தன்னுடன் மாளாமல்
அழித்த படையான பலவீர ரொருகோடி
ஆராலுஞ் சொல்லவொண்ணா கொள்ளப் பலவெள்ளம்
கொள்ளப் பெருஞ்சேனை யுடன்கூடி நீமாளாமல்
கொத்தரக்கரு மாண்டு தென்றுமே வாராமல்
உள்ளதிலே நீயொருத் தனாகிலும் பிழைத்து
ஒப்பொருத ரில்லாத மெய்ப்பொருளைச் சேர்ந்து
சேர்ந்திருந்து எள்ளும் நீருமெங்களுக் கிறைத்துத்
திருமால் தன்னருள் பெற்றுத்தினம் வாழ்வீரென்றார்
போந்துடனே கும்பகர்ன னித்தனையுஞ் சொல்லிப்
போற்றியடி தொழுதனுப்பிப் பெருமாள் முன்சென்றான்

184.5. வசை - குற்றம். மானிடர்க்கு ஏறாது - மானிடரால் முடியாது நான் அண்ணன் இராவணனுக்குத் துரோகம் நினைக்க மாட்டேன் என்றவாறு. 184.6. கீர்த்தி - மேன்மையான புகழ். 184.7. இளை அதிகாயன் - இந்திரசித்தின் இளைய தம்பி அதிகாயன். 184.8. தேக்கின் இலையின் நீர் போல தியக்குகிறார் அண்ணர் - தேக்கிலையில் பட்ட நீர் அவ்விலையில் ஒட்டாது நிற்பது போல் செய்வதறியாது திகைக்கிறார் அண்ணணாகிய இராவணன் என்றவாறு. 184.9. இடறு - துன்பம். அஞ்சி - பயந்து. இத்தறுவாயில் - இந்த நேரத்தில். பிழைத்தோமேயானால் - தவறு செய்தோமென்றால். 184.10. வருந்தி - தன் உடலை வருத்தி. 184.11. அவசம் - துன்பம். வரவொண்ணாது- வராமல். கலிவம்பு - கலிகாலத்தில் ஏற்பட்ட தீச்செயல். 184.12. ஆராலும் - யாராலும். 184.13. கொத்தரக்கர் - கூட்டமான அரக்கர். 184.14. ஒப்பொருதரில்லாத - ஒப்புமைப் படுத்திக் கூற முடியாத. 184.15. எள்ளும் நீரும் எங்களுக்கு இறைத்து - அந்திமக் கடன் செய்யும் காலத்தில் எள்ளையும் நீரையும் இறைத்து.

77. கேராது.

It will be as bad, as a son abusing his own mother!
No, I will not do this treachery.
Having lost Intirajit, conqueror of the gods.
(Making them his slaves),
And having lost young Atikāyaṉ,
And countless millions of troops,
Our elder brother is grief-stricken,
And agitated like water on a teak-leaf;
With him in danger, if we were to flee for our life,
Leaving him to die alone, even the men will jeer at us;
When he who brought us up so lovingly
Has so many troubles, I cannot, brother,
Come away from his side.
In this debacle caused by Kāḷi[150] himself,
You need not die along with so many crores of us:
If you alone were survive in our race,
Attaching yourself to the incomparable True Ens,[151]
You atleast will be there to pour sesame and water,[152]
For the dead Kinsmen! may you live with Tirumāl
And get his grace and live forever!"
Saying this Kumpakarṇaṉ, went back
And Vipīṣaṇa bowed to him in farewell,
And returned to Rama's side.

150. Kāḷi - The deity presiding over the Iron age.
151. Ens - A rare word meaning 'entity' for The Supreme Being.
152. Sesame and water - Offering oblations to the dead with water and sesame seeds.

### விபீஷணன் உரை

சென்றுநின்று கும்பகர்னன் செப்பினதை எல்லாம்
திருமால் முன்னேயுரைக்கத் தேரியவர் சொல்வார்
நன்றியுரை யாரே நம்மால் த்ரோகமில்லை
நம்மாலே யாகுமட்டும் பார்த்தோமே யென்றார்

### கும்பகர்னன் போர் தொடுத்தல்

என்றிவர்கள் தங்களிலே பேசிநிற்கும் நேரம்
எட்டுதிக்கும் கும்பகர்னன் தன்படையை எவ
நன்றியுடன் ராமருடைய வீரர்க ளெல்லோரும்
நாட்டமுடன் கும்பகர்னன் சேனைகளின் மேலே
ஏவிவிட்ட தோர்முசு கரடிப்படை எல்லாம்
இருகையினால் மலைபிடுங்கி எறிந்தாரவர் மேலே
தாவிவந்த கும்பகர்னன் றன்படைக ளெல்லாம்
தண்டெடுப் பாரீட்டி குந்தம்தடி யெடுத்தெறிவார்.

### அரக்கர் - இராமன் சேனைகள் பொருதல்

விருத்தம்

185. எடுத்திட வரக்கர் சேனை எழுகடல் பரந்தாப் போலே
அடுத்திடுங் குரங்குச் சேனை ஆர்த்துஉட னார்ப்ப ரித்தார்
தொடுத்தன ரரக்கர் பேரில் தூயவ ரிளையோன் வாளி
விடுத்தன ரனுமான் சீறி வெற்பெடுத் தெறிந்தா னன்றே.

நடை

186. எறிந்தன ரவர்தடி எறிந்தன ரவர்மேல்
இருபத்து நாலுவகைத் தலைவரும் பொரவே
முறிந்தது கும்பகர்னனிவர் தெற்கு நோக்கவே
மூண்டது மாயவர் படைதெற்கு நோக்கியே
தெற்கே நோக்கிவரும் படையைச் சீரியரக்கனும்
சீரிய படைகளும் தேர்களுந் தாநெருங்கத்

184.21. முசு - குரங்கு; சுக்கிரீவனைத் தலைவனாகக் கொண்ட குரங்குப்படை. கரடி - சாம்பவன்; கரடிமுகமுடையோன். 184.22. தண்டு - தண்டாயுதம். ஈட்டி, குந்தம், தடி - சில படைக்கருவிகளின் பெயர்கள். 185.2. ஆர்த்து - ஆரவாரித்து. 185.3. பேரில் - மீதில். இளையோர் - இலட்சுமணர். வாளி - அம்பு. 185.4. வெற்பு - மலை. 186.1. தடி - ஒரு வகை ஆயுதம். பொரவே - போர் செய்யவே. 186.2. தெற்கு நோக்கவே - தெற்குத் திசை நோக்கிப் போர் செய்யவே.

### VIPĪṢAṆA SPEAKS TO RAMA

Listening to Vipīṣaṇa's report of his meeting
With Kumpakarṇaṉ, Ramaṉ thanked him,
And comforted him saying thus:
"Well! we have done whatever we could:
We did our best!
What will be, will be!"

### KUMPAKARAṆAṈ BEGINNING TO FIGHT

Now in the directions eight, Kumpakarṇaṉ
Sent his forces; all the warriors of Rama.
Bears and monkeys, seizing in both hands
Hills and hillocks threw them at Kumpakarṇaṉ;
While the demon threw as missiles, huge clubs
Spears, stout sticks and weapons like *Kuntam*.

### THE TWO ARMIES IN CONFLICT

185. The demon-forces spread like the seven seas,
The monkey forces sent up a boisterous roar;
Arrows innumerable, the young Lord, virtuous,
Sent against the demons,
And *Aṉumaṉ went on throwing hills on them!*

186. As each side threw various weapons at the other,
The twenty four Vāṉara commanders
Engaged the demons and broke them up;
Kumpakarṇaṉ turned to the South,
And the Lord's forces too turned to engage him.

தக்கபுகழ் மாயவனார் தன்படை மேலேவ
 தண்டா யுதங்கள் தடிகொண்டே யெறிந்திடுவார்
கொண்டைகள் குலைந்திடுவா ருடைகள் நெகிழ்ந்திடுவார்
 சூரியகுலத் தானுடைய படைகளை யடிப்பாரும்
வண்டனெனு மனுமார் சென்றார்படை மேலேறி
 மாயவர் அதுகண்டு மகிழ்ந்து டனிதாக
இனிதாக மகிழ்ந்திட யிவர்களு மவர்களும்
 இடிபோல முழங்கியே கடிதாகப் பொருவாராம்
அணிபாற் கடலெதுத்துப் பாற்கடலி லெதிர்த்தாப்போல்
 அவர்களு மிவர்களு மடர்ந்துடன் பொருதிட

### கும்பகர்ணன் - சுக்கிரீவன் போரிடும் காட்சி

பொருதிடக் கும்பகனும் வெகுசினம் மீறியேதான்
 பெருமாள்படை யூடவனருகே நடந்து சென்று
இருபது நாலுமுடி தலைவன் சுக்கிரீபனை
 எடுத்தொரு கையினாலே யிருத்தினான் தோள்மேலே
இருத்தியிவனைக் கொண்டு இலங்கைக்குப் போகவென்று
 இருபது காதவழி ஒருகாலா லெட்டிவைக்கத்
திருத்தமாய்ச் சுக்கிரீபனிருத்தித் தோளி லிருந்து
 சிங்கத்தைப் போல்சீறிக் கொண்டுபங்கப் படுத்தவென்று
பங்கப்படுத்த வென்று பார்புகழுஞ் சுக்கிரீபன்
 பாரமலைக் கும்பகர்ணன் பகுந்தான் மூக்குமுகமும்
துங்கனிரு செவியும் சொகுசாய் மடலுடனே
 சுக்கிரீபன் பிச்செறிய துருவகிரி யானதுவே

186.4. தண்டாயுதம், தடி-படைக் கருவிகளின் பெயர்கள். 186.5. கொண்டை - மயிர் முடிப்பு. குலத்தான் - அரக்கக் குலத்தான்; இராவணன். 186.6. வண்டெனும் அனுமார் - அம்பு போன்று வேகமுடைய அனுமான் என்றவாறு. 186.7. கடிதாக - கடுமையாக. 186.8. அணி- அழகிய. பாற்கடல் எதுத்துப் பாற்கடலில் எதிர்த்தாப் போல் - பாற்கடலும் பாற்கடலும் எதிர்த்துப் போர் செய்தால் போல. அடர்ந்து - நெருங்கி. 186.9. கும்பகன் - கும்பகர்ணன். அவன் அருகே - சுக்கிரீவன் அருகே. 186.10. இருபது நாலுமுடி தலைவன் சுக்கிரீபன் - இருபத்துநாலு வகையான வானர சேனைகளின் தலைவன்; சுக்கிரீவன். 186.11. காதவழி - ஏழரை நாழிகை நேரத்தில் ஒருவர் கடக்கும் தூரம். 186.12. பங்கப படுத்தவென்று - குறை ஏற்படுத்தவென்று 186.13. பாரமலை - வலிமையான மலை. பகுந்தான் – பிரிந்து போகச் செய்தான். மூக்கு முகமும் - முகத்திலிருந்த மூக்கு தனியாகும் படி. 186.14. துங்கன் - மேன்மையுடையவன்; சுக்கிரீவன். இரு செவி - கும்பகர்ணனுடைய இரு செவிகள். மடலுடனே - செவி மடலுடனே.

The demon's troops fought closely,
Using stout cudgels and mighty clubs;
The tufts of warriors came loose,
And so did their garments from their waist!
As Anuman swiftly went amongst the demons,
Rama rejoiced at the success of his monkey bands.
Thus the two sides fought a fierce battle
Roaring thunderously! It was as though
One sea of milk was engaging another sea of milk!

## KUMPAKARAṆAṈ AND CUKKIRĪVAṈ IN COMBAT

With growing wrath Kumpakarṇaṉ walked
Through the Lord's forces and lifting up
The king of twenty four commanders, Cukkirīvaṉ
With one hand, he placed him on his shoulder
And went back towards Laṅka!
In a single stride he crossed tweny *Kātams*!
While the king of the monkeys, furious like a lion
Decided to punish the demon; and from his perch,
He tore off the nose and two ears of Kumpakarṇaṉ!
The two ears which were huge as two polar mountains,
And for a moment the demon became unconscious;

ஆனதுவே துருவகிரி அவனுட முக்கதுதான்
அப்பொழுது கும்பகர்னன் வெப்பமாய்ச் சினமுடுகித்
தானவனு மெய்மறந்து தக்கசுக்கி ரீவன்தன்னை
தன்னைப் போலசெய்ய வென்றுசட்டென அவன்முடுக்கி
முடுக்கிச்சண் டாளனிவன் முகத்துக் கிழுக்குவைத்தான்
மூவருக்குந் தேவருக்கும் மூவுலகில் மானிடர்க்கும்
கெடுதிப் படைநடக்க உடலுக்கி முக்குவைத்தான்
கெட்டேனென்று சொல்லியந்த திட்டெனவே கும்பகனும்
திட்டெனவே கும்பகர்னன் திருமால் படைக்கெதிரே
செல்லவென்று தன்படையைச் செலுத்திய மர்பொருதான்
வட்டக்கடல் சூழ்வதுபோல் மாயவனார் தன்படையும்
வந்தஅரக் கன்படையும் தங்களிலே தான்பொருதார்.

### இராமன் சேனை முன்னேறுதல்

விருத்தம்

187. தங்களி லெதிர்த்த போது தடிதண்டு மலையி னாலும்
அங்கவர் பொருத போருக் கமரர்பொன் னுலகோர் மெய்க்க
மங்கையர் மதன ரூபன் மாயவர் மகிழ்ச்சி காண
சிங்கங்கள் போல சீறிச் சினத்தது குரங்குச் சேனை.

நடை

188. சேனை எதிர்த்துடனே சினமாகியே கும்பகர்னனும்
சினத்த சேவகர் பெலத்த வீரர்கள்
வரத்த வானரத் தளத்திலேவிட
ஆனைத் திரள்தனிலே அரித்திரள் பாய்ந்தாப்போல்
அடுத்தனர் சரந்தொடுத்தனர் கணை விடுத்தனர்
கவிம லைத்து வாங்கிட

துருவகிரி - வடதுருவ தென்துருவ மலைகள்; செவியின் தோற்றப் பெருமைக்கு உயர்வு நவிற்சியாய்க் கூறியது. 186.16. முடுக்கி - வேகப்படுத்தி. 186.17. சண்டாளன் - நீசச் செயல் புரிவோன்; கும்பகர்ணன். இவன் முகத்துக்கு - சுக்கிரீவன் முகத்துக்கு. 186.18. கெடுதிப் படை - கேடு விளைவிக்கும் அரக்கர் படை. திட்டெனவே - விரைவாகவே. 187.1. தடி, தண்டு - போர்க்கருவிகள். 187.2. பொன்னுலகோர் - பொன்னுலகத்திலுள்ள தேவர்கள். 187.3. மதனரூபன் - அழகிய வடிவினன். 188.1. பெலத்த - வலிமையுள்ள. வரத்த வானரத் தளத்திலே விட - சேர்ந்த வானரப் படைகளிடத்தில் அரக்கப் படைகளை விட என்றவாறு. 188.2. ஆனை - யானை. அரி - சிங்கம். அடுத்தனர் - நெருங்கினர். கவி - குரங்கு.

Thus he defaced the demon to his great disgrace,
Presaging disaster to his side.
And dropping Cukkirivaṉ
Kumpakarṇaṉ again came before Rama with his forces.
The two armies battled fiercely, armies vast as the sea.

187. As with clubs, cudgels, rock and hill,
The demons opposed them, the monkey armies
Roaring like lions, met them with equal fury;
To the great joy of the celestials in the golden world,
And Lord Rama of beautiful form, besides!

188 Wrathful Kumpakarṇaṉ let loose his strong warriors
And servitors, amongst the Vāṉara bands:
Like a pride of lions, leaping upon an elephant-herd,
They shot their arrows and darts!
The monkey battalions were thrown into disarray;
They fled in confusion.

மலைத்து வானரங்கள் மறுகியங் கோடையிலே
மாலைக் கிளையவர் வீரச்சிலை தொட
கோபித்தரக் கர்கள் பேரில் கணைதொட
விட்டகணை போடி படைபட்டது கோடிக்கரி
விழுந்தனர் சிலரி றந்தனர் சிலரிறந்ததை
யிழுத்தெறிந் தனர்சிலர்
பட்டனர்கள் வீரர்சிலை பத்திய வாள்வீரர்
பம்படக் கியவம் பரக்கர்கள் கும்பகன்
படைசாம்பி யிறந்திட
இறந்தனர் பலபேர்கள் இழுத்தெறிந்தனர் சிலபேர்
ஈடறுத் தனர்நேர றுத்தனர்
ஈகவே படையொக்க மடிந்திட
ஒக்கமடிந் திடவேதனித் தோடி கும்பகர்னன்
ஒருத்தனாய் வந்து திருத்தமால் வர்னர்படைக்
குள்ளே வந்து துரத்தி னானவன்

**இராமன் கும்பகர்ணன் மீது போர் தொடுத்தல்**

துரத்தவான ரங்களது திரக்க வோடையிலே
துய்ய திறத்தர் வைகுண்ட மாலவர்
பையச் சிலைதொட்டு எய்தொரு கையடி

கையொரு கையறவே கலைபோலுங் கும்பகர்னன்
கார்வர்ணர் தன்படை மேலொரு கைகொண்டு
ஓர்தடி ஓடி ஓடி வானரம்

மலைத்து - திகைத்து. 188.3. மறுகி - கலங்கி. மாலைக்கிளையவர் - திருமாலாம் இராமருக்கு இளையவர்; இலட்சுமணர். பேரில் - மீதில். 188.4. கோடிக்கரி - கோடிக்கணக்கான யானை. 188.5. சிலை பத்திய - வில்லைப் பற்றிய. பம்படக்கிய - புகை போல பரந்த. சாம்பி - சோர்ந்து. 188.6. ஈடறுத்தனர் - வலிமையை அழித்தனர். ஈகவே - இச்சையாகவே. படையொக்க - படை முழுவதும். 188.7. திருத்த மால்வர்னர் படைக்குள்ளே - செம்மையுற விளங்கிய திருமாலின் படைக்குள்ளே. அவன் - கும்பகர்னன். 188.8. வானரங்கள் - குரங்குகள். திரக்க ஓடையிலே - சேர்ந்து ஓடும் பொழுது (கும்பகர்னன் போர்த்திறனுக்கு ஆற்றாது). வைகுண்ட மாலவர் - வைகுந்தத்தில் உறையும் திருமால்; இராமன். பைய - மெதுவாக. சிலை - வில். 188.9. கையறவே - கும்பகர்னனின் ஒரு கை இற்றுப் போகவே. கலை - பேய். கார்வர்ணர் - இராமன். தன்படை மேலொரு கைகொண்டு - (இராமன்) தன்படையைப் பாதுகாக்க அப்படைகள் மீது தன் கையை வைத்துப் பாதுகாத்து.

The Lord, younger to Rama now seized his heroic bow,
And rained a shower of arrows upon them.
Countless numbers of the enemy died;
The tuskers were numerous that fell;
Great was the carnage as bowmen
And swordsmen fell, piles upon piles of them,
Their strength cut off by the arrows of the Lord!
As all his chariots had been cut down
And the armies spreading like smoke all over the field,
Growing weary and dispirited, at the slaughter,
Kumpakarṇaṉ ran up all by himself to engage his foes.
With his monstrous, gargantuan shape and size,
He began to chase the Vāṉaras back again.

## RAMA BEGINS HIS FIGHT AGAINST KUMPAKARṆAṈ HIMSELF

Chased by the giant demon and unable
To stand the fury of his attack,
As the monkeys fled helter skelter,
The Lord of Vaikuṇṭam began to bestir himself.
Slowly lifting his bow, he shot an arrow fierce,
Which sliced off the hand of Kumpakarṇaṉ,
While with his own hand Rama protected his own troops!
With his one hand Kumpakarṇaṉ again
Caused havoc amongst the monkeys, at which
They fled again in fear; on seeing which

வானரம் ஓடையிலே திருமாலுமே மிகச்சினத்து
மத்தொரு கையற்றவே விட்டனரே சரம்
பட்டனர் கும்பகன் தட்டழிந் தோடிட 10

கும்பகர்னன் சினத்து குறைபட்டுப் போனோமென்று
குற்றவே காலினா லெற்றவே வானரம்
தட்டழிந் தோடிடும் [78]தறுவா யினில்

வாயங்களாய் ராமர்கால் ரண்டும்துள்ள வைத்தராமா
மன்ன வன்கும்ப கர்னனு ருப்புகள்
அன்னிலை யற்ற பின்னம்மி போலூர்வனாம்

### மகோதரன் ஜனகனைப் போல் உருமாறிச் சீதையிடம் உரையாடல்

ஊனமாய்க் கும்பகர்னன் றன்னுடஉயிர் தட்டழியிலே
உற்றானி ராவணன் வைத்த சிறைதனில்
பத்தினி சீதை பயப்படு வாளென

சேனை மகோதரனும் மிதுலை தினகரனைப் போலே
சித்துக்கள் செய்யு மொருத்தன் மருத்தனை
கத்தியுருவிப் பின்கட் டாகக் கட்டினன்

கட்டியடிப்பதெல் லாம்சீதை கண்ணாலே பாராமல்
கையிற் றும்பொன் றெடுத்து நிலங்குத்திக்
காணவே தெய்வத்தை நொந்திருந் தாளம்மை 15

வெட்டிகொல்ல வாறானென்னுட மேனிபுண்ணாக் குகிறான்
மெய்த்த வத்தாலுன்னைப் பெற்றெடுத் தேனன்னை
சற்றேக் கண்பாரு மென்புத்திரியே தாயே

188.10. மத்தொரு கை – மற்றும் ஒரு கை (கும்பகர்ணன் கரம்). சரம் பட்டனர் - அம்பால பல அரக்கர் இறந்தனர். கும்பகன் - கும்பகர்ணன். தட்டழிந்து - தடுமாறி. 188.11. குறைபட்டுப் போனோம் - இரு கரங்கள் இழந்து போனோம். குற்றவே - குத்து விடவே. ஏற்றவே - ஏற்றி உதைக்கவே. தறுவாயில் - நேரத்தில். 188.12. வாயங்களாய் - மழை பெய்தது போன்று. கால் ரண்டும் துள்ள வைத்த ராமா - கும்பகர்ணனின் கால் இரண்டையும் துண்டித்து துள்ள வைத்த இராமா. அம்மி போல் ஊர்வனாம் - கைகளையும் கால்களையும் கும்பகர்ணன் இழந்ததால் அம்மியைப் போல் ஊருவானாம். 188.13. தட்டழியிலே - நிலைகுலையையிலே. 188.14. மகோதரன் - இராவணன் மந்திரியருள் ஒருவன். தினகரன் - ஜனகன். சித்துக்கள் - மாயவித்தைகள். மருத்தன் மருத்துவன். 188.15. கையிற்றும் - செய்வது அறியாது திகைத்தும். பொன்றெடுத்து - பொன்னாலாகிய குச்சியை எடுத்து. நொந்திருந்தாள் - வருந்தியிருந்தாள். அம்மை - சீதை. 188.16. என்னுட - என்னுடைய. அன்னை - தாய் போல் விளங்கும் சீதை.

78. தருவாயினில்.

Tirumāl shot another arrow at him,
And the remaining hand also fell upon the ground!
Kumpakarṇaṉ furious at this mutilation,
Now kicked with his legs and trampled upon the Vāṉaras,
Which made them bewildered
And flee in fear before the terrible demon!
Lord **Rama** now showered a rain of arrows,
Which cut off both the legs of Kumpakarṇaṉ
But the indomitable giant, yet unafraid
Though pouring flood from all his stumps,
Rolled about like a grinding stone,
Upon the Vāṉaras in the field!

## MAKŌTARAṈ TALKING TO SITA IN THE SHAPE OF JAṈAKAṈ

While here in the battlefield Kumpakarṇaṉ
With his limbs amputated was slowly nearing his end,
Makōtaraṉ, a minister of Rāvaṇa, disguising himself
As Jaṉakaṉ of Mitilai, came before Sita in Acōkavaṉam
With intent to deceive her:
While one adept in trickery tied his hands,
Behind his back, and sword in hand
Began to beat him before the eyes of Sita,
The princess, without lifting her eyes from the ground,
Took a piece of straw and placing it before her,
Remained indifferent to this sight,
Though lamenting her fate, within herself.
"O daughter! see he is hitting me!
All my body is lacerated with wounds!
He is about to kill me!
I obtained you, after true tapas!

தாய்சீதா லட்சுமியே பத்து தலையுள்ள ராவணன்றான்
தங்க மகுடந் தரித்து லகெங்கெங்கும்
மங்கா மலாள்கிறா னுன்காலில் விழ்கிறான்
நீயவன் மேடையில் போய்என்னை ரெக்ஷிக்கப் பார்மகளே
நேயப்பாவி யிந்த மாயமொழி சொல்ல
தீயன்தந்தை யல்லநீ யென்று துப்புவள்.

### சீதையின் சினமொழி

விருத்தம்

189. துப்பினேன் துரும்பே நாயே சுணைகெட்ட சவமே கேளு
அப்பனை வதைத்திட் டாலும் அங்கிசத் தார்பட் டாலும்
கற்புநான் தவறே னுந்தன் கண்புழுச் சொரிந்து நீயும்
இப்பிறப் பொழிவா யென்றா ளிராவணன் கழிந்தூர்ந் தானே.

### விபீஷணன் இராமனிடம் வேண்டுதல்

190. ஊர்ந்தனன் கும்பகர்னன் உடலொரு சட்டை யாக
வீழ்ந்தவ னுருண்டு ருண்டு விரட்டினான் குரங்கை எல்லாம்
தாழ்ந்துடன் திருமால் முன்னே தம்பிவிபீ ஷணனும் வந்து
போந்தடி யேனுக் காயிப் பிழைபொறுத் தருள்வீ ரென்றான்.

நடை

191. என்றே விபீஷணரும் திருவெம் பெருமாள் பதமே போற்றி
நன்றாகும் நாரணரே இந்த நாயனடியேன் செய்த குற்றமெல்லாம்
ஒன்றாக நீர்பொறுப்பீர் நானுன் பதஞ்சேர்ந் தபலத் தாலே
மன்றாளும் ராவணன் றானந்த மாபாவி யோடேயிவன் பிறந்து

188.17 மங்காமல் - புகழ் மங்காமல். 188.18. தீயவன் மேடையில் போய் - சீதையே! நீ இராவணனோடு சேர்ந்து அவனது அரியாசனத்தில் போய். ரெக்ஷிக்க - காப்பாற்ற. நேயப்பாவி - அன்பு கொண்டவன் போல் நடிக்கும் பாவி. 189.1. சுணை கெட்ட சவமே - சுரணை கெட்ட பிணம் போன்றவனே! 189.2. அங்கிசத்தார் - வம்சத்தார். பட்டாலும் - இறந்தாலும். 189.3. கண்புழுச் சொரிந்து - (தவறான வார்த்தைகள் பேசினதால்) கண்களில் புழுக்கள் நெளிந்து விழுந்து. 189.4. கழிந்தூர்ந்தானே - அகன்று சென்றானே. 190.1. சட்டையாக - மேலாடையாக. 190.4. போந்து - அருகில் வந்து. அடியேனுக்காய் - சிறியவனுக்காய்; விபீஷணனுக்காய். 191.1. திருவெம் பெருமாள் - மேன்மையான பெருமாள்; இராமன். 191.2. நாயன் - நாய் போன்றவன்; விபீஷணன். 191.3. பதம் - பாதம். பலத்தாலே - எனது ஆன்ம வலிமையாலே. 191.4. மன்றாளும் - நாட்டை ஆளும்.

Little mother! look at me! O my daughter!
O mother Sitalakshmi! the ten-headed Rāvaṇa
With golden crowns adorned, and ruling
Over the universes with great reputation,
Is falling at your feet for your grace;
Please go up to his palace
And try to save me, my daughter!"
As this wretch of a father
Uttered these guileful words, Sita replied;

### SITA'S INDIGNANT REPLY

"My father, you are not! you are an evil demon" she spat!
"See I spit at you, you shameless cadaver!
You wretch! you dog! hear me:
If my father were really tortured,
Even if my whole family were to die,
I shall not swerve from my chastity;
Worms shall crawl from your eyes:
You are going to die a miserable death!"
And Makōtaraṉ left the place his purpose defeated.

### VIPĪṢAṆA'S REQUEST TO RAMA

190. In the battlefield as Kumpakarṇaṉ short of all his limbs,
Was rolling about and still frightening the monkeys,
Undaunted and fearless, - Vipīṣaṇa went before Rama,
And bowing to him, implored him thus prayerfully:

191. "O Lord! pardon my brother his crime!
Lord! I adore your feet! For my sake, O Lord!
Please pardon all my own sins; I request of you,
In the name of our friendship,
This sinner Kumpakarṇaṉ has paid grievously
For the crime of being born along with Rāvaṇa:

பாவியுடன் பிறந்து யிவன்பட்டது போதுங் காண்பச்சை மாலே
மேவியொரு கணையா லிவன் மெத்த வுயிர்வாங்கி விட்டிடுவீர்
தாவியடி யாவி யிப்படி சங்கடஞ் சொல்லும் விபீஷணர்க்காய்
ஆவித் துணையென வேஅரி யாதி நாராயணர் தானிரங்கி

### கும்பகர்ணன் மரணம்

சொல்லும் புகழ்பெ ரியமால் சேர்ந்த ராமபாணத்தை யெடுத்து
வெல்லுஞ் சரந்தொடுத் துகணை விட்டுவிட்டா ரவன்பட்டு விட்டான்
நல்லோர்க்கு நாயகனாம் ரகுரா மன்கையால் கும்ப கர்ணன்படப்
பொல்லாத ராவணர்க் குவுடன் போயொரு வேரட்டனு ரைத்திடவே

### கும்பகர்ணன் இறப்பை இராவணன் அறிந்து அழுது புலம்புதல்

உரைக்க அவன றிந்து ஓர்பத்து நேரம்முகத் திலறைந்து
வரைக்கும் மணிப்புயத் தான்நொந்து வந்தானே பட்டபடு களத்தில்
களத்தில் மலைபோலே கும்ப கர்ணனைக் கண்டு கலங்கியவன்
அழுக்கண் ணீராறோ டவந்து அன்பான தம்பிதன் மேல்விழ்ந்து

விழுந்தானே தம்பி யென்றே வெம்பிமெய்ப் பொருளே யெனக்குத்துணையே
குழுந்த முகமுடைய தம்பி கும்பகர்ணா புத்தி கூறாயோ
கூறாயோ சாகிறோண்டா இந்த கொற்றவ ராவிக் குறுந்துணையே
நாராயண னுமுன்னைத் தம்பி நாடி விபீஷணன் சொற்கேட்டு

சொற்கேட்டுக் கொண்டா னோமுன் சொல்லும் பழமொழி போலாச்சே
ஒக்கவுடன் பிறந்து ஒறுவாமலே கொல்லும் வியாதியைப் போல

தாவி அடி யாவி இப்படி சங்கடம் சொல்லும் - கும்பகர்ணன் ஆவி இவ்விதமாய் இன்னலுக்கு ஆளாவதைச் சங்கடத்துடன் விபீஷணன் கூற. 191.8. ஆவி துணையெனவே - கும்பகர்ணன் உயிர் அவனை விட்டு பிரியட்டும் எனவே. அரியாதி நாராயணர் - திருமாலாகிய இராமன். 191.10. அவன் - கும்பகர்ணன். 191.12. வேரட்டன் - அரக்கன். 191.12. வேரட்டன் - அரக்கன். 191.14. மணிப்புயம் - மணி வைரங்கள் புதைத்த தோள். 191.17. வெம்பி - வாடி. மெய்ப்பொருளே - உண்மைப் பொருளே. 191.18. குழுந்த - குளிர்ச்சியான. 191.19. சாகிறோண்டா - சாகிறோமடா. கொற்றவர் ஆவிக்கு உறுந்துணையே - மன்னனாம் உயிருக்கு உரிய துணையே. 191.20. நாராயணன் - திருமாலாகிய இராமன். தம்பி - கும்பகர்ணன். 191.21. முன் சொல்லும் பழமொழி என்றது 'ஒக்கவுடன் பிறந்து ஒறுவாமலே கொல்லும் வியாதியைப் போல' என்பதைக் குறித்தது. 191.23. மனிதர் - இராமன் முதலாகிய மனிதர்.

I beg of you, kill him outright with another arrow,
Putting an end to the torture he is undergoing now!"
And Rama pitying Kumpakarṇaṉ's mortal pain and terrible plight,
Took one of his choice arrows and shot it at the giant,
Who fell dead now!
As Kumpakarṇaṉ died thus at the hands
Of Rakurāma, master of all good men and true,
One of the demons ran up to the evil Rāvaṇa.
And reported to him the passing away of Kumpakarṇaṉ.

## RĀVAṆA, COMING TO KNOW OF THE DEATH OF KUMPAKARṆAṈ, LAMENTS

Beating with his hands upon his face;
Grief-stricken came the demon-emperor:
With hill-like arms bedecked with gems,
Went he to the field of battle,
Where he saw Kumpakarṇaṉ, huge as a mountain,
Prone on the ground; his tears pouring like a river,
He fell upon the body of his brother,
And thus lamented; "O brother mine!
The only true support I had!
O Kumpakarṇaṉ, with your cool face!
Won't you speak now, your words of advice?
I am dying, O brother, my only help!
Oh, Did Nārāyaṇa kill you, listening to Vipīṣaṇa's words,
Proving thereby the proverb:
"The disease born with the body kills the body **itself?**
Even so, Vipīṣaṇa had allied himself with mere men,
And giving them suggestions, betrayed us to them:
"He has conspired against us!"
Back to his palace he came and bellowed in grief;
And in anger at the treachery of his brother,

ஆதி விபீஷ ணன்றான் அவனான மனிதருடன் கூடிச்
சேதி எடுத்துரைத்து அங்குச் செல்லுவார்க் கெல்லாந் தடங்காட்டி

தடங்காட்டி யேசதித்தான் என்று சங்கடமாய் வந்து மேடையிலே
அடங்காத கோபமுடன் அவனார்ப் பரித்தங் கேயல றுவானாம்
அலறி யபய மிட்டான வனன்பான தம்பியின் மேல்விழுந்து
தலைபத்தை யுந்தரையில் விட்டு தானே யுருண்டு தவித்திடுவான்

தவிப்பான் முகத்தறை வான்எந்தன் தம்பியுன் கோட்டை யழியுதடா
புவிப்பா யுலகறிய போர்க்குப் போனவன் மீண்டிங்கு வாராயோ
மீண்டு வரவிட்ட வனேநீ வேடரைக் கொல்ல மதியிலையோ
மாண்டு போனா யேதுசெய்வேன் மாற்றமில்லாப் பெருங்கோட்டை
மன்னா

கோட்டை யழியுதடா உந்தன் கொத்தள மெல்லா மிடியுதடா
சேட்டை பெருகுதடா தம்பி சேனைக்கு நாயகனீ யல்லவோ
நீயுண்டு மென்றி ருந்தேன் நல்ல நித்தியத்துவம் பெற்றவனே
நாயுங் கழுகுகளும் மோதி நாடுதே தின்னவும் கூடியுன்னை

உன்னை நம்பியிருந் தேதென்னை ஊதாரி யாக்கியே நீபோனாய்
தென்னர்க்குத் தென்னர் மெய்க்கும்நல்ல தேருக்கும் வில்லுக்கும்
வல்லவனே

191.24. சேதி - செய்தி. தடங்காட்டி - வழிகாட்டி (நமது வீரர்களின் வலிமை முதலியன அறிந்து கூறி) 191.25. சதித்தான் - சதி செய்தான். சங்கடமாய் - வருத்தமாய். மேடை - அரியணை. 191.26. ஆர்ப்பரித்து - ஆரவாரம் செய்து. அலறுவானாம் - வாய்விட்டுப் பேரோசை எழுப்புவானாம். 191.28. தவித்திடுவான் - செய்வது அறியாது திகைத்திடுவான். 191.29. கோட்டை - இலங்கை அரண்மனை. 191.30. புவிப்பாய் உலகறிய - பூமியின் மேலுள்ள உலகமும் அறிய. 191.31. மீண்டு வரவிட்டவனே - நீ இறந்தது கண்டும் மீண்டும் உயிரோடு என்னை இங்கு வரவிட்டவனே. வேடரை - இராமன் முதலான மானிடரை. மதி- அறிவு. 191.32. ஏது செய்வேன் - என்ன செய்வேன். 191.32. பெருங்கோட்டை - பெருங்கோட்டையை உடைய மன்னா! கும்பகர்ணா! 191.33. கொத்தளம் - மதில்புறம். 191.34. சேட்டை - தொந்தரவு. நாயகன் - தலைவன். 191.35. நித்தியத்துவம் - நிரந்தரத்தன்மை. 191.36. நாடுதே - கும்பகர்ணா! இறந்த உன் உடம்பை உண்ண விரும்புகிறதே. 191.37. ஊதாரி - அழிவு (கும்பகர்ணன் மாய இராவணன் காரணம் என்பது குறித்தது). 191.38. தென்னர்க்குத் தென்னர் - தென்நாட்டு அரசர்களுக்கும் தெற்காய் விளங்கும் நாட்டுக்காரர்கள். மெய்க்கும் - பொருந்தும்.

Beating his ten-heads upon the ground,
He rolled in grief inconsolable:
He beat his face with hands; "O brother!
My fort, my palace, my kingdom, are all ruined:
O you, who went to battle with all the earth watching,
Won't you ever come back?
You allowed me to be alive,
While you lie dead! Did you not have wit enough
To kill the hunters of the forest?
Oh, you are dead! what shall I do?
Oh, our huge fort and our battlements, our state entire,
Are crumbling! increasing is the trouble,
From the enemy; Oh are you not chief of all our armies?
Oh, I thought you are ever with me!
You who obtained life everlasting!
But now dogs and kites are waiting to eat you up!
Oh, I put my faith in you!
You have left me! I have wasted
Your life like a spendthrift!
O Lord of Lords in the South,
Chief of regiments of chariots and bowmen!
The women of all the seven worlds,
Are going to abuse me! O Kumpakarṉaṉ.
I cannot believe that mere men slew you!

என்னை வசைபறைவா ரிந்த ஏழுல கத்திலும் நாரியர்கள்
மன்னா வென்கும்ப கர்ணாஉன்னை மானிடர் தானோ
வதைத்ததென்றார்.

விருத்தம்

192. மானிட னிருவ ராலே மகனிந்திர செயித்தைத் தோற்றேன்
வானரப் படையி னாலே வலுபடை யெல்லாந் தோற்று
கானக மலைபோல் கும்ப கர்ணனும் பட்டுப் போனான்
யானினி யவரை வெல்ல யாரைவிட் டேவுவேனே.

நடை

193. ராவணன் கும்பகர்னன் பட்டசெய்தி யறிந்துதான்
நல்ல முகத்திலே நாலைந்துகை கொண்டறைந்தான்
தேவாதி தேவரெனக்குப் பயந்ததும் போச்சுதே
சிறுபிள்ளை ரண்டுபேர் மானிடர்வெல் லவுமாச்சுதே

மந்திரிகளுடன் இராவணன் ஆலோசனை

போனது காணலாமெண் ணிலாக்கோடி படையெல்லாம்
பின்வரவொட் டாமல்கொன் றல்லோபோ டுறார்மானிடர்
மானிடர் தம்மைவதைத் திடயேது செய்வோமென்றே
மந்திரி மாருடன் மன்புத்தி கேட்டுமலைக்கவே
ஊனம்வந் தாலும்நீர் தானேமலைக்க வொண்ணாதையா
ஒருபுத்தி நாங்களுரைப் பதுகண்டு உவந்திடும்
பானுவுங் கண்டுபயந் தோடுமாண்மை யுடையவன்
பாதாள மேழையுமாண் டுவான்மயில் ராவணன்

191.39. வசை பறைவார் - புழிச்சொல் கூறுவார். நாரியர் - பெண்கள். 191.40. வதைத்தது - கொன்றது. 192.1. மானிடன் இருவர் - மானிடர்கள் இருவர்; இராமனும் இலட்சுமணனும். 192.3. கானக மலை - காட்டிலுள்ள பெருமலை. 192.4. ஏவுவேனே - அனுப்புவேனே. 193.2. சிறுபிள்ளை ரண்டுபேர் - சிறு பிள்ளைகளாகிய இராம இலட்சுமணர். 193.3. கொன்றல்லோ - கொன்றல்லவா. 193.4. மன் - அரசன்; இராவணன். மலைக்கவே - திகைக்கவே. 193.5. ஊனம் - குறைபாடு. உவந்திடும் - மகிழ்ந்திடுவீர். 193.6. பானு - சூரியன். பாதாளம்- பாதாள லோகம்; இவை ஏழு; அவை அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் என்பன. மயில் ராவணன் - இராவணனுக்குத் தாயாதி வர்க்கத்தின் படி இவன் சகோதரன்; சிறந்த பலவான்; அரக்கன்; பாதாளலோகம் தன்னை ஆட்சி செய்பவன்.

192. Because of two men I lost my son, Intirajit,
At the hands of the Vāṉara armies:
"My strong forces have been defeated:
Like a mountain in the wilderness, Kumpakarṇaṉ is slain!
Oh, whom shall I now send to defeat them?"

193. As Rāvaṇa with his twenty hands beat in grief
His face, and cried: "Oh, the Gods above
Will no longer be afraid of me!
Two boys have conquered us:
Countless crores of troops have lost their lives;
On, these men kill all, that we send against them!
Oh, what shall we do to kill these men?"
As thus, he asked his ministers
They deliberated and made a suggestion:
"You should not be upset thus and bewildered,
At whatever loss may come,
We have just one suggestion to make,
Which will surely please you!
There is one, whom even the sun flees before, in fear!
Such is his great prowess;
The ruler of all the seven netherworlds,

*தானவன் வந்துபின் மாயவுபாயங் கள்செய்துதான்*
*தம்பிதமை யனிருவரையுங் கொண்டு சாடுவான்*
*ஏனமதாக அவரை யழைப்பியு மென்னவே*
*இங்கிதமாய் மயில்ராவணற் கோட்டனை யேவினான்*
*ஏவினஒட் டனும்வெண் டாமரைத்தண் டினூடுபோய்*
*இருந்தமயி லிராவணனுக்குச் செய்தி யியம்பினான்*

**மயில்ராவணன் போருக்கு ஆயத்தமாதல்**

*கூவியெழும்பிக் குலதெய்வ மாகிய காளியைக்*
*கும்பிட்டுநான் போறகாரியந் தான்செயங் கொண்டக்கால்*
*தேவியுனக்கு என்தங்கச்சி மைந்தனை வெட்டுவேன்*
*சேர்ந்தமரு மகன்தன்னை யுங்காவலில் வைத்தனன்*
*ஆவிகுலைந் தவன்தங்கச் சிதானு மலறவே*
*அன்றவன் பெண்சாதி போகாதே யென்றுஅமர்த்தவே*
*மத்தக்கண் பொய்கையில் தண்டாமரைத் தண்டினூடுபோய்*
*மன்னனிரா வணன்றன்னை யுங்கட்டி வினவினான்*
*பத்தெட்டு நாளைக்கு முன்னமேஎன் னோடுசொன்னக்கால்*
*படைகளிற வாமல்ராமனை வெட்டிப் பற்றுவேன்*
*இத்தனை கோடிப்படை யையும்மாளக் கொடுத்தீரே*
*இனிமேலே நானென்ன செய்வதென்று சொல்லிஏங்கினான்*

193.7. மாயஉபாயம் - மாயம் பொருந்திய வழிகள். தம்பி, தமையன் - தம்பியாகிய இலட்சுமணன் தமையனாகிய இராமன். சாடுவான் - கொல்லுவான். 193.8. ஏனமதாக - கருவியாக; எதிரிகளின் படைவெல்லும் கருவியாக என்ற பொருளில். அழைப்பியும் - கூப்பிடுங்கள். 193.9. ஒட்டன் - ஒற்றன். வெண்டாமரைத் தண்டினூடு போய் - மயில்ராவணன் இருக்கும் பாதாள லோகத்திற்கு வெண்தாமரை தண்டின் வழியாகப் போய். செய்தி - இராவணன் கூறி அனுப்பிய செய்தி. 193.10. கூவி எழும்பி - சப்தமிட்டு எழும்பி. செயங்கொண்டக்கால் - வெற்றி பெற்றிடுவேனானால். 193.11. மைந்தன் - மகன். மருமகன் - மயில்ராவணனின் தங்கை மகன். காவலில் - சிறையில். 193.12. ஆவி குலைந்து – உயிர் குலைந்து. அவன் தங்கச்சி - மயில்ராவணன் தங்கை; 'தூரதண்டி' என்னும் பெயருடையவள். பெண்சாதி - மனைவி. 193.13. மத்தக்கண் பொய்கையில் தண்டாமரைத் தண்டினூடு போய் - பாதாள உலகத்திலிருந்து வெளியில் வருவதற்குரிய 'மத்தக்கண் பொய்கை' யிலுள்ள குளிர்ந்த தாமரை தண்டினோடு வெளியுலகமாய் இலங்கைக்குப் போய். கட்டி - தழுவி. 193.14. பத்தெட்டு நாளை - 'சில நாளைக்கு முன்' என்ற பொருளில். பற்றுவேன் - கைப்பற்றுவேன்.

Mayil Rāvaṇaṉ! if he were to come,
Surely, he would put an end to the power
Of these two brothers! send him as your weapon against them
Send for him now!"
And accordingly with a message proper;
An envoy was sent to Mayil Rāvaṇaṉ.
And he went through the stem of a white lotus,
And reaching Pātāḷa,[153] conveyed to him the urgent message
Of his brother the ten-headed Rāvaṇa.

## MAYIL RĀVAṆAṈ PREPARING FOR BATTLE

At once he rose from his seat and prayed
To his family deity Goddess Kāḷi:
"O Mother! if the enterprise I embark upon
Becomes successful, I shall give as a sacrifice
My sister's son!" and straight he put in confinement,
His nephew! As his sister's son wailed in terrror,
And his own wife tried to prevent him from going,
Mayil Rāvaṇaṉ went to the pool called Mattakkaṉ
And through the stem of a cool lotus.
He went up to Laṅka and embraced Rāvaṇa!
Learning from him all that transpired,
He said; "Had you told me a week or two before,
I would have cut down Rama and saved your armies!
Oh, you have wasted the lives of millions of your troops!
What can I do now?"

153. Pātāḷa - Underworld in Hindu mythology

### இராவணன் வேண்டுகோள்

மெத்தப்பெல முள்ளபாதாள நாட்டுக் கரசனே
மெய்ப்பான ராமனுந்தம் பியையுமின் றிராவிலே
இன்றைக்கு ராவிலே இருவரையும் நீயெடுத்துத்தான்
இங்கேகொல் லாமலேபா தாளத்திற்கொடுபோ வென்றான்
குன்றை யெடுத்தவன் சொல்லவுஞ் சம்மதித்தானவன்
கூடநின்றோ ரிலொருவன் விபீஷணர்க் குள்ளனாய்

### விபீஷணன் செய்தி அறிந்து இராமனிடம் உரைத்தல்

சென்றுஉள்ளா னிவர்செப்பின செய்தியைச் சேரவே
தேசமன்னர் விபீஷணருக்குச் சொன்ன பொழுதிலே
மன்றை யளந்தவர்கிட்ட விபீஷணர் வந்துதான்
மால்பதந்தன் னைவணங்கியே வாய்மொழி கூறுவான்
கூறமுடி யாதுகீழ் பூமியாள் மயில்ராவணன்
கோடியு பாயங்கள் சூதுபடித்தவன் கொற்றவன்
மாறாமல்ராத் திரிவாறா னென்றேமொழி கேட்டுநான்
வாதுக்குமன்னை யளந்திட்ட பச்சைமால் வள்ளலே
தாறுமாறா கவேராக்ஷசர் செய்வார்கள் மாய்கைதான்
சூதானமாக யிருக்க வேணுமெனச் சொல்லவே

### அனுமன் வாலால் கோட்டை எழுப்புதல்

தேறியவார்த்தை ஸ்ரீராமர் கேட்டுடன் சிந்தையாய்த்
தென்னவனா னுமார்க்குத் திருமொழி கூறுவார்
திருவைச்சிறை மீண்டுதர வந்தவானரச் சேனையைச்
சேர்ந்தவுன் வாலாலுகந் தொருகோட்டை திருத்துவாய்
கருமாமுகில் வர்ணர்திரு வாக்கினால் வந்தகற்பனை
கடாக்ஷம் வைத்தேயனு மானுந்தன் வாலைவளைத்தனன்

193.16. மெய்ப்பான - உடல் வலிமையான. தம்பி - இலட்சுமணன். இரா - இரவு. 193.17. கொடு போ - கொண்டுபோ. 193.18. குன்றை எடுத்தவன் - கயிலையை எடுத்தவன்; இராவணன். அவன் - மயில் ராவணன். ஒருவன் விபீஷணர்க்கு உள்ளனாய் - இராமன் படையுள் ஒற்றனாய் விளங்கும் ஒருவன் விபீஷணரிடம் இராவணன், மயில்ராவணன் உரையாடலை உரைப்பானாய். 193.20. மன்றை யளந்தவர் - உலகை அளந்தவர்; திருமாலாம் இராமன். பதம் - பாதம். 193.21. கீழ் பூமியாள் - பாதாள பூமியை ஆளுகின்ற. உபாயங்கள்-வழிமுறைகள். சூது - சூழ்ச்சி. 193.22. வாறான் - வருகிறான். வாது - தருக்கத்துக்கு. 193.23. தாறு மாறாக்கவே - குழப்பமாகவே. மாய்கை - மாயை செயல்கள். சூதானமாக - பாதுகாப்பாக. 193.24. திருமொழி - மேலான வார்த்தை. 193.25. உகந்து - மகிழ்ந்து. திருத்துவாய்- செய்வாய். 193.26. கற்பனை - கட்டளை. கடாக்ஷம் வைத்தே - கிருபை வைத்தே.

## RĀVAṆA'S REQUEST

His cousin Rāvaṇa now requested him:
"O mighty king of the under world! Truly today
You must seize Rama and his brother!
Tonight you must capture them, and take them
Down to your Pātāla, without killing them here"
As he who lifted Mount Kailas said thus,
Mayil Rāvaṇaṉ agreed to do so.
A certain demon in the pay of Vipiṣaṇa,
Straight went to him and reported this.

## VIPISANA CARRYING THIS URGENT INFORMATION TO RAMA

As the spy informed Vipiṣaṇa this,
He went up to the Lord who measured the universe,
And bowing at his feet, said to him:
"Impossible it is to tell of the myriad tricks,
Mayil Rāvaṇaṉ, Lord of the underworld is capable of;
Well-versed in wile and guile is he;
He is expected surely in the night;
Hearing this I am upset, O Lord Jasper-hued!
They will create confusion dire;
Much gramarye he knows;
We cannot be too careful now."

## ANUMAN ERECTING A FORT WITH HIS TAIL

On hearing this disturbing report from Vipiṣana,
Rama became thoughtful:
Summoning Aṉumaṉ he spake thus to him:
"O you who belong to the Vāṉara army
Assembled to recover Sita! O Aṉumaṉ!
With your tail, erect an impregnable fort!"
As Tirumāl, dark-hued like the cloud,
Commanded thus, by the grace of the Lord,
He curled his tail round upon round,

இருபத்து நாலுதலைவ ரெழுபது வெள்ளமும்
ராமரிளைய பெருமாள் விபீஷணர் மந்திரி
மருவலர்கிட் டவராமலே வால்கொண்டு மண்ணுக்கும்
மாறியேவிண் ணுக்குமொன்றாகக் கோட்டை வளைத்தனன்.

**மயில்ராவணன் இராம இலட்சுமணனைப் பாதாளக் கோட்டையில் சிறைவைத்தல்**

விருத்தம்

194. வளைந்தன னநுமான் வாலால் வளைந்தனன் சூழக் கோட்டை
வளையுமுன் மயில ரக்கன் மாயத்தா லங்குள் ளாகி
ஒளித்தவ னீந்து கொண்டான் வுகந்தொரு குரங்கு போலே
வெளிப்படாக் கதிரோன் நீங்கி மெத்தவே யிருட்டுண் டாச்சே.

195. ஆச்சரிய மேடை மீதி லன்றுமால் பள்ளி கொள்ள
ஏச்சமால்க் கிளைய தம்பி ஈரேழு வருடங் கூடி
வாச்சதோ ரிந்திர சித்தை வதைத்ததோர் சபதம் நீங்கித்
தாழ்ச்செயம் தெளியத் தம்பி தமையனோ டுறைந்தா ரன்றே.

நடை

196. அன்று யிராமருந் தம்பியும் நித்திரை செய்யவே
ஆதார மாகிய பாதாள நாட்டுக் கதிபனும்
சென்றிரு பேரையு மொன்றா யெடுக்கனு மென்னவே
தேறி யரக்கனும் வந்து திகைத்தவன் நின்றிட

193.27. வெள்ளம் - மிகுதியான அளவை குறிக்கும் ஓர் எண். 193.28. மருவலர் - பகைவர். மண்ணுக்கும் மாறியே விண்ணுக்கும் - பூமியிலிருந்து வானம் வரை. வளைத்தனன் - வாலினால் கோட்டை கட்டினன். 194.2. மாயத்தால் அங்கு உள்ளாகி - மயில்ராவணன் அனுமன் வாலால் கோட்டை எழுப்பி முடிக்கும் முன்பாகவே அதனுள் தன் மாயாசக்தியால் உள்ளுக்குள் வந்து. 194.3. ஒளித்தவன் - மறைந்திருந்த மயில்ராவணன். ஈந்துகொண்டான் - எடுத்துக் கொண்டான். உகந்து ஒரு குரங்கு போல - மயில்ராவணன் உருமாறி குரங்கு சேனைகளுடன் தானும் ஒரு குரங்கு போல. 194.4. கதிரோன் நீங்கி - சூரியன் மேற்குத் திசையில் மறைந்து. 195.1. ஆச்சரிய மேடை - கண்டோர் அதிசயம் கொள்ளத்தக்க பஞ்சணை. மால் - திருமாலாம் இராமன். பள்ளி கொள்ள - துயில் கொள்ள. 195.2. ஏச்ச மால்க்கிளைய தம்பி - திருமாலுக்கு ஏற்ற இளையத் தம்பியாம் இலட்சுமணன். 195.3. வாச்சதோர் - வாய்த்ததோர். 195.4. செயம் தெளிய - வெற்றியால் மனம் தெளிய. 196.1. பாதாள நாட்டுக்கதிபன் - மயில்ராவணன். 196.2. எடுக்கனும் - எடுக்க வேண்டும். அவன் - மயில்ராவணன்.

As high as the heavens in which
Lord Rama, Lakshmaṇa, Vipīṣaṇa, ministers,
The twenty four leaders and the seventy *Veḷḷam* armies
Were safe against the dreaded foe.

## MAYIL RĀVAṆAṈ ABDUCTING RAMA AND LAKSHMAṆA AND IMPRISONING THEM IN THE UNDERWORLD

194. Aṉumaṉ erected a fort with his tail as ordered:
But before it was completed, Mayil Rāvaṇaṉ
Had already got inside with his magical power,
And hid himself among the armies,
Taking the form of a monkey himself!
The sun went down and it grew dark inside the fort.

195. Upon a marvellous platform deep inside the fort,
Rama went to sleep; and his brother of equal worth
(for fourteen years without sleep)
Happy at having slain Intirajit,
With the confidence given by success,
Slept along with his brother.

196. As Rama and his brother were fast asleep,
The ruler of the underworld deciding to abduct them
Thought hard, wondering what to do,
And at last hit upon a good plan:
Taking the form of Vipīṣaṇa, he came up to Aṉumaṉ
(As if he were the brother of Rāvaṇa who shook Kailas)

*நன்றெனவே யொரு புத்தி நினைந்தவன் நன்மையாய்*
*நல்ல விபீஷணர் போலவே பேசி நடக்கவே*
*குன்றெடுத் தோனுட தம்பி யெனவந்து நின்றுதான்*
*கோட்டைக்கு வாசலெங்கே யென்று கேட்டிடக் கூறுவான்*
*குறியுட னேமயில் ராவணன் பூஷணன் போலவே*
*கூண்ட வலது செவிவழி யாக நுழைந்துமே*
*திறைகொண்ட மன்னரைக் கொண்டனுமான் வாய்வழியுடன்*
*தீர்க்க முடன்வந்து பாதாள நாட்டுக்குச் செல்லுவான்*
*மறுகிய தாமரைத் தண்டின் வழியாகச் சென்றுதான்*
*மன்னரைக் கொண்டந்த மாகாளி கோயிலில் வைத்தனன்*
*மறுபடி வினையில்லை யென்று இலங்கையான் ராவணன்*
*வானத் திடியென வெற்றி முரச றையவே*

**விபீஷணன் முதலோர் வருத்தம்**

*வெற்றி முரசு அதிர்ந்திடக் கண்டு வெளிச்சமாய்*
*விபீஷண மூர்த்தி அதிசய மேதென் றெழுந்தனன்*
*தத்தித்தி யாக மாளக் கொடுத்த யிலங்கையில்*
*சங்கீத மேதெனப் புத்தியால் தேர்ந்து விரைவுடன்*
*சுற்றிப்பார்த்துக் காவல் சூதான மென்ன வனுமந்தன்*
*சேர்ந்த விபீஷணா எந்தன் செவிவழி சென்றீரே*
*பத்தியே நீரிங்கு வந்திட்ட சேதியைச் சீக்கிரம்*
*பகருவீ ரென்ன விபீஷணர் சிந்தா குலமுடன்*
*ஓடித் திகைத்தனு மாருடன் கூடியே மாருதி*
*உத்ததோர் ராக்ஷசர் மாய்கைக் களவில்லை என்றுமே*

196.3. பேசி நடக்கவே - மயில்ராவணன் இராம இலட்சுமணனிடம் பேசி நடக்கவே. 196.4. குன்று எடுத்தோனுட தம்பி - குன்றாம் கயிலையை எடுத்தவன் தம்பி; விபீஷணன். கூறுவான் - கூறியது அனுமனைக் குறித்தது. 196.5. குறியுடனே - குறிப்புடனே. பூஷணன் - விபீஷணன். கூண்ட - பொருந்திய. வலது செவி வழியாக நுழைந்து - அனுமனின் வலது செவி வழியாக அனுமன் கட்டிய கோட்டைக்குள் நுழைந்து. 196.6. திறை கொண்ட மன்னர்- கப்பம் பெறும் மன்னர்; இராமன் இலட்சுமணனைக் குறித்தது. 196.7. மறுகிய - குறுகிய. 196.8. மறுபடி வினையில்லை - வானரப்படைகளால் மீண்டும் இடையூறுயில்லை. 196.9. ஏது - என்ன. 196.10. தத்திதத்தியாக - கூட்டம் கூட்டமாக. மாளக் கொடுத்த - வீரர்களை இறக்கக் கொடுத்த. சங்கீதம் - இனிய ஓசை. 196.11. சூதானம் - எச்சரிப்பு. 196.12. சிந்தாகுலமுடன் - மனக்கவலையுடன். 196.13. உத்ததோர் - உற்றதோர். மாய்கை - மாயச் செயல்கள்.

And asked him the way to the entrance of the fort!
Unsuspecting, Anuman told him to enter
By his right ear and Mayil Rāvanan did so;
And soon found himself inside the tail-fort;
Straight seizing the sleeping Princes,
He emerged out of Anuman's mouth and returning
By the same way-the narrow stem of a lotus
Reached his abode and kept the sleeping heroes
Inside the temple of Makākāḷi!
While above on earth, Rāvaṇa who became happy
That he had no further trouble
Caused victorious drums to resound.

### THE SORROW OF VIPĪṢAṆA AND OTHERS

Hearing the noise of celebration,
As the drums reverberated,
Vipīṣaṇa woke up and wondered,
How it was that in Lanka that had lost!
Hordes of warriors, there was music resonating!
And swiftly going round the fort,
To check about the security,
He met Anuman who hailed him thus;
"Vipīṣaṇa, you went by my ear just now
Why did you come back so quickly?"
Dismayed and upset, he ran inside with Anuman,
Afraid of the boundless witchcraft of the demons;
And as they suspected, the two of them found
The Lord of Vaikuṇṭam and his brother missing!

*வாடி வந்துதிரு மால்பள்ளி கொண்டிரு ஸ்தானத்தில்*
*வைகுண்ட நாதருடன் தம்பி தன்னையுங் காணாமல்*
*சாடிப் பயந்து அனுமா ரழுது தவிக்கிறார்*
*தக்க விபீஷண ரங்கே யழுது தவிக்கிறார்*
*கூடி யிருபத்து நாலு தலைவருங் கூவென்றார்*
*கூவென் றெழுபது வெள்ளமுங் கூவென் றழுதனர்.*

*விருத்தம்*

197. *கூவெனப் படைக ளெல்லாம் கூடியே தேடிப் பார்த்துத்*
*தேவர்கள் தேவ னோடு தீரன்லக் குவனில் லாமல்*
*ஓவியம் போலே நின்று ஒருவரை யொருவர் பார்த்துப்*
*பாவியாய்ப் போனோ மென்று பரதவித் தழுது நின்றார்.*

*தரு*

198. *நின்றவிபீ ஷணருமனு மானுமன்று டனேகலங்கி*
*நிறைதிங்க ளில்லாத புவனங்கள் போலவும்*
*இருகொங்கை யில்லாத தோகையர் போலவும்*
*திருவிளக் கில்லாத வீடுகள் போலவும்*
*ஸ்ரீராம னில்லாத சேனை தாமென்ன*
*அன்றுடனே கலங்கியினி யென்னஆலோ சனைகள்செய்வோம்*

**விபீஷணன் - அனுமன் ஆலோசனை**

*ஐயனேயென் றிடவேராமரின் அம்புய பாதம்பணிந்து*
*அப்போது விபீஷணர் அனுமானுக் கோர்மொழி*
*செப்புவார் பாதாள தேசத்தில் நீசென்றால்*
*மைக்கரு மாமுகில் வண்ணனுந் தம்பியும்*
*மெய்ப்பாக விடியுமுன் கொண்டிங்கே மீளலாம்*
*சென்றிடுவா யெனவேகீழ் பூமிக்கு வழிசொல்லுவீர்*

196.14. வாடி - முகம் வாடி. ஸ்தானத்தில் - இருப்பிடத்தில். 196.15. சாடி - குதித்து. 197.2. தேவனோடு - இராமனோடு. தீரன் லக்குவன் - வீரமுள்ள இலட்சுமணன். 197.4. பரதவித்து - பரிதவித்து. 198.1. நிறை திங்கள் - பூரணச் சந்திரன். புவனம் - பூமி. 198.2. கொங்கை - மார்பு. தோகையர் - பெண்கள். 198.4. ஐயனே - தலைவனே என விபீஷணரை அழைத்து. அம்புய பாதம் - தாமரை மலர் போன்ற பாதம். 198.5. மைக்கரு மாமுகில் வண்ணன் - மை போல் கறுத்த, மழை மேகம் போன்ற நிறமுடையவன்; இராமன். தம்பி - இலட்சுமணன். 198.6. மெய்ப்பாக - உறுதியாக. கீழ்பூமி - பாதாள லோகம்.

Running about here and there,
Aṉumaṉ wept, and so did Vipīṣaṇa, agitated;
And too the twenty four commanders,
And the seventy *Veḷḷam* Vāṉaras besides.

197. Searching in vain for the two everywhere,
And not finding Rama and Laksmaṇa
They stood looking at each other
Wordlessly, like paintings:
And pathetically cried at their plight.

198 Vipīṣaṇa and Aṉumaṉ, full of grief,
Stood baffled and confounded:
"Like the earth without the full moon,
Or a woman without her two breasts,
Or homes without sacred lamps,
What are we without Srirāma?
All these armies are all of no use:
Oh, what shall we do now?"
Inly meditating on Rama's lotus feet,
Vipīṣaṇa now said to Aṉumaṉ thus:
"If you were to go at once
To the underworld, you can bring back
Without doubt, the Lord dark-hued like the cloud,
And his brother! surely you can return before sunrise!
Go you down through the earth to Pātāḷam."

## VIPĪṢAṆA GUIDING AṈUMAṈ REGARDING THE WAY TO REACH THE PLACE

When Aṉumaṉ asked him; "How do I go
To the under world?, Vipīṣaṇa told him:

### அனுமனிடம் விபீஷணன் பாதாளலோகம் போகும் வழி கூறல

என்றிடவே பூஷணர்அனு மானுக்கேற்ற மொழியுரைப்பார்
சிவகெங்கைப் பொய்கையில் செந்தாமரைத் தண்டின்
வருகின்ற நூல்வழி யங்கே போமென
தவசிந்த வனுமானும் சாடிப் பாய்ந்திடப்
புவியான பாதாள பூமி கண்டுமே
நின்றான்பா தளத்தில்வாழ் மயில்ராவணன் கோட்டைக்குள்ளே

### அனுமன் பாதாளலோகம் அடைதல்

தெய்வத்தச்சன் மயனால் பாதாளலங் கைக்குமுன்புறத்தில்
நல்லேன மாயொரு வெங்கலக் கோட்டையும்
அதன்மேலும் கீழ்செம்பி னாலொரு கோட்டையும்
விலைபெற்ற துகைவெள்ளி யாலொரு கோட்டையும்
எரிபெத்த அரிகோப அக்கினிக் கோட்டைக்குள்
குடிகொண்டங் கவனிருக்க அனுமானும்
கொக்கரித்தங்குசென்றார்

### அனுமன் பலவிடத்தும் தேடுதல்

சென்றுநின் றனுமாரும் விரைவுடன்தேறி மனமொத்துடன்
குன்றுபோல் மாளிகை கோடி தேடினான்
வேண்டிய வீதிக ளெங்குந் தேடினான்
நீண்டோனை காணாமல் நின்று வாடினன்
ஆண்டவன் ராமனை யனுமன் றேடியே
படியந்தச் சோலைகளும் பூங்காவினில் விரிகெங்கை
பொய்கைகளும்

198.8. நூல்- இழை; தண்டின் துவாரம். தவசிந்த அனுமான் - தவ சிந்தனையுடைய அனுமன். 198.10. நல் ஏனமாய் - நல்ல கோட்டையாய். வெங்கலக் கோட்டை - வெங்கல உலோகத்தால் செய்யப்பட்ட கோட்டை. 198.11. துகை - தொகை; மதிப்புமிக்க பணம். 198.12. எரி பெத்த - தீ எரிகின்ற. அரி - திருமால். கோப அக்கினிக் கோட்டைக்குள் - சினம் வாய்ந்த நெருப்புக் கோட்டைக்குள். 198.12. குடி கொண்டு அங்கு அவன் இருக்க - மயில் ராவணன் அக்கினிக் கோட்டைக்குள் குடி கொண்டிருக்க. கொக்கரித்து - ஆரவாரித்து. 198.13. மன மொத்து - மனம் பொருந்தி. 198.14. நீண்டோனை - நெடிய திருமாலை; இராமனை.

"In the sacred Civakaṅkai pool,
There is a red lotus growing:
Go down through its stem along the fibre!"
Aṉumaṉ of tapas great, jumped up,
And went as indicated by Vipīṣaṇa,
And in a trice reached the netherworld
Where Mayil Rāvaṇaṉ had his impregnable fortress.
Constructed by Mayaṉ, the celestial architect,
At the entrance to it, there was a bronze fort;
Over that, a fort of copper;
And higher still, a fort wrought of silver,
Priceless! within a fort of fire, dwelt Mayil Rāvaṇaṉ!
Aṉumaṉ roaring boisterously went inside,
And searched with concentration
In all the palaces huge as hills;
In all the streets, he looked for noble Rama;
For a while he stood sore bewildered,
But continued his search for the Lord;
In the groves, flowery parks, and in pools
And streets, in vain;

தேடியனுமா ரும்கண்ண திலேசிக்கா மலங்குந்ன்று
  பாதி யிரவில் பதினாறு நாழிகை
மோதி யோடி முகமது வாடியே
  சாதி யான பூங்காவினுள்த் தேடியே
ஆதி மாயனை யங்கேயும் காணாமல்
    துடிதுடியெனத் துடித்துஇனி யென்னசூசங்
        கள்செய்வோமென்று
மனமதுபுண் ணாகியனுமா ரும்மாயன் துணையெனவே
    தோரணந் தன்னிலே ஏறி நின்றுடன்
உபாய தந்திரமே நினைத்தவர்
    மீறி வந்து தண்ணீர்க் குளங்கரை
ஏறி நின்றிட ஈசன் கிருபையால்
    படியந்தம யிலரக்கன் அவன்றங்கை
        யிடதுகைக்குடமெடுத்து
பாவி மயிலரக்கன் வார்த்தைக்குப் பயந்துமே மின்னாளும்
    பாணி தான்மொள்ளவே வாற நேரத்தில்
தான்பெற்ற மைந்தனைக் காவ லாக்கியே
    ஊனதை வைத்தவள் உள்ளம் நொந்திட
ஆண்மைப் பிரகாச மாயனுமன் நின்றிட
    அர்த்தசாமந் தனிலேவந்த பெண்ணையனு
        மந்தன்கண்டானே.

198.15. தேடியபடியே - தேடியவாறே. 198.16. கண்ணதிலே சிக்காமல் - இராமன், அனுமன் தேடும் பொழுது படாமல் இருக்கவே. 198.17. சாதியான - தரமான. 198.15. தேடியபடியே-தேடியவாறே. 198.16. கண்ணதிலே சிக்காமல் - இராமர், அனுமார் தேடும் பொழுது படாமல் இருக்கவே. 198.17. சாதியான - தரமான. 198.18. ஆதிமாயன் - திருமாலாம் இராமன். சூசங்கள் - சூழ்ச்சிகள் 198.19. தோரணம் - கோபுரவாயில். 198.21. கிருபையால்-அருளால். அவன் தங்கை - மயில்ராவணன் தங்கை; தூரதண்டி என்பவள். 198.22. மின்னாள் - மின்னல் போன்றவள்; மயில் ராவணன் தங்கை; 'தூரதண்டி' என்ற பெயருடையாள். பாணி - தண்ணீர். வாற - வருகிற. 198.23. ஊனதை வைத்தவள் - உயிரை மகனிடம் வைத்து வெறும் உடம்பைக் கொண்டு திரிபவள்; தூரதண்டி. 198.24. அனுமந்தன் - அனுமன்.

For his eyes found no trace of the two.
Till almost half the night was over;
Sixteen *Nāḻikais* had passed as he went about.
Here and there, seeking for the Lord,
In all the buildings and parks;
Throbbing with the pain and grief,
Reflecting on what strategy he could adopt,
Heartsick, putting his trust in the Lord God,
He climbed at last upon a porchway and looked around:
He saw a pond and coming down,
He stood looking around him:
By the grace of the Lord, now,
The sister of Mayil Rāvaṇaṉ,
With a water-pot in her hand
Came there to fetch water; her looks showing grief,
As her own son had been imprisoned by her brother,
To be a sacrifice to Goddess Kāḷi.
Aṉumaṉ with manly radiance wondered,
At the sight of a woman all alone,
Coming thus to fetch water at dead of night!

### அனுமன் மயில்ராவணனின் சகோதரியிடம் விசாரித்தலும் அவளின் பதிலுரையும்

விருத்தம்

199. கண்டதோ ரனுமன் றானும் காரிகை முகத்தை நோக்கி
இன்றுதா னிந்த நாட்டில் ரண்டுபேர் வரக்கண் டாயோ
மன்றிலென் தமையன் ரண்டு மனிதரைக் கொண்டு வந்தான்
கொன்றுகா ளிக்குப் பூசை கொடுப்பன்காண் நாளை யென்றாள்.

நடை

200. காணெனவே தூரதண்டி காற்றுமக னோடினிதாய்
காரணம் பலதுரைக்கக் கேளும்
தானெனக்கு மூத்தவன் சதிகேடன் பொல்லாதான்
சண்டாளன் வண்டன்வெகு மூடன்
நான்வளர்த்த மைந்தனை யடைத்தான் பின்னையும்ரண்டு
நரர்தமையுங் கொண்டுவந் தடைந்தான்
மாநிலத்திலே பெரியக் காளியவள் முன்போட்டு
வாய்த்தபெலி யிட்டிடுவான் நாளை

**அனுமன் மயில்ராவணன் தங்கையிடம் வேண்டுதல்**

நாளையென்று சொன்னமொழி கேட்டது மனுமன்மெச்சி
நல்லவேட்டை வாய்த்துதே யாகட்டும்
வேல்விழியே நீயெனை யெடுத்துயிந்தக் கோட்டைவழி
வீட்டகத்தே கொண்டுமே விடுத்தால்
நாலுநாழிக் குள்ளேயுந்தன் அண்ணனவன் தன்சிரசை
நானறுப்பேன் திட்டமது சொன்னேன்
வாழ்புவி யிலுன்மகனை மெய்ப்பாய்த் தலைதிருப்பி
வாய்த்தமுடி சூட்டியாள வைப்பேன்

199.1. காரிகை - பெண்; தூரதண்டி. 199.3. மன்றில் - சபை. 200.1 காற்றுமகன் - வாயுபுத்திரன்; அனுமன். 200.2. தான் - அவன்தான்; மயில் ராவணன்தான். வண்டன் - துட்டன். 200.3. அடைத்தான் - சிறையில் அடைத்தான். நரர் - மானிடர். 200.5. மெச்சி - தூரதண்டியைப் பாராட்டி. நல்ல வேட்டை வாய்த்ததுதே - போரிட்டு மயில்ராவணன் மற்றும் அரக்கர்களை அழிக்க வாய்ப்பு ஏற்பட்டதே. 200.6. வேல்விழியே - வேல் போன்ற கூர்மையான கண்களை உடையவளே; தூரதண்டியே!. வீட்டகத்தே - கோட்டைக்கு உள்ளே இருக்கும் வீட்டின் உள்ளே. 200.7. திட்டமது - உறுதியது. 200.8. மெய்ப்பாய் - உண்மையாய். தலைதிருப்பி - முதன்மையாக உயிரோடு கொண்டு வந்து.

### AṈUMAṈ INQUIRING OF MAYIL RĀVAṆAṈ'S SISTER AND HER REPLY

199. Looking down at the damsel's face,
Aṉumaṉ inquired of her: "Did you see
Two men come into this country today?"
And she replied, "My brother brought two men
To the hall today; tomorrow he intends to kill them
As sacrifice to Goddess Kāḷi."

200. Explaining further, Tūrataṇṭi said to Māruti;
"Listen, Sir! my elder brother is a wicked demon;
He is base, evil and also stupid;
My son, he has imprisoned; and also two humans
He has brought, and put them in confinement;
Tomorrow he is going to sacrifice them
Before Goddess Kāḷi Great."

### AṈUMAṈ'S REQUEST TO MAYIL RĀVAṆAṈ'S SISTER

On hearing these words, Aṉumaṉ grew happy
At the prospect of good hunting!
Addressing her, he said: "O lance-eyed lady!
If you could take me through
The entrance of the fort, near your residence,
Past these guards within four *Nāḻikais*
I shall cut off your brother's head;
This I swear; And bring your son,
Safe and sound out of the prison!
Besides, I shall crown him.
As the king of the underworld!

### மயில்ராவணன் தங்கையின் இகழ்ச்சி

வைப்பேனென் றுவார்த்தைசொன் னாயையை யோஅவனுடைய
வன்படையை வெல்லுங் கவிநீயோ
எப்படியுங் கையிலே பிடித்துப்பல் லிழித்துக்கொண்டு
இங்கேவா யென்றோரடி யடித்தால்
அப்பாவென்று வாய்பிளந்து அருகே வருங்கவியுன்
ஆண்மையை யாரோடே சொல்லவந்தாய்
குப்பமான ஆனையுண்டு லக்ஷம்படை தன்னில்வரும்
குதிரை வரும்பத்து லக்ஷந்தானும்
செப்பமான தேர்கள்பத்து லக்ஷம்படை தன்னில்வரும்
சேர்ந்தவீரர் ரண்டுலக்ஷங் கோடி
இப்பிறப்பிலே எனக்குமூத்த அண்ணன வனுடனே
எதிர்த்தபேர்கள் வெல்லமாட்டார் சொன்னேன்

### அனுமனின் மறுப்புரை

சொன்னே னென்று பெண்ணழகி சொல்லவனுமன்
சொல்லுவேன் தோகையரே நீயறிய மாட்டாய்
மன்னனைக்கொன் றுன்மகனை வாய்த்தஅர சாக்கிவைப்பேன்
மறுத்துமொழி பேசவேண்டா மென்ன
என்னசொன்னாய் புன்குரங்கே என்னுடைய காலாலே
இடறினாலும் செத்துநீ போவாயே
பின்னையுந்தான் பாவிகோட்டை செல்லவேதண் ணீர்க்குடத்தைப்
பெருந்திராசு தன்னில் நிறுப்பார்கள்
என்றவளு ரைத்தமொழி கேட்டனுமன் தாயேநீ
என்பெலத்தை இப்போதறி வாயே
இன்றிகழ்ச்சி யானமொழி சொன்னாயு னக்குவேண்டி
இன்றைக்குத் தான்நான்பொறுத் தேன்சும்மா
நன்றுநன்று என்சொரூபம் பாராயென வுரைத்து
நல்லமலை போலவே வளர்ந்தான்

200.9. ஐயையோ - ஆச்சரியத்தால் தூரதண்டி கூறிய சொல். கவி - குரங்கு. 200.11. ஆண்மையை - வீரத்தை. 200.12. குப்பமான - அடர்த்தியான. 200.15. பெண்ணழகி - அழகிய பெண்; தூரதண்டி. 200.16. மன்னனை - மயில்ராவணனை. 200.17. புன்குரங்கே - அற்பக் குரங்கே. 200.18. பின்னையுந்தான் - மேலுந்தான். திராசு - நிறுத்தலளவைக் கருவி. 200.21. சொரூபம் - வடிவம்.

### THE SCORNFUL WORDS OF TŪRATAṆṬI

"O you who say that you will kill my brother,
And crown my son! are you the monkey,
Who can destroy his great power?
If a demon were to beckon to you,
You will grin, baring your teeth, and run up!
A single blow will make you cry aloud
In pain, opening wide your mouth; agape!
To whom are you thus vaunting your strength?
Huge and stout elephants, a lakh he has!
Horses ten lakhs, an equal number of chariots!
Two lakhs crores of warriors!
This is the army of my elder brother;
None can oppose him and defeat him."

### AṆUMAṆ'S REBUTTAL

"O beautiful lady! you do not know my strength;
Surely your brother will be killed by me;
Your son, I shall crown the king of this world!
Do not argue with me."
And she scornful, said to him;
"What do you say, you mean monkey?
If I were to flick you with my foot,
You will surely die!
Further, to get past the guards at the gate,–
Even my water-vessel will be weighed in a balance,
Before I am allowed inside"
Aṉumaṉ said "Mother mine!
You will now see my strength!
You have said words of scorn against me;
For your sake, I have borne them meekly;
Good! Good! see my real stature now!"

*கண்குளிரக் கண்டுளம் மகிழ்ந்தனும ராஜனுட*
*காலைப் பிடித்தே நமஸ்கரித்து*
*பெண்ணழகி தூரதண்டி கண்ணனுமா னேயிரண்டு*
*பேருமெந்த நாட்டார் களென்றாள்*

**அனுமன் இராமன் புகழுரைத்து உதவி வேண்டுதல்**

*கங்கைசூ ழயோத்திநகர் தன்னையாள் தசரதற்குக்*
*கண்மணி போல்வந்த நரபாலன்*
*ஐங்கரர்கந் தற்கும்மாம னானதேவ ருக்குங்கோமான்*
*அரவனார்க்கு மைத்துனன் ஸ்ரீராமன்* 25
*ராமனு மவருக்கிளை யோனுமிலங் காபுரியாற்*
*ராவணசங் காரஞ்செய் யநானும்*
*பூமகள்தன் சிறைமீள வென்றுரா வணனுடைய*
*பெலமுடைய மக்களையுங் கொன்றோம்*
*ஆண்மையுடன் வந்தெதிர்க்க அத்தனைபேரை யுங்கொன்றோம்*
*ஆனைபரி சேனையையுங் கொன்றோம்*
*பூணணியுந் திண்புயத்தான் பேரிலங்கைப் பட்டணத்தைப்*
*பொடியாக்கி விட்டான் ஸ்ரீராமன்*
*பொடியாக்கவே புகழிழந்து போனதொரு ராவணனும்*
*பொய்யுரை யிவனுக்குரைத் தானாம்* 30
*கெடுதியாகப் பாதிராவு வந்துகள் ளமாகஆதி*
*கேசவனைத் திருடினானுன் னண்ணன்*
*சடுதியிலவன் றலையறுத்துப் படைவென்று யானுன்*
*தன்மகனுக் கேமுடி தரிப்பேன்*

200.23. கண்ணனுமானே - கண் போன்ற அனுமனே. 200.24. கங்கை சூழ் அயோத்தி - கங்கை நதி சுற்றி ஓடுகின்ற அயோத்தி நகரம். நரபாலன் - மானிடக் குழந்தை. 200.25. ஐங்கரர் - ஐந்து கரத்தினர்; கணபதி. கந்தர் - முருகன். தேவருக்கும் கோமான் - தேவருக்கும் தலைவன்; திருமாலாகிய இராமன். அரன் - சிவன். 200.26. சங்காரஞ் செய்ய- அழிக்க. 200.27. பூமகள் - இலக்குமியாகிய சீதை. 200.28. ஆண்மையுடன் - வீரத்துடன். ஆனை - யானை. பரி - குதிரை. 200.29. பூணணியுந் திண்புயத்தான் - ஆபரணம் அணியும் வலிமையான தோள்களை உடையவன்; இராவணன். 200.30. பொய்யுரை - அசத்தியமான சொற்கள். 200.31. பாதி ராவு - நடுயிரவு. கள்ளமாக - திருட்டுத்தனமாக. ஆதிகேசவன் - திருமாலாம் இராமன். 200.32. சடுதியில் - விரைவில்.

So saying, Anuman took a wondrous huge form
Massive like a goodly mountain, before her eyes!
Rejoicing at the sight, the woman held his feet
In respectful adoration, and asked him
About the two newcomers in the Kāḷi temple.

### ANUMAN SINGS THE PRAISE OF RAMA AND SEEKS HER HELP

"Born as the darling son of Tacarata,
Ruler of Ayōtti on the banks of Ganga,
Rama uncle of five-handed Ganapathi and Kanda,
Lord of the celestials; brother-in-law to Lord Siva;
Rama and his younger brother
Came to Lanka city to destroy Rāvaṇa,
To release Sita imprisoned by him;
We have killed Rāvaṇa's mighty sons;
All those who opposed us manfully,
Elephants, and horses, we have wiped out!
Sri Rama has pulverised Lanka city:
And Rāvaṇa having lost his all,
Sent for his cousin here, Mayil Rāvaṇan
Who stealthily came in the middle of the night,
And abducted Kēcava and his brother.
I shall swiftly kill your brother.
And give the rulership to your son;

இடதுகைக் குடத்துட னெடுத்து அக்கினியாக
எரியுங்கோட் டைநீகடத் துவாயே
கடத்துவா யெனவுரைத்த வீராதி வீராவுனைக்
கட்டாகக் கொண்டுசெல்வேன் பாராய்

### குடத்தில் தவளை வடிவம் கொண்டு அனுமன் அக்கினிகோட்டையை அடைதல்

திடத்துடனே தூரதண்டி சொல்லின வுடனனுமான்
சிறுதவளை போல்வடிவு கொண்டான்
குடத்துக்குள் சிறுதவளை யாகவே சொரிகுழலாள்
கூண்டவனு மானைக் கொண்டுபோக
நறுமலர் வனங்கடந்து நாரியவள் கொண்டுவந்த
நல்லதண்ணீர்க் கும்பத்தை நிறுத்தார்
நிறுக்கவே குடத்தையு முடைத்து அதில்காத்துநின்ற
நீசர்களை யுமடித்துக் கொன்றான்
மறுத்துமதி லாயிரம்பேர் மந்திரிமார் தங்களையும்
மசகமெனவே வதைத்து நின்றான்
திருத்தமுடனே யனுமான் செய்யிழை தூரதண்டியின்
சேட்டன் வைத்த மரத்திலேறிக் கூவினான்.

### அனுமன் படைகளுடன் பொருதல்

விருத்தம்

201. கூவினான் கொக்க ரித்தான் குரங்குபோ லிருந்து கொண்டு
தாவினான் கோட்டை தன்னைத் தடியெடுத் தடித்துப் பேர்த்துப்
பாவினை யாக வாழும் படைத்னை மருட்டிக் கொண்டு
மாவிடை மரத்தி லேறி வலதுகை கொட்டி னானே.

200.33. இடது கைக்குடத்துடன் எடுத்து - தூரதண்டியே! உனது இடது கையிலுள்ள குடத்திலுள் மறைத்து எடுத்து என்றவாறு. 200.34. கட்டாக - முறையாக. 200.36. சொரிகுழலாள் - மலரிலிருந்து தேன் சொரியும் கூந்தலாள்; தூரதண்டி. கூண்ட - பொருந்திய. 200.37. நாரி - பெண்; தூரதண்டி. கும்பம் - குடம். 200.38. காத்துநின்ற - பாதுகாவலுக்கு நின்ற. நீசர்கள் - பாவிகள். 200.39. மசகமெனவே - மயிர் போலவே (எளிதாகவே). வதைத்து - அழித்து. 200.40. செய்யிழை - அழகிய முறையில் செய்யப்பட்ட ஆபரணம். சேட்டன் - அண்ணன் என்ற பொருள் தரும் மலையாளச் சொல். 201.2. பேர்த்து - தூளாக்கி. 201.3. பாவினை - பாவவினை. மருட்டி - அச்சுறுத்தி. 201.4. மாவிடை - மாமரம்.

Only help me by taking me in your pot,
Held by you on the left hip,
And pass through the burning gate."
"So shall I," promised the sister.

### AṈUMAṈ REACHING AKKIṈI FORT IN THE FORM OF A FROG INSIDE THE WATER-POT

As suggested by Tūrataṇṭi,
Aṉumaṉ took the form of a tiny frog
And got inside the water-pot,
Which the lady with honeyed-flowers on her tresses,
Carried with her past the gate,
Where they weighed her pot in the scales:
At that moment Aṉumaṉ broke the pot
And came out in his true form
And slaughtered all the guards;
One thousand of them along with the ministers,
Disposing of them as if they were worthless as hair!
And climbing on a tree in the grove,
He roared his challenge!

### AṈUMAṈ FIGHTING WITH THE ARMIES

201. He crowed, he cried, he challenged, he roared!
And leaping across, he battered down the fort,
Frightening the troops, guarding the place;
Climbing on a mango tree,
He clapped his right hand against his thigh.

துடுக்கு

202. வலதுகை கொட்டியனு மன்நின்று வாய்த்த வீரரைவசை சொல்லுவான்
குலமகள் தனைச்சிறை யில்வைத்த கொடியவரக்கன் றன்சொற்கேட்டு
சிலையில் பெரியதோர் ராமனையும் சிறந்தயிளை யவர்தனையுங் கொண்டு
கலையாச் சேனையில் திருடிவந்த கள்ளப்பய லெங்கே சொல்லுமென்றார்

சொல்லுவா னந்தக்கெரு விதமாய்ச் சூழ்ந்தபடை களையடித் திடுவான்
பல்லைக்காட்டு வானொருவர் வந்தால் பழிப்புச்சொல் வாரைப்பாய்ந் துதைப்பான்
தெள்ளுதெறித் தாப்போல் தான்தெறித்துச் சேரும் பூங்காவை அழித்திடுவான்
வல்லமலை களைத்தான் பிடுங்கி வந்தபடை மேலே யெறிந்திடுவான்

எறிந்தமலை சென்றுபடையில் மோத இருந்தநரு ளெல்லாம் பதறியோட
முறிந்துவோ டினபடைகள் சென்று மோசமிலா தரக்கனுக் குரைத்திடவே
அறிந்தானே யந்தமயி லரக்கன் அவர்கள் வாய்மொழி தனையுங்கேட்டுப்
பறிந்தபடை களையரக்கன் கண்டு பாரமாய் வெகுசின முண்டாகிச்

மயில்ராவணன் போருக்கு வருதல்

சினமுங் கோபமும் மெத்தவுண்டாய் சேனைகளைக் கொன்ற புனக்குரங்கை
அனைவருங் காணஅனு மன்றன்னை அடித்துக் கொல்லவே வேணுமென்று
தனதுமகன் சத்யவேதன் கூட தனைமந்திரி மார்கள் கோடி
பனையைப் பிடுங்கியே பல்விளக்கும் பார வீரர்க ளாயிரம்பேர்

202.1. வசை - பழிப்புச் சொல். 202.2. குலமகள் - சீதை. 202.3. சிலை - வில். இளையவர் - இலட்சுமணர். 202.4. கலையாச் சேனை - எதிரிகளால் கலைக்க முடியாத படை. கள்ளப்பயல் - திருட்டு பையன்; மயில்ராவணன். 202.5. கெருவிதமாய் - கர்வமாய். 202.6. பழிப்புச் சொல்வாரை - இகழ்ந்து பேசுவாரை. 202.7. தெள்ளு தெறித்தாப் போல் - சிறு பூச்சி தெறித்து ஓடினால் போல். 202.8. வல்லமலை - வலிமையான மலை. 202.9. நருள் - மக்கள். 202.10. அரக்கனுக்கு உரைத்திடவே - மயில்ராவணனுக்கு உரைத்திடவே. 202.12. பறிந்த படை - இழந்து போன அரக்கர்ப்படை. பாரமாய் - மிகுதியாய். 202. 13. புனக்குரங்கை - சிறுமையான குரங்கை. 202.15. சத்யவேதன் - மயில்ராவணன் மகனின் பெயர். 202.16. பார - வலிமையான.

202. Challenging them all, Aṉumaṉ spake thus,
In contempt; "Listening to the word of the evil demon,
Who had imprisoned a chaste woman,
A thief here has stealthily brought
The bowmen, Rama and his younger brother from Laṅka!
Where is that thief now? Tell me."
Thus provoking them in various ways
He bombarded them; He would leap and kick
At those who abused him;
Grin, baring his teeth at a few others!
He cut down the flowery groves, like insects, squashed!
Strong cliffs, he plucked and threw at them;
The armies opposing him scattered in terror
Before his fury, and reported to Mayil Rāvaṇaṉ.
Seeing the loss of his armies,
He grew exceeding wrathful:
Deciding to beat to death this mean monkey,
That had destroyed his army,
He called for his son by name Cattiyavētaṉ,
And bade him take the field against the intruder.
With thousands of strong warriors (so huge
They used palmyrah trees to clean their teeth!),

பேரிலப்பெரிய தோரானை கோடி பெருத்த புரவிகள் நாலுகோடி
பாரவளை யமும்வளை தடியும் பருத்த வேல்குந்தம் வாளீட்டியும்
தேரில்வரு கின்றஅரக்கர் கோடி சிறந்த மந்திரிமார் கள்கோடி
ஊரில்த்தெரு வோடே படைசெரும உத்தமட வார்களேதோ சொல்வார்

மடவார திருபன் சத்யவேதன் வாற அழகுக்கு மயங்கிடுவார்
திடமாய் மார்பினில் பணிதுலங்க சிறந்த மந்திர வாளிலங்க
உடலிற் புழுகோடே ஒழுகவிட்ட உத்தபரி மளங்க மகமென்ன
படைகள் திரண்டொரு குரங்கைக்கொல்ல பகுத்தாய் வருவதைப்
பாருமென்பார்

அரியகுல மந்திரி மார்க்கு அழுதுபற் காட்டுங் குரங்கெதிரோ
குரங்கையா கொல்லயிவர் கள்போறார் கொடுமை கொடுமை
காணென்பாரும்

### அனுமன் எதிர்த்துப் போர் செய்தல்

அரங்கன் புகழ்பெற்ற அனுமாரும் அவர்கள்தனைக் கண்டுபதுங்கிக்
கொண்டான்
சரங்கள் மழைமாரி போல்விடவே சரிந்து சரிந்தவன் சரமறுத்தான்

அறுத்தசரத் தையும்முறித்து விட்டு அண்டர் கோணத்திலே பாய்ந்து
மறுத்துஒரு மலைதனைப் பிடுங்கி வந்தபடை மேலெறிந்து விட்டான்
சிறுத்தகுரங் குபோல்பற் கெஞ்சுவான் சிரித்துவலித்துப் பற்காட்டிக்
கொண்டு
கறுத்தவீ ரரைக்கண்ட வுடன்கண்ணைக் காட்டுவான் விண்ணிற்
செல்வான்

202.17. ஆனை - யானை. புரவி - குதிரை. 202.18. பாரவளையம், வளைதடி, வேல், குந்தம், வாள், ஈட்டி - மயில்ராவணன் படைவீரர்கள் கொண்டு சென்ற சில போர்க்கருவிகளின் பெயர்கள். 202.20. படை செரும - படைகள் மிகுந்து வர. 202.21. அதிருபன் - அழகில் மிகுந்தவன். சத்யவேதன் - மயில்ராவணன் மகன். வாற - வருகிற. 202.22. பணி - ஆபரணம். துலங்க - ஒளிவீச. இலங்க - ஒளிவீச. 202.23. புழுகு - புனுகு; ஒரு வாசனைப் பொருள். உத்த பரிமளம் - உற்ற நறுமணம். கமகம என்ன - கமகம என வாசம் வர. பகுத்தாய் - பிரிவு பிரிவுகளாய். 202.25. அழுது - பயத்தால் அழுது. பற்காட்டும் குரங்கு - பல்லைக் காட்டும் சிறு குரங்கு; அனுமன். 202.27. அரங்கன் - திருமாலாம் இராமன். 202.28. சரங்கள் - அம்புகள். அறுத்தான் - அழித்தான். 202.29. அண்டர் கோணத்திலே பாய்ந்து - தேவர்கள் வாழும் வானில் பாய்ந்து. 202.31. சிறுத்த குரங்கு - சிறிய குரங்கு. பற்கெஞ்சுவான் - பல்லைக் காட்டி 'விட்டு விடுங்கள்' என சொல்லுவது போல் கெஞ்சுவான். 202.32. கறுத்த வீரர் - கருமை நிறம் உடைய அரக்க வீரர். விண்ணிற்செல்வான் - ஆகாயத்தில் பாய்வான்.

With one crore of massive elephants, four crores of horses
And armed with weapons such as *Pāravalai*
*Kuntam*, spears and lances and swords,
Crores of demons came on their chariots,
Accompanied by crores of ministers in procession.
Enchanted by the beauty of Prince Cattiyavētaṉ
Riding handsomely, with jewels shining bright on his chest,
His magic sword hanging by his side
Bedaubed with fragrant odorous powder and civet,
Women spoke among themselves:
"Oh see how division after division
Of troops are going, just to kill a monkey!"
"A grinning monkey against our pedigreed ministers!"
"Are these going to kill a mere monkey? Oh, cruel, cruel!"

## ANUMAṈ FIGHTING AGAINST THE TROOPS

Anumaṉ, reputed servant of Tirumāl
On seeing them pretended to hide himself,
As the arrows fell torrential as rain;
He bent this way and that way and broke them!
Leaping into the celestial world,
He would take a mountain by the root
And throw it at them!
Sometimes like a small monkey,
He would appear before them grinning,
Showing his teeth; make eyes at them
And then disappear into the sky!

*விண்ணிலே சென்றுதிரும்ப வந்து வீரர்முகந் தனிலே மிதிப்பான்*
*கண்ணிலே கண்டபடையை யெல்லாம் கைக்கொண்ட டித்தவன்*
*கருவறுத்தான்*
*பெண்ணி லஞ்சனை மகனனுமான் பெருத்த படைகளை யறுத்தவுடன்*
*உன்னிப் பொரும்மன்ன ராயிரம்பேர் உத்தவனு மானைவளைந்து*
*கொண்டார்.*

*விருத்தம்*

203. *கொண்டல்வர் னனையே தேடிக் குரங்கென ரூப மாறி*
*அண்டர்கோன் புறப்பட்டானோ அசுரர்கோன் புறப்பட் டானோ*
*சண்டன்தான் புறப்பட் டானோ சமரினி லவனைப் போலே*
*கண்டறிந் திலமே யென்று கார்முகந் தனைவ ளைத்தார்.*

## அனுமன் சூளுரை

*நடை*

204. *வளைத்தனு மானுட மார்பதி லேசில வாளிகள் பட்டிடவே*
*மறுத்தந்த வாளியை முறித்தவ னெறியப்பின் மந்திரி மார்படவே*
*துளைத்தோர் களந்தனில் பிழைத்து நின்றவர்களைத் துரத்திடு மனுமான்*
*சுறுக்குள வீரர்கள் மறுத்தனு மானையும் சூப்பிடுங் குரங்கெனவே*
*குரங்கென்று சொல்வது என்னுட குலந்தான் கோபங்க ளில்லையடா*
*குணங்கெட்ட சண்டாள யீனப் பயலரக்கன் குலத்தில் பிறந்தேனோ*
*அரங்கன் புகழ்படைத்த லட்சுமணப் பெருமாள் அரியையுந் திருடிக்கொண்டு*
*அடைத்துக் கொண்டிருக் கிறமடப் பயலரக்கனை அறுத்தல்லோ*
*ஆறுவேனான்*

202.34. கருவறுத்தான் - படைகளைப் பூண்டோடு அழித்தான். 202.35. அஞ்சனை மகன் - அஞ்சனை என்பவள் வயிற்றில் உதித்த மகன்; அனுமன். 202.36. பொரும் - போர் செய்யும். உத்த - உற்ற. 203.1. கொண்டல்வர்னன் - கரிய மழை முகில் போன்ற நிறமுடையவன்; இராமன். ரூபம் - வடிவம். 203.2. அண்டர் கோன் - தேவர் தலைவர்; இந்திரன். அசுரர்கோன்- அரக்கர்கள் தலைவன்; இராவணன். 203.3. சண்டன் - எமன். சமரில் - போரில். கார்முகந்தன் - அனுமன். 204.1. அனுமனுட - அனுமனுடைய. வாளிகள் - அம்புகள். மறுத்து - மடக்கி; நெஞ்சில் பாய்ந்த அம்புகளை மடக்கி. படவே - இறக்கவே 204.2. துளைத்தோர் - அம்புகள் துளைத்திட்டதோர். களம் - போர்க்களம். சுறுக்குள - வேகமுள்ள. சூப்பிடும் குரங்கெனவே - கை கால் விரல்களைச் சூப்பிடுகின்ற (சப்புக் கொட்டுகின்ற) குரங்கெனவே; அனுமனை இகழ்ந்தவாறு. 204.4. அரங்கன் - திருமால். அரி - திருமாலாம் இராமன். மடப்பயல் - அறிவு கெட்ட சிறுவன்; மயில் ராவணன். அறுத்தல்லோ - கொன்றல்லவோ.

From above he would come down again,
And stamp upon their faces:
Whoever was before him,
He lambasted with his hands,
Cutting them down by the roots.
As Añcaṉai's, son thus slaughtered armies vast
A thousand warriors now surrounded him,
With determination to capture him.

203. "Has the Lord of the heavens come down
In the shape of a monkey seeking the cloud-hued one?
Has Yama himself come after the Lord?
We have not seen any one fighting
Like this black-faced monkey!"

### AṈUMAṈ'S OATH

204. As some arrows found their mark
In the chest of Aṉumaṉ somehow, he seized them,
Broke them and threw them back at the ministers;
And they died. Those who were left standing,
Aṉumaṉ chased and killed;
Some of the swift warriors
Escaping him, insulted him, calling him
A monkey adept in sucking its fingers!
"Sirrah! 'Monkey' is the name of my race,
Not my anger, Sirrah!
Was I born like your base, characterless
Wretched, demon-king? I will rest
Only after I cut down the vile demon stupid,
Who has stolen and imprisoned
My Lord Rama and his brother!"

### அனுமன் சிறைப்பட அரக்கர்கள் துன்புறுத்தல்

ஆறுவே னென்றுரை கூறிட அனுமனை ஆயிரம்பேர் வளைத்து
அதிக்கிற கோபங்கள் மெத்த வெழும்பியே அனுமானைப் பிடித்தனராம்
வாறது வரட்டினி யகப்பட்ட பேர்களை வதைப்பே னென்றேகூறி
மத்திய சாமத்தில் சத்திய வேதனும் மகிழ்ந்தனு மனைப்பிடித்தான்
பிடித்து வந்தனுமனைப் பொல்லாத குரங்கென்று பிடரியி லடிப்பாரும்
பெருத்த படைகளை யறுத்துமடிய வைத்த பெரும்பாவி யென்பாரும்
சடுதியி லிவனை யரக்கன்முன் விட்டுத் தலைசண்ணிடு மென்பாரும்
சண்டாளக் குரங்கிதைக் கொன்றால் நமக்கினி சளனில்லை யென்பாரும்
சளமில்லை யொருகுரங்காய் வந்து படைகளைச் சதித்துதே யென்பாரும்
சதித்துதே யினியதைத் தறிப்பே னென்றுசொல்லிச் சாடுவார் சிலபேர்கள்
அழஅழ அனுமனை யடிப்பே னென்றுசொல்லி அடிப்பார் சிலபேர்கள்
அரக்கர் குலத்துக்கெல்லாம் கூற்றுவ னென்று சொல்லியடிப்பார் சிலபேர்கள்
அடிப்பார்சில பேர்அடி யாதே யென்று செறுப்பார் சிலபேர்கள்
ஆண்மைக்கும் பெலத்துக்கும் திறத்துக்கு மிவன்போ லாருண்டு மென்பாரும்
வெடித்திடும் மூளைகள் சிதறிட காளிக்கு வெலியிடு மென்பாரும்
வீரரைப் பழிசெய்த குரங்கின்று மாளவே விதிவந்த தென்பாரும்

204 5. ஆறுவேன் - மனத்து சினம் தணிவேன். அதிக்கிற - அதிகமான. 204.6. வாறது வரட்டு - வருகிறது வரட்டும். வதைப்பேன் - கொல்வேன். மத்திய சாமம் - நடு இரவு. 204 7 பிடரி - கழுத்தின் பின்புறம். 204 8. சடுதியில் - விரைவில். சண்ணிடும் - வெட்டிடும் சளனில்லை - தொந்தரவில்லை. 204 9. சதித்துதே - சதி செய்து கொன்றொழித்ததே. தறிப்பேன் - துண்டாக்குவேன் 204 11 செறுப்பார் -தடுப்பார். பெலத்துக்கும் - வலிமைக்கும் ஆருண்டு - யாருண்டு 204.12. வெடித்திடும் மூளைகள் - மூளைகள் வெடித்திடும்படியாக வெலி - 'பலி' என்பதின் வட்டார வழக்குச் சொல்.

## ANUMAN GETTING CAUGHT AND THE DEMONS TEASING HIM

As he swore thus, a thousand warriors
With exceeding anger rose
And leaping upon Aṉumaṉ, caught him at midnight:
Cattiyavētaṉ also happily joined in the capture.
Some hit him on his neck, as a mischievous monkey;
Some called him a sinner great, who destroyed their troops:
"Let us take him quickly before our chief
And cut off his head" some would say:
Some said; "this monkey has come
And conspired to destroy our armies."
And some said, "Let us cut it to pieces and eat him "
Some challenged, "We will beat him till he cries for mercy."
Some called him the bane of the demon race
And beat him; thus while some beat him,
Some others would say;
"Poor monkey! do not beat it"
"For manliness, strength and ability
Who is there like him?" some would say!
"Let us offer him as a sacrifice to Kāli
And beat his brains out" some said.
And some said; "This monkey which has come today
Is fated to die here; fated also

விதிவந்து சூழ்ந்தது சத்திய வேதனுக்கு வெற்றிகா ணென்பாரும்
மெத்தமயி லரக்கன் கொற்றவன் முன்போட்டு வெட்டிடு
மென்பர்ரும்

பதிதனில் மடவார் குரங்ககப் பட்டதென்று பார்க்க வருவாரும்
படைகளைத் துணித்திடும் குரங்கிது வோவென்று பார்த்து
நகைப்பாரும்

நகைப்பா ரதிசெய மதிசய மெனச்சொல்லி நலமாய் வருவாரும்
நளியாய்க் குரங்கிது சொரூபத்தை யடக்கியே நடக்குது
வென்பவரும்

பகைத்தவ ருடன்கையி லகப்பட்டுப் போச்சுது பாதக மென்பவரும்
பஞ்சைக் குரங்கிது அரசர்கை வாளுக்குப் பற்றுமோ
வென்பவரும்

**அனுமனை மயில்ராவணன் முன்பு நிறுத்துதல்**

பற்றுமோ வென்றவர் பலபல வார்த்தைகள் பண்புடன் பேசிநிற்கப்
பாதகன் சத்திய வேதியனும் படைகளும் பரிவா யனுமானும்
செத்தது போக விருக்கிற படைகளைத் திமிதிமி திமியெனவே
திரள்படை செருமவே வாத்தியம் முழங்கிட சென்றார
ரசன்முன்னே

சென்றார் படைதனில் திடமுள வீரர்கள் திடுதிடு திடெனவர
சிலைதனி லழகன் மயில்ரா வணன்முகம் சீறியே பார்த்திடவே
நன்றாச் செனவே முன்போ யனுமான் நகைத்தான் நகைபுரிந்தான்
நகைத்தவன் கழுத்தனையும் அறுக்க வென்றே மயில்ராவணன்
வாய்திறந்தான்.

204.13. கொற்றவன் - அரசன். 204.14. பதி - நாடு. மடவார் குரங்கு - மடத்தன்மை வாய்ந்த குரங்கு. துணித்திடும் - கொன்றிடும். நகைப்பாரும் - சிரிப்பாரும். 204.15. நளியாய் - கிண்டலாய். சொரூபத்தை - வடிவத்தை. அடக்கியே நடக்குது - தன் வலிமையை வெளிக்காட்டாது அடக்கியே நடக்கிறது எனக் கூறுவாரும் (கிண்டலாய்). 204.16. பகைத்தவருடன் - பகைத்த மயில் ராவணனுடன். பாதகம் - துரோகம். பஞ்சைக் குரங்கு - பலவீனமான குரங்கு. 204.17. பாதகன் - துரோகி. 204.18. திமிதிமி திமி யெனவே- மிக நெருக்கமாகவும், கூட்டமாகவுமாகவே. செரும - நெருங்க. 204.19. திடமுள - வலிமையுள்ள. சிலை - வில். சீறியே - கோபமாகவே.

Is Cattiyavētaṉ to win a victory today."
"Drag him before the king Mayil Rāvaṇaṉ
And cut him to pieces" said some;
Some women, impelled by curiosity
Came out to see the monkey;
Some jeered; "Is this the monkey
That killed our troops?"
"This is not a monkey; It is walking like one,
Purposely suppressing its real stature!" some mocked.
Some wondered whether this weak monkey
Was fit prey for the king's sword!
Thus cruel Cattiyavētaṉ with his thronging armies,
Came up to the king with pipes and timbrels
Celebrating his victorious capture.
Seeing the monkey, Mayil Rāvaṇaṉ grew angry.
But Aṉumaṉ only laughed and laughed loudly.
Deciding to cut his throat, the king said thus:

### மயில்ராவணன் உரை

விருத்தம்

205. சிறந்தயென் கோட்டைக் குள்ளே சிறியயீ பறவா நாட்டில்
நிறைந்ததோர் சேனையெல்லாம் நீகொல்லக் கரும மோடா
குறைந்ததோ ரெளிய சாதி · குரங்கினில் கொடிய மூழி
குறங்கினி வடித்த யிந்தக் குரங்கினைக் கொல்லு மென்றார்.

### அனுமன் பதிலுரை

206. கொல்லு மென்றுரைத்த மூடர் குரங்கென்றால்க் குற்ற மில்லை
அல்லாம லீனச் சாதி அரக்கனாய்ப் பிறக்க வில்லை
செல்வனாம் ராம ரோடு சிறுதம்பி தனையும் ராவில்
கள்வனாய்த் திருடி வந்த கடும்பயல் நீதா னோடா.

### அனுமன் - மயில்ராவணன் யுத்தம்

நடை

207. பயலென்றுமே சொன்னதைக் கேட்டுடன் பல்ப்பறி யென்று சொல்லத்
துரிதமாய்
இயலான தொருவீரர் கூடியே இப்பொழு தனுமானையுஞ் சீறினான்
சீறியே யனுமா ரெழுந்துதான் சிறந்த வீரரைத்திலர்த மிட்டனர்
மாறியோடு வானேறிச் சாடுவான் வண்டு போலவே தும்பியாகவே
தும்பியாகவே துளைது ளைத்திட சூழச்சூழவே சூறாவளி போல
அம்பிட்டார் புயம்கைகால் தோள்தலை அன்றுதுண்டு துண்டா
யறுத்தனர்

205.1. என் கோட்டை - மயில்ராவணன் கோட்டையைக் குறித்தது. பறவா - பறக்காத. 205.2 கருமமோடா - தொழிலோடா. 205.3. மூழி - துடுப்பு. 205.4. குறங்கு இனி அடித்து - தொடையினில் இனி அடித்து. 206.1. மூடர் குரங்கென்றால் குற்றமில்லை - அறிவற்ற குரங்கு என்று நீ என்னைச் சொன்னதால் குற்றமொன்றுமில்லை. 206.2. ஈன - இழிந்த. 206.3. ராவில் - இரவில். 207.1. பயலென்றுமே சொன்னதைக் கேட்டு - மயில்ராவணனைப் பயல் என்று சொன்னதைக் கேட்டு. பல்ப்பறி - பல்லைப்பறி. 207.5. துளை துளைத்திட - துவாரம் இட்டிட; அரக்கர் மேல். 207.6. புயம் - தோள். அன்று - உருமாறிய அன்று. துண்டு துண்டாய் யறுத்தனர் - எதிரிகளாம் அரக்கர் உடம்பினைத் துண்டு துண்டாய் அனுமன் அறுத்தார்.

205. "Into my fort not a fly can get through:
What made you slaughter thus my armies?
Take this creature from the base monkey race
And kill it, breaking its thighs, and legs!"

### AṈUMAṈ'S REPLY

206. 'Oh you fool, who calls me a mere monkey!
It is not a sin, to be born a monkey!
Thank God, I am not born in the base demon race!
Aren't you the fellow, who like a base thief,
By stealth abducted our opulent Rama
And his brother at dead of night?"

### THE BATTLE BETWEEN AṈUMAṈ AND MAYIL RĀVAṆAṈ

207. Hearing himself addressed as a fellow, Mayil Rāvaṇaṉ,
Asked his guards to knock down his teeth.
But as they came near him, Aṉumaṉ rose
And killed them all, and with their life-blood
Made a mark upon his forehead!
Leaping into the sky he came down
And banged them; like a beetle
He would enter into them, piercing their bodies!
Like a tempest fierce he cut off the arms
Hands, legs and heads of the demons!

## அனுமன் போர்த்திறம்

கும்பிட்டே னண்ணே கொல்லாதே யென்பார் குரங்கரசனே கொல்லாதே யென்பார்
வம்பிலே எங்கள் வாணா லானதை மாய்க்காதே யண்ணே மாய்க்காதே யென்பார்
கொல்லாதே யென்றுசொல்லும் வீரரைக் குத்திலவர்களைப் பித்தங் கலக்குவான்
சொல்லுக்கடங் காதகரியைக் கொன்றனன் துரிசமாய் லக்ஷம்பரியைக் கொன்றனன்
பரியைக்கொன்றனர் புலியைப் போலவே பட்டயக்காரர் கோடி பட்டனர்
வரிசைவாள் காரர்கோடிப் பட்டனர் மந்திரி மார்கள்கோடி பட்டனர்
பட்டர்சிங் களர்கோடி பட்டனர் பாஷை பேசுவார்கோடி பட்டனர்
எட்டுகோடி பேர்பட்டு விழ்ந்தனர் ஈட்டி நேரிசைகுந் தக்காரரும்
விழுந்தபடைக் குள்ளேஎழுந் துசெந்துழாய் மெத்தவீரர் களொக்க மாண்டனர்
கழுந்துமொட் டையர்கோடி பட்டனர் கள்ளவாட் காரர்கோடி பட்டனர்
கோடிக்குச் சலர்தான் மடிந்திட கூண்டவில்லரும் மாண்டு போயினார்
ஆடிக்கூளி பேய்நரிகள் தின்னவே அனுமராசனைப் பேய்கள் போற்றவே
பேய்களும் நரியதுவுந் தின்னவே பெரிய யானையைப் புள்ளெடுக்கவே
மாயனருள் கொண்டவனும் தீரனும் வலதுகை கொட்டிக்குரவைப் பாடவே
பாடவே நல்லசத்திய வேதனும் பதறியோடு வானனுமான் சாடியே
தேடவே கண்டுசத்ய வேதனைச் சின்னபின்னமாய் கொன்று ழக்கினான்

207.8. வாணால் - உயிர் என்பதின் பேச்சு வழக்கு. 207.9. பித்தம் - மூளை. 207.10. கரி - யானை. துரிசமாய் - வேகமாய். பரி - குதிரை. 207.11. பட்டயக்காரர் - வாள் வீரர். 207.13. பட்டர் - பிராமணரில் ஒரு பிரிவினர். பட்டனர் - இறந்தனர். 207.14. ஈட்டி, குந்தக்காரர் - ஈட்டி மற்றும் குந்தம் என்னும் போர்க்கருவிகளை ஏந்தும் வீரர்கள். 207.15. செந்துழாய் மெத்தவீரர் - சிவந்த துளசி மாலை அணிந்த வீரர்கள். 207.16. கழுந்து - கழன்று; பிரிந்து. மொட்டையர் - மொட்டையடித்த அரக்கர். 207.17. கோடிக்குச்சலர் - கோடிக்கணக்கான குச்சல நாட்டார். கூண்ட - பொருந்திய. வில்லர் - வில் விடுவதில் வல்லோர். 207.19. புள் - கழுகு. எடுக்கவே - உண்ணவே. 207.20. தீரன் - வீரன். குரவை - வாயினுள் நாவால் குழறி எழுப்பும் மங்கல ஓசை. 207.22. சத்யவேதன் - மயில்ராவணன் மகன்; சிறந்த வீரன். கொன்றுழக்கினான் - கொன்று கலக்கினான்.

## THE VALOUR OF ANUMAN

His victims would plead with him
"O brother! I bow to you;
Do not kill me, king of monkeys!
Do not kill me; do not waste our life-time
Do not slay us!"
Anuman would pummel
The begging troops, and confound them
Countless numbers of elephants he killed;
He destroyed, a lakh of horses like a tiger;
Crores of swordsmen he slaughtered;
Men with sword and buckler, one crore;
Ministers one crore; eight crores of troops;
Warriors armed with lances and *Kuntam*,
Warriors wearing red basil-wreath.
Warriors shaven-pated, crores and crores of them;
Crores of Kuchalas, endless numbers of bowmen;
All of them lost their lives,
While on the field, goblins, imps, and foxes
Gathered to feast upon their flesh,
Praising Anuman for sating their hunger!
Big elephants, vultures of the air, ate up!
The great hero blessed by the grace of the Lord
Sang a victory-song beating his right hand on his thigh!
Cattiyavētan, terrified, ran away from him!
But Anuman caught up with him,
And cut him to pieces, and clove his chest

கொன்றுமுக்கியே நெஞ்சைக் கீறியே கொடியசூர முள்ளிட்டு முக்கினார்
அன்றவன் குடல்தனைப் பிடுங்கியே ஆனை புறத்திலேமாலை சூட்டினான்

### மயில்ராவணனை அனுமன் ஏசிப் பொருதல்

மாலைசூடி னான்மேடை யிற்சென்றான் வந்தெதிர்த்ததோர் வீரரைக் கொன்றான்
மாலையுந் தம்பிதனை யுந்திருடின மயிலிராவணன் மாளிகை புக்கியே
மயிரோமயிர் நீயோமயி லிராவணன் மாலைத்திருடின வண்டப்பயல் நீயோ
அயிதபதமணி யாதி மாயனை அஞ்சாமற் கொண்டுவந்த பயல்நீயோ
வந்துமாயனைக் காளி தேவிக்கு வாய்த்தபெலி யிடும்பெலவான் நீயோடா
அந்தமான வைகுந்த ராமனை ஆதிகாளி தான்பூசை யேற்பளோ
பூசை ஏற்பளோநீ யறுப்பையோ பெண்ணுநாயோ நீசண்ணை யெருமைநீ
ரோச மில்லையோ சீசீயென்பனாம் நொடிக்குள் அரக்கனைப்பிடித்துக் கட்டினான்
கட்டச்சின முற்றுமயி லரக்கனும் கதித்துமார் படித்தெதிர்த்துப் பொருவனாம்
அட்டதிசை யிலும்தட்டு மறித்தாப்போல் அரக்கனடிக் கவேஅனுமன் குத்தவே
அரக்கனடிக் கவேஅனு மனடிக்கவே அவனுமிவனுமா யண்டம் முட்டவே
மருக்கமா கவேசந் திரனஞ்ச வானவெள்ளி களுருவி யோடவே

207.23. சூரமுள்ளிட்டு அமுக்கினார் - சத்தியவேதனின் நெஞ்சில் சூரமுள்ளைக் குத்தச் செய்து அமுக்கினான். 207.24. ஆனை புறத்திலே - யானையின் முதுகின் மேலே. 207.26. மாலையும் - திருமாலாம் இராமனையும். தம்பி - தம்பி இலட்சுமணன். புக்கியே - புகுந்தே. 207.27. மயிரோ மயிர் - நீ என் மயிருக்குச் சமமானவன் என்ற பொருளில் அனுமன் மயில்ராவணனிடம் உரைத்த சினத்தொடர். வண்டப்பயல் - துஷ்டப்பயல். 207.28. அயிதபதமணி - அழகிய வைகுண்ட பதமாம் மணி. ஆதிமாயன் - திருமாலாம் இராமன். 207.29. பெலவான் - வலிமையாளன். 207.30. அந்தமான - எல்லாவற்றிற்கும் முடிவான. 207.31. அறுப்பையோ - அறுத்து பலியிடுவாயோ. பெண்ணு நாயோ - பெட்டை நாயோ. சண்ணை எருமை - ஆண் எருமை. 207.32. ரோசமில்லையோ - வெட்க மில்லையோ. 207.33. சினமுற்று - சினம் மிகுந்து. கதித்து- எழுச்சி கொண்டு. 207. 34. தட்டு மறித்தால்போல் - கிளியாந்தட்டு என்னும் விளையாட்டில் சிறுவர்கள் குதித்து மேலும் கீழும் சாடினால் போல். 207.35. அண்டம் - விண்ணுலகம். 207.36. மருக்கமாகவே - உடம்பால் விண்ணுலகம் வரை போய்வரவே. வான வெள்ளி - வான் நட்சத்திரம்.

Piercing it with deadly thorns.
He garlanded his elephant with his entrails!

### AṈUMAṈ CHALLENGING MAYIL-RĀVAṆAṈ WITH HARSH WORDS

Smashing all opposition, he entered the palace
Of Mayil Rāvaṇaṉ who had stolen the Lord,
And uttered abusive words which provoked him:
"Are you the Mayil Rāvaṇaṉ who stole the Lord?
Are you the wicked demon fearless,
Who seized the Lord of Vaikuṇṭam, by stealth?
Are you planning to give him as sacrifice
To Goddess Kāḷi? are you that mighty?
You are worthless to me as mere hair!
Will the great Kāḷi deign to accept
The sacrifice of the Lord of Vaikuṇṭam,
The ultimate end of all in the universe?
Do you think that you are going to cut my Lord?
He-buffalo that you are,
Have you no sense of shame? fie! fie!"
In a trice he caught hold of him.
The demon beat his chest by way of challenge,
And began to fight with him:
In directions eight, they played with each other,
Like children leaping here and there!
The demon hit him, and Aṉumaṉ hit him back;
Both of them battered the skies;
While the moon, the stars and the comets,
Ran terrified in space.

வெள்ளிமறை யவேதுள்ளி யனுமனும் வெளியில்சா டினானொளியில்
சாடினான்
தள்ளித்தள் ளியேயிரண்டு பேருமாய் சண்டையிட் டனரண்டர் மெய்க்கவே.

**மயில்ராவணன் படைப்பலம் சேர்க்க மலையிலேறுதல்**

விருத்தம்

208. மெய்க்கவே போரு செய்து வேந்தனாம் மயில ரக்கன்
தக்கதோர் தேவி தானும் சலித்துடன் மனந்தள் ளாடி
மிக்கதோர் மலையி லேறி வெகுபல வானைக் கூட்டி
இக்கணம் வாரே னென்று ஏறினான் வெற்பில்த் தானே.

நடை

209. வெற்பி லேறிப் போனான் - நல்ல
வீரரைக் கூட்டி வரவே
வேணுமென்று சொல்லி - மலைமேலே - யேறி
போயினான் - நல்லவீரரைத் தேடியேதான்

**மயில்ராவணன் - அனுமன் இருவரும் சண்டையிடல்**

கொம்பில்ப் பாயு மனுமா - னங்குக்
கூண்ட மயில ரக்கனைக்
குத்தி னாலொரு கைபத்தினா - னவனும்
கூட மாறி யடித்தான்
அடித்த மயில ரக்கனை - யுடன்
பிடித்து அனுமன் குத்தவே
அவனுங் குத்தமாறி யிவனுங் - குத்திடவே
அவரிரு பேரும் புரள

துடித்த சிங்கங்கள ரண்டு - சேர்ந்து
துடித்துப் பொரும்போர் போல
சுத்தவீரர் கள்பதி னெட்டு - நாழிகைதனில்
சட்ட மாகவே பொருதார்

207.37. வெளியில் - வானவெளியில். ஒளியில் - சூரியனில். 207.38. அண்டர் - தேவர்.
208.2. தக்கதோர் தேவி - மயில்ராவணனின் இஷ்ட தெய்வமாகிய காளி தேவி.
208.3 பலவான் - வலிமையான வீரர்கள். 208.4. இக்கணம் - இப்பொழுது. வெற்பு - மலை.
209.2. கொம்பில் - மரக்கொம்பில். கூண்ட - பொருந்திய. கைபத்தினான் - கையகப்படுத்தினான்.
209 4. சட்டமாகவே - முறையாகவே.

They attacked each other, beside the orbs
Of the sun and the moon in the empyrean,
The celestials watching in wonderment!

208. In close combat thus fighting
Mayil Rāvaṉaṉ prayed to his patron Goddess,
Wearied in mind; and deciding to summon
More forces to his aid
He climbed up a mountain planning to return at once.

### MAYIL RĀVAṈAṈ AND AṈUMAṈ BATTLING WITH EACH OTHER

209. A mountain he climbed in search of aid;
When leaping on a branch,
Aṉumaṉ delivered a mighty cuff,
And he returned blow for blow!
Again Aṉumaṉ punched him and the demon returned it;
Thus they rolled about, equally matched;
Like two lions, the two warriors went on fighting,
For eighteen *Nāḻikais* in proper form.

பொரும் போரி லனுமான் - இப்போ
பொழுது விடிந்திடு மென்றே.
போரை முடுக்கி வெகுஆர - பாரத்துடனே
போற்றித் திருவை நினைத்தான் 5

திருவை மனதில் நினைத்து - உடன்
சீறி யுன்னி நிமிர்ந்தான்
சின்னச் சுண்டுவிரலைக் கொண்டு - மயிலரக்கன்
தன்னை யெற்றித் தள்ளினான்

மயில்ராவணனைக் காளிக்கு அனுமன் பலியிட்டு வேண்டல்

எத்தித் தள்ள வரக்கன் - பயந்து
எத்த காளி கோயிலில்
என்னைக்காத்துக் கொள்ளுமம்மா சரண - மென்று
ஏங்கி யலறி விழுந்தான்

புத்தி யுடைய வனுமன் - ஊரைப்
பொத்தி தூறாக்கும் முன்பிலே
போட்டுநெஞ்சைக் கீறியே ஏற்பாய் - காளியென்று
பெரிய நரபெலி யிட்டான்

இட்ட முடைய ராமர்க்கும் - உடன்நேர்
இளைய பெருமாள் தனக்கும்
இவனதன் மருமகனுக்கும் மூன்றுபேருக்கும் - பதில்
இவனைப் பெலியிட்டே னம்மா

அம்மா யிவனைப் பெலியாய் - பூசை
ஏற்கவே வேணுங் காளி
அந்தரியே பெரிய சுந்தரியே - கௌரி
ஆதி சவுந்த ரியே 10

209 5. ஆரபாரத்துடனே - ஆரவாரத்துடனே. திருவை - திருமாலை 209 7. எத்தி சுண்டு விரலால் எற்றி. 209.8 பொத்தி தூறாக்கும் முன்பிலே - அடித்து நொறுக்கித் தூளாக்கும் முன்பாகவே (மயில்ராவணன் நகரை) 209 9. இட்டமுடன் - விருப்பமுடன். இவன் தன் மருமகனுக்கும் - மயில்ராவணன் தங்கை தூரதண்டியின் மகன். 209.10. அந்தரி, சுந்தரி, கௌரி, ஆதிசவுந்தரி - காளியின் சில நாமங்கள்

Aṉumaṉ now remembering that soon it would be dawn,
Speeded up the pace of the fight:
Thinking within himself of Lord Tirumāl,
He drew himself up in full
And summoning all his strength
With his little finger he thrust aside Mayil Rāvaṇaṉ!

## AṈUMAṈ OFFERS MAYIL RĀVAṆAṈ AS A SACRIFICE TO KĀḶI AND PRAYS TO THE GODDESS

Thrust by Aṉumaṉ thus,
Mayil Rāvaṇaṉ terrified, fell
At the feet of Goddess Kāḷi, crying;
"O Mother save me! save me!"
And wise Aṉumaṉ of matchless might, gave the demon
As a sacrifice to the Goddess!
"Let me first kill him, cutting open his heart
To please the Goddess, before I destroy his city:
Great Goddess! accept this sacrifice!
I am offering you this demon's life,
In the place of Lord Rama and his younger brother,
And his own nephew who is imprisoned by him:
O Goddess! condescend, to accept this sacrifice!
O Goddess Antari, Cuntari, Kouri, Āticāmuṇṭari[154]

154. Antari etc. - Names of Goddess Sakti

பம்ம லான யிரவில் - எங்கள்
பச்சை மாலைக் காத்தவள்
பத்திர காளியுனக் கொத்தமயில் - ராவணனைப்
பலியிட்டே னம்மா கௌரி

**மயில்ராவணனின் தங்கை மகனுக்கு முடிசூட்டுதல்**

கூண்ட அவன் மருகனைக் - கூட்டிக்
குளித்து முழுகச் சொல்லியே
கொற்றவன் முறைக்கவனை வைத்துமே - முடிதரித்துக்
கும்பிட் டரக்கர் பணிய
கொடுத்தா னவனுக் கரசு - பலவுலகும்
கூண்ட புவியோரும் மெய்க்கவே
கோடி யரக்கர்மக்கள் தேடியமைச்சர் - மக்கள்
ஓடி வந்தே தொழுதார்

**அனுமவிந்தனிடம் மயில்ராவணன் மனைவி வேண்டல்**

தொழுதந்த பேர்கள் நிற்கவே - ராவணன்
தோகையும் போய் மலையில்
சொந்தஅனு மவிந்த னென்றுமொரு - வனுண்டு
சுறுக்கா யவனைக் கூப்பிட்டாள்

அழுது அழைத்திடவே அனும - விந்தனும்
ஏது சொல்வான்
ஆருவுன் பேரென்ன என்னை - யழைத்ததாரு
ஆயிழையே சொல்லுவாய் 15

மண்டலம் விண்ட லமும் - புகழும்
மயில் ராவண னுடைய
மனைவி யானோர் நெறியாக - வுனைத்தேடி
வந்தேன னுமானே

209.11. பம்மலான - மப்பும் மந்தாரமுமான. 209.12. கொற்றவன் முறை - அரச முறை. முடி தரித்து - அரசனாகப் பட்டம் கட்டி. 209.13. கூண்ட - பொருந்திய. 209.14. ராவணன் தோகை - மயில்ராவணன் மனைவி; 'வர்ணமாலிகை' என்னும் பெயருடையவள். 209.14. அனுமவிந்தன் - மயில்ராவணனின் கோட்டையைக் காத்து நிற்பவன்; மிகுந்த பலசாலி; அனுமன் மைந்தன். சுறுக்காய் - வேகமாய். 209.15. ஆரு - யார். ஆயிழை -அழகிய ஆபரணங்கள் அணிந்தவள். 209.16. மண்டலம் - பூமி. விண்டலம் - மேலுலகம்.

In this darkling night, you have safely preserved our Lord!
I am giving you instead a sacrifice
Suitable to you O Goddess Kouri!"

## THE CORONATION OF MAYIL RĀVAṈAṈ'S NEPHEW

Releasing the nephew, Aṉumaṉ asked him
To bathe, and in the place of his uncle,
Crowned him monarch of the underworld,
While all the demons there, bowed before him
As their overlord! Thus Aṉumaṉ gave him the kingship,
While crores of demons and others ran up now,
To offer their respects to the new sovereign.

## MAYIL RĀVAṈAṈ'S WIFE MAKING A PLEA TO ANUMAVINTAṈ

As here the courtiers and all
Stood before the new king
Mayil Rāvaṇaṉ's wife (Varṇamālikai) went to a hill
Where lived a mighty hero, by name Aṉumavintaṉ,
And called out to him. And he came down
And asked her: "Who may you be? What is your name?
And why did you call me? Tell me,
O lovely woman of choice jewels!"
"I am the wife of Mayil Rāvaṇaṉ!
For a certain purpose, I have come to you;

மானே யொன்று சொல்கிறேன்
மயில் ராவணனென் கணவன்
மனிதரி ரண்டுபேரை எடுத்தாரென்று - சொல்லி
வந்து ஒருகு ரங்குதான்

சேனை தனைக்கொன் றதுஅங்குச்
சேர்ந்த மக்களும் மாண்டனர்
செல்வனே என்கணவன் செத்துப் - போகாதவண்ணம்
வல்ல உதவி செய்குவாய்

**அனுமவிந்தன் - அனுமன் போர்**

உதவு மென்ற வுடனே - பார்த்து
உத்த வனும விந்தனும்
ஓடிவந்துமே அனுமாரோடே எதிர்த்து - அடா
வாடா பொரவென்று ரைத்தான்

உரைகக வனுமார் தானும் - வந்த
உத்த அனும விந்தனும்
ஓடிப்பொருத போரில் தட்டுமறித்தாப் போல
உன்னி நிமிர்ந்து பொருதான் 20

வரைக்கும் மணிப் புயத்தான் - நல்ல
வாய்த்த வனுமன் சினத்தே
மகிழ்ந்து ஒருமலையைப் பிடுங்கியெறிய விந்தன்
மலையைப் பொடிப் படுத்தினான்

வால் கொண்டு அனுமான் - ஒருபது
மலையதைத் தான் பிடுங்கி
மாறியெறிய வனும விந்தன்மன துவேறாய்
மறித்து மீறி யெறிந்தான்

கால் போலி ரண்டு - பேர்களும்
கூடிக் கருதியே பொருமிடத்தில்
கதிமையனு மன்போரும் அனுமவிந்தன் - போரும்
கையும் மெய்யுஞ் சலித்தான்

209.19. பொர - போர் செய்ய. 209.21. வரைக்கும் மணிப்புயத்தான் - மலை போல திரண்ட, மணிகள் பதிக்கப் பெற்ற, ஆபரணம் அணிந்த தோளினை உடையவன். விந்தன் - அனுமவிந்தன். 209.22. ஒருபது - ஒரு பத்து. 209.23. கால் - காற்று. பொரும் - போர் செய்யும். கதிமை - பருத்த.

My husband seized two human beings,
To be given as sacrifice to Kāḷi.
A certain monkey came to take them back;
It has annihilated our armies and other people!
Friend! I seek your aid to save my husband!"

### AṈUMAVINTAṈ FIGHTS WITH AṈUMAṈ

Acceding to this plea from Mayil Rāvaṇaṉ's wife,
The noble lad, ran up to Aṉumaṉ,
And called to him with dreadful challenges,
To fight with him. In the fight between the two,
Both were evenly matched! Hill-shouldered Aṉumaṉ
With gemmed ornaments on his arms
Cheerfully plucked a hill and threw it at Vintaṉ!
With equal ease he powdered it!
With his tail, Aṉumaṉ uprooted ten hills
And threw them at the young hero,
Who had other ideas; he blocked them all
And sent them back at the thrower with force!
Like fierce winds, thus the two fought;
Aṉumavintaṉ and Aṉumaṉ,

*சதிவா யனுமன் சினத்தே - எந்தன்*
*தனக்கிணை வீரரில் லையே*
*தனியே கதிரவனைக் கனிதா னென்றுசொல்லித்*
*தன்கை யினால்ப் பிடுங்கினேன்*

**அனுமன் அனுமவிந்தனிடம் அவன் தந்தை பெயரை வினாவுதல்**

*மதிசே ரிலங்கை யரக்க - னுடைய*
*மக்கள் தனையும் செயித்தேன்*
*மன்னர் வணங்கும் வீராஉன்னை - வெல்லமாட்டோம்*
*வரமுந் தந்தையர் பேர்சொல்லாய்* 25

**அனுமவிந்தன் பதிலுரை**

*சொல்லு கிறேன் தகப்பன் - பேரைச்*
*சொல்லவுங் கேட்ட ருள்வாய்*
*சொந்த வரசனுட விந்தை - கிரியிலுண்டு*
*சோதி யஞ்சனை பயின்றாள்*

*நல்ல வனுமார் தனக்கே - என்னை*
*நாடிய ஏந்திழை தான்*
*நானூறு வருடம்வரை நன்றாய் - நமக்குஸ்திரி*
*ஆகா தென்றே யிருந்தார்*

*ஆகா தென்றிவர் சொல்லவே - எந்தன்*
*அன்னை வேளை பார்த்து*
*அயர்ந்த நித்திரை தனிலனுமார் - தனைச்சேர*
*அடியேன் வந்தவ தரித்தேன்*

209.24. சதிவாய் - மனம் சலித்தே. 209.25. மதி சேர் இலங்கை - சந்திரன் சென்று முட்டும் உயர்ந்த மதில்களையுடைய இலங்கை. அரக்கன் - இராவணன். வெல்ல மாட்டோம் - வெல்லமுடியாது திகைக்கிறேன். வரமும் - பெற்ற வரங்களையும். சொல்லாய் - சொல்லுவாய். 209.26.விந்தைகிரி - விந்திய மலை. 209.27. என்னை நாடிய ஏந்திழைதான் - என்னைப் பெற்றெடுத்த அழகிய பெண்தான்; தாய்தான். நமக்கு ஸ்திரி ஆகாது என்றே இருந்தார் - என் தந்தை தனக்குப் பெண் வேண்டியதில்லை என்றே இருந்தார். 209.28. சேர - புணர. அவதரித்தேன் - பிறந்தேன்.

In strength and size of limbs, equally great!
Wearied now, Aṉumaṉ grew angry within himself;
He wondered! "There is none to equal me!
Once I did pluck the sun,
As if it were a fruit with my hand.

### AṈUMAṈ ASKING AṈUMAVINTAṈ HIS PARENTAGE

I have conquered even the sons of Laṅka's Rāvaṇa!
O young hero! I cannot vanquish you
Tell me your father's name,
And the boons surely you must have got!"

### AṈUMAVINTAṈ'S REPLY

"So I shall! Grace to listen to my history!
In Vindya Mountain, my mother, Jothi Añcaṉai[155]
Bore me to great Aṉumaṉ!
For four hundred years my father remained celibate,
Not desiring women's company;
My mother, once, when he was in slumber deep
Enamoured did mate with him
And I was born from that union!"

155. Jothi Añjaṉai - Obviously this is another Añjaṉai different from Aṉumaṉ's mother, also called Añjaṉai

*தோகை யெனைப் பயின்றாள் - நானும்*
*துஷ்ட னாக வளர்ந்தேன்*
*சொந்த வரனுடைய விந்தை கிரியிலுண்டு*
*துரும்ப கிரியில் வளர்ந்தேன்*

### அனுமன் தன்மகன் அனுமவிந்தனைத் தழுவுதல்

*வளர்ந்தே னென்றவர் சொல்லவே - என்மைந்தன்*
*மைந்தா வென்பே ரனுமான்*
*வாருமெனச் சொல்லிமகனைக் கட்டிக் கொண்டு*
*மகிழ்ந் தினிதிருந் தனரே.*

### அனுமவிந்தனுக்கு வாசல் பிரதானி பதவி கொடுத்தல்

*விருத்தம்*

210. *மகிழ்ந்தனு மாரும் பெற்ற மைந்தனைத் தழுவி நன்றாய்*
*சுகந்தரு மிந்த நாட்டில் சிறந்தநல் லரக்கன் தங்கை*
*மகன்தனை யரசாய் வைத்தேன் வாசல்பிர தானியாகச்*
*சகந்தனில் மந்திரி யாகச் சிறப்புடன் மகனை வைத்தான்.*

### அனுமனின் காளி வணக்கம்

*துடுக்கு*

211. *வைத்தனன் மயில்ராவணன் தன்னுட மருமகன் வாசல்மந் திரியாகவே*
*புத்திகள் தன்மகனுக்குச் சொல்லியே போற்றினான் மருமகனுக் குரைத்தவன்*
*பத்திர காளிவாசல் புகுந்தவன் பாரஸ்ரீராமன் பாதம் பணிந்தனன்*
*சித்தமுடன் திருமாலுட தங்கையே ஸ்ரீராமரைக் காத்த முக்கண்ணியே*

209.29. பயின்றாள் - வளர்த்தாள். துஷ்டனாக - நற்குணங்கள் இல்லாதவனாக. துரும்பகிரி - அனுமவிந்தன் என்னும் அனுமன் மகன் வளர்ந்த மலை. 210.3, வாசல் பிரதானி - கோட்டை வாசலைக்காக்கும் அதிகாரமுடையவன். 210.4. சகந்தனில் - உலகந்தனில். 211.3. பாரஸ்ரீராமன் - மேன்மையான இராமன். 211.4. திருமாலுட தங்கையே - திருமாலுடைய தங்கையே; காளியே!-முக்கண்ணியே - மூன்று கண்களை உடையவளே; சக்தியே; காளியே!

My mother brought me up and I grew up
A wild and troublesome boy
On the slopes of Turumpakiri[156].

### ANUMAN EMBRACES HIS SON

Listening to the lad's history, Anuman cried in joy!
'O my son, my son' and embraced him:
And the two were happy together.

### ANUMAVINTAN IS MADE COMMANDER

210. Embracing happily his son, Anuman
Conferred on him the post of commander
Of the portal, and minister to the king
Of the underworld, whom he had crowned.

211. Appointing his son as the minister of the new king,
Nephew to Mayil Rāvanan; and after giving
Good advice to Anumavintan and the king,
Anuman entered the temple of Goddess Parakāli
And bowed at Sri Rama's feet.
He prayed to the Goddess who preserved
Rama and his brother, Goddess Shakti with triple eyes,
Sister to Lord Tirumāl for guarding his masters.

156. Turumpakiri - Name of a mountain.

### அனுமன் இராம இலக்குவணனுடன் பூவுலகு வரல்

கண்மணியெனும் ராமனுந் தம்பியும் காவல்காத்தருள் காளியைக்
கும்பிட்டார்
மண்ணையோ ரடியாலளந் தோரையும் வாய்த்த லட்சுமணப் பெருமாளையும்
உண்மையாய் ரண்டுபேரையுங் கொண்டுதான் உயர்ந்துவந்தவன்
பாதாளத்தைவிட்டு
தண்ணியில் வளர்செந்தாமரைத் தண்டுடன் தக்கநூல் வழிமெய்ப்புட
னேறினான்

### அனுமன் அனைவரிடமும் நடந்ததைக் கூறுதல்

ஏறினான் கதிரோன்வந்து தோன்றுமுன் ஏங்கியே யழும்வான
ரச்சேனைக்குள்
மீறியோடியே அனுமனுஞ் சென்றங்கே மேவவிபீஷ ணர்சந்தோஷ
மாகினார்
தேறியேயனு மாரைத்தழுவியே சென்ற செய்தியெல் லாஞ்செப்பு
மென்றனர்
கூறிநின்ற படைத்தலைவர்க் கெல்லாம் கூண்டசெய்தி வகைப்படி
கூறுவான்
வகைவகைப்படி வாளனுமான் சொல்லி வானரப்படை வீரரும்
மெய்க்கவே
மிகவுருத்துடன் மெய்யாகப் பூஷணர் விரலொளி பதைக்கமு மீந்தனா
சுகமேபச்சை மாலவர் நித்திரை தூரவாங்கிட சோம்புடல் மீளவே
மகாராஜன் வைகுண்ட ராமனும் வாய்த்த லட்சுமணப் பெருமாளுந்தான்

211.5. கண்மணி - கண்ணுள் மணி போன்று திகழ்கின்ற. தம்பியும் - இலட்சுமணனும். 211.6. மண்ணை ஓரடியால் அளந்தோர் - திருமால். 211.8. தக்க நூல் - தண்டின் துவார நூல். மெய்ப்புடன் - வலிமையுடன். 211.10. மீறியோடிய - சந்தோஷத்தால் எல்லைமீறி யோடிய. மேவ - பொருந்த. 211.12. கூண்ட - நடந்த. வகைப்படி - முறைப்படி. 211.13. மெய்க்கவே - சூழவே; புகழவே எனினும் அமையும். 211.14. உருத்துடன் - அக்கறையுடன். விரலொளி பதைக்கம் - விரலில் அணிவதற்குரிய ஒளி பொருந்திய மோதிரமாகிய அணிவகை. 211.15. சுகமே - சுகமாகவே. பச்சை மாலவர் - திருமாலாம் இராமர். தூர வாங்கிட - சிறிது நேரம் தூங்கி முழித்திட. சோம்புடல் மீளவே - சோம்பிய உடல் மீண்டும் உற்சாகம் கொள்ளவே.

Carrying the world-measurer and his younger,
He rose up, leaving the netherworld behind;
Through the fibre in the stem of the red lotus
He came up to the earth and ere the Sun
Began to appear in the East, he reached Vipīṣaṇa's side,
Who rejoiced at the sight of the great hero's successful return.
Holding him close he enquired of him
All that happened. To the eager listeners,
To captains and commanders gathered round him,
He narrated the events of the night before.
Vipīṣaṇa presented Aṉumaṉ with a collar-jewel
And rings, as a mark of his great appreciation!
At last waking up from his slumber deep
Rama got up, restored to good cheer after the fatigue
Of the battle the previous day, all unaware
Of the advent of Mayil Rāvaṇaṉ,
And all that happened after.

எழுந்தே திருவாயும் விளக்கினார் ஈஸ்பர நமஸ்காரமுஞ் செய்தனர்
தொழுது தேவர்கள் புட்பஞ்சொரியவே துங்கமா மணிமேடையில் வந்தனர்
எழுந்தருளி யிருந்தனர் மேடையில் இருபத்து நாலுதலைவரும் போற்றினார்
விழுந்து தொழுதாரே விபீஷணர் மெத்தராமர் கைதொட்டே யிருத்தினார்
இருத்தினார் திருவாய்மொழி கற்பித்தார் ராவுஞ்சூ தானமென்றுரை செய்தீரே
வருத்தினோ மனுமார்காவல்க் காரராய் மயிலிராவணன் வாறானென் றோதினீர்
ஒருத்தரும் வரக்கண்டிலோம் ராத்திரி உண்மையென்று உலகளந்தார் செப்ப
திருத்தமாய் நின்றபேர்கள் சிரித்தபின் திருமால் திருப்பாதந் தொழுதனர்
தொழுதனர் மயில்ராவணன் வந்ததும் சூக்ஷமா யவனேறி நடந்ததும்
அழுதுடனவர் மலங்கின செய்தியும் அனுமாரை யனுப்பின செய்தியும்
வழுவறப் புகழ்பாதாள முற்றதும் மயிலரக்கனை மாகாளி ஏற்றதும்
பழுதரக்கன் மருகனை யரசினில் பண்பதாய் முடிசூட்டின செய்தியும்
செய்தியாக அனுமன்தன் மைந்தர்க்குச் சேர்ந்த மந்திரிப்பட்ட மளித்ததும்
வைகுண்டத் தினில்மாய வரும்மையும் வாய்த்த லட்சுமணப் பெருமாளையும்
மெத்தையோடே தலையி லெடுத்ததும் மெய்க்குந் தாமரைநூல் வழிவந்ததும்

211.21. திருவாய்மொழி கற்பித்தார் - மேன்மையான மொழிகளைக் கூறினார். ராவும் - இரவும். சூதானம் - மிகுந்த பாதுகாப்பு. என்றுரை செய்தீரே - வேண்டுமென்று உரை கூறினீரே. 211.23. உலகளந்தார் - உலகை அளந்தார்; திருமாலாம் இராமன். 211.24. திருத்தமாய் நின்றபேர்கள் சிரித்தபின் - காவல் காப்பதில் விபீஷணரும் அனுமனும் எச்சரிக்கையாய் இருந்ததால் இனி யார் வரப்போகிறார் என்று வீரர்கள் சிரித்தபின். 211.25. சூக்ஷமாய் - தந்திரமாய். 211.26. மலங்கின - திகைத்த. 211.27. வழுவற - குற்றம் நீங்க. உற்றதும் - சேர்ந்ததும். மயிலரக்கனை மாகாளி ஏற்றதும்- மயிலரக்கனை அனுமன் மாகாளிக்கு பலியிட அவள் ஏற்றதும். 211.28. பழுதரக்கன் - குற்றமுள்ள அரக்கன்; மயில்ராவணன். மருகன் - மருமகன்; மயில்ராவணன் தங்கை தூரதண்டியின் மகன். 211.29. அனுமன் தன் மைந்தர் - அனுமனுடைய மகன்; அனுமவிந்தன். 211.31. மாயவர் உம்மையும் - மாயவராகிய உம்மையும். 211.31. மெத்தையோடே - இராம, இலட்சுமணர் படுத்திருந்த மெத்தையோடு. மெய்க்கும் - பொருந்தும்.

After their morning ablutions and worship of Eswara,
They took their place on the dais, while Vipīṣaṇa
And all the commanders prostrated before him.
Now Rama asked them teasingly:
"You said we must be very careful in the night!
We made Aṉumaṉ responsible for our security
Against the threat from Mayil Rāvaṇaṉ; no one has come so far!"
As the Lord spoke thus, everyone present laughed!
Bowing at his feet, Vipīṣaṇa briefed Rama
About the actual advent of Mayil Rāvaṇaṉ,
His abduction of the two princes, the grief of others,
The despatch of Aṉumaṉ to Pātāḷa,
His successful journey thither, the defeat of Mayil Rāvaṇaṉ,
Aṉumaṉ sacrificing Mayil Rāvaṇaṉ to Goddess Kāḷi,
The coronation of his nephew as the king of Pātāḷa,
The appointment of Aṉumaṉ's son as his minister,
And the return of Aṉumaṉ with the sleeping Princes
On his head, through the stem of a lotus:
Listening to this, the Lord cloud-hued,
Embraced heartily the hero of the day,

ஐயனார்முகில் வர்னர்பதத்திலும் அரசன்முன் சொல்ல அனுமானைத்
தழுவியே
சொன்ன தோர்ஸ்ரீ ராமர்சந் தோஷமாய் துய்ய தங்கச் சரப்பணி
யிட்டுடன்
வண்ணமாலை வயிரப் பதைக்கமும் வாய்த்த முங்கைவளை
முகதாரியும்
பொன்னழுத்திய சேலை குல்லாவுடன் பொற்சிலம் பொடுதண்டை
சதங்கையும்
பண்ணுஞ் செந்தமிழான வனுமற்குப் பத்மனாபன் வெகுமான
மீந்தனர்

### இராமன் சேனை இராவணன் கோட்டையை வளைத்தல்

ஈய்ந்தாருடன் எழுபது வெள்ளமும் இசைத்தலை வரிருபத்து நால்வரும்
வேந்தரும் பச்சைமாலுடன் தம்பியும் விபீஷணரொடு மந்திரி மார்களும்
சூழ்ந்திடக் கண்ட தேவாதி தேவரும் சோதியா மனுமார் தனைமெய்க்கவே
பாய்ந்தி டுங்கவி தன்னுட சேனையும் பாவிராவணன் கோட்டையைப்
பற்றினார்.

விருத்தம்

212. பற்றிடு மிலங்கை கோட்டை பதிந்திடும் வாசல் நாலும்
சுற்றியே வான ரங்கள் சூழ்ந்தவ ரார்ப்ப ரித்தார்
மெத்தவே ராவ ணன்றான் மிகமலைத் திருக்குங் காலம்
மற்றனன் மயில ரக்கன் ஆள்வது மருக னென்றார்.

211.32. அரசன் - விபீஷணராம் அரசர். 211.33. துய்ய தங்கச் சரப்பணி - தூய்மையான தங்கத்தாலான சரப்பணி என்னும் ஆபரணம். இட்டு - அணிவித்து. 211.34. வண்ண மாலை - அழகிய பொன்மாலை. வயிரப் பதைக்கம் - வயிரத்தாலான மார்பிலணியும் பதக்கம். முங்கைவளை - ஒரு வகை ஆபரணம். முகதாரி - ஒருவகை ஆபரணம். 211.35. பொற்சிலம்பு, தண்டை, சதங்கை - சிலவகை ஆபரணங்கள். 211.36. செந்தமிழான வனுமற்கு - செந்தமிழ் நாட்டைச்சார்ந்த அனுமனுக்கு. வெகுமானம் - அன்பளிப்பு. 211.37. ஈய்ந்தார் - வழங்கியவர்; இராமர். இசைத்தலைவர் - புகழுடைய தலைவர். 211.40. கவி - குரங்கு. 212.1. பதிந்திடும் - பொருந்திடும். வாசல் நாலும் - நான்கு திசைகளிலுமுள்ள வாசல்களிலும். 212.2. ஆர்ப்பரித்தார் - ஆரவாரம் செய்தார். 212.3. மெத்தவே - அதிகமாகவே. மலைத்திருக்கும் - திகைத்திருக்கும். 212.4. மற்றனன் மயிலரக்கன் - மயில்ராவணனனாகிய அரக்கன் மாண்டான். ஆள்வது - பாதாளலோகத்தைத் தற்பொழுது ஆள்வது. மருகன் - மருமகன்; மயில்ராவணன் தங்கை மகன்.

And honoured him with many a jewel radiant:
Golden chaplets, diamond collars, anklets
Of various kinds, Lord Paṭmanāpa gave
To Aṉumaṉ of sweet Tamil country!

**RAMA'S ARMY SURROUNDING RĀVAṆA'S FORT**

The seventy *veḷḷam* army of the Vāṉaras and their
Twenty four commanders with Vipīṣaṇa and the princes,
Cukkirīvaṉ and Aṉumaṉ, now encircled the fort ready for battle.
To the great exultation of the celestials!

212. Round the four portals of the fort, the monkeys
Milled, roaring boisterously, while within,
Rāvaṇa was informed of the death of his cousin
In the underworld, now ruled by his nephew.

## இராவணன் தளர்ச்சியும் மந்திரிமார் உபதேசமும்

நடை

213. ஆள்வது மருகனென் றோதிட ராவணன்
அன்று டனேமலைக் குன்றுகள் போல
அடித்தனன் முகத்தினி லிடித்தனன் வயற்றினில்
ஆவிகள் துடித்தவ னபய மிட்டான்

தாழ்ந்து பணிந்து மகாபெல மந்திரி
தலையைத் தடவிமெள்ளத் தாங்கிக் கொண்டு
சலிப்பா காதுமக் கௌமனத் திடஞ்சொல்லிச்
சதியொத்த மதிபுத்தி தானு ரைத்தான்

தானந்த ராவணன் சேனை தளத்தொடு
சமர்த்தன் மந்திரி மார்தள கர்த்தரும்
தடதட தடவென்ற திரிடி மேளம்
சகத்தி றங்கடற் றொனிதா னெனவே

மானந் தவறா வகைரெகு ராமனும்
வானரச் சேனையும் வந்தெ திர்த்தார்
மான முடனிவர் வந்திட ராவணன்
மாய்கை யுடனவ னேது செய்தான்

### இராவணன் மாயசீதையுடன் வருதல்

வந்தவன் பொருகையில் ராவணன் பாவி
மாய்கை யினாலொரு சூது செய்வான்
மால்மனை சீதையைப் போலொரு மாயப்பெண்
வருத்தியே தேரின் மேலிருத்திக் கொண்டு

213.1. ஆவி - உயிர். 213.2. மகாபெல மந்திரி - வலிமையான மந்திரி. சலிப்பாகாது - போர்த் தொழிலில் சலிப்புக் கொள்ளுதல் தகாது. சதியொத்த - சூழ்ச்சியோடு ஒத்த. 213.3. தளத்தொடு - கூட்டத்தொடு. சமர்த்தன் - திறமையான. தளகர்த்தர் - படைத்தலைவர். அதிரிடி மேளம் - முரசை அதிர வைக்கும் இடிபோல் முழக்க என்றவாறு. சகத்தில் - உலகத்தில். அங்கடற்றொனி- அழகிய கடலில் உண்டாகும் பேரலையோசை. 213.4. இவர் வந்திட - இராமராகிய இவர் வந்திட. மாய்கை - மாயவித்தை. ஏது - என்ன. 213.5. சூது - சூழ்ச்சி. மால்மனை - திருமாலாம் இராமனின் மனைவி சீதை. வருத்தியே - வரச் செய்தே.

## THE DESPONDENCY OF RĀVAṆA AND THE SUGGESTION OF HIS MINISTERS

213 Coming to know about the coronation of a new king
Rāvaṇa beat his belly in grief! his hands
Pounded his own face; he wailed;
He cried in grief sore-stricken,
On hearing this disastrous tidings.
Respectfully bowing before him,
His great minister stroked his head,
And encouraged him with comforting words:
"It won't do to lose heart in war!
Let us plan our strategy properly," said he.
And recovering his confidence Rāvaṇa again prepared
For battle, along with his capable ministers and commanders
In the field, reverberating like rolling thunder,
Rumbling like the fremescent seas resounding on earth.
Rāvaṇa's armies engaged Rakurāma's armies.

### RĀVAṆA COMING WITH A MĀYA SITA

As the battle was going on, wily Rāvaṇa now
Decided to confound Rama with a base trick:
Creating a false figure very like Sita,
He appeared in the sky on a chariot,
Before the eyes of Rama in the field.

அந்தமின் மாய்கையை மருவுவன் சருவுவன்
ஆசை யிடுஞ்ச ரசமே செய்குவன்
அரிராமன் காணவுன் மனைவியைப் பாரென்று
அடிபிடி யாயவள் மடிபிடிப்பான்

சுந்தர மாயை தன்தோள் கலைதுவள
தூர விட்டே பின்னருகு கழைப்பான்
தூயவன் காணவே மாயங்கள் பலதாய்த்
தொழில்செய் வனவளையும் பழுது செய்வன்

கந்த மலர்க்குழல் பிடித்தி ழுப்பன்
காதலி தனைக்கொல் லுவே னெனவே
கட்டாக வாளுறை விட்டந்த மாய்கையைக்
கழுத்த றுத்திட வரிக்கண் டனரே

இராமன் கலக்கம்

கண்டரி திடுக்கிட சீதையைப் போலொரு
காதலி தனைத்தான் கழுத்த றுத்தான்
காரிய மிப்படி முடிந்தது விதிவசம்
கடுஞ்சம ரேனினி பொருவு தென்றார்

விபீஷணன் மறுப்புரை

அண்டர்கள் பெருமா னிப்படி யுரைக்க
அறிந்த விபீஷி ணனடி பணிந்து
அதுவொரு மாய்கைப் பெண்பதும மின்சீதைக்கு
அக்கினி கோட்டை யுண்டரி மாலே 10

213.6. மின் மாய்கையை - மின்னல் போன்ற கொடியாளாம் மாயவளாம் சீதையை. மருவுவன் - தழுவுவான். சருவுவன் - பொருந்துவான். சரசமே – காம சேஷ்டைகளையே. அடிபிடியாய் அவள் மடிபிடிப்பான் - மாயச் சீதையை அடாவடித்தனம் செய்து மீண்டும் அவள் இடையைப் பிடிப்பான். 213.7. சுந்தர மாயை - அழகிய மாயைப் பெண் சீதை. தன்தோள் கலை துவள - தன் உடம்பின் தோளாடை மாய சீதையோடு பொருந்த. தூரவிட்டே - தள்ளிச் செல்லும்படி செய்தே. தூயவன் - இராமன். அவள் - மாயசீதை. பழுது - குற்றம். 213.8. கந்தமலர்க் குழல் - நறுமணமுடைய (மாய சீதையின்) கூந்தல். மாய்கையை - மாயச்செயலை. அரி - திருமாலாம் இராமன். 213.10. அண்டர்கள் பெருமான் - தேவர்களின் தலைவனாம் திருமால்; இராமன். அடி - பாதம். பதும மின் சீதை - தாமரைமலர் போன்ற ஒளியுடன் திகழும் சீதை. அக்கினி கோட்டை - கணவன் அன்றி பிறர் எவரும் நெருங்க முடியாத தீயினாலாகிய பாதுகாப்பு வளையம்.

Her he would embrace in amorous dalliance!
Closely he would hold her, indulging in all kinds
Of love-play before the very eyes of the Lord!
Teasing him with this sight tormenting, sight hateful!
Holding her by the waist, he would pull her to him,
Her garments falling off her arms;
He would send her away and pull her back;
Many such acts dishonourable, by witchcraft
He would do, with the false Sita, till at last
Drawing his sword and inviting Rama's attention,
He cut her throat.

### RAMA'S DISTRESS AND GRIEF

Startled and shocked **Rama** cried:
"He has cut off the head of my darling wife Sita:
It is all over. This is as fate has willed it.
What need for any battle fierce hereafter?"

### VIPĪṢAṆA'S SAGE EXPLANATION

When the Lord of the Gods spoke thus,
Vipīṣaṇa who knew the truth about all this,
Said: "That woman is not Sita. It is a false
Image of her! Lord, remember there is a ring of fire

*மாலே பிறவியின் மயக்க மல்லோ*
*திருவாய் மொழிகற் பனைவந் ததென*
*மாதர சிக்கொரு பேதகம் வருமோ*
*மலைகயி லாச மிருப்ப ளவும்*

*சீல மிகுத்த விபீஷண ராள்விட்டு*
*திரிச்சடை துணையொ டுசிறைத் தலத்தில்*
*சீதை யங்கிருப்பது கண்டு வந்தானது*
*திருமா லறிந்து ளம்மகிழ் வானார்*

**இராம - இராவண சேனை பொருகின்ற காட்சி**

*வானவர் தானவர் சந்திர சூரியர்*
*மதித்திட ராவணன் குதித்தெ ழும்பி*
*வருங்கவிச் சேனையில் பெருங்கணை தொடுத்திட*
*வானரப் படைமு றிந்தோ டிடவே*

*ஆனதோர் ராகவ னறிந்திளை யோன்றனை*
*அழைத்தொரு மந்த்ர வாள் கொடுத்து*
*அறுதி யிலரக்கரை அறுத்திடு வாயென்று*
*அரிகற் பனைவர வோடி வந்தான்*

*ஓடி நெருக்கி யரக்கர் பெலத்தை*
*ஒடுக்கி மதத்தை யொடுக்க வென்று*
*ஒட்டிய யிளையவர் வெட்டிட வரக்கரும்*
*தட்டழிந் தோடிட தடம றிந்தார்* 15

*213.11. கற்பனை - கூற்று. பேதகம் - இடையூறு. இருப்பளவும் - இருக்கின்றளவும். 213.12. சீல மிகுந்த - ஒழுக்கம் மிகுந்த. ஆள் விட்டு - தன் படையிலிருந்து ஒரு ஆளை சீதை சிறையிருக்கும் அசோகவனத்திற்கு அனுப்பி. உளம் - உள்ளம். மகிழ்வானார் - மகிழ்ச்சியடைந்தார். 213.13. தானவர் - அசுரர். மதித்திட - மதித்து வணங்கி நிற்க. கவிச்சேனை - குரங்குப்படை. 213.14. ராகவன் - இராமன். இளையோன் - இலட்சுமணன். அறுதியில் - விரைவாய். அறுத்திடுவாய் - கொன்றிடுவாய். அரி கற்பனை வர - இராமனிடமிருந்து கட்டளை வர. 213.15. மதம் - மிகுபலம். ஒடுக்க - அழிக்க. ஒட்டிய - அரக்கர் படையைச் சென்றடைந்த. தடம் - வழி (அரக்கரை அழித்திடும்).*

Round her who is the real Sita!
It is your delusion that you spoke thus:
Can any harm come to the queen of women?
As long as Mount Kailas exists,
No harm will come to her," And forthwith
He sent a spy to check at Acōkavanam
Where it was confirmed that Sita was safe and sound,
In the company of Tiricaṭai, his daughter;
And Rama was relieved and happy at this.

### THE TWO ARMIES ENGAGED IN BATTLE

Rāvaṇa jumped up from his seat
(While the celestials, the Sun and the Moon
Bowed to him), and going into battle,
He shot his arrows, huge and numerous,
At the monkey army making them flee in fear!
On seeing this, Rākava beckoned to Lakshmaṇa
And giving him a charmed sword,
Bade him cut down the demons with it.
Obeying the order, the younger Lord
Wielded the sword with a will,
Such that the enemies confounded, fled:

சாடி வெட்டினுக் காற்றா மற்சிலர்
சமுத்திரம் புகுந்தே தலைம றைவார்
தலையற்ற பேர்சில குடலற்ற பேர்சிலர்
தாளற்ற பேர்சிலர் வாளத னாலே

### இராவணன் மந்திராலோசனை

வாளா லிப்படி ராக்ஷச சேனைகள்
மடிந்திட ராவணன் மனது நொந்து
மணிமே டையிலே தணியாச் சினமொடு
வந்தீந் தானொ ருபது முடியான்

தாளா மந்திரி மாரே யவரோடு
சமர்செய்ய எவர்களை யனுப்பி டலாம்
தந்திரி மந்திரி மாரு ரைப்பார்
பாதாளத்தில் மூல பலத்தா ருண்டுமே

### மூலபல மன்னன் இராவணனுக்கு உதவுதல்

உண்டவன் வந்தால் ரண்டா யிரங்கை
ஓரா யிரந்தலை யுடைய வராம்
ஒருநொடிப் பொழுதினி லிருமா னிடரையும்
ஒழிப்பார் குரங்கை யுமழிப் பாரே

மண்டலந் திடுக்கிடும் மூலபலத் தரசன்
வாசித் தறியும் படிராட் சதமார்
வாசகம் விடுத்திட தூதனுங் கொடுத்திட
வாசித்து மூலபல மன்ன ரறிய 20

213.16. வெட்டினுக்கு ஆற்றாமல் - இலட்சுமணன் மந்திரவாளால் வெட்டியதைத் தாங்காமல். தலைமறைவார் - ஒளித்திடுவார். தாள் - கால். 213.11. கற்பனை - கூற்று. பேதகம் - இடையூறு. இருப்பளவும் - இருக்கின்றளவும். 213.17. தணியாச் சினமொடு - குறையாத கோபத்தோடு. வந்தீந்தான் - வந்து மண்டபத்தில் புகுந்தான். ஒருபது முடியான் - பத்து தலைகளை உடையவன்; இராவணன். 213.18. தாளாமந்திரிமார் - தன் செயல்களில் தாழ்ச்சியில்லாத மந்திரிமார். சமர் - போர். தந்திரி மந்திரி - தந்திரம் வாய்ந்த மந்திரி. மூலபலத்தார் - மூலப்படையினர்; மூலபலத்தரசனின் படையினர்; இம்மூலபலத்தரசன் இராவணனின் நண்பன். 213.20. மண்டலம் - உலகம். ராட்சதமார் - இங்கு அரக்க மந்திரிகளைக் குறித்தது. வாசகம் - தூது ஓலை. விடுத்திட - அனுப்பிட.

Some entered the sea and hid themselves,
Unable to withstand his onslaught;
The magic sword of Lakshmaṇa rendered
Many of them limbless; some lost
Their heads; some their entrails;
And others both their legs!

## RĀVAṆA'S COUNCIL OF WAR

As the demon armies by the great sword
Of Lakshmaṇa, were thus slaughtered,
Rāvaṇa the ten-headed one, agitated in mind,
Entered the audience hall, with anger unabated,
And seated on his gemmed throne,
Queried thus his counsellors, ever active;
"Whom shall we send against them now?"
The sage ministers replied: "In Pātāḷa,
We still have our enormous reserve forces!
If their monarch were to come in now,
To our aid, (He with two thousand hands
And one thousand heads), in a moment
He will wipe out the two humans
And the monkeys in their armies."
And accordingly a missive was sent
To the chief of the Reserve Forces, the terror of the world,
Requisitioning his help, which the envoy
Handed over to him; reading the contents

மன்னரை னுப்பினது எழுநூறு வெள்ளஞ்சேனை
மல்லரி லங்கா புரிதனில் புகுந்தார்
வடதிசை தென்திசை மேல்திசை கீழ்த்திசை
வளைந்தது மடமட மட (மட) மடென

அன்னவர் மூலபல மன்னருட னெதிர்க்க
அவனி யிலெவர் களுந்தகுதி யில்லை
ஆயிரஞ் சிரசும்ரண் டாயிரங் கரமுண்டு
அக்கரத்திலே தண்டுந் தடியு முண்டே

தடிகொண்ட மூலபல மன்னரைக்கண் டரக்கன்
சந்தோஷம் பெருகியே சிந்தை மகிழ
தக்கவர் களுக்குப்பட்டுப் பாவாடை யாபரணம்
சாதி லக்ஷம்பொற் பணிதனித் தனியே

துடிகொண்ட வர்க்களித்து வேடரிரு வரையும்
கூறிய கவித்தி ரளத்த னையும்
துடுக்குடனே நீங்க ளெடுத்து முழுங்குமென
சொல்லி விட்டா னந்த வல்லரக்கன்

அடிபிடி யெனுமல்லர் முடுகிய வானரத்தை
அழுங்கிடவே பிடித்து விழுங்க வென்று
அலைகடல் முக்குவர் வலைசுத்திப் படுப்பதாய்
ஆனமூல பலத்தர் போய்வ ளைந்தார் 25

213.21. மல்லர் - வலிமையாளர். 213.22. அன்னவர் - அத்தகைய வலிமையாளர்; மூலப்படையினர். அவனி - உலகம். தண்டு தடி - போர் செய்யும் ஆயுதங்களின் பெயர்கள். 213.23. தக்கவர்களுக்கு - தகுதியானவர்களுக்கு. சாதிலக்ஷம் பொற்பணி - சிறந்த பொன்னால் ஆகிய ஆபரணம் லட்சம். 213.24. துடி கொண்டவர் - செயல்திறம் கொண்டவர். அளித்து - கொடுத்து. வேடர் இருவர் - வில் அம்பு ஏந்திய இராமன், இலட்சுமணன் என்னும் இருவர். கவித்திரள் - குரங்கு கூட்டம். துடுக்குடனே - விரைவுடனே. முழுங்கும் - உண்டு விடும். வல்லரக்கன் - கொடிய அரக்கன்; இராவணன். 213.25. அடி பிடியென - குரங்கு படைகளை அடியுங்கள்; பிடியுங்கள் எனக் கூறியே. மல்லர் - வலிமையான மூலப்படை வீரர். முடுகிய - விரைந்த. அழுங்கிடவே - துன்பம் கொள்ளவே. விழுங்க - உண்ண. முக்குவர் - மூழ்கடிப்பர். வலைசுத்திப் படுப்பதாய் - வலையைப் போட்டு பிடித்தாற்போன்று.

Of the same, the king despatched to the earth,
A seven hundred *veḷḷam* strong army.

### THE KING OF THE PĀTĀḶA SENDS AID

Powerful warriors from the netherworld
Poured into Laṅka city from the North, the South,
The West and the East; none on earth so far,
To equal them in valour, or their sovereign,
With his thousand heads and hands two thousand;
Each one armed with clubs and cudgels!
Rāvaṇa rejoiced hugely on seeing them
And presented them with rich gifts
Of costly silken kilts, and ornaments
Of virgin gold, lakhs of them!
With the request; "Gobble up the two
Hunters and the hordes of monkeys at once!"
Rushing about in the field, the demons
Swallowed the monkeys they caught; some
They would push under the billowy sea!
And all the Vāṇaras seemed to be lost,
Like owls caught in their tree-hollows,
As the demons encircled them tightly,
And began their deadly squeeze!

### மூலபலமன்னர் படை வானரச் சேனையை வளைத்தல்

வளைந்திட வானரம் பொந்திலாந்தை போல
வல்லவர் விபீஷணர் மந்திரி மார்
வாளனுமன் சாம்புவர் நாலாறு தலைவரும்
மாலே சரண மென்று மலங்கினரே

### மூலபல மன்னர் படையை இராமன் அழித்தல்

அளைந்த ளைந்தே யனுமார் சாம்புவர்வர
அங்குள்ள வானர வெள்ள மெல்லாம்
அழுதது தொழுதது ஆங்காரம் விட்டு
அனைவரும் துயருடன் குழைந் திடவே

குழைந்தி ளையோனும் மலங்கிட வைகுண்டக்
கோவிந்த னார்கண்டு குறுநகை யாய்
கோபாலர் நாமமிட்டு ஓர்கணை ஏவிவிட
கூண்டக்கணை மல்லர் பக்கம் மூண்டதுவே

மூண்டகணை நெற்றியில் தனித்தனி நாமமிட்டு
மூலபல மத்தனையும் கோலம் பிசகி
முகில்வர்ன ராமனி வனிவ னென்றுமே
முடித்தவர் வெட்டி வெட்டி மடிந்தாரே

ஆண்டவன் கிருபையால் ராம நாமிட
அவர்கள் தனித்தனியேமதி மயங்கி
அன்னாராமன் வந்தானென்று மின்னாறு வந்தானென்று
அறைந்தந் தமூல பலமி றந்ததுவே 30

நாலாறு தலைவர் - இருபத்துநாலு தலைவர். மலங்கினரே - திகைத்தனரே. 213.27. அளைந்தளைந்து - தடுமாறி. ஆங்காரம் - இறுமாப்பு. குழைந்திடவே - மனம் சோர்ந்திடவே. 213.28. மலங்கிட - திகைத்திட. குறுநகை - புன்னகை. கோபாலர் - திருமாலாகிய இராமர். நாமமிட்டு - 'ஓம் நமோ நாராயணாய' என்னும் எட்டெழுத்து மந்திரத்தை உச்சரித்து. கணை - அம்பு. கூண்ட - பொருந்திய. மல்லர் - மூலபல மன்னர் படையினர். மூண்டதுவே - விழுந்து அழிவை ஏற்படுத்தியே. 213.29. நெற்றியில் தனித்தனி நாமமிட்டு - இராமன் விட்ட கணை மூலப்படையினர் ஒவ்வொருவர் நெற்றியிலும் நாமமிட்டு (வைஷ்ணவ சின்னம்). கோலம் பிசகி - வடிவம் மாறி; மூலப்படையினர் நெற்றியில் நாமம் இருந்ததால். முகில்வர்ன ராமன் இவன் இவன் என்றுமே - நெற்றியில் மூலப்படையினருக்கு நாமம் இருந்ததால் ஒவ்வொருவரும் நாமமிட்ட இராமன் இவன்தான்! இவன்தான் என்றே. முடித்தவர் - முடிவெடுத்து அவர். 213.30. இன்னாறு வந்தான் - இதோ வந்தான். அறைந்து அந்த - ஒருவருக்குக் ஒருவர் கொன்று அந்த. மூலபலம் - மூலப்படையினர்.

Vipīṣaṇa, Aṉumaṉ, Jāmpavāṉ and the ministers
Along with the comanders twentyfour
Went up to Rama, baffled and confounded.

### [redacted] DESTROYING THE RESERVE FORCES

Their pride shattered and humbled
As the Vāṉaras in cosnfusion prayed
At Rama's feet, and even Lakshmaṇa
Appeared a little upset, Lord Kōvinta
Smiled at them! Taking an arrow
From his quiver and uttering the mystic octad,
"ŌM NAMŌ NĀRĀYAṆĀYA," he sent it
Against the demon forces. And lo! the weapon
Made his own mark upon the forehead
Of every one of the foes, such that
Each appeared to the other as [redacted] himself!
Thrown into utter confusion and disarray
By this superb strategy of the Lord,
They fought each other among themselves,
Crying: "See! There is Rama! Here is Rama!"
And their force entire was annihilated!

**காளி - கூளி பிணங்களை உண்டு பசியாறல்**

*இறந்தது மூலபல மெழுநூறு வெள்ளமல்ல்*
*இணங்க மலைபோல் விழும்பி ணங்களையே*
*ஏழை பசாசுகள் காளிகூளி நாய்நரிகள்*
*என்று பிச்சிப் பிடுங்கித் தின்றனரே*

*நிறைந்த பிணங்களையும் விருந்துண்பவர்க ளளித்து*
*நிலைபெற்ற வானர முற்ற தலைவர்களும்*
*நீலவர்ன ராகவனே சரணஞ் சரணமென்று*
*நெட்டிலங்கை கோட்டையைக் கிட்டி மதம்போல்*

**இராமன் சேனைகள் இராவணன் கோட்டையை நெருங்குதல்**

*மதங்கரி யாயிரம் ரதம்பதி னாயிரம்*
*மற்றுங் கவித்திரள் கணத்தொ கையாம்*
*மாவொரு கோடிப் படைமேவி யொருகவந்தம்*
*வந்தாடும் நூறாயிரம் கவந்த மாடினால்*

*இதந்திரு மால்சிலை மணிகொஞ்சங் கலீரென*
*எத்தொலிக்கும் ராமபாணம் சேர்த்தி டுமணி*
*ஏழுலகுந் தொனிக்க ஏழரை நாழிகையி*
*லிடைவிடா மலடிக்கும் படை கிட்டியே*

**இராவணன் கலக்கம்**

*விருத்தம்*

214. *கிட்டிய வரடுத்திட வல்லரக்கன் றானும்*
*கிடுகிடுத்து நடுநடுங்கிக் கெட்டேன் கெட்டேன்*
*முட்டிய பாதாள மதிலிருந்து வந்த*
*மூலபல மல்லரையும் முடித்திட் டானே*

213.31. இணங்க - பொருந்த. பசாசுகள் - பிசாசுகள். பிச்சி - பியித்து. 213.32. அளித்து - கொடுத்து. உற்ற தலைவர்களும் - தகுதியான தலைவர்களும். நெட்டிலங்கை - நெடிய இலங்கை. கிட்டி - பொருந்தி. மதம் போல் - மதம் பொருந்தினாற் போல். 213.33. கரி - யானை. ரதம் - தேர். கவித்திரள் - குரங்குக் கூட்டம். கணத்தொகை - மிகுதியான அளவு. மா - குதிரை. கவந்தம் - பேய். 213.34. இதம் - நன்மை. சிலைமணி - வில் மணி. கொஞ்சம்- சிறிது. ராமபாணம் சேர்த்திடும் மணி- இராமபாணத்தை வில்லில் பூட்டும் போது வில்லசைவதால் உண்டாகும் மணி யோசை. தொனிக்க - ஓசை எழுப்ப. அடிக்கும் - எதிரிகள் மீது பாய்ந்து அடிக்கும். கிட்டியே - பொருந்தியே. 214.1. அடுத்திட - மாண்டுபோக. வல்லரக்கன் - வலிமையயான அரக்கன்; இராவணன். 214.2. மூலபல மல்லர்- மூலபலத்தது அரசரின் வீரர்கள். முடித்திட்டானே - அழித்திட்டானே.

### GODDESS KĀḶI AND THE GOBLINS FEAST UPON THE CORPSES

Kāḷi and her little imps, goblins
And ghouls; rushed to feast upon the flesh
Of the slain warriors, tearing off pieces
From the corpses seven hundred *Veḷḷam* in number
Piled up like hillocks on the field!
The Vāṇara chiefs and other leaders
Prayed to the blue-complexioned Rākava
Crying: "Refuge! Refuge!" in gratitude!

### RAMA'S ARMIES APPROACHING RĀVAṆA'S FORT

A thousand ichorous tuskers, besides chariots
Ten thousand, a crore of horses, were engaged
In the fierce battle by countless numbers
Of apes and monkeys: ghouls danced in glee,-
A hundred thousand of them, when Rama
Twanging his bow with tinkling bells
Tintinnabulating, shot his deadly arrows
At the enemy and slew them in myriads!
The noise whereof did reach the seven worlds
For seven and a half *Nāḷikais* at a stretch!

### RĀVAṆA'S DESPONDENCY

214. As his warriors dear, died multitudinously,
The mighty Rāvaṇa wailed thus in grief;
"Oh Lost I am; I am lost! He has destroyed
All my reserve forces from the nether world, too!

எட்டிய மானிடரை வெல்ல புத்தியேது
என்றேங்க மந்திரி மாரிடைந்து வாடத்
தட்டி யினியாம் பொருவோமென் றேசொல்லித்
தளத்தை எல்லாஞ் சேகரிக்கத்தான் சென்றானே.

### இராவணன் போருக்கு ஆயத்தமாதல்

215. தானவர் வானவரேவல் செய்யச்சிவ சங்கரன் தந்த வரமிருக்க
நானந்த வேடரைக் கொன்றிடலே ராவண னென்றுமே மார்புதட்டி
மார்புதட்டிப் படைசேக ரிக்கஅங்கு வட்டக் கடல்போ லரக்கர்வரத்
தோரணி வீதிகளெங் கெங்குமே துடுபடு மேளமிடி யெனவே.

### இராவணன் போருக்கு வரும் காட்சி

கும்மி

216. இடியென மேளம் முழங்கிவர எட்டெட்டு திக்கும் படைசெரும
கொடிகளி டக்கயம் ஆலவட்டம் கூண்ட சுருட்டிக் குடைநிழற்ற
நிழற்றுங் குடைகள் பலகோடி நேரிட்ட தேர்கள் வெகுகோடி
தளத்திலனந் தஞ்சிவிகைத் தண்டுடன் தந்தி புரவி சதாகோடி
சதககிரி நெஞ்சந் திடுக்கிடவே சந்திர னருக்கன் பயந்தோட
மதம்பட்ட யானைமேல் பேரிகையும் வானத்திடி மன்பல கோடி
பலபல தேர்கள் நெருங்கிவர பட்டண மெங்கும் படைசெரும
உலகங்க ளேழும் விலைகொளவே ஒன்பது ரத்னக்கிரீ டம்வைத்து

214.3. எட்டிய - இலங்கையை அடைந்த. மானிடர் - இராம, இலட்சுமணர். இடைந்து வாட- செய்வதறியாது திகைத்து வருந்த. தட்டியினி - அரக்கர் படைகளுக்கு ஆணையிட்டு இனிமேல். பொருவோம் - போர் செய்வோம். தளம் - படை. சென்றானே - போர்க்களம் நோக்கி இராவணன் சென்றானே என்றவாறு. 215.1. தானவர் - அசுரர். வானவர் - தேவர். சிவசங்கரன் - சிவன். வரம் - மிகுந்த ஆயுளுடன் இருப்பாய்; தேவர் மற்றும் எவரையும் அடிமை கொள்வாய் என்கிற வரம். 215.2. வேடர் - இராம, இலட்சுமணர். கொன்றிடலே ராவணன் - கொன்றால்தான் இராவணன். 215.4. தோரணி - தோரணம் விளங்கும். துடுபடு மேளம் இடியெனவே - தோல்கருவி வகையினுள் ஒன்றான மேளம் மேகம் இடித்தாற்போலவே. 216.1. படை செரும - அரக்கர் படை நெருங்க. கயம் ஆலவட்டம் - மேன்மையான பெருவிசிறி. கூண்ட சுருட்டிக் குடை நிழற்ற - பொருந்திய விசறி மற்றும் வெண்கொற்றகுடைகள் ஒளிவிட. 216.4. அனந்தம் - பல. சிவிகைத் தண்டுடன் - பல்லக்குகள் அவ்வற்றிற்குரிய ஊன்று கோல்களுடன். தந்தி - யானை. புரவி - குதிரை. சதாகோடி - நூறுகோடி. 216.5. சதககிரி - பூமியிலுள்ள நூறு மலைகள். அருக்கன் - சூரியன்.216.6. பேரிகை - ஒரு வகை போர்முரசு. மன் - அசைச்சொல்லாய் வந்தது. 216.8. விலைகொளவே - விலை கொள்ளும்படி மதிப்பு மிகுந்த.

Oh what can we do to conquer the men
Who are causing havoc thus in Lanka?"
And for once the ministers were tongue-tied.

### RĀVAṆA PREPARING FOR BATTLE HIMSELF

215. But summoning courage and confidence again,
Rāvaṇa gathered his remaining armies together,
Determined to take the field himself,
Declaring proudly; "Demons and celestials
Are there to do my bidding; I have too
The boon of Lord Sankara I will be Rāvaṇa
Only if I kill these hunters!"
And beating his chest in challenge
He collected his troops, vast
As the round ocean, which marched to the beat
Of war-drums reverberating like thunder,
Along the streets of the city decked with hangings.

216. In direction eight they thronged, while
Giant-fans circular waved, pennons and flags fluttered,
Canopies and parasols crores of them,
Chariots many crores, palanquins,tuskers,
Horses many crores they marched,
The hundred hills trembled at their noise;
The moon and the sun fled in fear;
Wardrums mounted on ichorous elephants resounded
The city entire was crowded with warriors,
While with diadem of nine kinds of gems on his head.

வைத்த மகுடம் பளபளென மந்திர வாள்கள் தளதளென
பத்து முடியும் பிரகாசிக்கப் பாரி வண்டோதரி மாளிகையில்
மாளிகை தன்னிலரக்கன் வந்து மானே படைவெல்ல நான்போறேன்
கூளிநரி தின்ன மானிடரைக் கொல்லாமல் மீளேனா னென்றுசொன்னான்

**இராவணனுக்கு வண்டோதரி கூறிய பணிமொழி**

சொன்ன பொழுதுவண் டோதரியும் சொல்லுவள் கொண்ட கணவனோடே
மன்னவனே படைபோக வேண்டாம் மாதைசிறை விட்டுப்போகச் சொல்லும்
சொல்லுகிறேன் கேளு நேற்றிரவு தூங்கையில் நான்கண்ட
சொப்பனங்கள்
நல்லமணி முடிபத் தையுமே நடுகாட்டி லோரிகடிக்கக் கண்டேன்
கண்ட நரிஓரி மாளிகையில் காளென்று கூப்பிட்டு ஊளையிடத்
தண்டாமரைப் புரனே யிலங்கை தம்பிவிபீ ஷணராளக் கண்டேன்
ஆளற்றுத் தோற்றுச் சேனையுமற்று ஆனை புரவியிறக்கக் கண்டேன்
வாளற்றுக் காலற்று கையுமற்று மந்திரிமாரும் மடியக் கண்டேன்
மடியிலி ருந்தபொருள் விழவும் மங்கிலிய மற்றுக்கீழ் விழவும்
பிடியிலி ருந்ததிரவி யத்தைப் பாதிச் சொக்காரன் கையாடக்கண்டேன்
கையாட வுன்னுட மாளிகையில் கனகவிளக்கு அவியக் கண்டேன்
மெய்யாய் விபீஷணன் மாளிகையில் மேடை விளக்கு விளங்கக்கண்டேன்
விளங்கு சூரியப்பிர காசமென்ன மின்னு மகுடமுஞ் செங்கோலும்
முழங்க விபீஷணனா வன்கைக்கொண்டு மோகத்துடன் போகக்
கண்டேனையா
போக வேண்டாமையா நீர்படைக்குப் போனாற் பழுதுண்டு பூபதியே
ஏக வேண்டாமையா வென்துரையே என்று வணங்கினாள் வண்டோதரி

216.10. பாரி - மனைவி. 216.11. மானே - மான் போன்றவளே. 216.12. கூளி - பேய். மீளேன் - மீண்டு வரமாட்டேன். 216.14. மாதை - சீதையை. 216.15. தூங்கையில் - உறங்குகையில். சொப்பனங்கள் - கனவுகள். 216.16. ஓரி - நரி. 216.17. காளென்று - ஒலிக்குறிப்புச் சொல். 216.18. தண்டாமரைப் புயனே - குளிர்ச்சி பொருந்திய தாமரைமலர் அணிந்த தோள்களை உடையவனே. 216.19. தோற்று - தோல்வி அடைந்து. சேனை - படை. புரவி - குதிரை. 216.21. மங்கிலியம் - மாங்கல்யம்; தாலி. 216.22. பிடியிலிருந்த - ஆட்சிக்கு உட்பட்டிருந்த. பாதி சொக்காரன் - உறவினன்; விபீஷணன். 216.23. கனக விளக்கு - பொன் விளக்கு. அவிய - அணைய. 216.24. மெய்யாம் - உண்மையாய். 216.26. மோகத்துடன் - பெரு விருப்புடன். 216.27. பழுதுண்டு - குற்றமுண்டு. பூபதியே - அரசே. 216.28. ஏக - போக. என் துரையே - என் கணவனே.

His magic sword sparkling, Rāvaṇa went
To Maṇṭōtari's palace to take leave of her;
"I shall not return before giving these men
As food for foxes to eat"
Said he, in arrogant confidence;

### MAṆṬŌTARI'S PRAYER TO RĀVAṆA

And again the queen with passionate plea,
Implored him not to go to the field:
"My king! go not to battle;
Release Sita: send her back forthwith!
Listen! Last night I dreamt many a dream;
All your gemmed crowns I saw jackals biting
In the wood; foxes and jackals ran about
In our palace, howling and calling to each other:
O Lord, with arms cool as lotus! I saw
Your brother Vipīṣaṇa ruling in Lañka!
I saw your horses and elephants dying
And all your armies defeated;
I saw your ministers, dying swordless, legless, handless;
I saw precious objects in my waist-cloth falling
And my *Māñkalyam* cut off and fall down to the ground;
I saw the wealth in our imperial treasury
Taken over by our agnate (Vipīṣaṇa) :
I saw the golden lamp in your palace, extinguished
All on a sudden; I saw too
In Vipīṣaṇa palace, the lamp burning bright:
I saw decked with a crown radiant as the sun,
Sceptre in hand, proud Vipīṣaṇa go about in joy;
Do not go, Sire! If you go
Much disaster is sure to occur;
Don't go, my dear Lord."

### இராவணன் பதிலுரை

வண்டோதரி யேயென்பெண் ணரசேநீ மானிடர்க்கஞ்சியே வார்த்தை சொன்னாய்
கொண்டபெண்ணே யுனைவிட்டி டினும்நான் கண்டபெண்ணை விடப்போற தில்லை
பண்டரன் கற்பனையால் வருடம் பகர்ந்தது மூன்றரைக் கோடி யுண்டு
உண்டெனை யாராலுங் கொல்லரிது உன்தாலிக்கே பயமொன் றுமிலை
வண்டோ தரியேநீ சம்மதித்து வாழ்த்தி விடைதந் தனுப்புமென்ன
மண்டல ராக்ஷசர் மாளவிதி வந்ததுவே தந்த னுப்புவது

### வண்டோதரி மறுத்துரைத்தல்

தந்தனுப் பாயென்று காதலனே சங்கரன் தந்தவரத்தை யெல்லாம்
பைந்தொடி சீதைசிறை யிருக்கும் பார்மகள் கற்பு பறத்தினதே
கற்புத்தீ யானதுவுன் சடத்தைக் கட்டழிப்பே னென்று கிட்டவந்து
நிற்பது திட்டமுன் மக்களும்போய் நீயுமிறந் திடகால மென்றாள்

காலம் வந்தால் விதிவிட்டிடுமோ களையும் பொருளகப் பட்டிடுமோ
மூலபலத்தைச் செயித்த அம்பு முடியாம லும்மைச் சும்மாவிடுமோ
விடுமோ கெடுகாலம் வந்தாலும் வேண்டா மென்றாலும் நீகேட்பாயோ
சடுதியில் போய்வாரு மென்றுசொல்லிச் சம்மதித் தாளேவண் டோதரியும்

சம்மதி யாமல்வண் டோதரியும் சடைவா யனுப்ப யிராவணனும்
செம்மேகம் முட்டி வளர்ந்தநெடும் தேரின் மீதேறிப் பவனிவந்தான்

216.30. கண்ட பெண் - கண்ட சீதையாகிய பெண். அரன் - சிவன். கற்பனை - கட்டளை. பகர்ந்தது - கூறியது. 216.34. மண்டல ராக்ஷசர் - பூமியிலுள்ள அரக்கர். தந்து அனுப்பு - விடை தந்து அனுப்பு. 216.35. சங்கரன் - சிவன். 216.36. பைந்தொடி - பொன்னாலாகிய மெல்லிய ஆபரணம் அணிந்த சீதை. பறத்தினதே - புகழ் முதலியவற்றை அழித்ததே. 216.37. கற்புத்தீ - சீதையின் கற்புத் தீ. சடம் - உடம்பு. கட்டழிப்பேன் - வலிமையை அழிப்பேன். கிட்ட - அருகில். 216.38. திட்டம் - உறுதி. இறந்திட காலமென்றாள் - இராவணா! என் பேச்சையும் கேட்காது போருக்குச் சென்றால் இதுவே நீ அழிவதற்குக் காலமாகும் என்றாள். 216.39. காலம் - இறுதிக்காலம். களையும் - களைந்து போகும். 216.40. மூலப்பலம் - பாதாளலோகத்திலுள்ள மூலப்படையின் வலிமை. செயித்த - வென்ற. 216.41. கெடுகாலம் - கேடு காலம். 216.42. சடுதியில் - விரைவில். 216.43. சடைவாய் - தளர்வாய். 216.44. செம்மேகம் - சிவந்த மேகம்.

### RĀVAṆA'S REPLY

"My queen Maṇṭōtari! You say these things,
Afraid of mere men! Even if I were to leave
You, my wedded wife, I shall not give her up!
Of yore, Hara, gave me a life-time
Of three and a half crores of years!
Still that boon is in effective operation!
None can kill me! there is no need
For you to fear about your *Tāli*;[157]
My Maṇṭōtari! give me leave with a good heart
And send me happily to battle"

### MAṆṬŌTARI AGAIN MAKES HER PLEA

"Dear Lord! you ask me to bid you farewell;
It is fated that the demons on the earth
Must die soon; the boons given
By Lord Saṅkara have all been rendered powerless
By the great chastity of the daughter of the earth,
Sita, imprisoned by you!
The fire of her chastity is sure to burn your body;
Lord! certain it is, you along with your sons
Are going to die; the time has come for it;
Fate cannot be put off!
If fated to lose all, so we must!
Will the arrow that destroyed the reserve forces,
Leave you alone? But you will not listen to advice,
If the time for you to die, has come!
Oh all right, go you and return soon!"
Thus she bade him farewell yet unwillingly!

157. *Tāli* - Ornament tied by the bridegroom as a marriage-badge round the bride.s neck.

## இலங்கை மக்கள் இராவணனை வாழ்த்தி அனுப்புதல்

*வந்த பவனியின் சம்பிரமத்தை வாயால் வழுத்த முடியாதே*
*கந்த மலர்ப்புயம் நாலஞ்சிலும் கனகக்கண் மாலை பிரகாசிக்கவே*
*சிக்கெனத் தேர்வரத்திக் கெட்டிலும் சேனை புடைகள் செருமிவர*
*மிக்கமின் னார்கள் வெகுகோடி வேந்தனைச் சூழ்ந்து கும்மியடிக்க*

*கும்மியடி பெண்ணே கும்மியடி கொங்கை குலுங்கவே கும்மியடி*
*நம்முட ராவணன் ராமனைவெல்வது நாளைத் தெரியுமே பாருங்கடி*
*நாளைச் சமரினில் பார்த்திடலாம் ராவணன் வெல்வதும் ராக்ஷசனர்*
*பாளைய ராமன் செயிப்பதும் பார்த்துகொள் வோம்விழி பூத்துக்கொள்வோம்*

*பூத்த கதம்பப் பொடியணிந்து பொட்டிட்டு பொன்னிட்டு பூமுடித்து*
*மாற்றலர் வெல்லுமி ராவணனை வணங்கிக் கும்மியடி யுங்கடி*
*வணங்கி மஞ்சள்க் குளித்துக்கொண்டு மையிட்டுத் தோளிலே காப்புமிட்டு*
*இணங்கும் பத்துமுடி வல்லரக்கனை எதிர்த்துக் கும்மியடிப் போமடி*

*எதிர்த்த போரில் சறுக்காத இந்திர மந்திர வாளரக்கன்*
*சதித்த மந்திரிமார் தளகர்த்தனைச் சத்தன் சமர்த்தனைக் கும்மியடி*
*முத்தனைச் சித்தனை மத்தஅமைச்சனை மூர்க்கனை மார்க்கனைக்*
*கும்மியடி*
*சத்தன் சமர்த்தன் சதாசித்தனைச் சத்துரு சங்கரனைக் கும்மியடி*

216.45. சம்பிரமம் - தீவிரத்தன்மை. வழுத்த - கூற. 216.46. கந்த மலர்ப்புயம் நாலஞ்சிலும் - நறுமணம் வீசும் மலர் சொருகிய இருபது தோள்களிலும். கனகக்கண் மாலை - பொன்னால் செய்யப்பட்ட மாலை. 216.47. சிக்கென - விரைவாக. திக்கெட்டிலும்- திசை எட்டிலும். செருமி - நெருங்கி. 216.48. மின்னார்கள் - மின்னல் கொடி போன்றோர்; பெண்கள். 216.49. கொங்கை - மார்பு. 216.50. நம்முட - நம்முடைய. 216.51. சமர் - போர். ராவணன் வெல்வதும் ராக்ஷசனர் - ராக்ஷசப் படையோடு கூடிய ராவணர் வெல்வதையும். 216.52. பாளைய ராமன் - குறுநில மன்னன் இராமன்; இகழ்ச்சி குறிப்பில். விழி பூத்துக் கொள்வோம் - கண்களால் அதிகநேரம் பார்த்துச் சோர்ந்து கொள்வோம். 216.53. கதம்பப் பொடியணிந்து - கதம்பமாம் வாசனைப் பொடியணிந்து. பொன்னிட்டு - பொன்னாபரணம் அணிந்து. 216.54. மாற்றலர் - பகைவர். 216.55. காப்பு - தோளணி வகை. 216.56. இணங்கும் - பொருந்தும். வல்லரக்கன் - வலிமையான அரக்கன்; இராவணன். 216.57. சறுக்காத - தவறாத. இந்திர மந்திர வாளரக்கன் - இந்திரன் அருளால் பெற்று மந்திர வாளை உடைய அரக்கன்; இராவணன். 216.58 சதித்த - சூழ்ச்சி செய்வதில் வல்ல. தளகர்த்தன் - படைத்தளபதி. சத்தன் சமர்த்தன் - சிவன் போன்ற வலிமையாளன். 216.59. முத்தன் - தூய்மையானவன்; இராவணன். சித்தன் - பேரறிவாளன்; இராவணன். மத்த அமைச்சனை - ஏனைய அமைச்சர்களை. மூர்க்கன், மார்க்கன் - இராவணனது அமைச்சர்கள். 216.60. சத்தன், சமர்த்தன், சதாசித்தன், சத்துருசங்கரன் - இராவணனைப் புகழ்ந்து சொல்லும் சில சொல்லாட்சிகள்.

And Rāvaṇa despite her disapproval,
Rode to battle upon his lofty chariot
That seemed to hit the ruddy clouds in the sky!

## THE PEOPLE OF LAṄKA WISHING GODSPEED TO RĀVAṆA

It were impossible to praise adequately,
The splendour of the procession!
Golden armlets shining bright on his twenty arms,
He rode swiftly on his car,
While the battalions thronged all around:
Women bright as lightning
Numberless, surrounded him and danced the *Kummi*!
"Beat the *Kummi*, girls! Beat the *Kummi*!
Beat and dance with your breasts shaking!
Beat the *Kummi*! See, tomorrow, our Rāvaṇa
Is sure to defeat Rama in battle!
Rāvaṇa is going to win! the demon army
Is going to defeat the petty chieftain Rama!
We are sure to see it with our own eyes!
Beat the *Kummi*, girls! beat the *Kummi*!
Adorned with fragrant powders, marks on the foreheads,
Flowers on the tresses and golden ornaments,
Let us bow to Rāvaṇa, conqueror of the foes!
Beat the *Kummi*, women! beat the *Kummi*!
Cleansing ourselves with turmeric-bath,
Collyrium tinting our eyes,
Our arms adorned with armlets,
Go before mighty Rāvaṇa ten-headed,
Dance the *Kummi* women! dance the *Kummi*
Unretreating Rāvaṇa, with magic sword in hand;
Chief of the counsellors and commanders,
Powerful like Siva and capable like him!

மார்க்க மகோதரன் மூத்தமந்திரி வாமனனோ டின்று தானெதிர்த்து
தீர்க்கம தாயெம லோகத்துக்கே செல்லுவானோ படைவெல்லு வானோ

### இராம - இராவண சேனைகளின் போர்

வெல்லுவே னென்று தலையெடுத்து வீரனி ராவணன் வந்தெதிர்த்தான்
கொல்லுவே னென்று சிலையெடுத்துக் கோவிந்தனார் சிவனைத் துதித்தார்
சிவனைத் துதித்துப் படைத்தவரம் சீரழியா தென்று ராவணனும்
நவரெத்ன மாலை தளதளென நல்ல மகாமலை வந்தாப்போல்.

வந்தெதிர்த்தான் முடிரா வணனும் மட்டற்ற சேனை தளத்துடனே
சுந்தர பத்து மகுடமுடி சூரியன் பத்தெனத் தோன்றியதே
பத்துப் பதங்கனுதித் தாப்போல் படைக்களந் தன்னில ரக்கன்வர
குத்தின கையாலனு மானும் கூண்ட முடிபத்தையும் பறித்தான்

கூண்டமுடி பத்தையும் பறித்துக் கோவிந்தனார் முன்னே கொண்டுவந்து
ஆண்டவனே சரணமெனவே யடியிறை வைத்தனுமன் றொழுதான்
தொழுமனு மானை மனமகிழ்ந்து துய்யகமலக் கையாற் றழுவி
வழுவறவே நவரெத் தினத்தால் மாணிக்க மாலை கழுத்திலிட்டான்

இட்டார் வீனுமணி பதைக்கம் ஏகாந்த கொத்துச் சரப்பளியும்
அட்டைத் துடர்வீர சங்கிலியும் அடுத்த முடுகுமெடுத் தணிந்தார்
அணிந்தனு மானும் மனதுமெய்க்க ஆம்படி வானரச சேனைமெய்க்கப்
பணிந்து விபீஷண ரண்ணர்முடி பார்த்தனு மாரை மகிழ்ந்தாரே

216.61. மார்க்க மகோதரன் - வழிமுறைகள் அறிந்த இராவணர்களின் மூத்த அமைச்சர். வாமனன் - திருமால் அவதாரத்துள் ஒன்று; இராமனைக் குறித்தது. 216.62. தீர்க்கமதாய் - உறுதியாய். படை வெல்லுவானோ - இராமன் படைகளை வெல்லுவானோ. 216.64. சிலை- வில். கோவிந்தனார் - இராமரைக் குறித்தது. 216.65 சீரழியாது - நாசம் போகாது. 216.66. தளதளென - தளதளவென பிரகாசிக்க. மகாமலை - பொன்மயமான மகாமேரு மலை. வந்தாப்போல் - வந்தது போல. 216.68. சுந்தர - அழகிய. சூரியன் பத்தெனத் தோன்றியதே - பத்து முடிகளும் பத்து சூரியனைப் போல பிரகாசித்ததே என்றவாறு. 216.69. பதங்கன் - சூரியன். 216.70. குத்தின கையால் - இராவணனைக் குத்திப் பின் அந்தக் கையினால். கூண்ட - பொருந்திய. 216.72. அடியிறை வைத்து - இராமனைப் பாதத்தில் திறைப்பொருளாக வைத்து. 216.73. துய்ய - தூய்மையான. கமலக் கையால் - தாமரை மலர்போன்ற சிவந்த கையால். வழுவறவே - குற்றம் நீங்கவே. 216.75. வீனுமணி பதைக்கம், கொத்துச்சரப்பளி - ஆபரண வகைகள். 216.76. அட்டைத்துடர் வீரசங்கிலி, முடுகு - ஆபரண வகைகள். 216.77. மெய்க்க - மனது மகிழ்ந்து பொருந்த. ஆம்படி - அவ்விதமே. 216.78. அண்ணர் முடி - தனது அண்ணனாகிய இராவணரது கிரீடம்.

Our Rāvaṇa pure, greatly wise,
With his ministers Mūrkkaṉ and Mārkkaṉ,
Invincible destroyer of foes! great as Lord Siva!
Bow to Rāvaṇa! and dance the *Kummi*,
O women, dance the *Kummi*!
Prime minister Makōtaraṉ wise in all ways
Will oppose Vāmaṉarāma today:
"Will he go to Yamalōka or conquer today?
Dance the *kummi*, women, dance the *kummi*!"

**THE BATTLE BETWEEN THE OPPOSING ARMIES**

Leading his armies, heroic Rāvaṇa came against his foes:
Confident of victory, he came!
Lord Kōvintarāma with a prayer to Siva,
Took up his bow, swearing to kill Rāvaṇa;
While he too praying to Siva, confident
Of the power of the boon, Rāvaṇa rode
With his limitless strength, like a huge hill,
With nine-gemmed chaplets blazing on his breast.
His ten golden crowns lovely like ten suns!
As he came in the vanguard of his demon forces,
Aṉumaṉ leapt up and punched him with his fist:
And seizing his ten crowns,
At Kōvinta's feet, he placed them as tribute!
Happily embracing with his lotus hands
The valorous Vāṉaraṉ, Rama presented him,
With a gemmed chaplet of rubies and blameless gems
Round his neck, he placed collars
And many-stranded chains
A heroic necklace and the *Muṭuku*[158] jewel
And with joy Aṉumaṉ's heart overflowed!
Vipīṣaṇa rejoiced to see the crowns

158. *Muṭuku* - Breacelet.

மகிழ்ந்த வரிப்படி நிற்கையிலே மறுத்து முளைத்தரக் கன்முடி
பகுந்த முடியை விபீஷணர்க்கே பக்குவ மென்றரிகைக் கொடுத்தார்
கைகொள்ள மந்திரி மாருடனே கனத்த படையு மரக்கனுமாய்
அக்கணமேறுத் தளத்தை யெல்லாம் அனுமனடித்துத் துரத்தி விட்டான்

அடித்துத் துரத்தியே மந்திரிமார் அடர்ந்தேறி வந்து அமர்பொரவே
பிடித்தனு வெற்றிச்சரத்தை யிளைய பெருமாள் தொடுக்க மடிந்தனரே.

## இராவணன் படைகள் அழிதல்

விருத்தம்

217. தாரணி யமைச்சர்ப் பட்டார் தலைவருள் ளோரும் பட்டார்
தேரணித் திரளர்ப் பட்டார் செல்ப்பரி வீரர் பட்டார்
வாரணப் பாகர் பட்டார் வலுவுள்ள தீரர் பட்டார்
பாரில்வல் லரக்கர் மெத்த பட்டவர் மடிந்திட் டாரே.

நடை

218. மடிந்தாரே மந்திரிமார் மகோதரனும் பார்த்திருக்க
முடிந்தாரே மந்திரிமார் முடியரக்கன் கண்டிருக்க
கண்டிருந்த ராவணனும் கருத்தயர்ந்து தடுமாறி
அண்டர்தெய் வேந்திரனும் அமைச்சருக்கும் பத்தானே

## மகோதரன் போருக்குச் செல்லுதல்

பத்தானே மந்திரிமார் பட்டுவிட்டா ரென்னசெய்வேன்
மற்றாரு மனம்சரில்லை மகோதரனே யல்லாமல்
மகோதரனு மதுகேட்டு மனங்கலங்கி யோடிவந்து
பகர்வதற்கு முடியாத பத்துமுடி ராவணனே

216.79. முளைத்த அரக்கன் - இராவணன் தலையில் சூடிய கிரீடம். மறுத்து - இராவணன் சூடிய முடிகளைப் பெற்றுக கொள்ள மறுத்து. 216.80. பகுந்த முடி - சூட்டிய முடி. அரி - திருமாலாம் இராமன். 216.82. அக்கணம் ஏறுந் தளத்தை யெல்லாம் - அந்த இராவணனுடைய வலிமையான போர்ப்படையை எல்லாம். 216.83. அடர்ந்தேறி - நெருங்கி ஏறி. 216.84. பிடித்து தனு - வில்லைப் பிடித்து. மடிந்தனரே - அரக்கர்கள் இறந்தனரே. 217.1. தாரணி - மாலை அணிந்த. தலைவர் - படைத்தலைவர். 217.2. தேரணித் திரளர் - தேர்ப்படையின் கூட்டத்தார். பரி - குதிரை. 217.3. வாரணப்பாகர் - யானைப்பாகன். தீரர் - வீரர். 218.1. மகோதரன் - இராவணனின் மூத்த மந்திரி. 218.2. முடிந்தாரே - மந்திரிமார் வாழ்நாள் முடிந்து இறந்தாரே. 218.3. கருத்தயர்ந்து - சிந்தை தளர்ந்து. தடுமாறி - மனம் தடுமாறி. 218.4. அண்டர் தெய்வேந்திரன் - தேவர்கள் தலைவன் இந்திரன். அமைச்சருக்கும் பத்தானே - எனது அமைச்சர்களுள் ஒருவனுக்குக் கூட பற்றமாட்டானே. 218.8. பகர்வதற்கு- கூறுவதற்கு.

At Rama's feet! while so, the ten crowns burgeoned
Again on the ten heads of Rāvaṇa!
Offered the crowns by Rama, Vipīṣaṇa refused them
Aṉumaṉ then beat back the foes
Along with the demon-ministers
When again the leaders came and fought
The young Lord Lakshmaṇa shot them down
With his victorious bow and arrows.

### RĀVAṆA'S ARMIES BEING DESTROYED

217. The garlanded ministers fell; the leaders fell;
Hordes of chariots, with their warriors fell
Numberless cavalry died; warriors on the banks
Of tuskers died; all the herores on the other side died!

218. Great indeed was the carnage with innumerable demons
Losing their lives! Makōtaraṉ[159] stood looking
As all his brother-ministers died
As the crowned demon king was looking on
All his counsellors died! Bewildered Rāvana
Became confounded as he thought
"Tēvēntiraṉ himself cannot stand before my ministers!
But now all of them are dead!
My mind is confused;" said he to Makōtaraṉ
And he came up to the emperor and said to him
"Ten-headed Lord! whose greatness
None can tell! Will anyone grow despondent

159. Makōtaraṉ - The Prime minister of Rāvaṇa.

பத்துமுடி ராவணனே படைத்தலத்தில் வந்துநின்று
மெத்தமன மலைப்பர்களோ வேந்தர்களே யாமாகில்
பெற்றதந்தை பட்டாலும் புறங்காட்ட ஞாயமுண்டோ
இத்தருண முன்னணியில் நான்போறோ மென்றுரைத்தார்

உரைத்தமுதல் மந்திரிவந்து உலகளந்தார் வானரத்தைத்
திரைகடலை மிகக்கலக்கிச் சிறியமச்சம் பிடித்தாப்போல்
பிடித்தடித்தான் வானரங்கள் பேர்ந்து விடமிட்டு
துடித்தவர்க ளோடையிலே துங்கமுடி யங்கதன்போய்

அங்கதன்போய் வானரத்தை அமர்த்திநின்று அமர்பொருதான்
மங்காத வாலிமகன் வளைந்தறுத்தா னரக்கனையும்
அரக்கர்படை முறிந்தோட அமைச்சனுமே பதறாமல்
பரக்கமுழித் தவன்பொருதான் பல்காட்டி வானரத்தை

### மகோதரன் மரணமும் இராவணன் கலக்கமும்

வானரங்கள் பல்காட்ட மாலிளையோன் சிலையெடுத்து
ஆனசரந் தெறித்துவிட்டார் அந்தமகோ தரனும்பட்டான்
பட்டானே மந்திரியும் பத்துத்தலை யான்தனித்தான்
கெட்டானே மந்திரிமார் கெடுத்தானே யென்றுசொல்லிச்

சொல்லியந்த ராவணனும் துயரமெல்லா மனதடக்கி
நல்லதினி நாம்தனித்தோம் ராமனைக்கொல் லாமல்விட்டால்
எல்லாரும் நகைப்பார்கள் ராவணனென் றெண்ணார்கள்
வல்லபமாய்க் கொல்வமென்றே வாய்த்தபடை யெடுத்தானே.

218.9. படைத்தலத்தில் - போர்க்களத்தில். 218.10. மலைப்பார்களோ - திகைப்பார்களோ. வேந்தர் - அரசர். யாமாகில் - ஆகுமானால். 218.11. பட்டாலும் - இறந்தாலும். 218.13. உலகளந்தார் - உலகத்தை அளந்தவர்; இராமர். 218.14. சிறிய மச்சம் - சிறிய மீன். பிடித்தாப்போல் - பிடித்ததைப் போல். 218.15. இடமிட்டு - போர்க்களம் விட்டு. 218.16. ஓடையிலே - ஓடும் பொழுது. துங்கமுடி அங்கதன் - ஒளிபொருந்திய பொன்னால் செய்யப்பட்ட மகுடம் அணிந்த அங்கதன்; வாலியின் மகன். 218.17. அமர் - போர். 218.18. மங்காத - புகழ் மங்காத. அறுத்தான் - கொன்றொழித்தான். 218.19. அமைச்சன் - மகோதரன். 218.20. பரக்க முழித்து - செய்வதறியாது முழித்து. 218.21. மால் இளையோன் - இராமனின் இளையவன்; இலட்சுமணன். 218.22. தெறித்து விட்டார் - வேகமாய் அம்பை எய்தார். பட்டான் - இறந்தான். 218.23. தனித்தான் - தனியாளாய் மாறினான். 218.24. கெட்டானே - இறந்தானே. கெடுத்தானே - இறந்து கேடு விளைவித்தானே. 218.28. வல்லபமாய் - வலிமையோடு. கொல்வம் - இராம இலட்சுமணரைக் கொல்லுவோம.

In the midst of battle in the field?
Kings do not retreat dejected
Even if their fathers die!"
Now at this very moment, I shall go and take the field
And Makōtaraṉ came raging
Against the monkeys of the world-measurer
And wrought havoc in their midst, like fishermen
Catching fish in the turbid sea
As they ran trembling before his might.
Aṅkataṉ, brightly-crowned, stemmed their retreat
The son of Vāli, surrounded the demon forces
Unafraid Makōtaraṉ fought with Aṅkataṉ
The younger Lord now took up his bow
And shot an arrow fierce and Makōtaraṉ fell
Rāvaṇa stood now alone as his minister
The last support he had was dead
"He has killed also my minister
But if I let go Rama without killing him
Everyone will laugh at me; none will recognize
Me as Rāvaṇa; I will show my real strength"
And he marshalled all his weapons.

## இராவணன் போருக்கு வருதல்

*விருத்தம்*

*219. எடுத்திடும் படைகள் கோடி எரித்திடும் படைகள் கோடி*
*தொடுத்திடும் படைகள் கோடி துணித்திடும் படைகள் கோடி*
*அடுத்தரன் கொடுக்க வந்த அனுக்கிரகப் படைகள் கோடி*
*மடுத்திரு பதுகை முட்டம் மகாபடை வாரி னானே.*

## இராவணன் போர்க்கோலம்

*நடை*

*220. படையெ டுத்தா னிருபது கையிலும்*
*பத்தி ராவணன் வார்த்தையைச் சொல்லுவேன்*
*உடைய சக்கர மோர்கயி லேந்தினான்*
*உத்த சொட்டை யொருகையி லேந்தினான்*
*சொட்டை யோடு சுரிகை யொருகையில்*
*சூழும் மந்திர வாளு மொருகையில்*
*வெட்டி யாடவே சூல மொருகையில்*
*வெட்டித் தாங்கப் பரிசை யொருகையில்*

*பரிசை யோடுபட் டாக்கத்தி யோர்கையில்*
*பாரக் கண்ட கோடாலி யொருகையில்*
*பெரிய குந்தங்க ளீட்டி யொருகையில்*
*பின்ன லாம்பாசக் கண்ணி யொருகையில்*
*கண்ணி லேவுமைக் கண்ட மொருகையில்*
*காடு கோல்சமு தாடு மொருகையில்*

*புண்ணி டும்படை வேலு மொருகையில்*
*போரி டும்வில் லுமொரு கையில்*

219.3. அரன் - சிவன். அனுக்கிரப் படைகள் - அருள் பாலிக்கும் படைகள். 219.4. மடுத்து- நிறைந்து. முட்டம் - நிரம்பும்படி. மகாபடை - பெரிய போர்க்கருவிகள். வாரினானே - கைக்கொள்ளும் மட்டிலும் எடுத்தானே. 220.1. பத்தி - பற்றி; கையில் எடுத்து. 220.2. சக்கரம்- ஓர் ஆயுதம். உத்த - உற்ற. சொட்டை - ஆயுதம். சுரிகை - கத்தி. 220.4. வெட்டியாடவே - வானரச் சேனைகளை வெட்டி ஆடவே. 220.5. பரிசை - கேடயம். பாரக்கண்டம், கோடலி - ஆயுத வகைகள். 220.6. குந்தம், ஈட்டி, பாசக்கண்ணி - ஆயுத வகைகள். 220.7. உமைகண்டம் - ஒரு வகை ஆயுதம். காடுகோல் - ஒருவகை ஆயுதம். சமுதாடு - ஓராயுதம். 220.8. புண்ணிடும் - உடம்பில் புண்ணை ஏற்படுத்தும்.

219. The weapons he possessed were millions and millions,
Millions, that burnt the foes myriads of missiles;
Weapons which cut the enemy were myriads
The weapons given by the grace of Hara, were countless
In his twenty hands Rāvaṇa carried all these weapons.

### RĀVAṆA'S APPEARANCE AS HE CAME ARMED TO THE BATTLE

220. In his twenty hands he took these weapons
I shall now narrate, how he was armed
A discus in his hand he held;
The weapon *Coṭṭai* in one hand
A dagger bright in another hand
While another held the magic sword;
A spear to cut in one hand
To deflect the blows of foes
A shield in one hand
A double-edged claymore in one hand;
The weapon *Pārakaṇṭam* in one hand
A sharp axe in the other hand
*Kuntam* and spear in another hand
A dreaded noose in another
Weapons, such as *Umaikaṇṭam*, *Kāṭukōl*, *Camuṭāṭu*,
In other hands; a lance in one hand
A warlike bow, axe and *Paṭṭayam*

வில்லும் வீரத்த மாகக் கையில்
    வெட்டுங் கோடாலி பட்டய மோர்கையில்
கொல்லுந் தண்டாயுத தடியோர் கையில்
    கூட்டி யிந்தப் படைகளி ருபதும்
கூட்டி யிந்தப்படை யஞ்சு நாலிலும்
    கொண்டு தாங்கிக் குரங்கை வெருட்டினான்
நீட்டிக் கால்கொண்டு யெட்டித் துரத்தினான்
    நெட்டை வேல்கொண்டு குத்தித் துரத்தினான்

குத்தி சோட்டைக் குழப்பித் துரத்தினான்
    கோசல சூல மெறிந்து துரத்தினான்
வெட்டிக் குத்திக் குரங்கைத் துரத்தினான்
    வீரவாள் கொண்டு வீசி முடுக்கினான்
நட்ட மாக்கியே நம்மையுங் கொல்லுவான்
    ராவணன் கிட்ட ராமனும் நிற்பரோ
ராமனாண் டென்ன ராக்ஷச ராண்டென்ன
    நல்ல சீதையை விட்டென்ன மீண்டென்ன

நாம ளோடிப் பிழைப்பது நன்றென்று
    நாடி யோடியே சென்றது வானரம்

சென்ற வானரச் சேனையைச் சீறியே
    சேர்ந்தனு மானும் சாம்புவ ராஜனும்
ஒன்று போல குரங்கைத் திரட்டியே
    உலக ளந்தவர் கிட்டவந் தார்களே
வந்த போதந்த வானரச் சேனையை
    மாது சீதை மணாளனுங் கண்டபின்
இந்த வானரச் சேனையைக் கண்டுதான்
    ராக்ஷச படைவெல்ல வந்தோ மென்றே

220.9. வீரத்தமாக -வீரத்துடன். கோடாலி, பட்டயம் - சில ஆயுதங்களின் பெயர்கள். 220.10. தண்டாயுதம், தடி - இருவகை ஆயுதங்களின் பெயர்கள். 220.11. அஞ்சு நாலிலும் கொண்டு - ஐந்து நாலாகிய இருபது கரங்களில் கொண்டு. குரங்கை - வானரப்படையை. வெருட்டினான் - அச்சுறுத்தினான். 220.12. எட்டித் துரத்தினான் - விலகி ஓடும்படித் துரத்தினான். 220.13. சோட்டைக் குழப்பி - இராமனின் கவசப் படைகளைக் குழப்பமடையும்படி. 220.14. முடுக்கினான் - விரைவு படுத்தினான். 220.15. நட்டம் - நஷ்டம். 220.16. ராக்ஷசன் - அரக்கனாகிய இராவணன். 220.18. சீறியே - சினந்தே. சாம்புவராஜன் - கரடி ராஜனாகிய சாம்புவன். 220.19. உலகளந்தவர் - உலகை அளந்த இராமர்.

Club and cudgel in other hands,
Thus with such dreaded weapons
He terrified the monkeys
With his legs, he kicked and chased them:
He pierced them with his long spear
He created confusion in the armed bands of Rama
A trident he threw at them and cut them down
With swords, and chased them such that
The Vāṉaras said to themselves
"He will waste us all
Rāvaṇa will come near Lord Rama soon
What we do we care if Rama rules
Or Rāvaṇa rules! or whether Sita is freed
Or stays back in Lanka; it is better
If we run for our lives."
Thus the Vāṉaras fled in fear of Rāvaṇa
But Aṉumaṉ and king Jāmpavāṉ went among them
And gathering them together again
Came near the world-measurer;
Whom Sita's Lord seeing thought
"This Vāṉara army has come only to help me
To defeat the demon forces"

### இராமன் போர் செய்தல்

வெல்ல வென்று சிவனைத் தியானித்து
மேக வர்ன ரெழுந்திருந் தாரப்போ
நல்ல புத்தி விபீஷணர் மந்திரி
நாடெல் லாந்திறை கொண்டிடும் மாருதி
மாருதி யங்கத னோடு சாம்புவன்
வாய்த்த நீலன் குமுத வாதித்தனும்
பேரு லாவிய மாலிளையோன் செப்பும்
பின்னிரு பத்து நாலு தலைவரும்

தலைவர் கூட்டிய வானரச் சேனையும்
சங்கு சக்கர பாணியைப் போற்றினார்
மலையெ னப்புயம் பூரித்துப் பாரித்து
வல்ல வனிளை யோன்துடை தட்டியே
இளையவ ரோடு வானரச் சேனையும்
எங்குங் கூடிச் செருமி யுடன்வரச்
சிலையெ டுத்துத் திருமால் திரும்பியே
சேர்ந்த வீரர்கள் செந்தூளி யாகவே

தூளி யாக அனும னெழும்பியே
தொட்டு மாமலை கிட்டிப் பிடுங்கியே
ஊழி காலத் திடியது போலவே
உலக ளந்தவர் கண்பார்த்து நிற்கவே
நிற்கும் போதிளை யோன்சரந் தொட்டிட
நீல மாமலை மாருதி தாக்கினான்
தக்க சாம்புவர் திக்கெட்டு லாத்தினார்
தலைவர் நாலாறு பேரும் நெருங்கியே

220.22. அப்போ - அப்பொழுது. 220.23. திறை கொண்டிடும் - திறைப்பணம் பெற்றிடும். 220.24. மாருதி, அங்கதன், சாம்புவன், நீலன், குமுதன், ஆதித்தன் - இராமன் சேனையிலுள்ள முக்கிய படைத்தலைவர்கள். 220.26. சங்கு சக்கரபாணி - சங்கு சக்கரங்களைக் கையிலேந்திய திருமால்; இராமனைக் குறித்தது. 220.27. பாரித்து - பகுத்து. இளையோன் - இலட்சுமணன். துடை - தொடை. 220.28. செருமி - சேர்ந்து. 220.29. சிலை - வில். செந்தூளியாகவே - சிவந்த துகள் ஆகும்படியாகவே. 220.30. கிட்டி - நெருங்கி. 220.31. ஊழிக் காலத்திடி - யுகமுடிவு காலத்து ஏற்படும் இடியோசை. 220.32. நீல மாமலை மாருதி - நீல வர்ணமுடைய மாமலை போன்ற அனுமன். 220.33. உலாத்தினார் - எதிரிப்படையாம் அரக்கப்படையுள் புகுந்து உலாத்தினர். தலைவர் நாலாறு பேரும் - இராமன் படையிலுள்ள இருபத்துநாலு தலைவரும்.

And meditating upon Siva, Rama prepared for battle
As the cloud-hued one rose to fight
Wise Vipīṣaṉa and other ministers Māruti,
Aṅkataṉ, Jāmpavāṉ, Nīlaṉ, Kumutaṉ
Ātittaṉ and the great Lakshmaṇa
Besides the twentyfour army commanders of the Vāṉaras
Hailed the Lord adorned with Conch and Discus!
Lakshmaṇa beating his thigh by way of challenge
Led the field with the milling troops
Surrounding him; as Lord Rama took his bow
The Vāṉaras led by Aṉumaṉ marched such that
The red dust rose up! seizing a huge hill
He threw it thunderously like a rain-cloud
Rumbling at the aeon's end! with the Lord looking on
Young Lakshmaṇa shot his numerous arrows
With a blue mountain, Māruti attacked, while Jāmpavāṉ
Moved about here and there encouraging the armies
The twentyfour captains fought pitched battles;

## இலட்சுமணன் போர்த்திறம்

நெருங்க லட்சுமணர் விட்ட நல்சரம்
நீடி ராக்ஷசர் மேல்சென்று மோதுமாம்
மருங்கில் நின்றனு மானும் மலையேறி
வாள ரக்கரை மாள வடிக்குமாம்
மாள வந்ததெனச் சொல்லி ராக்ஷசர்
மட்டி லாப்படை யொக்க மடிந்தனர்
ஆள ரக்க ரெல்லாரு மிறந்தனர்
அரக்கர் பட்டு நிரக்க விழுந்தனர்

பட்ட சேனைப் பிணங்களை வாரியே
பாரில் மூடி படுப்பா ரதிற்சிலர்
இட்ட மாகவே சேனை பலவிழ
ஏறிட்டுப் பலர்கூ றிட்டு வோடிப்போய்
ஓடிப் போய்க்கடல் நீருக் குள்ளேமுங்கி
உள்ளொ ளித்துக் கிடப்பவர் தான்சிலர்
தேடிப் பார்க்கிற தாய்க்கென்ன சொல்லுவோம்
தேவிக் கென்ன சொல்வோ மென்றுகூறியே

கூறும் பேர்களை வாய்க ளறுத்திடும்
கொண்டு சீறிக் குடலைப் பிடுங்கிடும்
வேறுசெய் திளையோன் விட்ட கைக்கணை
விட்ட தேரையுங் கட்டுக் குலைத்தே
தேர றுத்தனர் சேனை யறுத்தனர்
திக்கெட் டுள்ள அரக்கரும் பட்டனர்
கோரணி செய்திடும் பலவீ ரர்கள்
கோஷ்ட மிட்டு அனைவரும் பட்டனர்

220.35. மருங்கில் - அருகில். மாளவடிக்குமாம் - இறக்கும்படி செய்தானாம். 220.37. நிரக்க விழுந்தனர் - நிறைய விழுந்து இறந்தனர். 220.38. படுப்பார் - அடக்கம் செய்வார். 220.39. இட்டமாகவே - விருப்பமாகவே. சேனை - படைவீரர்கள். ஏறிட்டு - அரக்கர் படைகள் இராமனது சேனைகளை ஏறிட்டு. கூறிட்டு - பல கூறுகளாகப் பிரித்து. 220.40. முங்கி - மூழ்கி. 220.41. தேடிப்பார்க்கிற தாய்க்கு - நம்மைப் போர்க்களத்தில் தேடி வரும் தாய்மார்களுக்கு. தேவி - மனைவி. 220.42. கூறும் பேர்களை - மேற்படி தாய்க்கும் மனைவிக்கும் என்ன கூறுவோம் என்று கூறும் அரக்கர்களை. வாய்கள் அறுத்திடும் - இராம சேனையின் அம்பு அறுத்திடும். சீறி - கோபம் கொண்டு. 220.43. கைக்கணை - கை அம்பு. 220.45. கோரணி - விந்தை (போரில்). கோஷ்டமிட்டு - ஆரவாரம் செய்து. பட்டனர் - இறந்தனர்.

## LAKSHMAṆA'S PROWESS IN BATTLE

The goodly arrows of Lakshmaṇa hit the demons;
As Aṉumaṉ's hills slaughtered the mighty demons!
Countless numbers of them died thus?
Their corpses filled the field!
Some of them left alive, tried to hide
Inside piles of corpses heaped on earth!
Some of them seeing the slaughter,
Would run in groups towards the sea
And lie submerged hiding from the enemy!
The victorious Vāṉaras destroyed the demons:
As they lamented among themselves,
"What shall we tell our mothers searching for us?
What shall we say to our wives?"
The monkeys tore their mouths that spoke thus;
They plucked their entrails:
The arrows of Lakshmaṇa destroyed their chariots
And the army entire in all the eight directions,
Fought their wondrous battle!
All of them fell; many of them

*பட்டன ரதில்மட் டற்ற சேவகர்*
*படைக்கு வெள்ளங் கொடுக்கும் பக்காளியர்*
*தட்ட ழிந்து படைபட்ட போதிலே*
*தனியே ராவணன் தள்ளாடித் தள்ளாடி*

*ஆடிப் பாடி நடனம் புரிந்தவர்*
*அரக்க னுக்கு வெண்சாமரம் போட்டவர்*
*கூடி முன்னின்று கட்டியங் கூறுவோர்*
*கொடியி டக்கயம் கொடிக ளெடுப்பவர்*
*எடுத்தெ ழுப்ப முடியுமோ ராவணன்*
*ஏடு சேர்படை நாடறி யாததோ*
*படுத்த சேனையைப் பார்த்தந்த ராவணன்*
*பத்து மாமுடி தன்னை யசைத்துமே*

**இராவணன் படையிழந்து வருந்துதல்**

*அசையா தபுகழ் கெட்டிப் பாவித்தேன்*
*அண்ட ரூழியஞ் செய்யவும் நேமித்தேன்*
*வசையாய்த் தங்கை மூக்கரிந் தானென்றே*
*மங்கையை வந்து இங்கே சிறையிட்டேன்*
*இட்ட பெண்சிறை சீவனோ டேவிடேன்*
*இராம னுக்கெதி ராளியு மாகினேன்*
*கெட்ட காலமென் றேறு பட்டதே*
*கெஞ்சு மானிடர் மிஞ்சவு மாச்சுதே*
*ஆச்சி னித்தா னிருந்தென்ன காரியம்*
*அண்ணனைக் கொல்ல தம்பியுங் கூடினான்*
*பேச்சினி யென்ன வென்று மலங்கியே*
*பெலத்த ராவணன் நிலத்தினிலே நின்றான்.*

220.46. வெள்ளம் - 'குடி தண்ணீர்' என்ற பொருளைக் குறிக்கும் மலையாளச்சொல். பக்காளியர் - எருதின் மீது ஏறியிருந்து நீர் மொண்டு கொடுப்போர். 220.49. கயம் கொடி - பெருமையான கொடி. 220.50. எடுத்தெழுப்ப முடியுமோ - இறந்த மேற்படி வீரர்களை மீண்டும் உயிர்பெறச்செய்து எழுப்ப முடியுமோ? 220.51. படுத்த சேனையை - இறந்த பெரும் படையை. 220.52. கெட்டி - கட்டிக் கொண்டு. பாவித்தேன் - ஆட்சி செலுத்தினேன். அண்டர் - தேவர். ஊழியம் - பணி. நேமித்தேன் - நியமித்தேன். 220.53. வசையாய் - பிறர் இகழ்ச்சி மொழி கூறும் படியாய். மங்கையை - சீதையை. மூக்கரிந்தான் - இலட்சுமணன் மூக்கரிந்தான். 220.54. சீவனோடு விடேன் - உயிரோடு விடமாட்டேன். எதிராளி - பகைவன். 220.55. அறுபட்டதே - அற்றுப்போனதே. கெஞ்சு மானிடர் மிஞ்சவும் ஆச்சுதே- அரக்கர்களிடம் உயிர்வாழ்வதற்குக் கெஞ்சும் மானிடர் எதிர்க்கும் அளவு ஆனதே. 220.56. ஆச்சு - ஆயிற்று. தம்பி - விபீஷணன். 220.57. போச்சு - போயிற்று. மலங்கியே - திகைத்தே.

Were mere servants, such as water-carriers
Riding on bullocks, to give water to the thirsty warriors;
Others such as those who fanned with their chowries,
Heralds announcing their titles, flag-bearers and all
Besides warriors proper, all, all of them fell!
Looking at the carnage on his side,
Rāvaṇa grew anguished at heart.

## RĀVAṆA'S GRIEF AT THE DESTRUCTION OF HIS ARMIES

"I was proud of my unshakable reputation;
I made the celestials do, service base, for me!
I imprisoned Sita because my sister's nose was cut
By Lakshmaṇa; I shall not allow that woman to leave:
I have now become the enemy of Rama:
The time has become so bad for me,
That mere men who begged for their lives before,
Are now exceeding me in power;
What is there left for me to do?
My brother has joined the forces of the enemy
In order to see me killed;
Why need further talk?"
Thus mighty Rāvaṇa in anguished agitation,
Perplexed stood in the battlefield.

## இராவணன் மீண்டும் பொருதல்

*விருத்தம்*

221. நிலந்தனில் நின்று கொண்டு நீலவர் னனையும் பார்த்துக்
கலங்கியே இருப தான கையிலோர் படையில் லாமல்
மலங்கியே நிற்கும் போது மதமது கெதிவி டாமல்
துலங்கிய வான ரத்தைத் தொடுத்தடித் தொதுக்கி னானே.

*நடை*

222. தொடுத்தது படைக்க ளத்திலே அடுத்த வானரத் தளத்திலே
துடிக்கதுடிக்க வடித்துப் பறத்தித் துரத்தித் துரத்தித் துரத்தினான்
வடுத்தகும் படிய டிக்கவே தொடுத்த கவிகள் துடிக்கவே
மறுத்துத் திடுக்கிட்டக் சக்கிரிக்குப் பகட்டிப் பகட்டிப் பகட்டினான்
பகட்ட ராகவன் கரத்தினால் முகட்டில் வானுறு சரத்தினால்
பதைக்கப் பதைக்கச் சதைக்கச்சதைக்க மிகுத்துச் சரத்தைப்
பரத்தினான்

### இராமன் இராவணனின் சிரங்களைப் பறித்தல்

நகட்ட ராவணன் சிரத்திலே நகத்தை ராகவ னிருத்தவே
நடுக்கக் கடுத்துதிடுக் கிட்டகுத்து துளைத்துச் சிரத்தைப்
பறித்துமே
பறித்து முடியை யழைக்கவே மறுத்து முடிகள் முளைக்கவே
பதுக்கபதுக்கக் குதித்துக் குதித்துச் சதிக்கச் செருச்செய்
திடுவனே

221.3. மதமது - மதம் பொருந்திய வலிமையது. கெதி விடாமல் - விலகி விடாமல். 221.4. துலங்கிய - பிரகாசித்த. தொடுத்து - போர் தொடுத்து. 222.1. தொடுத்தது படைக்களத்திலே - இராவணன் அம்புகள் வானரப்படை களத்திலே தொடுத்திட. 222.2. வடுத்தகும் படியடிக்கவே - உடம்பில் வடு ஏற்படும் படி அடிக்கவே. கவிகள் - குரங்குகள். சக்கிரிக்கு - திருமாலாம் இராமனுக்கு. பகட்டி - அதட்டி. 222.3. பகட்ட - இராவணன் இவ்விதம் போர்த்திறத்தால் அதட்ட. முகட்டில் வானுறு - வானத்தைத் தொட்டிடும் உச்சியில். சரத்தினால் - அம்பினால். சதைக்க - உடல் சிதைந்து போகும் ப்படியாக. பரத்தினான் - இராவணன் மீது அதிக அளவு விட்டான். 222.4. நகட்ட ராவணன் - தலைகளை இராமன் விட்ட அம்புகள் படாமல் இருக்க இராவணன் நகர்த்த. சிரத்திலே - தலையிலே. நகத்தை - மலையை. நடுக்க - நடுங்கும்படி செய்து. கடுத்து - கடுமையான வேதனையை ஏற்படுத்தி. திடுக்கிட்ட குத்து - திடுக்கிடும்படியாக வந்த இராமன் அனுப்பிய மலையின் குத்து. 222.5. அழைக்கவே - மீண்டும் அழைக்கவே. மறுத்து முடிகள் முளைக்க - இராவணனுக்கு மீண்டும் தலைகள் முளைக்க.

### RĀVAṆA COMING TO FIGHT AGAIN

221. Thus he stood on the field looking at the blue-hued Lord
With not a single weapon in his twenty hands;
But still without losing courage,
Back to the battle he came, and beat the monkeys.

222. He chased the trembling Vāṉaras with his arrows!
His blows left their marks on them:
He challenged the Lord with the Discus,
And abused him repeatedly;
Rama showered arrows upon Rāvaṇa.
Aimed to cut down piece by piece, his limbs!

### RAMA CUTTING OFF RĀVAṆA'S HEADS

As Rama shot his arrows, Rāvaṇa moved his heads
This way and that to avoid them.
As Rākava sent his shafts at him,
They hit him with the force of a hill thrown at him,
And plucked off his ten heads!
But as he recalled them,
Back they grew upon on his neck!
Again and again they were cut off,
And again and again they grew!
With his perfect bow Rama sent his fierce arrows,
At the conch-like necks or Rāvaṇa.

தறித்துச் சங்கரி குறித்துமே மறுத்துச் செஞ்சிலை விரித்துமே
தலைக்குச்சிலைக் குடைக்குக் கொடிக்குச் சரச்சக் கரத்தைக்
குறித்திட்டார்
சிரத்தை யறுக்கக் குறித்துமே புரத்தை யெரித்தோன் வரத்தையே
சணத்திலரக் கன்எரிக்க நினைத்து சாடித்தேடி யோடியே
சரச்சக்க ரத்தைத் திருக்கவே சிரபதத் துக்கு ருக்கவே
தடைக்குப் படைக்குப் புடைத்திட்ட தற்குபடைத்துட்ட ரக்கர் கடகமே.

**இராவண்ன் மீண்டும் சிரங்கள் பெற்று போர் செய்தல்**

விருத்தம்

223. துட்டரக்கன் முடியதற்குத் தொடுத்த பாணம்
துளைத்துவிடுஞ் சக்கரஞ்சென் றலைத்த போது
விட்டவிட்ட படைகள்முடி யறுத்து வீழ்த்த
மீண்டுமமுடி முளைத்தரக்கன் சமர்செய் தானே
மட்டடங்கா பரஞ்சுடர்பால் தவமே செய்து
மாண்டதலை முளைத்திடவும் வரம்பெற் றானே
இட்டசிறை திருப்பிநகர் புகுவ தெந்த
இதமிவனைத் துணிப்பதெந்த விதமென் றானே.

**இராவணன் மடிவதற்கு விபீஷணன் உபாயமுரைத்தல்**

நடை

224. எந்தவிதத்தால் செயிப்போம் இவனையென்றார் திருமாலும்
வந்ததோர் விபீஷணரும் மலரடியைத் தான்தொழுதார்
அடிதொழுது நமஸ்கரித்து ஆதிநா ராயணரே
படியளந்த திருமாலே பத்துமுடி ராவணற்கு

222.6. தறித்து - தலைகளைத் தறித்து. சங்கரி குறித்துமே - சங்காகிய கழுத்தைக் குறித்து. மறுத்து - மீண்டும். தலைக்குச் சிலைக் குடைக்கு கொடிக்கு - இராவணனுடைய தலைக்கும் வில்லுக்கும் வெண் கொற்றக்குடைக்கும் கொடிக்கும். சரச்சக்கரம் - சக்கராயுதம். குறித்திட்டார் - குறிவைத்தார். 222.7. புரத்தை எரித்தோன் - முப்புரத்தை எரித்தோன்; சிவன். சணத்தில் அரக்கன் எரிக்க நினைத்து - சிவபெருமான் கொடுத்த வரத்தை அழிக்க நினைத்து. 222.8. சரச்சக்கரம் - சக்கராயுதமாகிய அம்பு. திருக்கவே - கையால் பிடித்து இராவணன் திருகவே. சிரபதத்துக்கு உருக்கவே - தலைகளை அறுக்கவே. தடைக்கு - இராமன் படைக்குத் தடையாக உள்ள. புடைத்திட்ட - அடித்து வீழ்த்தி. துட்ட அரக்கர் கடகமே - துஷ்ட அரக்கர் படைகளும் யானையும். 223.1. அலைத்த போது - அலைக்கழித்த போது. 223.3. பரஞ்சுடர் - சிவன். மாண்ட - இற்று விழுந்த. 223.4. இட்ட சிறை - தங்கும் பாசறை. எந்த விதம் - எந்த முறை. இவனைத் துணிப்பது - இராவணனைக் கொல்வது. 224.4. படியளந்த - உலகளந்த.

Then the Lord sent his Discus at his heads,
His bow, his white canopy of state, and his flag.
The demon with Siva's boon in his mind
Caught hold of the Discus, intending to destroy it;
But it cut his heads and went on to destroy,
All that opposed its progress,
Including the warriors and the tuskers!

### RĀVAṆA COMING BACK TO BATTLE WITH HIS NEWLY GROWN HEADS

223. The arrow sent to put an end to the evil demon,
The Discus weapon, cut off the crowned heads;
Which, back appearing on his neck
The demon went on fighting still alive,
As result of the boon he had obtained,
From the Supreme Light in recompense for his great tapas!
"How do we leave the war-camp and enter the city?
How do we kill him for good? How can we
Finally defeat him?", thus wondered Rama!

### VIPĪṢAṆA ADVISES RAMA ABOUT HOW TO KILL RĀVAṆA

224. Bowing at the flowery feet of the Lord,
Praying to him Vipīṣaṇa said;
"Primal Nārāyaṇa, who measured the earth!

ராவணற்கு மார்புதனில் நல்லமுத கலசமுண்டே
ஆவதனா லெய்தாலும் அவன்கழுத்தை யறுத்தாலும்
அறுத்தாலும் வதைத்தாலும் அரக்கனுட பத்துமுடி
மறுத்துவந்து முளைப்பதல்லால் மாளானே மாயவரே

மாளானே தாளானே வல்லமைகள் செய்வானே
மீளானே தெய்வப்படை வென்றுதென்றும் வாராதே
வாராதே சண்டாளன் மகாதோசி யானதனால்
போராடிப் போராடிப் புண்பட்ட திண்புயவன்

அவனமுத கலசமறும் பின்னம்புதொட்டால் மாண்டிடுவான்
சிவனுதவும் வரமுமறும் திருமாலே யென்றுரைத்தான்

## இராமன் இராவணனின் அமுதகலசம் மீது அம்பு தொடுத்தல்

என்றுரைத்த வேளையிலே இதுவறிந்து ரெகுராமன்
நன்றினி விபீஷணரே நாமறிந்தோ மில்லையிது
நாமபஞ்சா க்ஷரத்தை யுன்னிராமர் சரந்தொட்டிடவே
ஆமதுபோய் நெஞ்சுகுத்தி அமுதகலசம் பறிக்க

பறித்துவர ராமபாணம் பச்சைமால் தொடுத்திடவே
குறித்தசர மதுபாய்ந்து கொடியரக்கன் முடிகள்பத்தும்

## இராவணன் மரணம்

பத்துமுடி தனையறுக்கப் பட்டுவிட்டான் ராவணனும்
அத்திரங்கள் முடியுங்கொண்டு அந்தரத்தே யாடிடுமாம்

**224.5.** நல் அமுத கலசமுண்டே - இராவணன் உயிர் தங்கியிருக்கும் நல்ல அமுத கலசம் உண்டே. ஆ - அம்பு. **224.8.** மறுத்துவந்து - மீண்டும் வந்து. மாளானே - இறக்கமாட்டானே. **224.9.** தாளானே - தாழ்ச்சியடையானே. வல்லமைகள் - அரிய பெரிய காரியங்கள். மீளானே - மீண்டுவிடுவானே என்ற பொருளில். தெய்வப்படை வென்றுது என்றும் வாராதே - தெய்வப்படையாகிய இராமன் படை வெற்றி கொண்டது என்னும் சொல் என்றும் வராதே. **224.11.** மகாதோசி - மகாபாவி. **224.12.** திண்புயவன் - வலிமையான தோளினை உடையவன். **224.14.** சிவனுதவும் வரமும் அறும் - இராவணனுக்குச் சிவன் கொடுத்த வரமும் நீங்கும். **224.16.** நாமறிந்தோமில்லை - இராவணனைக் கொல்லும் உபாயத்தை நான் இதற்குமுன் அறியவில்லை. நாம பஞ்சாக்ஷரம் - 'நமசிவாய' மந்திரம். உன்னி - நினைத்து. **224.22.** அத்திரங்கள் - அஸ்திரங்கள்; அம்புகள். முடியுங் கொண்டு - தலையும் கொண்டு.

Ten-headed Rāvaṇa has a chalice of nectar
Where lies the secret of his long life!
It is in the middle of his chest;
Whatever weapons you send against him,
Or howsoever his heads are cut or mutilated,
The ten heads of Rāvaṇa will burgeon back again!
He will not die, Lord! he cannot go down!
He will continue to do heroic exploits;
No divine weapon can touch him;
Come back, he will!
He is the base sinner, with arms stout
With heroic wounds after many a battle!
If your arrow destroys his secret chalice of nectar,
Even Siva's boon will lose its power!
Then Rāvaṇa will die for good, O Lord!"

## RAMA AIMING HIS ARROW AT RĀVAṆA'S CHALICE OF NECTAR

Rakurāma thanking Vipiṣaṇa, acknowledged his ignorance
Of this all-important secret; and meditating
On the mystic pentad *Namacivāya* he fixed his arrow,
And shot it at the bosom of Rāvaṇa,
Which seized and destroyed his secret power!
After which the dreaded arrow, of Rama cut off
The heads of the cruel demon finally and for good.
His ten heads down on the ground,
Rāvaṇa fell at last, while the arrows danced gleefully in the air
With the heads upon them!

### இராவணன் மடிவால ஏற்பட்ட உலகத்தார் மகிழ்ச்சி

ஆடிடுமாம் பாடிடுமாம் அண்டபகி ரண்டமெல்லாம்
தேடியந்த ராவணனைச் செயித்தது மாலென்றிடுமாம்
செயம்பெரிய சேவகனைத் தென்னிலங்கை ராவணனை
மயம்பெரிய ரெகுராமன் வதைத்துவிட்டா னென்றிடுமாம்
வதைத்துவிட்டா ரென்று சொல்லி வானவரும் மனமகிழச்
சதைத்துவிட்டா ரென்றுசொல்லிச் சப்தரிஷி முனிவோர்கள்
சத்துருவைச் சங்கரித்தார் தாசரதி யெனமகிழ்ந்து
புத்தியுடன் பாரிசாதப் புட்பமழை பொழிந்தனரே
புட்பமழை பொழிந்தனரே பூபதியுந் தேவரெல்லாம்
பத்மநாபன் செயஞ்செயமே பச்சைவர்னர் செயஞ்செயமே
செயராமன் ரெகுராமன் ஸ்ரீராமன் மேகவர்னன்
துயரமுற்றோர் பூமாரி சொரியவென்றே பெருமைபெற்றான்
பெற்றானென் றவர்கள்மெய்க்கப் பெருமானும் மனமகிழப்
பத்துமுடி ராவணனார் பட்டிறந்த படுகளத்தில்

### விபீஷணன் துயரம்

படுகளத்திலே புகுந்து பாசமெய் விபீஷணரும்
முடுகியண்ண ரிடத்தில்வந்து முகத்திலிரு கையறைந்து
முகத்தோடு முகந்திருத்தி முடிகள்பத்து மெடுத்தணைத்து
அகதியன் மாபாவி அண்ணர்துணை யிழந்தேனே

துணையாக யானிருந்து சொன்னேனே கோடிப்புத்தி
குணமாகக் கேளாமல் கொல்லவுடம் பெடுத்தாயே
எடுத்தாயே பாழுடம்பு ராமருக்குப் பகைத்தாயே
கெடுத்தாயே உன்வாழ்வு கேசவற்கும் பகைத்தாயே

224.23. அண்டபகிரண்டமெல்லாம் - பிரபஞ்சத்து மக்கள் எல்லாம். 224.25. செயம்பெரிய சேவகன் - வெற்றியின் பெரிய வீரன்; இராவணன். 224.26. மயம் பெரிய ரெகுராமன் - அழகில் பெரிய ரெகுராமன். 224.28. சதைத்து விட்டார் - உடல் சிதைந்து போகும்படி செய்தார். சப்தரிஷி முனிவோர்கள் - மரீசி, அங்கிரசன், புலகன், வசிஷ்டன், அத்திரி, புலஸ்தியன், கிருது என்னும் எழுவர். 224.29. சத்துரு - பகைவன்; இராவணன். தாசரதி - தசரதன் புத்திரன்; இராமன். 224.31. பூபதி - அரசர். 224.32. பத்மநாபன் - திருமாலாகிய இராமன். பச்சைவர்னன் - பச்சை வர்ண மேனியன்; இராமன். 224.34. துயரமுற்றோர் - வருத்தம் கொண்டோர்; தேவர். 224.37. பாசமெய் - பாசம் மிகுந்த. 224.38. முடுகி - விரைந்து. அகதியன் - திக்கற்றவன்; விபீஷணன். அண்ணர் - இராவணர். 224.42. கொல்ல - இறந்து போக. 224.44. கேசவற்கு - இராமருக்கு.

## THE RELIEF AND JOY OF THE PEOPLE OF EARTH ON THE DEATH OF RĀVAṆA

All the universes and the orbs danced and sang
At the death of Rāvaṇa:
"Tirumāl has conquered Rāvaṇa at last", they said!
"The once-victorious demon, Lord of Laṅka,
Beautiful Rakurāma has slain", they said!
The celestials rejoiced that Rama had put an end to Rāvaṇa.
The seven sages and seers said;
"Rama has smashed Rāvaṇa's power on earth"
And poured a rain of *Pārijātam* flowers upon Tācarati!
Gods, celestials and kings showered flowers!
"Victory to Patmanāpa; Victory to the emerald-hued!
To Jayarāma, Rakurāma, Shrirāma, the cloud-hued!'
All those who had suffered so far rained flowers
And the Lord became happy in their happiness.

## VIPĪṢAṆA'S GRIEF

To the field where ten-headed Rāvaṇa lay dead
His loving brother Vipīṣaṇa swiftly came:
And beating his face with his hands,
Placed his face upon the face of his brother dead,
Embracing the ten heads he cried:
"Oh, I am orphaned! sinner I am,
I have lost my brother! I told you countless times,
My words of advice; scorning them
You have lost your life!
This body great, in vain you bore:
You became Rama's enemy; you have ruined your life,

பகைத்தாயே சீதையரைப் பாராமல் சிறையில்வைத்து
நகைத்தாயே மக்களையும் நாட்டரசு மிழந்தாயே
இழந்தாயே அதிகாய னிந்திரசித்தி லக்கணனைக்
களைந்தாயே அக்ஷதனைக் கனகோடி மந்திரியை

மந்திரிமார் பட்டதெல்லாம் மணிமுடியுந் தொலைத்தாயே
முந்தியுனைத் தான்பணிந்தேன் முத்திப்பெறப் புத்திசொன்னேன்
புத்திசொல்லக் கேளாமல் பொன்றினாயே யண்ணாவி
சத்தியமாய்ப் புத்திசொன்னேன் சானகியைச் சிறைவிடென்றேன்

சிறைவிடென்ன கேட்டிலையே தென்னவனே மன்னவனே
பிறைநுதலாள் சீதைகற்பு பெருநெருப்பாய் மூண்டதுவே
மூண்டதனால் மாண்டுவிட்டீர் முடிவேந்தே யண்ணாவி
ஆண்டவனாம் ரெகுராமன் அவரிடத்தில் பகைத்தாயே

பகைத்திரே யண்ணாவி பத்துமுடி யிழந்திரே
புகைத்திலங்கை யழிந்ததல்லால் புத்திரரும் போனாரே

**வண்டோதரி புலம்பல்**

போனாரே யென்றழுது விபீஷணரும் புலம்பிநிற்க
மானாள் வண்டோதரியும் மணவாளன் படுகளத்தில்

படுகளத்தி லேபுகுந்து பர்த்தாவின் மேல்விழுந்து
கொடுமையுடன் வயிற்றிலேயும் கொங்கையிலு மிடித்தழுதாள்
இடித்தழுது சிகைபறித்து என்கோவே யென்றழுதாள்
துடித்தழுது மேல்விழுந்து துங்கமுடி மடியில்வைத்து

வைத்துமுன்னாள் கயிலையிலே வாழ்ந்திருந்தேன் சிலகாலம்
பத்துமுடி மன்னவனே பரஞ்சுடரை நோக்கிநின்று
நின்றுதவ மேபுரிய நிறைந்தவர முனக்கருள
அன்றுமென்னைக் கூடவிட்டார் அடுத்துவந்தே னுன்னிடத்தில்

224.47. அதிகாயன், இந்திரசித்து, இலக்கணன் - இராவணன் மக்கள். 224.48. அக்ஷதன் - அட்சய குமாரன்; இராவணன் மகனுள் ஒருவன். 224.50. முந்தியுனை - முன்னாள் உன்னை. 224.51. பொன்றினாயே - அழிந்தாயே. அண்ணாவி - அண்ணா. 224.52. சானகி - சீதை. 224.54. பிறை நுதலாள் - பிறை போன்ற நெற்றியையுடையாள். 224.56. ஆண்டவனாம் - இறைவனாம். 224.58. புகைத்து - புகைந்து; தீயால் புகைந்து. 224.60. மானாள் - மான் போன்ற விழியாள். மணவாளன் - கணவன். 224.61. பர்த்தா - 'கணவன்' என்ற பொருளிலமைந்த மலையாளச் சொல். 224.62. கொடுமையுடன் - மிகுந்த வேதனையுடன். கொங்கை - மார்பு. 224.63. சிகை - முடி. 224.64. துங்கமுடி - ஒளி பொருந்திய முடியுடைய தலை. 224.66. பரஞ்சுடர் - சிவன். 224.68. கூடவிடுடார் - அனுப்பிவைத்தார்.

Becoming the Lord's foe by imprisoning Sita;
You have lost your kingdom, your sons;
You have lost Atikāyaṉ, Intirajit, Lakkaṉaṉ,
Aṭcayaṉ and countless ministers and your gemmed crowns.
I prayed to you, I advised you,
How to get salvation! careless of my words
O brother! you have embraced death.
I advised you truly to give up Jāṉaki:
But you would not listen, my king!
Sita's chastity has grown into a great fire
Which has consumed you, O my brother;
Because you have made an enemy of Rakurāma.
O brother! you lost not only your ten heads:
Your sons have all gone;
And Lanka too has gone up in fire and smoke!"

### MANṬŌTARI'S LAMENT

As Vipīṣaṇa thus stood lamenting,
Doe-like Manṭōtari entered the battlefield;
And falling upon her husband's body
Lamented, tragically beating her belly and her breasts,
She cried and cried; loosening her tresses, "My Lord! My King!"
Placing his crowned head on her lap she said:
"I was living in Kailas for a time:
As you did tapas true to the Primal Light,
He gave you many boons and sent me as your wife:

*உன்னிடத்தில் யானிருந்து உவந்துமக்கள் பெற்றெடுத்தேன்*
*பொன்னுலகோ ரேவல்செய்யப் பொய்வாழ்வோ வாழ்ந்திருந்தேன்*
*வாழ்ந்திருந்தா லென்னைவிட்டு மணவாளன் பிரிவார்களோ*
*சூழ்ந்திருந்து நாய்நரிகள் சுற்றிவந்து கூத்தாட*

*கூத்தாடிக் காளியுடன் கூளிவந்து பசியாற*
*மாற்றான் கையம்பாலே மாண்டுவிட்டீர் மன்னவரே*
*மன்னவனே யுனைப்படைக்கு வரவேண்டா மென்றேனே*
*மின்னாரைச் சீதையரை விட்டுவிடச் சொன்னேனே*

*சொன்னதெல்லாங் கேளாமல் சூர்ப்பநகை பாதகத்தி*
*தன்னுடனே நீர்பிறக்கத் தாலிபறி கொடுத்தேனே*
*பறிகொடுத்தேன் சண்டாளி பாதகத்தி சூர்ப்பனகை*
*நெறிகெடுத்து விட்டாளே நிட்டூரஞ் செய்தாளே*

*நிட்டூரி வல்லரக்கி நேர்கேடி மாதோசி*
*கொட்டூரஞ் சுட்டுநின்னைக் கொண்டுதண்ணீர் குடித்தாளே*
*குடிகெடுக்கத் துணிந்தாளே கொடுமைமெத்த செய்தாளே*
*வடிவுடைய யென்மகனே மந்திரசித்தே யிந்திரசித்தே*

*சித்தமெய்க்க யிந்திரனைத் தேவர்களை ஏவல்கொண்டாய்*
*இத்தலத்துக் கதிகாயா இலக்கணனே யக்ஷயனே*
*அக்ஷயனே நீங்களெல்லாம் அவனிதனை யாளாமல்*
*கக்கிசமாய் மாண்டதெங்கள் [79]கர்மவிதி யென்றழுதாள்*

*விதிப்பயனோ ரெகுராமன் மெல்லியரைச் சிறையில்வைத்து*
*பதிப்படைதேர் பரிகரியும் பட்டணமுந் தோற்றீரே*
*பட்டணமுந் தோற்றீரே பத்துமுடி யிழந்தீரே*
*கட்டழகா மன்னவரே கண்ணில்மண லுறுத்தாதோ*

224.69. உவந்து - மகிழ்ந்து. 224.70. பொன்னுலகோர் - தேவருலகத்தார். 224.71. பிரிவார் களோ - பிரிந்து (மடிந்து) போவார்களோ. 224.72. சூழ்ந்திருந்து - சுற்றியிருந்து. 224.73. கூளி-பேய். 224.74. மாற்றான் - எதிரி; இராமனைக் குறித்தது. 224.76. மின்னாரை - மின்னல் போலும் ஒளியுடையாளை. 224.77. பாதகத்தி - துரோகி. 224.80. நெறிகெடுத்து விட்டாளே-முறையை அழித்து விட்டாளே. நிட்டூரம் - கொடுமை. 224.81. மாதோசி - மாபாவி. 224.82. கொட்டூரம் - கொடுமை செயலால். சுட்டுநின்னை - உன்னை இறக்க வைத்து. தண்ணீர் குடித்தாளே - இங்கு 'நிம்மதி அடைந்தாளே' என்ற பொருளைக் குறித்தது. 224.85. சித்த மெய்க்க - அறிவு துலங்க. 224.86. அதிகாயன், இலக்கணன், அக்ஷயன் - இராவணன் மைந்தர்கள் பெயர்கள். 224.87. அவனி - உலகம். 224.88. கக்கிசமாய் - வருத்தமாய். 224.89. மெல்லியர் - மென்மை இயல்புடையவர்; சீதை.

79. கற்மவிதி

With you I lived, and happily bore you sons many.
Is all the life I lived with the Tēvas at my command,
After all a false life?
If it were true, will my Lord have left me thus?
And now he lies dead, a prey to dogs and jackals,
And for Kāḷi and her goblins to consume his flesh.
O king! you have fallen to the arrows of our foe;
My king! did I not tell you not to go to fight?
I told you to give up Sita, bright as lightning;
Careless of all my advice, you are dead now
Because of the evil sinner Cūrppanakai
With whom you were born.
I have now lost my *Tāli*;
I have lost my everything,
Because of the cruel sinner Cūrppanakai.
She has spoiled everything, this cruel
Heartless demoness; a wrecker of our family,
Is this evil sinner; she has succeeded
In killing you and now she is happy.
It is she who has ruined our family thus deliberately.
O my handsome son Intirajit! you made the king of the Gods
Intira your slave! O Atikāyaṉ, Lakkaṇaṉ, Aṭcayaṉ,
That all of you should together die
Instead of ruling this earth, is only due to my Karma,
It is fate that Rama's spouse was imprisoned by my Lord
Thereby losing the city, the armies
Horses and elephants and kingdom and Laṅka;
You have lost your city and your ten heads;
O my beautiful husband! my king!
Won't the sand of the earth irritate your eyes?

உறுதியுள்ள பஞ்சணைமே லுறங்குகின்ற திருமேனி
அறுதியுள்ள பொட்டலிலே அமர்ந்துறங்கத் தகுதியிதோ
தகுதியுள்ள சங்கரனார் தந்தவரம் பொய்த்ததுவோ
அகலமுள்ள மிதுலையிலே யரசன்மக ளிவள்சீதை

சீதையொரு பெண்பிறக்கத் தென்னிலங்கை மன்னர்படத்
தோதகத்தி பாதகத்தி சூர்ப்பநகை முடித்தாளே
முடிவேந்தா வென்றழுதாள் மூத்தமைந்தா வென்றழுதாள்
குடியரக்கர் பெருஞ்சேனை கொன்றதுகோ வீந்தனல்லோ

### விபீஷணரைச் சினத்து வண்டோதரி கூறுதல்

கோவிந்தனே கொல்லுமென்று கொழுந்தன் விபீஷணன்கெடுத்தான்
பாவியிந்த நாடாள பக்ஷமுற்றாய் நெடுமாலை
நெடுமாலை யேவினது நிட்டூரக் கொழுந்தனென
சடுதியில் விபீஷணரும் தன்மதனி கிட்டவந்தான்.

### விபீஷணன் மறுப்புரை

விருத்தம்

225. கிட்டவந் தண்ணன் பாரி கிளற்றுவாய் மொழியைக் கேட்டுத்
தட்டழிந் துளந்தள் ளாடத் தயவுள்ள மதனி யாரே
பட்டணத் தரசை நாமும் பகர்ந்துநான் கொன்றால் சிந்தை
கட்டழிப் பவளைச் சேரும் கசடனும் நானே யென்றான்.

நடை

226. நானே தமையனைக் கொல்வித்த தென்றே
நல்மத னிநடுக் கேடு சொன்னீரே
தேனென்ற சீதையைச் சிறைவைத்த தாலே
செப்பி னேன்[illegible] புத்தி அப்பொழுது

224.94. அறுதியுள்ள - நாசமான. 224.96. மிதுலை - மிதிலை; ஜனகன் நாட்டு தலைநகர். 224.98. தோதகத்தி - வஞ்சகி. பாதகத்தி - துரோகி. 224.100. கோவிந்தன் - திருமாலாம் இராமன். அல்லோ - அல்லவா. 224.102. பக்ஷமுற்றாய் - விருப்பம் கொண்டாய். 224.103. நிட்டூர - கொடிய. 224.104. சடுதியில் - விரைவில். கிட்ட - அருகில். 225.1. அண்ணன் பாரி - இராவணன் மனைவி; வண்டோதரி. கிளற்று வாய்மொழி - கூறும் வாய்மொழி. 225.2. உளம் - உள்ளம். தயவு - இரக்கம். 225.3. பகர்ந்து - இராமனிடம் கூறி. சிந்தை கட்டழிப்பவளை - அறிவைக் குலைக்கின்ற கட்டழகியாகிய வேசியை. 225.4. சேரும் - பொருந்தும். கசடன் - கீழ்மகன். 226.1. நடுக்கேடு - பொல்லாத பழி.

Oh, your body used to slumber only upon mattresses fine,
Now is lying upon rotten wasteland.
Has the boon of great Saṅkara become false?
The treacherous sinner, the traitor Cūrppanakai,
Has ended our prosperity;
Sita was born as the daughter
Of the king of the great Mitila city, only to destroy
Laṅka's monarch! It is all the work
Of the wretched demoness Cūrppanakai! This you did not know
O crowned king!" she cried; "O my first born Intirajit!
The mighty armies of our demon race
Have been killed only by Lord Kōvinta"

### MAṆṬŌTARI'S ANGER TOWARDS VIPĪṢAṆA

"It is my brother-in-law Vipīṣaṇa who has caused
Lord Kōvinta to kill all my family with intent
To rule this opulent Laṅka! my cruel brother-in-law
Has used Lord Tirumāl," Thus she chastised Vipīṣaṇa.

225. Going near his brother's wife
And hearing her grief-stricken charge.
Vipīṣaṇa said to her:" My kind sister-in-law!
If I had tried to secure the kingship
Of Laṅka in collusion with Rama,
May I be guilty of the sin of a base-born
Who mates with a prostitute,
Tempting men with her beauty!

226. My good sister! Blame you have laid on me,
That I caused my brother's death:
Even on the day he imprisoned Sita,
I advised my brother in earnest words.

மானேந்துஞ் செங்கரனும் சங்கரனு மறிவார்
　மாயனும் வேதனும் மாதவரு மறிவார்
கோனேரி யப்பன் ஸ்ரீராமச் சந்திரன்
　குரங்குத் தளஞ்சேனை கொண்டுவந் தாரே

கொண்டு வாறாரென்று வெகுகோடி புத்தி
　கூறினேன் சீதையைச் சிறைவிடச் சொன்னேன்
திண்டுக்கு முண்டாகவே வார்த்தை சொல்லிச்
　சீதையைச் சிறைவிட சித்தம் வரவிலையே
பண்டுபோல நகரை யாளட்டு மென்ன
　பச்சைமால் பாதம் பரிந்தெடுத் தேனே
வண்டுலவு குழல்மாதைச் சிறைவிட்டு விட்டால்
　வாளனுமன் பட்டணந் தீயி டாளே

ஆண்ட ரதிகோன் ராமனைக் கண்டால்
　அக்ஷயன் லக்கணன் அற்று மடியானே
மானாதி சீதையைத் தானே சிறைவிட்டால்
　மைந்தனா ரதிகாயன் மாண்டு போகானே
தாணந்த வானவரைத் திறைகொண்ட வீரன்
　தந்திரவா னிந்திர சித்து மடியானே
கானக மகாமேரு போல்கும்ப கர்னன்
　கனகோடி சேனை மந்திரியும் மாளாதே

226.3. மானேந்தும் செங்கரன் - மானைக் கையிலேந்திய சிவந்த கரத்தன்; சிவன். சங்கரன - சிவன். மாயன் - திருமால். வேதன் - பிரம்மன். மாதவர் - பெரும் தவத்தியர். 226.4. கோனேரியப்பன் - எப்பொருளுக்கும் இறைவன்; இராமன். 226.6. சித்தம் - அறிவு. 226.7. பண்டுபோல் - முன்பு போல. ஆளட்டும் - ஆட்சி செய்யட்டும். பரிந்தெடுத்தேனே- கெஞ்சி கேட்டுக் கொண்டேனே. 226.8. வண்டுலவு - தேன் உள்ள மலரில் வண்டு உலவுகின்ற. குழல்மாது - கூந்தலாள்; சீதை. 226.9. ஆண்டர் அதிகோன் - ஆண்டவராகவும் அரசராகவும் திகழும். அக்ஷயன், லக்கணன் - இராவண புத்திரர்கள். 226.11. வானவர் - தேவர். திறை கொண்ட வீரன் - வெற்றி கொண்ட வீரன்; இந்திரசித்து. 226.12. கானக மகாமேரு - காட்டினிடையே உள்ள மகாமேரு மலை. கனகோடி - பலகோடி

This, Lord Saṅkara himself,
Holding a leaping stag in his ruddy hand, knows;
As also Lord Tirumāl, Brahma and
All the holy sages! Sri Rāmachandra
Lord of all creations, brought with him
An army vast of monkeys; this fact
I brought to Rāvaṇa's notice,
With words of advice numberless, begging him
To free Sita; but replying with intemperate
And haughty words he refused
To release her; I implored him
In order that he may continue to rule Laṅka
As before, to seek refuge
At the feet of the emerald-hued Lord!
Oh, If he had freed from prison,
Sita (of tresses decked with flowers bee-haunted)
Valorous Aṉumaṉ would not have set fire to Laṅka!
If he had only made peace with the Lord,
Aṭcayaṉ and Lakkaṇaṉ would not have died!
If only doe-like Sita had been released,
Prince Atikāyaṉ would not have died!
And Intirajit polyvaliant, that conquered
The celestials, would not have lost his life!
Nor also Kumpakarṇaṉ massive like Makāmēru,
Nor too the myriads of warriors and counsellors;

*மாளாரே தமையனார் மங்கையே மதனி*
*வங்கிசத்தா ரையுந்தமை யனையுங் கொன்று*
*பேழைவய றாயரசு மேலாசை வைத்துப்*
*பிணந்தின்னி பூனை போலிருந்தீ ரென்றீரே*
*மீளுமி லங்காபுரியில் நீரிருந் தாளும்*
*மேகவர்னர் கூடி மையாகப் போறேன்*
*வாழ்வொருதர் பங்கல்ல மங்கையே மதனி*
*மாபாவி சூர்ப்பநகை என்றங்கை சொல்லால்*

*சொல்ப்பெரிய சானகியை யேன்சிறையில் வைத்தார்*
*சூழ்ந்தது விழ்ந்தது சூதுகண் டீரே*
*இப்படி விபீஷண னெடுத்துரை கள்செப்ப*
*ஏந்திழை வண்டோதரி யிசைந்தவள் நடந்தாள்*

வண்டோதரி இராமனை வேண்டுதல்

*மற்புயத் துளபமணி மாயவன் முன்பே*
*மதனியும் விபீஷணரும் வந்து கண்டாரே*
*பத்மநாபக் குரிசிலே சரண மென்று*
*பரமனார் மைத்துனனே பச்சை முகில்வர்னா*
*பச்சை மாலேஉன் னடைக்கல மையா*
*பாவி யெனக்கோர் வரந்தர வேணும்*
*அச்சுதா வென்னுடைய கணவனொடு மாள*
*அக்கினி தாருமென் றபயமிட் டாளே*

225.13. வங்கிசத்தார் - வம்சத்தார். **226.14.** பேழை வயறாய் - பெரிய வயற்றுடன். 226.15. நீர் - 'நீர்' என்றது விபீஷணன் மதனி வண்டோதரியைக் குறித்தது. கூடிமையாகப போறேன் - 'இராமனோடு சேர்ந்து போறேன்' என்ற பொருளில். 226.16. வாழ்வு ஒருதர் பங்கல்ல - ஒருவர் வாழ்வின் மேன்மையும் தாழ்ச்சியும் ஒருவரால் நிகழ்வதல்ல. 226.17. சூழ்ந்தது வீழ்ந்தது - சூர்ப்பநகையின் சூழ்ச்சியால் பகை சூழ்ந்தது; இலங்கை வீழ்ந்தது. சூது - சூழ்ச்சி. 226.19. மற்புறத் துளபமணி மாயவன் - மல்யுத்தம் செய்யும் வலிமையான தோள்களையும் துளசி மாலையை அணிந்தவனுமான இராமன். 226.20 குரிசிலே - அரசரே. பரமனார் - சிவன. **226.22.** அச்சுதா - திருமாலே! இராமனே என்றவாறு. அபயம் - கூக்குரல்.

Dear sister-in-law mine! how could you
Charge me, that greedy like a wretched cat
Battening on corpses, I was
Enamoured of kingship
Hungering with a pot-belly, after base pelf?
You stay in Lanka and rule happily
For I am going away with Rama!
Life and death are not of other's making!
My sister Cūrppanakai it was,
Who with her evil words caused Sita's durance;
And her wile and treachery caused,
Lanka's fall" Thus as Vipiṣaṇa
Earnestly spoke, bejewelled Maṇṭōtari
Convinced, moved towards Lord Rama.

### MAṆṬŌTARI'S PRAYER TO RAMA

Vipiṣaṇa and his sister-in-law came
Before the Lord adorned with sacred basil,
And prayed to him: "Refuge, Lord Patmanāpa!
Brother-in-law of Paramēsvara!
Lord cloud-hued! Lord Jasper-hued!
I surrender at your feet!
A boon I seek at your hands!
Lord Accuta! give me fire that I may be
Consumed along with my husband."

## இராமன் பதிலுரை

*நிச்சய முரைத்த வண்டோதரிப் பெண்ணே*
*நீகேளு நாமொன்று நிசமதைச் சொல்வோம்*
*உச்சித வயோத்தியில் தசரதர் வயற்றில்*
*உண்மை யுடனேநாலு மைந்தர்கள் பிறந்து*
*பிறந்து வனமிதிலையில் சீதையை மணந்தோம்*
*பெற்ற தாயுரைகொண்டு வனமது புகுந்தோம்*
*சிறந்தங் கிருக்கையில் மாயமான் வரவே*
*சீதை பொன்மானைப் பிடியென்று செப்பப்*

*பிறந்தாவி மான்பிறகே நான்போகத் தம்பி*
*பின்னே சானகியை உன்னுடைய கணவன்*
*மறைந்தோடிக் கொண்டுபோய் சிறைவைத்த தாலே*
*வாளனுமானைத் தூது வரவிட்டுப் பார்த்தோம்*
*பார்த்தல் லாமலங் கதனையும் விட்டோம்*
*பத்தினியைச் சிறைவிடில் பழுதில்லை யென்றோம்*
*தோற்றாத கசடர்க்கு நல்லபுத்தி வருமோ*
*தூதுக்கு வந்தவனை வாலெரி வைப்பானோ*

*மாற்றமா யென்னோடு வந்தெதிர்ப் பானோ*
*மாய்கையாய்ச் சீதையை வதைத்தே னென்பானோ*
*சாற்றின [80]விபீஷணனைப் பின்னிடு வானோ*
*தன்னாலே தான்கெட்டால் நாமென்ன செய்வோம்*
*என்னசெய்வோம் பெண்ணே நீரிருஞ் சுகமே*
*இலங்கையில் மலங்கா மலென்றுரைத் தாரே*

226.22. நிச்சயம் - உறுதி. நிசம் - உண்மை. 226.25. பெற்ற தாயுரை கொண்டு - பெற்றவளாம் கைகேயியின் உரையை ஏற்று. 226.27. பிறந்தாவி - மானின் பின்னால் தாவி. 226.29. அங்கதன் - இராவணனிடம் தூது சென்றவன்; வாலி மைந்தன். 226.30. தோற்றாத கசடர் - வருவதை அறியமாட்டாத மூடர். எரி - தீ. 226.31. மாய்கை - மாயம். வதைத்தேன் - கொன்றேன். 226.32. சாற்றின - நல்ல புத்திகளைக் கூறின. பின்னிடுவானோ - விரட்டிடுவானோ. 226.33. மலங்காமல் - திகைக்காமல்.

80. வீஷணன்

## RAMA'S REPLY

"Truthful Maṇṭōtari! listen now
To what I say: to Tacarata
In lofty Ayōtti, four of us were born!
At Mitilai, I wedded Sita; and then
In obedience to mother Kaikēci's order,
We went into forest exile; wherein,
Sita on seeing a golden stag asked me
To catch it for her as a pet; as I went
Leaping after the deer and then my brother
Too came in search of me, your husband
Carried off Jāṇaki and imprisoned her.
We sent Aṇumaṇ as our envoy to Rāvaṇa
And then also Aṅkataṇ with a message
That if he freed Sita and sent her back
Rāvaṇa would not be troubled.
But to the wicked, ignorant of consequences,
Can good sense ever prevail?
Would anyone set fire to the tail
Of an envoy? would any dare to make
An enemy of me and oppose me in battle?
Or again confound me by slaying before my eyes,
A false image of Sita? Will anyone
Drive away Vipīṣaṇa, the good,
For offering advice sane and wise?
Well, what can we do if he chooses
To ruin himself with his vile acts?
What can we do, O Queen?
Go back to Laṅka and stay there,
Accepting your fate"

### வண்டோதரி தீக்குண்டத்தில் வீழ்ந்து மாய்தல்

வன்னமால் கற்பிக்க மங்கையு முரைப்பாள்
மாயனே தீயன்றி மற்றாசை யில்லை
முன்னமே கயிலையி லிருந்தது மறிவீர்
முடிபத்துள்ளார்க் கென்னை உதவினது மறிவீர்
இன்னாளில் தீக்கருகில் யானெரிந் திடுவேன்
ஏன்வைப் பீரென திட்டமாக வுரைசெய்ய
வைப்பீரென திட்ட மாக வுரைசெய்யும்
மருத்துளப மாயன் திருக்கையி னாலே
குப்பெனப் பற்றெனத் தீயது கொடுக்கக்
கொண்டுவண் டோதரி குரவையிட் டாளே
அப்படிப் பெண்ணவள் குரவை யொலிக்க
அரிரெகு ராமன் உளத்தைக் கொண்டு
செப்பிய விபீஷணன் தீயது வளர்க்கத்
தீயில் வண்டோதரி போய்விழுந் தாளே.

### விபீஷணன் தீக்கடன் கழித்தல்

விருத்தம்

227. விழுந்தவளுந் தீப்பாயச் சகல பேர்க்கும்
விபீஷணரே கடன்கழித்து மீள்வீ ரென்ன
தொழுந்திருமால் கற்பனையைச் சிரமேல் வைத்துச்
சுந்தரஞ்சேர் மக்களுக்கும் துணைவன் மார்க்கும்
குழுந்தபுனல்க் கடன்நெருப்புக் கடனுந் தீர்த்துக்
குலத்தவர்க்கும் நலமாகக் குறைவில் லாமல்
செழுந்திருமா லெழுந்தருளி யிருக்கும் மேடை
சென்றுகண்டு திருவடியைத் தெரிசித் தானே.

226.34. வன்னமால் - அழகிய திருமாலாம் இராமன். கற்பிக்க - கூற. தீயின்றி - தீயில்பாய்ந்து உயிர் விடுவதன்றி. 226.35. முன்னமே கயிலையில் இருந்ததும் அறிவீர் - வண்டோதரியாகிய நான் முன்பு மயன் மகளாய் கைலாயத்தில் இருந்ததை இராமரே நீர் அறிவீர். உதவினது - மனைவியாக்கி உதவினது. 226.36. ஏன் வைப்பீர் - ஏன் உயிரோடு உலகத்தில் வாழ வைப்பீர். 226.38. குரவையிட்டாளே - மங்கல ஓசை எழுப்பினாளே. 226.39. உளத்தைக் கொண்டு - ரெகுராமன் திருவுள்ளக் கருத்தை மனதிற் கொண்டு. 227.1. சகலபேர்க்கும் - இராவணன் முதலாய் எல்லோருக்கும். கடன் - இறப்புக்கடன். 227.2. கற்பனை - கட்டளை. சுந்தரஞ்சேர் - அழகு சேர்கின்ற. 227.3. குழுந்த - குளிர்ந்த. புனல்க்கடன் நெருப்புக்கடன் - இறந்தவர்களுக்கு நீரிலும், நெருப்பு முன்னிலையிலும் செய்யும் கடன்கள். குலத்தவர்க்கும் - அரக்க குலத்தவர்க்கும்.

### MANṬŌTARI FALLING INTO A FIRE-PIT

As thus the Lord advised her
She replied; "O Lord! fire alone
I need now to die in; nought else!
Of yore in Kailash I was born
As Māyaṇ's daughter! you also know,
How I was given in marriage
To the ten-headed one! And now I'm
Resolved to give up my life
By falling into the fire,
Why do you want me to live further?"
As she spoke thus, determined to die,
To the Lord adorned with basil-wreath,
Fire appeared in a stick in his hand
All on a sudden, with which Vipīṣaṇa
Kindled the funeral pyre and Manṭōtari
Leapt into it! while the women around
Wailed in a chorus of ululation.

### VIPĪṢAṆA PERFORMING OBSEQUIES TO THE DEAD

227. Obeying the command of Tirumālrāma
That he perform the funeral ceremonies
To all the dead, Vipīṣaṇa offered libations
To the dead, without omitting
Any ritual with fire and water as ordained!
And purifying himself, he went before the Lord
And prayed at his sacred feet.

### விபீஷணன் பட்டாபிஷேகம்

*நடை*

228. *தெரிசிக்க விபீஷ ணர்தான் தென்னிலங்கை தன்னிலர சாள*
*செய்தி சொல்லி முடிதரிக்கத் தெய்தியும் முகூர்த்தமும் வைத்தாரே*
*வரிசைப் பட்டணங் களெல்லாம் வர்ணவிதப் பந்தற் காவணமும்*
*வாழைபலா கனிகரும்பு பாளை மலர்பூ கமுகும்சேர்த் தாரே*
*சேர்த்த கொன்றை மருக்கொழுந்து செண்பக மோடதலி பிச்சிமுல்லை*
*செங்கழு நீர்செவ் வந்தியும் எங்கெங்குமே கட்டி விதானித்தார்*
*சாத்திரமா யாகஞ் செய்ய தந்திரிமார் கும்பங்கள் பூரிக்கத்*
*தாசன் விபீஷ ணருக்குத் தவிசில் வைத்து அபிஷேகந்தரித்து*
*தரித்தே மகுடமுடி தந்தியின் மேல்பட் டணப்பிர வேசம்*
*தரையி லங்கைக் கரசுகந்து தாழ்வில்லா விபீஷணரும் வாழ்க*

### இராமனைச் சாம்புவன் பலபட புகழ்தல்

*அரிதா மோதர ராமன் அலங்கிருத நகரப் பிரவேசம்*
*அரக்க னுடமா ளிகையில் அருகு மரகதப் பச்சையிலேற*
*ஏறு மரகதப் பச்சைக்கல் லிதற்கிணை யோர்செகத்திலுங் கண்டறியோம்*
*எனநினைக்கச் சாம்புவனும் மனத றிந்து ஒருவசனஞ் சொல்வான்*
*சீரு டையபொ ருப்புக்குவால் சிறகுகண்டேன் வாரிநன்னீர் கண்டேன்*
*சிவன்மறு வில்லாக் கழுத்தும் சிலைமதனன் ரூபமும்*
*நான்கண்டேன்*

228.1.தெய்தி - திதி. முகூர்த்தம் - நல்லநேரம். 228.2. பாளை - கமுகு மரத்துப் பாளை. 228.3. கொன்றை, மருக்கொழுந்து,செண்பகம், அதலி, பிச்சி, முல்லை, செங்கழுநீர், செவ்வந்தி - மலர் வகைகள். விதானித்தார் - அழகு படுத்தினார். 228.4. சாத்திரமாய் யாகஞ் செய்ய - சாத்திர முறைப்படி யாகம் செய்ய. தந்திரிமார் - கோயில் அர்ச்சகத் தலைவர். தவிசு - ஆசனம். அபிஷேகந்தரித்து - அரசு ஆடை அணிகள் அணிந்து அலங்காரம் செய்து. 228.5. தந்தி - யானை. அரசுகந்து - அரசை விபீஷணனுக்கு அளித்து. 228.6. அலங்கிருத - அலங்கரிக்கப்பட்ட. அரக்கனுட - வீபீஷணனுடைய. அருகு - அருகில். மரகதப் பச்சையிலேற - பச்சை நிறத்தாலான மரகத மாளிகையில் ஏற. 228.8. சீருடைய - அழகுடைய. பொருப்புக்கு - மலைக்கு. வால்சிறகு கண்டேன் - மீண்டும் சிறகு முளைக்கும் படி பார்த்தேன். வாரி நன்னீர் கண்டேன் - கடலில் நல்ல நீரை கண்டேன். சிவன் மறுவில்லாக் கழுத்தும் - சிவபெருமானது மறுவற்ற கழுத்தையும். சிலைமதனன் ரூபம் - மன்மதனின் வடிவம்.

## THE CORONATION OF VIPĪṢAṆA

228. It was arranged now for the coronation
Of Vipīṣaṇa as the new ruler of Lanka;
And the date and auspicious time thereof
Were fixed; the city entire
Was decorated suitably; pavilions
And canopies many-coloured, were decked
With plantain, jack, cane and fruits of all kinds!
Spathes of areca-nut trees, cassia flowers,
Fragrant Maru, Champak, Jasmines of all kinds,
Red water-lilies and chrysanthemums,
Odorous and colourful, adorned the halls everywhere!
And after due performance of yagnas appropriate
With holy water vessels sanctified by temple priests,
Vipīṣaṇa devotee of Rama was seated
Upon a royal dais and anointed king of Lanka!
Upon a tusker the king went in procession
Wearing the royal crown as a mark
Of his sovereignty over the realm of Lanka!
May king Vipīṣaṇa flourish ever crescent!

## JĀMPAVĀṆ HAILING [redacted]S GLORY

As Han[redacted]. Lord Tāmōtara entered,
The well-decorated city along with Vipīṣaṇa
He came to the imperial palace wrought of emerald!
He marvelled to himself at its great beauty,
Thinking that he had not seen its like
In the whole earth; and Jāmpavāṉ
Knowing what passed in the Lord's mind
Exclaimed thus rapturously: "I have seen
In my long life mountains having wings[160]

160-164 are used by the poet as time markers referring to distant past :
160. Mountains have wings - As they were refractory and troublesome Intira cut off their wings with his *Vajrāutam* (John Dowson : *Hindu Mythology and Religion*).

*சிலையழகா வேதனஞ்சு சிரசு கண்டேன் கடலமுதம் கடையும்*
*திருத்தங் கண்டே னிந்திரனிரு திருக்கண் கண்டேன்*
*மருத்துளபத்தாமா*
*தலைநாளே மாலே நான்தானி தெல்லாங் கண்டதுண்டே சுவாமி*
*தனக்கெனவே கொடுத்த பொருள்தனைக் கேட்கநான்*
*காணேனென்றார்*

**இராமன் பள்ளி மாடம் வருகை**

*கேட்கமனம் நினைக்க வில்லை கிருபையுள்ள சாம்புவனே யிதுபோல்*
*கிட்டாது தென்னிலங்கைப் பட்டணமே வளமென் றெண்ணி னோமே*
*வாழ்க்கை யிலங்கா புரியைப் பார்த்து மனமகிழ்ந்து ரெகுராமன்*
*வந்து பள்ளி மாடமதில் மாதவ ரெழுந்த ருளினாரே*

**இராமன் அயோத்தி திரும்ப முடிவெடுத்தல்**

*எழுந்தருளி யிருந்து கொண்டு ஈஸ்பர பூசையும் முகித்துதிருமால்*
*இனிநாலு திவச மல்லோ இருக்குது காண்பர தனுக்கோ*
*யவதி*
*விழுந்திடு வானே நெருப்பில் விழாம லெந்தவிதங் காப்போம்*
*மெய்த்த தம்பி லக்குவனே சாம்புவானே வாளனு மானே*
*அனுமானே அங்கதனே அதிதுரிச மாக நாம யோத்தி*
*அடுத்திடவே சீக்கிரத்தி லாயிழை சீதையை யழைத்து வருவீர்*

228.9. வேதனஞ்சு - பிரம்மனின் ஐந்து தலை. திருத்தம் - மேலான செயல். இந்திரன் இருத்திருக்கன் - இந்திரன் சாபவிமோசனம் பெற்று உடம்பின் யோனிக்குறிகள் மாறி இரு திருக்கண் பெறச் செய்த நிலை. மருத்துளபத்தாமா - துளசி மாலையை அணிந்தவனே. 228.10. தலைநாளே - முந்தைய காலத்தில் என்ற பொருளில். தனக்கெனவே கொடுத்த பொருள்தனைக் கேட்க நான் காணேன் என்றார் - தேவர் முதலாய் மேற்படி பிறருக்காய் அனைத்தையுமே கொடுத்த திருமாலே நீர் தனக்கென எதையும் கேட்டதை நான் காணேன் என சாம்புவன் கூறினார் என்றவாறு. 228.11. கிருபை - அருள். 228.12. பள்ளிமாடம் - தூங்கும் பள்ளியறை. 228.13. நாலு திவசம் - நான்கு நாட்கள்; திவசம் நாளைக் குறித்த மலையாளச்சொல். பரதனுக்கோ அவதி - பரதன் உயிர்வாழ்வதற்கு வைத்திருக்கும் கெடு.

To fly with I've seen good potable water
In the salty sea; I've seen
Lord Siva's throat blemishless[161]
I have seen Manmatan in the flesh:[162]
I have seen Brahma with five heads;[163]
I was present when the ocean
Of milk was churned!
I have seen Intira with only his two eyes![164]
O Lord with the basil-wreath adorned!
Many a marvel I have seen in the past
With my very eyes! But Lord!
I have never seen you ask for anything for yourself!"
"It never came to my mind to ask
For anything, O Jāmpavān!
One cannot see a sight beautiful
As this Lanka city" And thus happy at heart,
Rakurāma went into his sleeping quarters,
To rest for the night.

### RAMA DECIDES TO RETURN TO AYŌTTI

Waking up at dawn and completing
His puja to Eswara, Rama said to his companions:

161. Siva's throat blemishless - Jāmpavān refers to the time before the churning of the ocean obviously, when the *Aālakāla* poison appeared which to save the world, Siva swallowed (hence his name '*Nīlakaṇṭan*). 162. Manmath in the flesh - Refers to the time before the God of Love was moving about in flesh and blood! He was burnt to ashes by a glance of Siva for interfering with his Tapas. He was pardoned later and permitted to live, but visible only to his wife Rathi. 163. Brahma with five heads - The four-faced God, had once five heads, but one was burnt off by the fire of Siva's third eye because he had spoken disrespectfully (John Dowson). 164. Intira with only his two eyes - An obvious reference to the time before the God's misbehaviour with Akalikai.

### சீதையை அழைத்து வர அனுமன் ஏகுதல்

தனுவாங்கும் வாளனுமான் தலைக்கு மேலே யிருகையு மெடுத்துச்
சானகி லட்சுமி சரணம் சரணமென்று அசோகவனம் புகுந்து
வனம்புகுந்து மாதாவே மாதர சேசீ தையரே தாயே
வல்ல ரக்கனுயிர் மடிந்தான் மக்களெல்லாம் மாண்டுவிட்டார் தாயே
தினம்பணி விபீஷ ணர்க்குத் தென்னிலங்கை யரசுவைத்தார் தாயே
திரிச்சடையும் நாச்சி யாரும் விருப்ப முடனெழுந் தருள்வீரென்றார்

### சீதையின் உரை

என்றுரைக்க வனுமானே நீராவணன் றானெனைக் கவர்ந்து தேரில்
ஏற்றினதைப் பார்த்த விழி எரிந்து தழலானதுவோ மகனே
நன்றுநன்று யினிவருவேன் நானினைத்த படிமுடித்தார் மகனே
நாரணனார் கற்பனையைக் காரண மென்றடி புகுவேன் மகனே
புகுந்திடலாம் மாதரசே பொற்கொடியே சீதை யாரென் தாயே
புண்ணி யனார்வர விடுத்தார் பூமகளே எழுந்தருளு மென்றார்
மிகுந்த புகழனு மானே வேதனையும் யானிருந்த சிறையும்
வேணியினிற் பறவை பக்ஷிவெல்லி பல்லி முட்டையிட்ட துறையும்
இட்ட முடனென் சுவாமி யிருகமலக் கண்காண வருவேன்
என்தேகம் சுத்தி செய்யே னென்றுரைத்தாள் சுந்தரஞ்சேர் [81]சானகி

### அனுமன் சீதையை நீராடி வர வேண்டுதல்

கட்டழகி நீயிருந்த கடுஞ்சிறைக் கோலந் திருமால் கண்டால்
கவலைப்படுந் துயரப் படும்கண் ணீர்மிகச் சொரியுந் தாயே
தாயே கோரக் கிழங்கு தந்திடுவேன் மஞ்சள்ப் புனலாடிச்
சானகி தாய்யெழுந் தருளத் தகுதியென்றே யனுமனுரைத் தானே

228.16. தனு வாங்கும் - வில்லை ஆளும். 228.18. தினம் பணி விபீஷணர் - இராமரைத் தினமும் பணிகின்ற விபீஷணர். நாச்சியார் - சீதை. 228.19. தழலானதுவோ - சாம்பலானதுவோ. 228.20. நாரணனார் - இராமன். கற்பனை - கட்டளை. அடி - பாதம். 228.22. வேணியினில் - சடையினில். பக்ஷிவெல்லி - பறவையிட்ட எச்சம். 228.23. இட்டமுடன் - இஷ்டமுடன். செய்யேன் - செய்யமாட்டேன். 228.25. கோரக்கிழங்கு - உடம்பு தேய்த்துக் குளிக்க உதவும் ஒரு வகை கிழங்கு.

81. சனகி.

"Only four days remain now before the deadline
We have given to Parata;
Oh, he will surely fall into fire after that:
Oh, how shall we prevent him
From ending his life on the appointed day
O brother Lakshmaṇa, Jāmpavāṉ, Valorous Aṉumaṉ
Aṅkata! we have to get back to Ayōtti immediately!
Go you and fetch Sita hither."

## AṈUMAṈ GOING TO ACŌKAVAṈAM. TO BRING SITA

Aṉumaṉ (adept in archery) entered Acōkavaṉam
Both his hands held over his head
In prayerful adoration, crying, "Refuge!
Refuge! Jāṉaki Lakshmi! Queen among women
Mother Sita! the powerful demon
Is dead with all his hosts!
Our Lord has bestowed the kingship of Laṅka
Upon Vipīṣaṇa, his eternal devotee!
Rise now with Tiricaṭai and deign to accompany me."

## SITA'S REPLY

"O Aṉumaṉ ! Have the eyes that saw
Rāvaṇa the vile demon, seize and place me
In his chariot burnt their fire out?
Good, my son, Good! I will now come
As he has carried out my will;
I will come to his feet, as commanded by him!"
"O queen among women, Sita (slender as a golden vine!)
O my mother! The worthy one has sent
For you! Daughter of the Earth! Deign to rise
And come with me" said Aṉumaṉ
"Reputed Aṉumaṉ! I shall come Just as I am,
Straight from my sorrowful imprisonment,
Even with bird-droppings and lizard's eggs
On my garment, before the lotus-eyes of my Lord!

### சீதை நீராடி வருதல்

நீயேஎன் பழயமகன் திரிச்சடை யென்தோழி யிதுநிசமே
நிருத்தனறி வார்கருத்தைப் பொருத்த் மென்றே திருத்தி மொழிபேசி
பேசி யங்கே காத்திருந்த ஆயிர மரக்கியுஞ் சீறிப்
பேயெனவே சாப மிட்டுப் பேருலகில்ப் போய்ப்பிழையு மென்றார்
நேச முள்ள திரிச்சடையை நீதமுள்ள தோழியென்றே கூட
நீராடிக் கரை யேறி நீலவர்னப் பட்டுடுத்தாள் சீதை

### இராமன் சீதையைக் கண்டு வெறுத்துரைத்தல்

சீதை யருங்குழல் சீவித் திருமால் முன்வரவுங் கண்டராமன்
சிறையிருந்த கோல மெல்லாம் தேன்மொழிக்கே தான்சிறப்பென்
றாரே

### சீதை அனுமனை சபித்தல்

பாதகனே யனுமானே பார்த்தெனை நீராடச் சொன்னா யென்றே
பல்கடித்து வண்டு றுக்ப் பாய்ந்தனு மன்றனக்கு
வசைசொல்வாள்
சொல்லூசி முகமுன் துட்ட னுக்கே தட்டத் தலையாகத்
தோள்வலிய மாருதிக்கே தாளி வயிறாக வென சபித்தாள்
நல்லனு மானுரைக் கேட்டேன் புல்லறிவாய் நீராடிப் போட்டேன்
நாயகனே பொறுத்த ருள்வீர் நேயமுடன் சத்தியஞ் செய்திடுவேன்

பழய - பழைய. 228.26. நிசமே - உண்மையே. நிருத்தன் அறிவார் - சிவபெருமான் அறிவார். 228.27. காத்திருந்த - காவலுக்கிருந்த. பேயெனவே - பேயாய்ப் போகும் படியாகவே சாபமிட்டு. 228.29. தேன்மொழிக்கே தான் சிறப்பென்றாரே - சிறையிலிருந்த சீதை இவ்விதம் சீவி சிங்காரித்துப் பட்டாடையுடையை உடுத்து வருவதுதான் சிறப்பாக உள்ளது என ஏளனக் குறிப்பு தோன்றுபடி இராமர் கூறினாரே. 228.30. வண்டுறுக்கி - இதழையும் பல்லையும் கடித்து அச்சம் வரும்படிச் செய்து. வசை - பழி. 228.31. ஊசிமுகம் - ஊசி போன்ற கடுமையான முகம்; குரங்கு முகம். துட்டன் - அனுமன். தட்டத்தலை - தட்டையான தலை. தாளி வயறு - பெருத்த வயறு. 228.32. புல்லறிவாய் - கீழான அறிவினால். நேயமுடன் - உண்மையுடன். சத்தியம் - ஆணை.

I shall not cleanse my body,
Till I meet him" said Jāṉaki of great beauty.

### AṈUMAṈ REQUESTING SITA TO TAKE HER BATH

"Lovely princess! If the Lord were to see you
As you were in the cruel prison,
He would grieve much and suffer,
Shedding tears copiously; O mother!
I shall give you fragrant *kōrai*[165] tubers
And turmeric to cleanse yourself,
Mother Jāṉaki, that you may appear
Properly before my Lord Rama!

### SITA TAKES HER BATH BEFORE MEETING RAMA

"Aṉumaṉ, you are my son of old, and Tiricaṭai,
My dear friend! The Great Dancer
Siva alone knows the truth!"
Cursing the thousand demonesses surrounding her
To become ghouls and wander in the great world,
With her fair companion, friendly Tiri-caṭai,
She bathed and dressed herself
In silken garments blue!

### RAMA SPEAKING HARSH WORDS TO SITA

When Rama saw Sita dressed thus,
With her tresses washed and well-combed
And adorned, he spoke thus harshly to her:
"Oh it becomes you well Sita, (of honeyed speech,)
That you have been so beautifully dressed
During your imprisonment in Laṅka!"

### SITA CHASTISING AṈUMAṈ

As Rama spoke these cruel words ironically,
Sita turned to Aṉumaṉ,

165. Kōrai - Fragrant Tuber (Cyperus Rotundus).

### இராமன் சீதையை அக்கினியில் மூழ்க வேண்டுதல்

சத்திய மின்சா னகியே தாரணிவாய் மூடிடப் போகாதே
சண்டாளன் சிறையில் வைத்தான் கொண்டுவந் தானிவனெனச்
சொல்வாரே
முத்தி தருங்கெங் கையிலே மூழ்கிவந்தால் போலக்கினி மூழ்கி
முடுகி வந்தால் வடுவுரையார் தொழுவது சந்தேகமிலை யென்றார்

### சீதை அக்கினியில் மூழ்கி எழுதல்

சந்தேகந் தீர்க்க வென்றே தம்பி யிளையோனு மனுமானும்
தழல்வளர்க்குந் தீக்குழியில் குழலணங்கு மருகு சென்றே பகரும்35
சந்தனஞ் சண்பக மரமே சகலநெய்யும் வார்த்தெரியுந் தழலே
தாயெனக்குப் பூமகள் என்றனை வளர்த்தான் தினகரனே யானால்
தினகர னார்மகள் குழவி சீதை மகாலட்சுமி நானானால்
திருமால் தானென நினைப்பேன் மற்றோர் நஞ்சென நினைப்பேனானால்
அனவரத காலமு மென்கற்பு நிலைநிற்பது மெய்யானால்
அக்கினியே குளிரு மென்று ஆயிழையாள் தீயதிலே வீழ்ந்தாள்
விழுந்தவளைத் தெர்ழுந்தெய் வம்போல் குளுந்தக்கனி செழுந்தீ
வைக்கரையில்
விட்டிட யிட்டிடு நகையும் பட்டுடையுமாக வந்தாள் சீதை
செழுந்திரு மாலெழுந்தருளி யிருந்த திசைநோக்கி யந்த சீதை
செயம்பெறவே பதம்பரவி வியன்கொலுவு மாட மதிப்பு குந்தாள்.40

228.33. சத்தியமின் சானகியே - உண்மையில் சிறந்த சானகியே. தாரணி - உலகத்தார். மூடிட - அடைத்திட. போகாதே - உன் சத்திய வார்த்தைப் போதாதே. சண்டாளன் - இராவணன். இவன் - இராமன். 228.34. கெங்கை - கங்கை; அயோத்தியில் ஓடும் ஒரு புண்ணிய நதி. முடுகி - விரைந்து. வடுவுரையார் - குற்றம் உரைக்க மாட்டார். தொழுவது சந்தேகமிலை - சீதையே! உன்னைத் தொழுவர்! இதில் சந்தேகமில்லை. 228.35. தழல் - நெருப்பு. குழலணங்கு - நீண்ட கூந்தலுடைய பெண்ணாம் சீதை. பகரும் - கூறுவாள். 228.36. தாயெனக்குப் பூமகள் - எனக்குத் தாயானவள் பூமாதேவி. தினகரன் - ஜனகன். 228.37. நஞ்சென - விஷத்தைப் போல. 228.38. அனவரத காலமும் - எக்காலமும். நிலை நிற்பது - நிலைத்து நிற்பது. குளிருமென்று - குளிர்ந்த குணமாய் இரு என்று. 228.39. குளுந்தக்கனி - குளிர்ந்த அக்கினி. வைக்கரையில் விட்டிட - சீதையைத் தான் விழுந்த அக்கினி குண்டத்தின் கரையில் விட்டிட. 228.40. செயம் பெறவே - வெற்றி பெறவே. பதம் பரவி - இராமனின் பாதங்களைப் புகழ்ந்து தொழுது. கொலுவு மாடமதில் - அலங்கார மண்டபமதில்.

Gnashing her teeth and frowning at him
And abused him thus; "O you wicked Aṉumaṉ!
Was it not you who bade me bathe,
Before coming to my Lord's presence?
May your face become sharp as a needle,
Your head flat! May you become pot-bellied."
Thus she cursed Māruti of mighty arms!
And turning to Rama she said:
"Heeding the words of Aṉumaṉ,
I cleansed myself, ere I came to you:
It was foolish of me, to have done that;
Pardon me, O Lord! I swear in truth"

## RAMA REQUESTING SITA TO GET INTO A FIRE-PIT

"O Jāṉaki true! People of the earth
Will gossip and we cannot close
Their lips; they may speak slander
That the base demon kept you in prison
And her husband brought her out!
Even like plunging into holy Ganges,
If you were to enter the blazing fire
And come out swiftly unscathed,
No one will find fault with you
Thereafter! O Sita! You will be adored
And worshipped by all then."

## SITA ENTERING THE FIRE AND COMING OUT

To satisfy the public and clear their suspicion
Young Lakshmaṇa and Aṉumaṉ kindled a fire;
And going near the fire-pit,
Sita of lovely long tresses
Spoke thus: "O blazing fire, burning
With sandalwood and champak, fed by ghee!
If it were true that my mother
Is the Goddess of the earth;
That I was truly reared by Jaṉakaṉ;

### சீதையின் துயரமொழி

விருத்தம்

229. புகுந்துமணி மாடமதி லிருந்து சீதை
பூமியைப்பார்த் தொருவசனம் புகலும் தாயே
தகும்படியுன் னிடமாகப் பிறந்த யோத்தி
தார்வேந்தர் ராகவர்க்கே தார மாகி
மிகுந்ததுயர் சிறையிருந்து தழலில் மூழ்கி
வெளிப்படமுன் பழித்திடவும் விதித்தான் வேதன்
பகுந்தவிதிப் பயனிதுவோ யென்னைப் போலே
பாரிலெவர் பெண்பிறந்து பட்டா ரம்மா.

### தசரதன் வானுலகிலிருந்து புஷ்பக விமானத்தில் வருதல்

230. அம்மன்மனத் துயரமெல்லாம் மாற்ற வென்றே
அமரர்தச ரதனைப்புட்ப விமான மேற்றிச்
செம்மைரெகு ராமன்முன்னே வந்து சேர
செற்றபிதா வுற்றததி சயத்தா னென்றே
தம்முயிராம் பிதாபதத்தில் புட்பஞ் சாற்றித்
தம்பியொடு ராமனும் சானகியும் போற்ற
எம்முயிர்க்கண் மணிராமா ராமா வென்றே
ஈற்றிளங்கோ வெனமருவி வாழ்த்தி னானே.

### தசரதன் வாழ்த்துரை

பள்ளு

231. வாழ்ந்தி ருப்பாயே - ராமாஜெயம்
வாழ்ந்தி ருப்பாயே
வாழ்ந்தி ருப்பாயே நீவையகம் போற்றவும்
வானவர் கள்துயர் தீர்ந்து னைஏத்தவும்
சூழ்ந்து துணைவன்மா ருன்னடி பேணவும்
சொரிகுழல் சீதைக்கு மணவாள னாகவும் (வாழ்)

229.1. மணிமாடம் - மாணிக்கங்கள் பதிக்கப் பெற்ற மாடம். புகலும் - கூறுவார். 229.2. தகும்படி - தகுதியானபடி. தாரமாகி - மனைவியாகி. துயர்சிறை - அசோகவனத்து சிறை. 229.3. வேதன் - பிரம்மன். 230.1. அம்மன் - சீதை. 230.3. பிதாபதத்தில் - தந்தை தசரதன் காலில். புட்பம் - மலர். சாற்றி - பெய்து. தம்பி - இலட்சுமணன். 230.4. ஈற்றிளங்கோ - வருந்தி பெற்றெடுத்த அரசன்; இராமன். மருவி - தழுவி. 231.2. வையகம் - உலகம். வானவர் - தேவர். துயர் - துயரம். உனை ஏத்தவும் - இராமா உன்னைப் புகழவும். 231.3. துணைவன்மார் - தம்பி மற்றும் துணைவர்கள்.

If it were true that I, Sita Mahalakshmi,
Am the daughter of Jaṉakaṉ;
If it were true, that I think
Of Rama alone as my Lord and husband;
And any other as dreaded poison;
If it were true, that my chastity
Is unshaken and well-established,
Eternal, and for all time; O Akkiṉi!
Be cool to me!" cried she
And saying thus, Sita (of choice jewels)
Plunged into the pit of fire!
And Lo! the God of Fire
Came out with Sita in his arms,
Worshipping her like a deity,
And placed her beyond the fire-pit.
Now Sita walked slowly towards Rama,
Dressed in silken garments,
Beautifully bedecked with jewels,
And bowed at his feet, praising his glory.

### SITA'S SORROWFUL WORDS

229. Entering the wonderful mansion
Of Vipīṣaṇa where Rama stayed,
Sita looking down on earth,
Said these words: "O mother mine!
Taking birth from you, I became
The spouse of Rākava, Prince of Ayōtti:
The creator has ordained that
I should suffer thus in durance vile
And then plunge into fire and come out
Unscathed to prove myself!
It's my fate; on earth no other woman
Had suffered as I have done! O mother!"

கைகேசியால் வந்து வனவாசம் புக்கவும்
கடவுள ரெக்யாதி [82]கர்மம் பெருக்கவும்
தெய்வேந் திரன்முதல் தேவர் பிழைக்கவும்
தேசமெங் கெங்கும் நீடூழி தழைக்கவும் (வாழ்)
கோதையாஞ் சீதையைத் திருடிச் சூதுசெய்து
குடிகெட்டுப் போகவே படிவிட்டுச் சாகவே
சீதையைச் சிறைவைத்தப் பாதகத் தோசியைச்
சிரம்பத் தறுக்கவும் வரம்பெற்றாய் மகனே (வாழ்)
அலைகடல் சுவறினும் மதிகதிர் பெயரினும்
அம்மா ளென்மரு மகள்பொன் மகளுன்மனை
மலைமகா மேருவில் மறுவந்தாலுஞ் சீதை
மனதில் மறுவராது தாய்மணி மாடத்தில் (வாழ்)

என்றுராமனை வாழ்த்தி லட்சுமணனை வாழ்த்தி
எந்தாய்சீதையை வாழ்த்தி வந்தபுட்பகத் தேரில்
சென்றிந்திர லோகத்தில் தேவர்புடை சூழ்ந்த
சேத்திரப் பதவிசேரும் தசரதன் மகன்ராமா. (வாழ்)

**ஒய்வு மாளிகைக்குத் திரிசடை வருதல்**

விருத்தம்

232. மாடமதிலே புகுந்து சீதை தானும்
மனமகிழ்ந்து யினிதிருக்க வரிசை யாகக்
கூடவந்த திரிசடையுந் திருமால் பாதம்
கும்பிட்டாள் மலர்சொரிந்து குணமாய் நின்றாள்
வாடாமல் ஜானகிக்குத் துணைசெய் தாயே
மறுபிறவிக் கென்பிறப்பாய் வருவா யென்ன
தேடரிய திரிசடைக்கும் தேவி மார்க்கும்
செம்பொன்நகை வெகுகோடி சிறப்பித் தாரே.

231.4. எக்யாதி கர்மம் - யாகச் செயல்கள். 231.6. திருடி - சீதையைத் திருடி. சூது - சூழ்ச்சி. குடிகெட்டு - இலங்கை குடி கெட்டு. படி விட்டு - பூமியை விட்டு. 231.7. பாதகத் தோசி - பாதகச் செயல்புரியும் பாவி; இராவணன். சிரம் - தலை. 231.8. சுவறினும் - வற்றினும். மதி - சந்திரன். கதிர் - சூரியன். பெயரினும் - இடம் பெயர்ந்தாலும். அம்மாள் - தாய் போன்றவள். உன் மனை - உன்னுடைய மனைவி. 231.9. மறு - மாசு. 231.11. இந்திரலோகம் - தேவர் உலகம். சேத்திரப் பதவி - உடம்போடு சொர்க்கம் புகும் பதவி. 232.2. திரிசடை - விபீஷணன் மகள்; சீதையின் தோழியாக அசோக வனத்தில் இருந்தவள். 232.4. தேவிமார் - திரிசடையுடன் வந்த பெண்கள்.

82. கற்மம்.

### TACARATA APPEARING FROM ON HIGH IN THE PUSHPAK[166] AERIAL CAR

Just to relieve for good the grief
And the agony of the Goddess Sita
Celestial Tacarata came before Rakurāma
The perfect one, to his great wonderment!
Adoring with flowers his father's feet
With Lakshmaṇa and Jāṇaki by his side
Rama was overjoyed on seeing his father!
And the Emperor hailed Rama
As his darling son whom he had obtained
After much travail and penance.
Embracing him, he blessed him thus:

### TACARATA'S BENISON

231. "May you live long! Rama
Victorious Ever! may you live long!
May you live long that the earth entire
May hail you, and the celestials
Praise you for relieving their distress,
And your companions adore your feet,
As the loving consort of Sita of lovely tresses!
May you live long! Rama
Victorious Ever! May you live long!
After your exile in the forest
Because of Kaikēci, you did foster
And protect the Yagnas
Of the Holy seers! May you live long,
That Intira and the Gods may
Live in peace and the people
Of the land may prosper forever!
'May you live long! Rama
Victorious Ever! May you live long!
O son! you had the boon, to sever

166. Pushpak Aerial car - The Aerial Car which originally belonged to Kupēra.

## அயோத்தி புறப்பாட்டுக்கு இராமன் தயாராதல்

நடை

233. தாரணியில் ராமனாய் வந்து பிறந்தேயவர்
சத்துரு ராவணனைச் சங்காரஞ் செய்தோம்
ஆரணஞ் சேர்தேவ தெய்வேந்திரன் மெய்த்தார்
ஆடியந்தம் பாவி வேட்டை முடித்தோம்
பாரரச யோத்தியில் செல்லாமல் நின்றால்
பரதன் தவித்துமே தீயில் விழுவான்
நாரணனைக் காணத் தாய்மாருந் தேடும்
நல்லனுமான் சாம்பு சுக்கி ரீபனே

சுக்ரீ பனங்கதன் சொல்விபீ ஷணரே
துரிசத்திலே பயணம் பிரசமென் றாரே
கைக்கொண் டிளையவர் களிகூர்ந் திடவே
கானத் தெழுபது வெள்ளமுஞ் சூழப்
பக்கமே விபீஷணர் மந்திரி யாரும்
படைத்தலை வரிரு பத்து நால்வரும்
இக்கன தனத்துட னரிரெகு ராமன்
இலங்கை விட்டு வடக்கே யெழுந்தருள

## அனைவரும் அயோத்திக்குப் புஷ்பக விமானத்தில் எழுந்தருளல்

அருள்கொண்ட சீதை யுடன்திரு சடையுமே
ஆயாதி நாரணன் தம்பியு மொக்கப்
பொருள்கொண்டு ராவணன் குபேரனை வென்ற
புட்பகத் தேரை விபீஷணர் விட்டார்
வருமந்த புட்பகத் தெல்லோரு மேறி
மாதவன் சீதையுடன் வடக்கே முகமாய்

233.1. சத்துரு - பகைவன். சங்காரம் - அழித்தல். 233.2. ஆரணம் சேர் - வேதம் சேர்ந்த. மெய்த்தார் - பொருந்தினார். ஆடி - வேட்டையாடி. அந்தம் - முடிவாய். பாவி - இராவணனைக் குறித்தது. 233.3. தவித்துமே - மனம் தளர்ந்துமே, 233.4. சாம்பு - சாம்பவன். 233.5. துரிசம் - வேகம். பிரசம் - விருப்பம். 233.6. கைக்கொண்டு - இராமன் விருப்பத்தைக் கைக்கொண்டு. களிகூர்ந்திடவே - மிகவும் மகிழ்ந்திடவே. கானத்து - காட்டிலே. 233.8. கன தனத்துடன் - மிகுதியான செல்வத்துடன். 233.9. திருசடை - திரிசடை. ஆயாதி நாரணன் தம்பியும் - இலட்சுமணனும். ஒக்க - மிகுதியான. 233.10. ராவணன் குபேரனை வென்ற புட்பகத்தேர் - சகோதர உரிமையால் இராவணனுக்குக் குபேரன் அறிவுரை கூற அதை கேட்காத இராவணன் அவனது புஷ்பக விமானத்தைக் கைப்பற்றிக் கொணர்ந்த நிகழ்வைக் கூறுவது. விட்டார் - பறக்கவிட்டார்.

The heads ten of the demon-sinner,
Who by guile abducted Sita and imprisoned her,
Thereby ruining his race entire,
And himself lost his life!
May you live long! Rama
Victorious Ever! May you live long!
Rama! even if the billowy sea
Were to dry up, and the Sun and the Moon
Move from their places, the Goddess.
My daughter-in-law, golden Sita,
Your chaste wife, will never have any blemish.,
Though Makāmēru may suffer diminution!
May you live long! Rama
Victorious Ever! May you live long!"
Thus blessing Rama Lakshmaṇa and Mother Sita,
Tacarata returned in the aerial car
To Intira's world, where he abode
In the midst of the other Gods,
Retaining his earthly body!
May his son Rama live long!

### TRICAṬAI COMING TO THE ROYAL GUEST HOUSE

232. As Sita now happily stayed in the royal mansion
Tricaṭai and her companions bowed at the feet of Rama;
Offering flowers Tricaṭai stood, a picture of goodness!
"Unfailingly you stood by Jāṉaki
Protecting her with your presence!
You'll be born in your next birth
As one devoted to me!" said the Lord.
To Tricaṭai and the other women with her,
Countless jewels of virgin gold
Were given by way of appreciation!

### RAMA PREPARING TO LEAVE FOR AYŌTTI

233. "Born on earth as Rama we did
Destroy the Demon Rāvaṇa

திருவணை வழிசென்று கானகங் கண்டார்
தேடி ரிஷிமுனிவர் கூடியும் கண்டார்
கோதண்ட ராமன் திருவணை வழிக்காய்
குரங்குல படையுடன் கோவிந்தன் வந்து

**இராமேஸ்வரம் வந்து முன்னோர்க்குக் கர்மவிதி செய்தல்**

சீதரன் ராமே சுரந்தனை நாடித்
தெர்ப்பா சனத்திலே தெர்ப்பை முடிந்து
தாதை யர்க்கு ராமன் தம்பியுமாகத்
தற்பணமும் கர்ம விதியும் முடித்துச்
சேது வென்ற தலந்திரு வணைமுடிவில்
ஸ்ரீராமன் பாளையம் சேர யிறக்கி
இறங்கி யதிலொரு தாமதஞ் செய்து
ஏத்த தேவர் தவத்தருங் கண்டு
திறங்கொண்ட சேது புண்ணியம் தீர்த்தம்
சீதையும் ராமனும் சேனையும் தம்பி
அறங்கொண்டு தீர்த்த மாடி யுடுத்து
அதிரச் சிவபூசை செய்ய கருத்தாய்

**அனுமனிடம் பூசைசெய்ய இராமன் காசிலிங்கம் வேண்டல்**

நிறங்கொண் டனுமானே நீகாசி சென்று
நித்தன் சிவலிங்க மொன்று கொடுவா
கொண்டல் வர்னன் சொல்லவே காசிநோக்கிக்
கூண்டனுமான் லிங்கங் கொண்டு வருமுன்

233.12. திருவணை - சேது சமுத்திரம். 233.14. சீதரன் - இராமன். ராமேசுரம் - இராமேஸ்வரம்; இராமர் பிரம்மஹத்தி தோஷம் நீங்கச் சிவனுக்குக் கோயில் கட்டி வணங்கிய இடம். தெர்ப்பாசனம் - தருப்பைப் புல்லால் செய்யப்பட்ட ஆசனம். தெர்ப்பை - தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பிதிர்களுக்கும் இறுக்கும் நீர்க்கடன் சடங்கு. 233.15. தாதையர்க்கு - தந்தை மற்றும் முன்னோர்க்கு. தற்பணமும் - இறுதிக்கடனும். கர்மவிதி - முன்னோர்களுக்குச் செய்ய வேண்டிய கர்ம விதிமுறைகள். 233.16. பாளையம்- படை. 233.17. தவத்தரும் - முனிவோரும். 233.18. திறம் கொண்ட - மேன்மை கொண்ட. தம்பி - இலட்சுமணன். 233.19. அறங்கொண்டு - ஆன்றோர் விதிமுறைப்படி. உடுத்து - ஆடைகள் புனைந்து. 233.20. நித்தன் -= நிரந்தரமானவன். கொடுவா -கொண்டு வா.

Enemy to all; Tēvēntira adept
In vedic lore, got relief true, through us!
In the end, the evil sinners
Were hunted down! but if we
Do not return forthwith to Ayōtti
Parata in anguish will fall into fire!"
The queen mothers are yearning to see
Nārāyaṇa Rama! hence O good Aṉumaṉ!
Jāmpavāṉ, Cukkirīva, Aṅkata, Vipīṣaṇa!
Prepare atonce for our journey"
Rejoicing at this command, the young Lord
Along with the seventy *veḷḷam* monkey army
Vipīṣaṇa, ministers, and the commanders twentyfour
With immense riches as tribute,
Turned North leaving Laṅka behind

## THE PARTY GETTING ABOARD THE PUSHPAK CAR

The aerial car that Rāvaṇa had won
From Kupēra, Vipīṣaṇa now offered
To Rama and his companions!
Gracious Sita, Tricaṭai, Primal Nārāyaṇa
His younger brother and all others
Got into the celestial vehicle which now,
Flew North; the Lord showed Sita
The Cētu bridge (whereby they came to Laṅka)
And also the forest wherein
The sages and seers stood in groups.
Alighting at Rāmēsvaram, Rama now offered
Ritual oblations and libations to the names of the dead!
Upon a bed of sacred grass he performed *Tarppaṇam*
To his father and other forebears as ordained!
The army now bivouacked near the end of the bridge,
Where he sojourned for a while.
Gods and Sages saw him perform pūja to Siva
At the holy Cētu, after bathing in ritual fashion.

### அகத்தியர் கூறியபடி சேதுமணலைக் குவித்து இராமன் பூசை செய்தல்

*தெண்டு கமண்டல கத்தியர் வந்து*
*ஸ்ரீராமனைக் கண்டு சிவலிங்க பூசைக்கு*
*மண்டலத்துச் சேது மணலைக் குவித்து*
*வைகுண்ட மாலே பூசை செய்யுமென்ன*
*கண்டு மணலைக் குவித்துப் பூசிக்கக்*
*காசியி லனுமனும் லிங்க மெடுத்து*

### அனுமன் வாலில் கட்டி லிங்கம் எடுத்து வருதல்

*எடுத்து வருகையில் லிங்கமே தென்ன*
*எத்தி வால்சுத்தி லிங்கத்தைப் பிடுங்க* 25
*அடுத்த னுமான்வா லுருவிடத் துள்ள*
*அங்கோ ரனுமகுண் டமுமுண் டாகத்*
*துடுக்குடன் நூறு மலைபி டுங்குவாய்*
*துலங்கு லிங்கம் பிடுங்கப் பெலன்வருமோ*

### லிங்க பிரதிஷ்டை

*வடுக்கொண் டிடாதனு மானைத் திருத்தி*
*வைத்துக் காசி லிங்கத்தையும் பூசித்துப்*
*பூசித்தொன் பாங்கல்லில் நவபு ரோசனம்*
*போர்க்கி ரகதீர்த்த மெனக்கல் பதித்து*

233.22. தெண்டு கமண்டல அகத்தியர் - தண்டாயுதத்தையும் நீர் மொள்ளும் பாத்திரமான கமண்டலத்தையும் கொண்ட அகத்தியர். 233.25. லிங்கம் ஏதென்ன - அனுமனால் பிடுங்கப்பட்ட லிங்கம் நீ பிடிங்கியதன் காரணம் ஏது என்ன? எனச் சொல்ல. எத்தி வால்சுத்தி லிங்கத்தைப் பிடுங்க - மீண்டும் அனுமன் எத்தி வாலால் லிங்கத்தைச் சுற்றிப் பிடுங்க. 233.26. வால் உருவிடத்துள்ள - லிங்கமானது அனுமனின் இறுகக் கட்டப்பட்ட வாலிலிருந்து கீழே விழுந்து துள்ள. அனுமகுண்டம் உண்டாக - லிங்கம் விழுந்த இடத்துப் பள்ளத்தில் 'அனும குண்டம்' என்னும் தீர்த்தம் உண்டாக. 233.27. துடுக்குடன் - வேகத்துடன். பெலன் வருமோ - வலிமை வருமோ. 233.28. அனுமானைத்திருத்தி - அனுமனது மனக் கர்வத்தை மாற்றி. 233.29. ஒன்பாங்கல்லில் நவபுரோசனம் போர்க் கிரக தீர்த்தமெனக் கல் பதித்து - ஒன்பது விதமான கல்லைப் பிரதிஷ்டை செய்து அவற்றின் மேல் புண்ணிய தீர்த்தம் முதலியன தெளித்து அவற்றை மக்கள் வழிபட பதித்து என்றவாறு.

### RAMA BIDDING ANUMAN TO BRING KĀCI LIṄKAM

"O Anuman go you to Kāci[167] and bring
Forthwith, a Liṅka of Eternal Siva!"
As thus the cloud-hued Lord ordered him.
Anuman left for Kāci right away:
But ere he could return, came there
Sage Akattiyar with his wand and holy vessel,
Who told Rama to make a Liṅka
By heaping the sands of Cētu in Liṅka shape
And the Lord began his worship
As suggested by the Sage.

### ANUMAN BRINGING THE LIṄKA TIED IN HIS TAIL

As Anuman flew back with the Liṅka
Securely tied in his prehensile tail,
The Liṅka protesting wriggled out
Of his grasp and fell down
On earth: when Anuman tried to lift it up,
A pit caused by his struggle, now appeared
With a holy spring called Anumakuṇṭam.
"You will pluck out a hundred hills huge
But can you lift the Liṅka of the Lord?"
Thus Anuman pride was humbled
For the nonce! The Liṅka from Kāci
Was consecrated by Rama and pūja
In proper form was offered to it!
Nine kinds of stones were erected
Thereon and holy water sprinkled,
On them (so that generations of devotees
Coming after may offer worship
And get relief for their ills).

167. Kāci - Benares, on the Ganges, most sacred to the Hindus.

### சேதுவின் மகிமை

*நேசித்து நவகல் லிலனும குண்டத்தில்*
*நினைத்த வரம்சித்தி தீர்த்த மாடினால்*
*வாசித்து சேது விலேகா தசியில்*
*விந்துப வாசஞ் செயிது மயிர்களைந்து*
*சேதிகேள் சீதையே [83]தனுஷ்கோடி யாடி*
*சேது ராமலிங்க பாதமும் போற்றி*
*வேலை விரத கிரகதீர்த்தமு மாடி*
*விதியாய் நவபு ரோசனமும் முடித்தால்*
*ஆலையது வாதசி யிலாரிய போசனம்*
*அருளிப் பிதிர்கர்மம் செய்து காசீந்தால்*
*காசியில் செல்வதில் சேது முக்கியம்*
*கன்னியே தீர்பாவ மின்னும் பகர்வோம்*
*ஆசித்துச் சேது வினில்தவம் புரிந்தால்*
*அச்சுதன் சொல்சிவ கெதிவச்சிர தேகமே.*

*விருத்தம்*

*234. தேகசித் தியுமுண் டாகும் சிவகெதி யருளுண் டாகும்*
*ஆகம சாத்திர மென்னும் அறிவனுக் கிரக முண்டாம்*
*போகபோக் கியமுமுண்டாம் புத்திர சம்பத் துண்டாம்*
*ராகவன் முதல்பூ சித்த நற்சேது தீர்த்தந் தானே.*

233.31. ஏகாதசி - சந்திரனின் வளர்பிறை அல்லது தேய்பிறையில் வரும் பதினொன்றாவது நாள். உபவாசம் - உண்ணாவிரதம். மயிர்களைந்து - மொட்டையடித்து 233.33. விரதகிரக தீர்த்தம் - இராமேஸ்வரத்திலுள்ள ஒரு தீர்த்தம். நவபுரோசனமும் - ஒன்பது விதமான கல்லையும் பதித்துச் செய்யும் பூஜையும். 233.34. ஆலைய - இராமேஸ்வர ஆலயத்தில். துவாதசியில் - பன்னிரண்டாவது நாளில். ஆரிய போசனம் - பிராமணர்களால் செய்யப்பட்ட உணவு. பிதிர்கர்மம் - முன்னோர்க்குச் செய்யப்பட்ட கர்மம். 233.35. காசியில் செல்வதில் சேது முக்கியம் - காசி நகருக்குச் செல்வதை விட இராமேஸ்வரம் முக்கியம். 233.36. ஆசித்து - விரும்பி. அச்சுதன் - திருமால். சிவகெதி - சிவபுண்ணியம். வச்சிரதேகம் - உறுதியான தேகம். 234.1. தேகசித்தி - உடம்பிற்கு முத்தி. 234.2. அனுக்கிரகம் - அருள். 234.3. போக போக்கியம் - அனுபவ இன்பம். புத்திரசம்பத்து - குழந்தைப்பேறு. 234.4. ராகவன் - இராமன். சேது தீர்த்தம் - இராமேஸ்வர தீர்த்தம்.

83. தனுஸ்கோடி.

## THE GREATNESS OF CĒTU

If one were to pray devoutly
Aṉumakuṉṭam and Navapāṣāṇam[168]
One will realise all one's wishes;
Bathing in the holy spring at Cētu
On *Ēkātaci*[169] day, fasting the while,
After shearing off one's hair
One will get blessings many! Listen O Sita!
Bathing in Viratakiraka[170] and worshipping,
At the shrine of Cēturāmaliṅkam;
Bathing in Viratakiraka Spring and completing the pūja
To the nine holy stones and giving gifts to the needy,
Performing *Tarppaṇam* to the forefathers
And the next day in the Temple of Rāmēsvaram[171]
To take one's meal on the holy *Tuvātaci*[172] day,
One gets more merit in Cētu, than in the sacred Kāci!
Sita! many are the sins which can be expiated here,
If Tapas is performed earnestly at the Cētu
A place in Civalōkam and an adamantine body
While on earth, will accrue!

234. Salvation will result as well as Siva's grace!
Knowledge of Agamas and Sastras
And divine blessings, pure joys will accrue,
Besides the blessing of progeny, if one
Were to worship at the holy waters of Cētu
Where Rama first worshipped Siva.

168. Navapāṣāṇam - Tēvipaṭṭaṇam near Ramnad, with nine stones representing nine planets. 169. *Ekātaci* - The 11th digit of the Moon in a fortnight. 170. Taṉuskōṭi - A sacred place on the seashore near Rameswaram. 171. Ramēs varam - Place sacred to all Hindus. 172. *Tuvātaci* - The 12th digit of the Moon in a fortnight.

பள்ளு

235. தீரு மென்றாரே யிச்சேதுவில்
தீரு மென்றாரே
தீரு மென்றா ராதி நாரணர்
சொல்முறை செல்வரோ அல்லவறிஞரோ ஆயினும்

பாரும் பாதாளர்க்குப் பதிமூன்று லகர்க்கும்
பழவினை யால்செய்யும் பாவமெப் பாவமும் (தீரு)
ஆசித்துப் பிறர்பொருள் கவர்கின்ற தோஷமும்
அரசரை யந்தணரை யாவைக்கொல் பாவமும்
ராசற்கு அமைச்சர் வஞ்சஞ் செய்பாவமும்
நற்றுச்சொல் மாதரைச் சிசுவைக் கொல்பாவமும் (தீரு)
கொலைகளவு கட்கா மங்குருத் ரோகமும்
கூவல் குளம்ஆறுகள் நிரத்துற பாவமும்
தலைவனைக் கணவனைப் பகைத்த பாவமும்
தாரத்தை ஏற்று சதித்த பாவமும் (தீரு)
சீலமுள்ள ஆலய மிடித்த பாவமும்
தேசத்தி லகவிலை குறைத்த பாவமும்
வேலை கொண்டு கூலிகொடாத பாவமும்
வீணுரை கோளுரை விடாத பாவமும் (தீரு)
ஒழித்திருந் துயிர்தனைத் துணித்த பாவமும்
உயர்கற்பு மாதரை யழித்த பாவமும்
பழிப்பென மேலவரைப் பகர்ந்த பாவமும்
பதைத்திட வழிப்பறி பறித்த பாவமும் (தீரு)
நல்லவர்க் கிடையூறு விளைத்த பாவமும்
நடுவன்றிக் கெடுவழக் குரைத்த பாவமும்
சல்லியம் பில்லி வஞ்சனை குடோரமும்
தாய்தந்தை தனைச்சினத் தடித்த பாவமும் (தீரு)

235.2. தீரும் என்றார் - பாவங்க்ள் சேதுவில் வழிபடத் தீருமென்றார். செல்வரோ - செல்வந்தர்களோ. 235.4. ஆசித்து - விரும்பி. தோஷமும் - குற்றமும். ஆ - பசு. 235.5.ராசற்கு- அரசர்க்கு. நற்றுச்சொல் - நல்லசொல் சொல்லும். சிசு - குழந்தை. 235.6. கட்காமம் - கள் அருந்துதல் பிறர் மேல் காமம் கொள்ளுதல். கூவல் - கிணறு. நிரத்துற- அழித்து மண்ணிட்டு நிரப்பிய. 235.7. தாரத்தை - மனைவியை. 235.9. கோளுரை- பழிச்சொல்லால் உரைக்கும் மொழி. 235.10 துணித்த - கொன்ற. 235.11. பழிப்பென மேலவரைப் பகர்ந்த பாவம் - பழிப்பு மொழிகள் சொல்லிப் பெரியவர்களை இகழ்ந்த பாவம். வழிப்பறி - வழிப்பறிக் கொள்ளை. 235.12. நடுவன்றி - நடுவுநிலைமையின்றி. 235.13. சல்லியம், பில்லி, வஞ்சனை - தனக்கு வேண்டாதவர்களை அழிக்கக் கையாண்ட சல்லியம், பில்லி சூனியம் மற்றும் வஞ்சனை முறைகள். குடோரம் - கடூரச் செயல்.

235. "All sins will be expiated,"
Said Primal Nārāyaṇa Rama,
"Expiated will all sins be!"
Men of opulence or the indigent,
The denizens of the underworld,
And the other thirteen worlds,
Will be relieved of the fruit
Of their sins present or past!
Expiated will all sins be!
The sin of covetously seizing the wealth of others;
The crime of killing a king or a Brahmin;
The sin of treachery against a king by his ministers;
The sin of killing women or infants,
Expiated will all sins be!
The crimes of murder, theft, wine-bibbing,
Lust, sinning against the preceptor;
The sin of filling up with earth
Rivers and ponds and wells: the sin,
Against the husband or the leader;
The sin of plotting against the wedded wife;
Of demolishing goodly temples;
The crime of buying below the purchase price due;
The crime of nonpayment of wages,
For work done; of not avoiding
Vain, boastful talk or scandal-mongering;
The sin of taking life by stealth;
Of ruining noble women chaste;
The sin of insulting elders;
The crime of highway robbery;
The sin of harassing good men;
The crime of bearing false witness,
And not being impartial; the evil deeds of black magic,
Sorcery and cruelty against others;
The sin of intemperate anger against parents;

வாரங்கள் சொல்லிவழக் குரைத்த பாவமும்
மாதவர் சகோதரரை வதைத்த பாவமும்
தாரந்தவிர்க்க மறுதாரத்தை யாசித்த சண்டாள
தத்துவ மும்கண் டாலிது தலத்தில் (தீரு)
ஏராத பாவங்கள் பேராத மாப்பழிகள்
எக்கோடி என்னினும் தனுஷ்கோடி தன்னிலுற்றால்
சேராத வஞ்சகம் விசுவாசப் பாதகம்
தீராது எத்தலத்தில் சென்றாலு மித்தலத்தே. (தீரு)

### விபீஷணன் நாடு திரும்புதல்

விருத்தம்

236. இத்தலத்தே தீருமிதே நிருத்தன் வாக்கு
என்றேகா தசிதங்கிது வாத சிக்கே
நற்றவஞ்செய் தனன்சொன்ன தான மீந்து
நல்லமொழி விபீஷணர்க்கே நயமாய்ச் சொல்லிச்
சப்தரிஷி ஸ்ரீராமன் சீதை வாக்கால்
சாகாத வரங்கள்பெற்று இலங்கைக் கேக
அத்தலத்தி லெவர்களும்போய் மீளா வண்ணம்
அணைகாதந் திறந்தாழி யாக்கி னாரே.

### பல இடங்களைக் கடந்து கங்கைக் கரைக்கு இராமர் முதலோர் வருகை

நடை

237. ஆக்கியமுனி வர்தண்ட காரணிய மாதவர்கள்
பாக்கியமா லுக்காசீர் வாதம்கொடுத்த பின்னர்
போக்கியமதாய் நடந்து ஊர்பல வனங்கடந்து
கார்க்கும் நதிபதியும் கடந்து தடுப்பார

235.14. வாரங்கள் சொல்லி - நியாயத்திலிருந்து வழுவி ஒருபுடை சாந்து நியாயம் சொல்லி. 235.15. தாரம் தவிர்க்க - கட்டிய மனைவியை விலக்கி வைக்க. யாசித்த - விரும்பிய. 236.1. தீரும் - பாவங்களெல்லாம் தீரும். நிருத்தன் - சிவன். ஏகாதசி - ஏகாதசி ஆகிய 11-ம் நாள் தங்கி. துவாதசிக்கே - துவாதசியாகிய 12-ம் நாள். 236.2. நற்றவம் - நல்ல தவம். சொன்னதானம் - சொர்னதானம். 236.4. அணைகாதம் - இலங்கை இராமேஸ்வரத்திற்கு போடப்பட்ட அணை வழி. ஆழி - கடல். 237.1. தண்டகாரணிய மாதவர் - தண்டகாரணிய வனத்திலிலுள்ள தவசியர். 237.2. பாக்கிய மால் - புண்ணியத் தன்மைவாய்ந்த திருமால். ஆசீர்வாதம் - அருள். 237.3. போக்கியம் - செல்வம். 237.4. கார்க்கும் - நாடு நகரங்களைக் காக்கும்.

The sin of giving judgement,
Swerving from justice and truth;
The sin of slaying a brother or a holy man;
The crime of putting away the wedded wife,
And hankering after another woman;
These and other such great sins
And crimes numberless,
Can sure be expiated
Here at Taṉuṣkōṭi! Hypocrisy, treachery
And betrayal of trust,
Cannot be expiated at any other place
But this, but this!"

### VIPĪṢAṆA RETURNING TO HIS COUNTRY

236. Thus said the Lord, citing
The Great Dancer's ordainment!
And after performing the rituals
On *Ēkātaci* and *Tuvātaci*, the next day,
And giving gold away plentifully to charity,
Rama now persuaded Vipīṣaṇa
With soft and gentle words,
To go back to Laṅka - And he,
Rich with immortal boons at the hands
Of the seven sages, Lord Rama,
And Sita, went back to their place.
The causeway from Cētu to Laṅka
Became submerged under the sea
Lest others should use it against Laṅka.

### RAMA AND OTHERS REACH THE BANKS OF THE GANGES

237. Receiving the blessings
Of the Sages and Seers Taṇṭakāraṇiyam
Tirumālrāma, the blessed, traversed
Many a town and village;
Crossing woods and groves

### பரத்துவராச முனி இல்லத்தில் தங்குதல்

*பார்புகழ் கெங்கையடுக்கப் பரத்துவ ராசமுனிவன்
சீர்புகழ் பன்னகசாலை சென்றிறங்க வப்போது
பேர்புகழும் மாமுனிவர் பெருமானை வந்துகண்டு
கார்வர்ணர் மால்தேவர்களைக் காத்த செய்தி யுமுரைத்து*

*செய்திகேட்ட ராக்ஷசரைச் செயித்து வதைத்ததுவும்
மெய்விபீஷண னிலங்கை மேல்வேந்த னானதுவும்
கொய்துபாரி சாதமலர் கொண்டல் மழைபோலமரர்
பெய்ததுவுங் கண்டாரே பெருந்தவ மானதுவும்*

*பெருந்தவத்துக்கு மகிழ்ந்துபெரு மான்தளத்துக் கெல்லாம்
விருந்தளிப் போமெனவே வேணஉபசாரஞ் செய்து
அருந்தவர்கள் சொற்படியே ஆறுரசத்தோடு உண்பான்*

### இராமன் பரதனின் நிலையை எண்ணுதல்

*இருந்தானிப் போது இராமனி ருதயத்தில்
தயவுடனே எனைத்தேடும் தம்பிபரதாள் வார்க்குச்
செயமாய் நாமவதிவைத்த தெய்திமுடி வுயின்றே
அயலோர்கள் காணவின்று அவன்மனம் காணாததென்றால்
மயலாலே தீயில் விழுவானே மாருதியே*

### அனுமனைப் பரதனிடம் இராமன் தூது அனுப்பல்

*மாருதி நீயேசென்று வாறான் ராமனெனவே
பேருரைத் தாலிருப்பான் பிசகில்லை யிம்மொழியே
சீருடனே மாலுரைக்கச் சிரசில்கற் பனைகொண்டு
கார்வர்னரே சரணமென்று கைதொழுதா னனுமான்*

பார பார்புகழ் கெங்கை - பெரிய, உலகத்தார் புகழ்கின்ற கங்கைநதி. அடுக்க - நெருங்கிவர. 237.5. பரத்துவராச முனிவன் - உதத்தியன் மமதை என்னும் இருவருக்கும் பிறந்தவர்; இராம இலட்சுமணர் வனவாசம் ஏகும் பொழுதும் இராவணனை வதைத்துத் திரும்பும் பொழுதும் வரவேற்று உபசரித்தவர். 237.11. கொய்து - பறித்து. கொண்டல் மழைபோல - இருண்ட மேகம் மழையைப் பெய்தாற் போல. அமரர் - தேவர். 237.13. தளம் - கூட்டம். 237.14. வேண - வேண்டிய. 237.15. ஆறுரசம் - அறுசுவை உணவு. 237.18. அவதி - கெடு. தெய்தி - தியதி. 237.19. காணாததென்றால் - எங்களைக் காணவில்லை என்றால். 237.20. மயலாலே - மயக்கத்தாலே. 237.21. வாறான் - வருகிறான். 237.22. பிசகில்லை - தவறில்லை. 237.23. சிரசில் கற்பனை கொண்டு - தலைமேல் இராமன் கட்டளையை ஏற்றுக்கொண்டு.

And fostering rivers, he rested
A while on the banks of the Ganges,
Far-famed on Earth for its sacredness.

### RAMA STAYING IN THE HERMITAGE OF SAGE PARATTUVARĀCAR

As he neared the holy hermitage
Of Parattuvarācar, the Sage came forward
With a hearty welcome! Learning
With pleasure the glad tidings
Of how the dark-hued One had saved
The celestials; Of how he had conquered
Outright the evil demons; of how
Vipīṣaṇa the true, had become
The king of Laṅka, the sage rejoiced greatly,
And feted them with food of six different tastes,
In a wondrous display of hospitality,
To his noble guest and his retinue!
And all the while the immortals
From on high culled *Parijatam* flowers
And showered them on Lord Rama,,
Even like a torrential downpour
From the rain-clouds overhead!

### RAMA CONTEMPLATING PARATA'S CONDITION

And now Rama thought within himself:
"Today is the day fixed for my return
To Ayōtti as promised to my brother Parata,
Anxiously awaiting my arrival after the term of exile;
If he does not see me today, in the presence
Of others surely he will fall into the fire!"

### RAMA SENDING AṆUMAṆ TO PARATA

"O Māruti! Go you at once to Ayōtti
And announce to Parata that I am on my way
To meet him." Taking to heart, the command
Of Rama and bowing to him with folded hands,

### அனுமன் பரதனைக் காணுதல்

*தொழுது அவனெழும்பிச் சூறாவளி போல*
*பழுதிலா மலயோத்தி பட்டணமே புகுந்து*
*எழுதுஞ் சித்திரரூபன் இராமன்தம்பி பரதன்*
*அழுத கண்ணீராறோட அண்ணனி ராமனைத்தேடி*

### பரதன் தீயில் பாய முடிவெடுத்தல்

*தேடியெனைப் பயின்ற தீப்பாவி கைகேசியால்*
*நாடிவனம் புகுந்த நன்ராம னென்கோனே*
*பாடிஎன் னோடுரைத்த பதினாலாண் டானதின்று*
*ஓடிவரக் காணேன்நான் உயிரினிமேல் வைப்பேனோ*

*உயிர்மாள்வே னென்றுரைக்க உலகரமைச்சர் வாட*
*மயில்போல தாய்மார்கள் மனங்கலங்கித் தள்ளாட*
*ஒயிலாய்க் குழியைவெட்டி உயர்த்திக் கட்டையடுக்கித்*
*தயிலங் குடங்குடமாய் தழலில் மிகவிடவும்*

*விடுவேனு யிரைநானே மேகவர்னனைக் காணேன்*
*கெடுவுயின்று அண்ணனுரைக் கிழமையின்று ஐயாவே*
*நடுநீதன் பாதரெக்ஷை ரண்டும்நான் கொண்டுவந்தேன்*
*கெடுவில்வந் தாரில்லையண்ணன் கேள்விஎன்ன யெரியேதஞ்சம்*

*தஞ்சமது நெருப்பேயென்றான் தமையனிரு சரணமென்றான்*
*பஞ்சபாவி கைகேசி பழிபாரும் பாருமென்றான்*
*அஞ்சாமற் சத்துருக்கன் அயோத்திக் கரசனென்றான்*
*வஞ்சநெருப்பை மூன்று வலங்கூடிச் சுற்றிநின்றான்.*

237.26. பழுதிலாமல் - குற்றமில்லாமல். 237.27. சித்திரரூபன் - சித்திரம் போன்ற அழகிய வடிவினன். 237.29. தீப்பாவி - கொடிய பாவியான. 237.30. கோனே - அரசனே. 237.31. பாடி - கூறியபடி. 237.33. உலகர் - உலகத்து மக்கள். 237.35. ஒயிலாய் - அழகாய். உயர்த்தி - உயரமாக. கட்டை - காய்ந்த விறகுக் கட்டை. 237.36. தயிலம் - எண்ணை. தழல் - தீ. 237.38. உரைக்கிழமை - உரைத்த நாள். 237.39. நடுநீதன் - நடுவுநிலைமை தவறாத நீதிமான்; இராமன். 237.40. கெடுவில் - கெடு வைத்த நாளில்.

## ANUMAN SEEING PARATA

Anuman shot up into the air like a gale,
And reaching in a trice Ayōtti city
Without any difficulty, saw there
Rama's brother, Parata beautiful like a picture,

## PARATA DECIDING TO PLUNGE INTO THE FIRE

His eyes streaming with tears,
Ever on the watch for Lord Rama's returm,
Crying aloud in grief thus: "O my good king Rama,
Who went to the forest exile at the behest
Of my mother, that evil sinner, Kaikēci,
Has not rushed up to me as promised
After the fourteen-year term has ended today:
Will I still continue to bear this life?
No! I shall end my life now!"
As he cried thus in grief, all the people
And the ministers grew sad,
The anguished queen mothers became agitated in mind,
While a goodly pit was dug on earth
And logs piled high within it, and pots
Of fragrant oils poured upon them:
"Give up my life I shall, as the cloud-hued Lord
Has not appeared before me still;
This is the day fixed for his return,
By my brother himself! I brought with me
The sandals, of him ever unswerving from justice!
Why question further? My brother has not returned,
Within the stipulated time!
Fire is my only refuge! Refuge I take
In fire!" he cried: "my brother's
Two feet are my refuge! O Kaikēci,
Multiple sinner, that you are,
Yours the responsibility and the blame for all this!
My brother Catturukkana is now the king of Ayōtti!"
So saying, Parata went thrice round the blazing fire.

### அனுமன் பரதனைத் தடுத்தல்

விருத்தம்

238. சுற்றியே பரதன் தீயைத் துதித்துடன் குதிக்கு முன்னே
தத்திசே ராதி மாயன் தானிதோ வாரா ரென்று
சத்தியந் தவறா மற்றான் சடுதியி லெழுந்தி ருந்து
வெற்றிசே ரனுமன் நீண்ட விருதுவா லுயர்த்தி னானே.

### இராமன் வருகையை அனுமன் தெரிவித்துக் கொண்டே வருதல்

239. நாரணன் வாறான் வாறான் ராகவன் வாறான் வாறான்
தேரணி அயோத்தி வாழும் தசரதன் பாலன் வாறான்
பூரணத் திருமால் வாறான் புண்ணிய நெடுமால் வாறான்
கார்வர்னன் வாறான் சீதை கணவனே வாறா னென்றான்.

சிந்து

240. ராமன் வாறான் - அரிகரி
ராமன் வாறான்

காமனை யீன்றவன் கண்ணுதல் மைத்துனன்
கங்காளி ஏழை பங்காளி சகோதரன்
மாமணச் சீதை மணவாளன் சீதரன்
வந்தானதோ கங்கை வடகீழ் மூலையில (ராமன்)
சக்கரஞ் சங்கு தரித்தவன் வாறான்
தாடகை தன்னைச் செயித்தவன் வாறான்
அக்கரவில் பள்ளி கொண்டவன் வாறான்
ஆதி மூலமென்ற ஆனைக்குக் கெதிதந்த (ராமன்)
மண்டல மெங்கு மளந்தவன் வாறான்
மாபலியைச் சிறை வைத்தவன் வாறான்

238.2. தத்தி - குதித்து. மாயன்தான் - திருமால்தான். 238.3. சடுதியில் - விரைவில். 238.4. விருது வால் - வெற்றி பொருந்திய வால். 240.2. காமனை ஈன்றவன் - மன்மதனை ஈன்றவன்; திருமால். கண்ணுதல் மைத்துனன் - நெற்றியிலும் கண்ணையுடைய சிவனின் மைத்துனன்; திருமால். கங்காளி ஏழை பங்காளி சகோதரன் - காளியின் சகோதரன்; திருமால். 240.3. சீதரன் - திருமால். வடகீழ் - வடகிழக்கு. 240.5. அக்கரவு - ஆதிசேடனாகிய பாம்பு. ஆனைக்கு - கஜேந்திரன் என்ற யானைக்கு. கெதி - நற்கதி. 240.6. மண்டலம் - பூமி. மாபலி - மாவலி மன்னன்; இவனிடம் திருமால் வாமன அவதாரம் எடுத்து மூன்றடி மண் கேட்டான்.

## AṈUMAṈ PREVENTING PARATA FROM IMMOLATION

238 As Parata stood thus before the fire
With hands folded in prayer,
Before he leaped into the pit,
On a sudden Aṉumaṉ appeared
Landing swiftly before Parata, from the sky,
Shouting happily: "In a moment comes
Lord Rama himself, and none else!"
And truthful Aṉumaṉ quickly did jump
Before Parata, his victorious tail long,
Raised aloft and shouted loud:

239 "He is coming, Nārāyaṇa!
Coming he is, Rākava! the son of Tacarata
Of Ayōtti, is approaching even now!
Tirumālrāma, the perfect is coming!
The lofty Tirumāl is coming! coming
Is Sita's spouse, the cloud-hued Lord!"

240. Rama is coming, Hari Hari,
Rama is coming!
He who sired Manmath; who is the brother-in-law
Of the One with the forehead eye!
Brother of Goddess Kāḷi! the support of the poor!
Sridhara, the consort of fragrant Sita;
Lo! he has come near now,
To the north-east corner comes of the Ganges!
Rama is coming, Hari Hari
Rama is coming!
He has come, who holds the Conch and the Discus!
Who has vanquished mighty Tāṭakai!
He has come, whose couch is the serpent!
Who gave salvation to the tusker
That trumpeted "O Primal source of all! refuge!"
Rama is coming, Hari Hari
Rama is coming!

தண்டரளத் துளபத் தாமன் வாறான்
சகலவர்க்கும் மோக்ஷந்தர வந்த வைகுண்ட (ராமன்)
கல்லைப் பெண்ணாகவே நின்றவன் வாறான்
கடிய வரக்கரைக் கொன்றவன் வாறான்
சொல்லத் துலையாத சுந்தரன் வாறான்
சூழாதே நெருப்பில் விழாதே பரதா. (ராமன்)

### அனுமன் வருகையைப் பரதன் காணுதல்

விருத்தம்

241. வாறானென் றுரைத்தசத்தம் பரதன் கேட்டு
வலம்புரிந்த நெருப்பைவிட்டு மாறிப் பார்த்தான்
ஆறாத வடவைக்கன லாற்றப் பாயும்
ஆகாசக் கெங்கையைப்போ லனுமன் வந்தான்
மாறாம லரக்கர்குலம் முடித்துச் சீதை
மாதரசைச் சிறைதிருப்பி வனத்தை விட்டுப்
பாறைதனைப் பெண்ணாகப் பதிந்த பாத
பங்கயத்தான் கெங்கையுற்றான் பரத கோவே.

### பரதன் மகிழ்ச்சி

நடை

242. பரதமகா ராஜாவே பதறாதே கதறாதே
விரதமன்னன் ரெகுராமன் விடுதூதன் நானனுமான்
மானாரூமி ளையோனும் மாயவனும் வானரமும்
ஆனகெங்கை யாறதிலே அரிராம னெழுந்தருளி

240.7. தண்டரளத் துளபத்தாமன் - குளிர்ச்சி பொருந்திய துளசி மாலையை அணிந்த திருமாலாம் இராமன். சகலவர்க்கும் - எல்லோருக்கும். 240.8. கல் - கல்லாகக் கிடந்த அகலிகை. 240.9. துலையாத - தொலையாத. சுந்தரன் - அழகன். சூழாதே - நெருங்காதே. 241.2. ஆறாத - கட்டுப்படுத்தி ஆறவைக்க முடியாத. வடவைக் கனலாற்ற - வடவா முகாக்கினியிலிருந்து தோன்றிய நெருப்பை ஆற்ற. 241.4. பாத பங்கயத்தான் - தாமரை மலர் போன்ற பாதத்தான். கெங்கையுற்றான் - கங்கை நதிக்கரையை அடைந்து விட்டான். 242.2. இரத மன்னர் - ரதங்களையுடைய மன்னர்; இராமன். 242.3. மானாரும் - மான் போன்ற விழியுடைய சீதையாரும்.

He who measured all the worlds, is coming,
Who imprisoned Makāpali (in the underworld)!
He who wears the cool sacred-basil wreath,
Who gives salvation to all, has come!
Rama is coming, Hari Hari,
Rama is coming!
He who transformed a stone into a woman,
Who slew the cruel demons, is coming!
The ineffably beautiful one is coming!
Approach no nearer to the fire, O Parata,
Do not fall into the fire-pit!
As Rama is coming, Hari Hari
Rama is coming sure!

### PARATA SEES AṈUMAṈ

241. Hearing the shouted words repeated,
"He is coming! Rama is coming!" Parata
Turned from the fire he had gone round
And looked at Aṉumaṉ rushing down
Like the aerial Ganges, cool enough
To assuage the uncontrollable *Vaṭavai*[173] fire!
O Prince Parata! After wiping out
The demon race, and freeing Sita,
Queen among women, ending his exile,
Has come the one, whose lotus feet,
Restored a rock to its pristine womanly form;
He has now reached the banks of the Ganges!

242. "Prince Parata! cry no more in anguish!
Rakurāma (of endless chariots) has sent me
As his envoy to you; I am Aṉumaṉ
The doe-like Princess (Sita) and the young Lord,
Lakshmaṇa, Lord Rama and the monkey bands,
Are all now on the bank of the Ganges!

173. *Vaṭavai* fire - Submarine fire, with the shape of a mare's head said to consume the world at a aeon's end.

அருள்பெருகும் பரத்வாசர் ஆசிரம மானதிலே
பொருள்குகன்செய் விருந்தருந்த புண்ணியனா ரிருக்கிறார்
நருள்பெருகு பட்டணத்தை நன்றாக அலங்கரிப்பீர்
வருவரென்றே கேட்டவுடன் மனத்துயரக் கடலொழிந்தான்

கடலதிலே தப்பிவிட்ட கப்பல்வந்து சேர்ந்தாப்போல்
திடனெனமா ளிகைபுகுந்தான் செயலனுமான் றன்னைமெய்த்துப்
படபடென வமுதளித்துப் பண்புடைய வனுமனுக்கு
உடலில்வெகு வரிசைசெய்து உபசரித்தான் பரதவேந்தன்

**பரதனைத் தீபாய்தலின்று தடுத்ததை அனுமன் இராமனிடம் உரைத்தல்**

வேந்தனெங்கள் ரகுராமன் விருந்தருந்த யிருக்குமுன்னே
போந்துவந்தான் வாளனுமான் புண்ணியனார் முன்பாகக்
கூந்தல்மின்னார் சீதைபங்கா கோவிந்தா சரணமென்றான்
ஏந்தல்செய்தேன் பரதமன்னன் எரிக்குமுன்பாய் நான்செறுத்தேன்

**இராமனின் பாராட்டு**

செறுத்துமிங்கே மீண்டுவந்தேன் ஸ்ரீராமா வென்றுரைத்தான்
வெறுத்துயிர் மாளும்பொழுது விலக்குமெந்தன் கண்மணியே
நிறுத்திவந்தா யென்குடியை நீகாத்தாய் கண்மணியே
மறுத்துதவி வானத்துக்கே வையமென்ன செய்யுமென்றார்

**வானரப்படையினர் உணவு உண்ண அழைக்கப்படுதல்**

செய்யபுக ழனுமானே தேன்மொழியும் சாம்பவனே
ஐயமில்லா விருந்தருந்த அழையுமென்றார் வானரத்தை
எய்துகின்ற வானரத்தா ரெழுபதுவெள் ளம்படையில்
உய்யும்படை வசந்தன் வெள்ளம்ஒன்றை யல்லாதுண்ணவந்தார்

242.5. பரத்வாசர் - பரத்துவராச முனிவர். 242.6. குகன் - கங்கைக் கரையில் நாவாய் ஓட்டுபவன்; இராமன் நண்பன். 242.7. நருள் பெருகு பட்டணம் - மக்கள் மிகுதியாக விளங்கும் பட்டணம்; அயோத்தி. 242.10. மெய்த்து - பொருந்தி. அமுது - உணவு. 242.12. உடலில் வெகுவரிசை செய்து - உடலில் பலவிதமான அணியும் ஆபரணங்கள் கொடுத்து. 242.14. போந்து வந்தான் - விரைந்து வந்தான். 242.16. ஏந்தல் - அரசே! இராமனே!! செறுத்தேன் - தடுத்தேன். 242.19. குடியை - குலத்தை. 242.20. மறுத்துதவி வானத்துக்கே வையமென்ன செய்யுமென்றார் - வானம் அளவு உதவி செய்த அனுமனே உனக்கு நான் பூமி அளவு இருந்துகொண்டு என்ன செய்ய முடியும் என்று கூறி நீ என்னினும் உயர்ந்தவன் என்ற பொருள்பட கூறினார் எனக. 242.24. வசந்தன் வெள்ளம் - வசந்தன் என்ற வானரன் மற்றும் அவனது சேனை மிகுதி.

'Where he is even now receiving
The hospitality of the ferryman Kuka;
And sage Parattuvarācar! Decorate well
The metropolis, thick with its people!".

### PARATA IS OVERJOYED

The moment he heard of the coming of Rama,
Parata was relieved of all misery,
Vast as a sea; and even like a storm-tossed vessel,
Saved from a raging sea,
He entered his palace with a new vigour!
And embracing Aṉumaṉ, the good,
He swiftly treated him to a rich repast
Of nectar and food; and adorned him
With many an ornament fine!

### AṈUMAṈ INFORMS RAMA HOW HE PREVENTED PARATA FROM HIS INTENDED IMMOLATION

Even before king Rakurāma had begun to feast,
Valorous Aṉumaṉ returned to his side
And reported to the noble Lord:
"O Kōvinta, Refuge! I bow before you,
O consort of Princess Sita of fulgurant tresses!
My king! I prevented in time, Prince Parata
From plunging into the fire-pit
And having done it, I am
Before you, now, Sri Rama!" And moved by this,
Rama spoke thus to him: "Darling mine!
Dear as the apple of my eye! who
Saved anguished Parata from his death by fire!
You have saved thereby my family too!
How can earth recompense heaven?
As your service has been boundless as the sky,
When I am the Lord of this petty earth?"

### சுக்கிரீவன் இராமனிடம் வசந்தன் உயிர்பெற்றெழ வேண்டுதல்

உண்பதற்கு மூன்றுவெள்ளம் ஒழித்துநிக்கும் காரணத்தைக்
கண்பார்த்து வருகையிலே வசந்தனில்லாக் கஷ்டமென்றார்
மண்படரும் கங்கையிலே மாலும்புன லாடிநிற்க
விண்படரும் சுக்கிரீபன் மேகவர்னர்க் கறிக்கைசெய்தார்

தானவனே யெனதுபடைத் தலைவர் நாலாறதிலே
மானகவிக் கொருதலைவன் வசந்தனென்ற பேருடையான்
ஆனவனைப் படைக்களத்தில் அரக்கனன்று வெட்டிவிட்டான்
ஊனுடலாய்ப் பகைமுனிவனோர் சுணக்காய்க் கொண்டொளித்தான்

ஒளித்தவுடல் வசந்தனன்றி உள்ளவரெல் லாம்பிழைக்க
வழித்துணைசேர் வாளனுமான் மருந்துமலையால் பிழைத்தார்
பிழைத்தவரில் வசந்தனில்லா பெரும்படைகள் மூன்றுவெள்ளம்
அழைத்தற்குத் தலைவனன்றி அமுதருந்தோ மென்பதுவே

### இராமன் வசந்தனுக்கு உயிர்தர இந்திரனுக்குக் கடிதம் எழுதுதல்

என்பங்கத்தை ராமன்முன்னே இட்டுமுனி வர்சு(ர)ரைத்தான்
இன்பங்கொண் டானிந்திரனுக் கெழுதியதோர் வாசகங்கேள்
உன்பங்கத்தைத் தீர்ப்பதற்கே உதவிசெய்த வானரத்தில்
நன்பங்கனோர் வசந்தனைத்தான் நமனிடத்தில் நீயுரைத்து

**242.25.** மூன்று வெள்ளம் ஒழித்து நிக்கும் காரணத்தைக் கண்பார்த்து வருகையிலே - வசந்தன் சேனையிலுள்ள மூன்று வெள்ளம் படையினர் மட்டும் விருந்து உண்ணாது இருக்கின்ற நிலையையும் காரணத்தையும் இராமன் பார்த்து. **242.28.** விண்படரும் - விண்ணில் செல்லும் வல்லமையுள்ள. மேகவர்னர் - மேகம் போன்ற கருநிறமுடையவர்; இராமர். **242.29.** தானவனே - தேவர்கள் தலைவனே. நாலாறு - இருபத்துநாலு படைத்தலைவர்களிலே. **242.30.** மானகவி - மானத்தில் பெரிய குரங்கு. **242.31.** அரக்கன் - கும்பகர்ணன். **242.32.** பகை முன் இவன் - படைக்களத்தில் எங்கள் முன் கும்பகர்ணன். சுணக்காய் - நாய் கொண்டாற் போல். **242.33.** உள்ளவர் எல்லாம் பிழைக்க - மருத்துவ மலையின் துணையால் இறந்தவர்கள் எல்லாம் பிழைக்க. **242.37.** பங்கத்தை - குறையை. முனிவர், சுரர் - முனிவர்கள் மற்றும் தேவர்கள். **242.38.** இந்திரன் - தேவலோகத்து அரசன். வாசகம் - கடிதம். **242.40** நன்பங்கனோர் - நம்முடைய படையில் நல்ல பங்களனாகியவன். நமன் - எமன். நீ - இந்திரா! நீ.

### THE VĀṈARA ARMIES INVITED TO THE FEAST

And Rama added: "O Aṉumaṉ of great fame!
And Jāmpavāṉ of honeyed-speech! Invite the monkeys,
All of them to the feast now!"
Of the seventy *veḷḷam* monkey army
All turned up at the feast excepting,
Three *veḷḷam* Vāṉaras belonging to Vacantaṉ alone!

### CUKKIRĪVAṈ REQUESTING RAMA TO BRING VACANTAṈ BACK TO LIFE

Going round the camp, enquiring why
Three *veḷḷam* Vāṉaras were staying away
From the feast, Cukkirivaṉ found out the reason for the same:
And going up to Rama after he had
Bathed in the sandy banks of the Ganges,
Cukkirivaṉ reported to the cloud-hued One!
"Lord of celestials! of my twenty four commanders
An honourable chief is one Vacantaṉ:
He was cut down in the battlefield,
The other day, by Kumpakarṇaṉ, who then
Hid him away in the shape of a dog!
When Aṉumaṉ did bring the Cañcivi hill,
All other monkeys revived but Vacantaṉ alone;
And now his bands three *veḷḷam* strong
Do refuse to eat without their commander!

### RAMA WRITING TO INTIRA TO RESTORE VACANTAṈ TO LIFE

As Cukkirivaṉ thus apprised Rama of the situation,
The Lord now sent a missive to Intra
Couched in these words; "Among our Vāṉaras
Who helped to relieve you in your plight,
Is one by name Vacantaṉ, now in Yama's world!
Speak to the God of Death and send Vacantaṉ
Back to us alive;" which he shot
Along with his arrow towards Intira.

நீயுரைத்து வசந்தனுயிர் நிமிசத்திலே வருகவென்ன
பாயிரத்தை யெழுதிராம பாணமதில் சேர்த்துவிட்டார்
போயிரைந்து ராமபாணம் பொன்னுலகந் தன்னிலெய்தி
மாயாஸ்திர வாசகத்தை வானவர்கோன் கண்டெழுந்து

### வானரங்கள் வசந்தனோடு உணவு உண்டல்

கண்டெழுந்தா னண்டர்குடி காத்திடும்மால் ராமனென்று
சண்டனுக்கு மதுகாட்டித் தனிவசந்த னுயிரைவிட்டான்
மண்டலத்தில் வசந்தனுயிர் வந்துசடம் புகுந்தெழுந்தான்
உண்டருளும் விருந்தெனவே ஒருமிப்பாய் பந்திவைத்தான்

பந்திவைத்தார் சகலருக்கும் பாரரம்பை யிலையெடுத்தார்
அந்திவர்னன ரிராமன் அமுதருந்த வெழுந்தருளி
முந்திவந்து மாருதியே முன்னிருந்து வுடனுண்ணவா
பிந்திவுண்பே னென்றுரைக்கப் பின்னுரைப்பார் மாயவனார்

### இராமன் அனுமனைப் புகழ்ந்துரைத்தல்

மாயாமலுயிர் காத்தாய் வானரத்தைச் சேகரித்தாய்
தாயிடத்தில் தூதுரைத்தாய் சத்துருவைச் சங்கரித்தாய்
வாயமிட்டு மாண்டவற்கு மருந்துமலை கொண்டுவந்தாய்
காயமயில் ராவணனைக் காளியுண்ணப் பெலிகொடுத்தாய்

ஆயதல்லால் நீயெனக்கு அநேகமெல்லா முதவிசெய்தாய்
ஓயாமல் நின்புகழை உரைத்திடவும் முடியாதே

242.42. ராமபாணம் - ராமரின் அம்பு. 242.43. பொன்னுலகம் - தேவலோகம். 242.44. மாயாஸ்திர வாசகத்தை - வசந்தனை எமனிடம் இருந்து உடனடியாக மீட்பாய் என்ற வாசகத்தை. வானவர்கோன் - இந்திரன். 242.45. அண்டர் குடி - தேவர் குலம். 242.46. சண்டன் - எமன். 242.47. மண்டலத்தில் - பூமியில். சடம் - உடம்பு. 242.48. உண்டருளும் - வசந்தனே! உணவு உண்டருளும். ஒருமிப்பாய் - ஒரு சேரவே. 242.49. பார் அரம்பை - மண்ணுலகத்திலுள்ள அரம்பை போன்ற பெண்கள். 242.52. பிந்தி உண்பேன் - இராமனே! நீ உண்ட பிறகு உண்பேன். 242.54. தாயிடத்தில் - இங்குச் சீதையைக் குறித்தது. 242.55. வாயமிட்டு - உபாயமிட்டு. 242.56. காய - மிகு வலிமையான உடல் பெலி - பலி. 242.57. ஆயதல்லால் - அதுமட்டுமல்லாமல்.

King of the celestials, who on reading the command,
From one who had saved them all,
Showed the same to Yama, who forthwith,
Released Vacantaṉ's life from his clutch!
And on earth, it entered its former frame!
And Vacantaṉ alive again, joined the feast
Along with his faithful troops!
All, all of them sat down to the feast,
While women lovely like celestial damsels
Served the dishes on plantain leaves.
Rama rising to join them, invited Māruti
To sit down by his side and partake of the meal!
But the humble Aṉumaṉ excused himself,
Saying that he would eat only after the Lord!

### RAMA PRAISING AṈUMAṈ

"You saved our lives from the jaws of death!
You did gather the monkey armies!
To Sita you did go as envoy with my message!
Foes many you did destroy!
You did bring the medicinal mountain,
To revive all who died by the demon's mace!
And puissant Mayil Rāvaṇaṉ
You gave unto Goddess Kāḷi as a sacrifice!
And many other services incalculable
Besides, you have performed for me!
Endlessly one must narrate the praise
Of your greatness remarkable!

*உரைத்திடிலென் றமரையொப்பாம் உடனுண்பாம் அனுமானே*
*துரைப்பெருமா ளிதுரைக்கத் தொழுதுநின்றான் மாருதியும்*
*தரைப்பெருமா னரம்மையிலை தனைவகுத்தார் கையாலே*
*வரைப்புய மாருதியுடனே மாலுமிருந் தமுதுசெய்தார்*

## இராமன் வீற்றிருத்தல்

*அமுதுசெய்தார் சகலோரும் அரிராமன் பார்த்திருந்தார்*
*சமுகங்கண்டு குகன்பணிந்தான் தபத்தராசீர் வாதஞ்செய்ய*
*எமுகமுள்ள ரெகுராமன் இனிதிருக்கத் தலைவர்தொழ*
*சுமுகுமிள கிலையருந்தி கார்வர்ணனார் வீற்றிருந்தார்*

## இலட்சுமணன் புன்னகையும் இராமன் வினாவும்

*வீற்றிருக்குந் திருமாலை வேண்டியெல்லோரும் பணிந்தார்*
*சோத்தியமாய் நித்திரைமான் சுமித்திரை பாலனைமருட்ட*
*நாற்றிசையில் நிற்பவரும் ராமரும் பார்த்திருக்கையிலே*
*கூத்திதென்றே லட்சுமணன் குறுநகையாய்ச் சிரித்தானே*

*சிரித்தவுடன் கிட்டநின்ற திறல்வீர ரெல்லோரும்*
*தரித்துநின்றா ரவரவர்கள் தங்குறையை நினைத்தாரே*
*அரிதிருமா லிளையவரை அழைத்தேதோ பகருவராம்*
*விரித்துரைப்பாய் நீநகைத்த விதமேது தம்பியரே*

## இலட்சுமணன் பதில்

*ஏதெனவே மாலுரைக்க இளைவருந் தொழுதுரைப்பார்*
*வாதெனக்கு நித்திரைதான் வாராதீ ரேழாண்டாய்*
*ஆதரவா யித்தலத்தில் அமுதருந்துங் காரணத்தால்*
*மூதரசி நித்திரைதான் முகமருட்ட நான்னகைத்தேன்*

242.59. தமர் - உறவினர். 242.61. தரைப்பெருமான் - இராமன். அம்மை - சீதை. 242.62. வரைப்புய மாருதி - மலை போன்ற தோள்களை உடைய அனுமன். 242.64. சமூகம் கண்டு - இராமரை முன்னிலையாகக் கண்டு. தபத்தர் - தவ முனிகள். 242.65. எமுகமுள்ள- எந்த யுகத்திலும் உள்ள. 242.68. சோத்தியமாய் - 'வின்வும் தன்மையாய்' என்ற பொருளமைந்த மலையாளச் சொல். நித்திரைமான் - உறக்கம் தரும் தேவி. சுமித்திரை பாலன் - இலட்சுமணன். 242.70. கூத்து இது ஏதென்றே லட்சுமணன் குறுநகையாய்ச் சிரித்தானே- பதினான்கு வருடங்களாக வராத தூக்கம் இன்று வந்ததே! இது என்ன கூத்து என இலட்சுமணன் புன்னகை செய்தானே என்றவாறு. 242.71. திறல் வீரர் - வலிமையான வீரர். 242.73. ஏதோ பகருவராம் - எதையோ கூறுவாராம். 242.76. வாது எனக்கு - (நித்திரை) எனக்குப்பகை. ஈரேழாண்டாய் - பதினான்கு ஆண்டாய். 242.78. மூதரசி - மூதேவியாம் தூக்கம்.

To tell the truth, you are like one
Of my own family! come, let us
Eat together, O Aṉumaṉ!" As the Lord
Spoke thus, Māruti stood embarrassed,
With hands folded in worship; while
Mother Sita with her own hands placed
The plantain-leaf for him to eat from,
And the Lord took his food with noble Aṉumaṉ
Seated alongside him!
Happily Harirāma saw all of them eat
The nectar and meal; and after,
As the Lord sat, resting for a while,
Kukaṉ prostrated before him in obeisance.
The holy seers and hermits blessed Rama!
And the Lord sempiternal through the aeons,-
Rakurāma, rejoiced did take
Arecanut and tender betel-leaf after the food
While the leaders stood bowing before him!

## LAKSHMAṆA'S ENIGMATIC SMILE ANI RAMA'S QUERY

As all of them stood around the Lord
In obeisance true, a slumber did steal
The young son of doe-like queen Cumittirai!
And amused at this, Lakshmaṇa did gently laugh,
As Rama and others wondering looked on!
Seeing Lakshmaṇa laugh thus, each of the warriors
Around bethought himself of his own fault!
(At which perhaps the young Lord laughed!)
Lord Hari beckoned to him and queried;
"Why, O brother mine, did you laugh thus?"

## LAKSHMAṆA'S REPLY

As Rama asked him why he laughed,
The young Lord thus replied: "Sleep and I,
Are enemies dire, for twice seven years!
As I ate my fill in this happy ambience,

நான்னைகைத்தே னென்றுசொல்ல நாலருகும் நிற்பவர்கள்
தானினைத்த குறைகளெல்லாம் தவிர்ந்துமகிழ்ந் தங்குநிற்கக்
கானகத்தில் நீகொணர்ந்த கனியொருநாள் நானுனக்கு
நானுனக்குத் தந்ததுண்டே நற்கனிநீ யருந்திலையோ
நற்கனிநீர் தந்ததுண்டு நானருந்தா மற்றுடையில்
வைக்கரச மெக்கனித்தான் வலத்துடையி லிருக்குதென்று
அக்கினியைச் சூழ்ந்தெடுத்து அரிராமன் முன்பில்வைக்கத்
திக்கிலுள்ளோ ரெல்லோரும் சிந்தைமகிழ்ந் ததிசயித்தார்

**குகன் துணையுடன் இராமன் முதலியோர் கங்கை கடத்தல்**

அதிசயிக்க ரகுராமன் அடைந்தபடை தளத்துடனே
நதிவருங் கெங்கைக்கரையில் நல்லகுக விடத்தில்வந்து
பதிவுரைத்துத் தயவுசொல்லிப் படைகளை யோடங்கடத்திக்
குதிகொளவே படைசெரும கொடுங்கானக முங்கடந்து
கடந்து பலநதியும் கல்பெரும் பூங்காவுமிட்டு
அடர்ந்த படைதுடர்ந்துவர அயோத்தி யென்றபட்டணத்தில்
திடந்தெளி வாய்ரெகுராமர் தெற்குகோட்டை வாசல்கண்டார்
மடந்தை யருந்தம்பியரும் வானரமுஞ் சேனையுமாய்

**பரதன் முதலியோர் இராமன் முதலியோரை எதிர்கொள்ளுதல்**

சேனைவருஞ் செய்திகண்டு சென்றெதிர் கொண்டான்பரதன்
ஆனதம்பி சத்துருக்கன் அமைச்சர்முதல் சுமந்தனும்
மாநகர மானதிலே வசிப்பவரும் வந்துகண்டார்
தானைமுயர் மந்திரிமார் தந்திரிமார் வந்துகண்டார்
தந்திரிமார் சாத்திரிமார் தளகர்த்தரும் வந்துகண்டார்
கந்தமுறும் வர்த்தகன்மார் காராளர் வந்துகண்டார்
தந்திரதி பதிகாலாள் சகலோரு மெதிர்காண
இந்தவகை படைசூழ எல்லோரு மெதிர்காண

242.79. நாலருகும் - நான்கு பக்கங்களில் இலட்சுமணன் அருகில். 242.83. துடை - தொடை. 242.86. திக்கிலுள்ளோர்- அனைத்து திசையிலும் உள்ளோர். 242.89. பதிவுரைத்து - இருப்பிடத்தைக் கூறி. தயவு சொல்லி - தங்களது இக்கட்டான நிலையைக் கூறி. 242.90. குதிகொளவே - ஓடத்திலிருந்து குதித்துக் கொள்ளவே. செரும - நெருங்க. 242.92. துடர்ந்து- தொடர்ந்து. 242.94. மடந்தை - சீதை. தம்பி - இலட்சுமணன். 242.98. தந்திரிமார் - படைத்தலைவர். 242.99. சாத்திரிமார்- வேதம் ஓதும் சாஸ்திரிமார். தளகர்த்தர் - படைத்தளபதி. 242.100. கந்தமுறும் - நறுமணம் வீசும். வர்த்தகன் - வியாபாரி. காராளர் - உழுது வாழும் ஒரு சாதியர். 242.101. தந்தி - யானைப் படையினர். ரதிபதி - தேர்ப்படையினர். காலாள் - காலாட் படையினர்.

The elder sister sleep did try to tempt me,
And I laughed at this!" As Lakshmaṇa
Said this all those standing around grew happy,
Relieved that their flaws were not the cause
For the younger Lord's amusement!
And Lord Rama said to him: "On a certain day
You did bring me some fruit from the grove,
Which I did give you to eat: Didn't you eat it?"
"True it is you gave me the fruit but I,
Kept it for future use, and I placed it on my thigh,"
The same fruit from his right thigh, Lakshmaṇa
Now took and placed before Harirāma!
And all those around did marvel at this, much pleased!

### RAMA AND OTHERS CROSSING GANGES WITH THE HELP OF KUKAṈ

Now Rakurāma with his regimenιs
Came to Kukaṉ on the banks of the Ganges,
And briefing him about their position and desire
To cross over to the other bank,
All of them were ferried across the river,
And leaping from the boats, they strode ahead!
The armies gathered together again
And traversing forests wild and rivers many,
Rocky tracts and flowery groves,
Approached [illegible] at last!
With a clear mind Rakurāma accompanied
By his spouse, his brother, and the armies
Saw at a distance the southern gate of the city.

### PARATA AND OTHERS RECEIVING RAMA AND HIS RETINUE

On hearing about the coming of the Vāṉara army,
Parata, his brother Catturukkaṉa and Cumantiraṉ
The minister, and the people of the great city
Counsellors, captains and vedic scholars

### தசரதன் மறைவால் இராமன் வருந்துதல்

காணவந்த தளத்துடனே கருதிவந்த தளங்கூடி
வேணபடி மிகச்செருமி மேகவர்ன ரெழுந்தருளி
ஆண்மையுள்ள மனமறுகி ஐயருட மாளிகையில்
வாணுதலாள் சீதையொடு மாயவனார் போய்ப்புகுந்து

மாயாத சீவனென்றால் மாண்டீரோ வையாவே
சேயாள வென்றுதவம் செய்தீரோ வையாவே
ஓயாத வேள்விசெய்து உயர்முனிவோ ரைத்தொழுது
நாயகனைப் பெற்றெடுத்தீர் ராமனென்றே பேருமிட்டீர்

பேருமிட்டு வளர்த்தெடுத்த பிதாவுக்கு நானுதவாமல்
ஊருவிட்டுப் போனதெந்தன் ஊழிவிதி யையாவே
பாருவிட்டு நாடுவிட்டுப் பாலரையும் மறுகவிட்டு
தேருவிட்டு நீரிறந்தச் செய்தியென்ன வையாவே

### பரதன், சத்துருக்கனன் துயரம்

ஐயாவே யென்றழுதா ரண்ணன் தம்பியரும்
கைகேசி பாலகனும் கார்வர்னனைப் பூண்டழுதார்
பெய்தகண்ணீர் சத்துருக்கன் பெருமானைப் பூண்டழுதான்
பையமந்திரி சுமந்திரனும் பாதமதில் விழுந்தழுதான்

### மந்திரிமார் துயரம்

விழ்ந்தழுதார் மந்திரிமார் மேதினி யயோத்தியிலே
வாழ்ந்திருப்போ ரெல்லோரும் மால்பதத்தில் விழுந்தழுதார்
தாழ்ந்தழுத பேரையெல்லாம் தனித்தனியே மனந்தேற்றி
ஆழ்ந்ததுயர் கௌசலையை அன்னையரைத் தொழுதழுதார்

242.103. தளத்துடனே - கூட்டத்துடனே. 242.104. வேணபடி - வேண்டியபடி. மிகச்செருமி - மிகுதியாகச் சேர்ந்து. 242.105. ஐயர் - தலைவர். 242.107. சீவனென்றால் - சீவன் என்றதால். 242.108. சேய் - மகன். 242.113. பாலரையும் - குழந்தைகளையும். மறுகவிட்டு - திகைக்கவிட்டு. 242.116. கைகேசி பாலகன் - பரதன். பூண்டழுதார் - கட்டிக்கொண்டு அழுதார். 242.118. பாதமதில் - இராமன் பாதமதில். 242.119. மேதினி - உலகம்.

Rushed forward to receive Rama and others with him,
Besides field-commanders and generals
Merchants and traders in fragrant spices,
Husbandmen and tillers of the soil,
The four kinds of armed forces,
Chariotry, Elephantry, Cavalry and Infantry;
The metropolis poured all its people,
To receive the Lord and his entourage!

## RAMA GRIEVING AT THE ABSENCE OF TACARATA

As the two throngs met and mingled,
Rama entered into the palace of the noble king
Along with Sita of radiant forehead;
And missing the presence of the Emperor dead,
Thus he began to lament:
"O Sire! deathless one! are you dead?
Lord did you perform tapas,
Only so that your son may rule?
Performing endless sacrifices and worshipping
Noble seers, you obtained progeny
Naming the eldest Rama; to him
Who reared me, I have not been of use;
But as fate ordained, went into exile!
O Sire! how could you leave the world,
Your kingdom, and your grieving sons
And all your power and pelf so soon?"

## PARATA AND CATTURUKKAṈA GRIEVE

The brothers all did wail in grief;
Kaikēci's son embracing the cloud-hued one.
Did cry and so did Catturukkaṉa tears flooding his eyes:
Cumantiraṉ, too fell crying at Rama's feet,
In grief, as also the other ministers, besides
All the citizens of Ayōtti, prostrated before the Lord!
Consoling individually each one of them,
Rama went before the Queen-mothers.

### கௌசலை, சுமித்திரை துயரம்

*அழுதமைந்தர் தம்மைகண்டு ஆவிநொந்து கௌசலையாள்*
*தொழுதமைந்தா வெனையாண்ட துணையிழந்தே னென்றழுதாள்*
*பழுதறியாச் சுமித்திரையும் பர்த்தாவை நினைத்தழுதாள்*
*எழுதுஞ் சித்ரவடிவழகா யென்றாயே யென்றழுதாள்*

### கைகேசி வருந்தி உரைத்தல்

*என்தாயே நின்னுரையைக் கேளாமல் வனம்புகுந்தோம்*
*தந்தையுயிர் மாளவென்றோ தாயாரே போகவிட்டீர்*
*வந்தோமே மக்களென்று மாதுகைகேசியைத் தொழுதார்*
*மைந்தர்களே வாருமென்று வார்த்தைசொல் வாள்கைகேசி*

*கேசவனே யாதியில்நான் கேட்டவர மிட்டதனால்*
*தோசிமட்டை கெடுகூனி சொன்னபுத்தி கேட்டதனால்*
*தேசம்விட்டுக் காடுறையத் திருமகனை விட்டதனால்*
*வாசமற்றேன் மஞ்சளற்றேன் மணவாளன் துணையுமற்றேன்*

*மணவாளன் துணையுமற்றேன் மங்கிலிய ஞாணிழந்தேன்*
*பணையாத உலகமெங்கும் பாவியென்ற சொற்கேட்டேன்*
*துணையிழந்த தோசியென சொல்லேற்றேன் நீயுலகம்*
*குணமாக ஆளுமென்று கூறிவரங் கொடுத்தாளே*

### தசரதற்கு இராமன் மற்றும் சகோதரர்கள் கர்மக்கடன் செய்தல்

*வரங்கொடுத்துக் கைகேசி மாயவனை மணந்தேற்றி*
*இரங்காத குணம்படைத்த இரும்புமனக் கரும்பாகி*
*அரங்கரெகு ராமன்முதல் ஆனமைந்தர் நால்வருமாய்*
*சிரங்கிரீட தசரதற்கே செய்யும்விதி செயத்தொடுத்தார்*

242.123. ஆவி - உயிர். 242.124. துணை - தசரதரைக் குறித்தது. 242.125. பழுத்றிய - குற்றமில்லாத. பர்த்தா - கணவன்; தசரதன். 242.131. தோசி மட்டை -'பாவி மட்டை' என்னும் குமரி மாவட்ட வழக்குச் சொல். 242.133. திருமகன் - இராமன். 242.134. வாசமற்றேன் - புகழ் இழந்தேன். மஞ்சளற்றேன் - தசரதனை இழந்ததால் மஞ்சள் இழந்தேன். 242.135. மங்கிலிய ஞாண் - தாலி. 242.136. பணையாத - குற்றமில்லாத. 242,137. தோசி - பாவி. 242.139. மாயவனை - இராமனை. 242.142. விதி செயத் தொடுத்தார் - இறந்து போன தந்தைக்குரிய ஈமச் சடங்குகளைச் செய்யத் தொடங்கினார்.

As he cried bowing before his mother Koucalai,
Her heart full of anguish, she wept:
"O my son, I have lost my Lord and spouse!"
Blameless Cumittirai thought of her Lord
Handsome as a painted picture, and wailed!

### KAIKĒCI'S GRIEF-STRICKEN SPEECH

"O Mother, in unquestioned obedience
To your words we went into forest exile,
O' mother! did you do so, that our father should die?
Now we have come back at last"
And Rama made his obeisance to Kaikēci
"Welcome, my sons" said Queen Kaikēci
And continued: 'Kēcava!' Because
I asked for the boons granted in the past,
Corrupted by the evil words of the base sinner
Mantirai, the hunchback, I did make you
Leave the country to dwell in the forest
In result, I lost my reputation;
I lost the right to use turmeric,
Having lost my Lord, my husband,
And hence my sacred *Māṅkaliyam*,
Throughout the blameless world, I was abused
As a sinner; a sinner wicked who lost her husband;
Now I bless you, that you may
Happily hereafter rule over the earth!"

### RAMA AND HIS BROTHERS PERFORMING OBSEQUIES TO TACARATA

Blessing him thus, she consoled the Lord,
Her iron heart becoming sweet as cane!
And Rakurāma and his brothers three
Began to perform the rites left over
After Tacarata's death.

விதியமைக்குங் குலகுருக்கள் வேதமுனி மாவசிட்டர்
பதியில்வந்தே ராமனுக்கும் பரதனுக்குந் தம்பியற்கும்
தம்பியர்க்கும் அமைச்சருக்கும் தானாசீர் பாதம்நல்கி
வெம்பிமுறை தம்பியர்க்கு விதிமுறையாய் சடங்கெடுத்து

எடுத்தடிக்கும் மன்னவர்க்கு யின்றமக்கள் நால்வருமாய்
கொடுத்தாரே யன்னசொன்னம் கோதானம் பூதானம்
பூமியிலே மணற்குவித்து பொன்குவித்துத் தெற்பையிட்டு
நேமிகர்மம் ராசகர்மம் நித்தியகர்மம் மாதகர்மம்

மாதகர்மம் வருடகர்மம் வகைப்படியே தானடத்தி
நீதமுள்ளதோர் குருக்கள் நீள்வசிட்டர் கிருபையினால்
வேதமுறை ராசதிட்டம் வெலிகர்மமெல் லாம் கடத்திச்
சூதகமெல் லாந்தவிர்த்து சுயம்புலிங்க பூசைசெய்து

### அனைவரும் இராமனுக்கு முடிசூட்ட எண்ணுதல்

பூசைசெய்து ரெகுராமன் பொன்மணி மாளிகைபுகுந்து
நேசமுடன் வீற்றிருந்தார் நீணிலத்தோர் கொண்டாடத்
தாசனென்பார் தம்பியரும் தாய்மாரும் மனமகிழ்ந்தார்
ஆசைவைத்து ராமருக்கே அரசுவைக்க நினைத்தாரே.

242.143. விதியமைக்கும் - விதிமுறைகளைச் செய்யும். வசிட்டர் - அயோத்தி நாட்டின் குலக்குருக்கள். 242.144. பதியில் வந்தே - நாட்டில் வந்தே. தம்பியற்கும் - இலட்சுமணன் மற்றும் சத்துருக்கனனுக்கும் 242.145. ஆசீர்பாதம் - ஆசீர்வாதம் 242.147. எடுத்தடிக்கும் - வலிமையான என்ற பொருளில். மன்னவர் - தசரதர். 242.148. அன்னம் - அன்னதானம். சொன்னம் - சொர்ணதானம்; பொன்தானம். கோ - பசு. பூதானம் - பூமிதானம். 242.150. நேமிகர்மம் - கடலருகிலிருந்து செய்யும் இறுதிக்கடன். ராசகர்மம் - அரசராய் இருந்து செய்யும் கடன். 242.151. மாதகர்மம் - தசரதர் இறந்த மாத திதியில் செய்யும் கடன். வருடகர்மம் - தந்தை இறந்த ஆண்டு தினத்தன்று செய்யும் கடன். 242.152. நீதமுள்ளதோர்- நன்னெறி. கிருபை - அருள். 242.153. வேதமுறைராச திட்டம் - வேதங்களில் கூறப்பட்டபடி அரசநியதிகள் வகுத்து. வெலி - பலி. கடத்தி - செய்து முடித்து. 242.154. சூதகம் - முறையற்ற செயல்கள். 242.156. நேசமுடன் - பாசத்துடன். நீணிலம் - உலகம். 242.157. தாச னென்பார் - அடிமையென்பார்.

The family priests and preceptor Vaciṭṭar
Came up to Rama, Parata and their brothers
And gave them all, their benisons!
And then began the rituals proper, for mighty
Tacarata now dead, at the hands of the sons
Four, he had sired, Gifts of gold
Cows in herds, gifts of land, were given away!
Heaping sand on the earth, placing gold upon it
And then sacred grass, they carried out
Ceremonies in order -- near the sea;
Ceremonies as ordained for a king;
Monthly ceremonies; annual ceremonies,
In proper order, with righteous preceptors,
With Vaciṭṭar presiding over it all!
Sacrifices were given as indicated
In the holy texts;
Washing off whatever pollution remained still,
They performed Cuyampuliṅka Pūja
Before entering the golden palace royal,
As Rama sat happily now in his mansion,
Praised by all the people of the wide world,
His devoted brothers and the Queen-mothers,
Decided to celebrate soon the coronation of Rama.

## இராமனது பட்டாபிஷேகம் குறித்து நகர் அலங்காரம்

*விருத்தம்*

243. *தாரணியில் ரெகுராம னாதி ராமன்*
*தந்தைபதி கோசலநா டயோத்தி யாளப்*
*பாரிணங்கு பட்டாபி ஷேகம் வைக்கப்*
*பழயகுல வசிட்டருட பாதம் போற்றிச்*
*சீரணங்கு ராசாதி ராச ருக்கும்*
*தேவருக்கும் மாதவர்க்கும் சகத்தோ ருக்கும்*
*ஊரிணங்க யெழுத்தெழுதி முரசு சாற்றி*
*உறப்பித்தார்ப் பட்டணத்தைச் சிறப்பித் தாரே.*

*நடை*

244. *தாரணிமேவிய பூரண்யோத்தியில் தோரணம் நாட்டுவார்*
*தன்னைநினைந்து கன்னிமார்கள் பொன்னணி பூட்டுவார்*
*நாரணநாமம் பூரணமாகத் தாரணி சாற்றவே*
*நல்லகதையைச் சொல்வார்கள் கேட்ககல்வி ஏத்தவே*
*ஏற்றமாகும யோத்திபட் டணம்வாழ்த்தி நீட்டவே*
*இலங்குகாவணந் தலங்கள் தோறுந்துலங்கப் போடவே*
*சேத்தமன்னரைக் காத்த மைச்சர்கள் தேற்றமாகவே*
*தெருக்கள் தோறும்மருக்கமழ் மலர்பெருக்க மாகவே*

*பெருக்கச்சந் தனக்களபக் குழம்புபிசைந்து சேர்த்துமே*
*பேசத்தெருவில் வாசல்தோறும் பூசித் தீத்துவார்*
*தருக்கமு கொடுகருப்புக் கதலிநெருக்கிச் சாற்றுவார்*
*சவடிபதக்கம் சரப்பணி நகைசுவடித் தேத்துவார்*

243.1. தாரணியில் - உலகினில். பதி - நாடு. 243.2. பாரிணங்கு - உலகம் வியக்கும்படி. 243.3. சீரணங்கு - செல்வம் நிரம்பப் பெற்ற. சகத்தோர் - உலகத்தோர். 243.4. ஊரிணங்க - நாட்டார்க்கும். எழுத்து - இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்ற எழுத்து. உறப்பித்தார் - உறுதிப்படுத்தினார். பட்டணத்தை - அயோத்தியை. 244.1. தோரணம் - மாவிலை முதலியவற்றால் செய்யும் தோரணம். 244.2. நாரண நாமம் - திருமாலாம் இராமன் நாமம். 244.3. இலங்கு - விளங்கும். காவணந் தலங்கள் - பந்தல் இட்டுள்ள இடங்கள். துலங்கப் போடவே - ஒளிவிடச் செய்யவே. 244.4. சேத்த மன்னரை - சேர்ந்த மன்னரை; அயோத்தியில் சேர்ந்த மன்னரை. காத்த - வரவேற்று பாதுகாத்த. மருக்கமழ் - நறுமணம் கமழ்கின்ற. 244.5. சந்தனம், களபம் - வாசனைப்பொருட்கள். தீத்துவார் - தெளிப்பார். 244.6. தருக்கம் - எழுச்சி. கொடுகருப்புக்கதலி - வாழை மரத்தில் ஒரு வகை. சாற்றுவார் - தோரணங்களில் கட்டி வைப்பர். சவடிபதக்கம், சரப்பணி - ஆபரண வகைகள். சுவடித்து - அலங்கரித்து.

